# A GRAMMAR

OF

# TAMIL GRAMMARS.

BY

DAVID JOSEPH, B. A.,

*(Author of Hints on the growth of Children.)*

# தமிழ் இலக்கணத் தெளிவு.

தாவீது யோசேப்பு உபாத்தியாயரால்

இயற்றப்பட்டது.

"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு." (குறள்.)

MADRAS:

PRINTED AT THE S. P. C. K. PRESS, VEPERY.

1893.

# தேவஸ்துதி.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

ஆதமொ டேவாள் செய்த வரும்பவப் புணர்ப்பான் மக்கள்
தீதுறு வண்ணங் காக்க ஜெகந்தனின் மனுட ளுகி
ஓதரும் பாடுற் றேதன் னுயிரையு நீத்த யேசு
போதக ரட்ச கன்றன் பொன்னடி மனத்துள் வைப்பாம்.

# அவையடக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அரியநல் லிலக்க ணங்க ளலகிலா திருப்ப வொன்றும்
தெரிவிலேன் றுனுஞ் செப்ப லென்னெனி லொருவன் சித்ரம்
வரையவும் வனப்பே யாக மதியிலாப் பாலர் கிறிப்
பரிவுறப் புலப்ப டுக்கும் பான்மைய தாகு மன்றே.

சந்தவிருத்தம்.

அன்றி நூற்கி லக்க ணத்தெ ளிவ்வு வென்னு நாமமே
என்று நன்க தாகு மென்ற தெண்ணி நண்ணி யிட்டனன்
மன்ற குற்ற மொன்று மேனு மாண நற்ற மாக்குக
வென்றி சால நன்று சற்ற மேன்மை கொண்டு மாந்தரே.

# DEDICATION.

To

DAVID DUNCAN, Esq., M.A., D.Sc.,

*Director of Public Instruction, Madras.*

Sir,

The amelioration of the condition of the masses of India by intellectual advancement is the province of your august duty.

If there were but one vernacular language for the whole of India or at least for each Presidency under a Governor, it would have been easy for the legislators to devise a thorough method of imparting education *by and through* that one mother tongue of the people. But many languages and subdivided dialects mar the skill of philanthropic directors of Education in the land.

Further, the conservative dogmatism of vernacular pundits is proverbial. Critical exposition of ancient authors in the Vernacular languages is looked upon with disfavor by these savants. Living as we are, in an age of progress, the old authorities especially those on the vernacular Grammar are ill-adapted for the present use, unless they are divested of their dogmatic garb of arrangement, exposition and illustration, and re-arranged synthetically in a graduated course, following the natural growth of mind in human species, and illustrated by simple and familiar examples.

Grammar is the key to the literature in Tamil and it is to be made, as well, the best means for the multiplication

of useful works in the language, on various subjects unknown to the ancient Dravidians, but brought to light by the present rulers of the land, in a foreign tongue. With this end in view, this humble attempt is made.

To a deep student of Anthropology and a lucid lecturer of the powers of mind and above all as the administrator of education in this Presidency, daily solving the intricate problems on ways and means to lead the masses from darkness to light, this humble work should be most welcome. Hence, with permission, I dedicate this, to you, that my humble intention to benefit my fellow-countrymen, may meet with success.

I am Sir,

VIZAGAPATAM,
*3rd January*, 1893.

Your Most Obedient Servant,
DAVID JOSEPH,
*Asst. Inspector of Schools,*
*First Division.*

# PREFACE.

There are many grammars of the Tamil language. In early days, till the invasion of India by Europeans, there was no prose-literature in Tamil. Every book—even Dictionary of words and treatise on medicine—was in Poetical garb. Communications of ordinary nature, among the learned were in poetry. The boys began to learn poetry, as soon as they finished the letters of the Alphabet. Hence earlier writers on grammar dwelt on the rules of Orthography, and Etymology as subservient to the laws of verse. The grammar was in poetical garb and when commentaries were written, the examples given were from poetry.

Nannool, a book that omits to treat on three out of the five divisions of Tamil grammar came to be regarded as the text-book in Schools and Colleges. It is written for the learned few according to the ancient prescribed dicta of composition. The synthetic method adopted in grammars and other works in the English language is not followed by the author of Nannool. In the very beginning of the dissertation on letters the classification of nouns is discussed, to the bewilderment of ordinary readers.

From the very beginning, boys view Tamil Grammar as an insoluble myth and leave it by, though they master efficiently the principles of the grammars on the English language—a foreign tongue. For teaching Tamil, special pundits are required while native graduates are able to handle every other subject. All this anomaly is from the want of a simple, methodically written treatise on Tamil Grammar.

Hence this humble attempt. The subject is simplified to the mental capacities of the beginners, so that one could learn the rules without the aid of pundits whether he be young or old, a native or a foreigner.

A logical and synthetic system is adopted throughout. The rules are in prose, and examples selected are from well known subjects of daily occurrance. After this, a poetical

rule, the easiest and the simplest of the kind selected from, one out of more than a dozen authorities on Tamil Grammar is given. Explanations and criticisms follow in separate paragraphs or foot-notes. Suitable English equivalents are used throughout, to assist Europeans. Composition and prose writing are given great prominence to, in the work, while there is no omission of all that is useful in the many authorities consulted. Each chapter has a synoptical table at the end. Conjugation of Verbs, Parsing of words, Psychological division and treatment of the figures of speech, Derivation of words, idioms and their uses, Discussion of auxiliary, and compound verbs, History of the Tamil language and its grammar, most familiar examples and the like are peculiarities in this grammar, not found in ancient authorities. The authorities consulted are given in the Tamil preface that follows this.

As it is, the book may be used in college classes. Omitting a few chapters and few paragraphs of criticisms and explanations, it may be used in the High Schools. From the selection for High Schools, some sections may be omitted for the use of the Middle School, and some more for using it in the Primary School. By these omissions the unity of the book could not be spoiled. The paragraphing and throwing some matter in the form of foot-note are very carefully done to suit the book for school use.

If the system adopted in the book were faithfully pursued, according to the directions given, Tamil grammar will become an interesting subject for boys, and the present aversion to the vernaculars, will, at least as regards Tamil, be a dream of the past.

All learned pundits and those interested in the cause of Tamil will pardon the venture, a poor insignificant man like myself has made, and favour me with their advice. Advice and corrections will be thankfully received and acknowledged.

VIZAGAPATAM,
*3rd January*, 1893.

DAVID JOSEPH.

# முகவுரை.

தமிழ்ப்பாஷையின் இலக்கணங்கள் பல உண்டு. இவற்றில் பூர்வீகத்தாரா லியற்றப்பட்டவை முழுவதும் செய்யுட்போங்காகவும், முன்னுள்ள இலக்கியங்களியாவும் செய்யுள்களாயிருப்பதால், செய்யுளுக்கே உரிய விதிகளை விதந்து கூறி வாசகவழக்கத்தை ஒழித்து எழுதப்பட்டவைகளாகவு மிருப்பதை எவரும் எளிதில் அறியலாம். அங்கிலேய முறையான பள்ளிக்கூடங்களும் பரீட்சைகளு முண்டானபிறகு எழுதப்பட்ட இலக்கணங்கள், தமிழுக்குள்ள வியாகரணசாஸ்திரம் நன்னூல் ஒன்றுதானெனக்கொண்டு, அதை விளக்கி விவரிக்கும் நூல்களாயிருப்பதும் எவருமறிந்த விஷயமே. இலக்கணத்தின் ஐந்து அங்கங்களுள், எழுத்து, சொல் என்ற இரண்டை விவரிப்பதால், அது பூரணமான நூலெனப்படாது. புதிதாய் அச்சியற்றிய முதுமை நூலான இலக்கண விளக்கமோ, பஞ்சாங்கங்களையும் விவரிக்கும் பூரண நூலாகும்.

அறிந்த சில விஷயங்களைக்கொண்டு, அறியாத நூதன விஷயங்களை, மாணுக்கரின் வயது, மூளையின் தராதரம் முதலியவற்றை யநுசரித்து, மானததத்துவசாஸ்திரப்படி கிரமம் கிரமமாக ஊட்டிப் பயிற்றுவிப்பது யுக்தமென்று எவரும் சம்மதிப்பார்கள். நன்னூல், இலக்கண விளக்கம் முதலிய முதியோர் நூல்கள் இப்படி எழுதப்படாமல், அநேக இலக்கியங்களைக் கேட்டுக் கற்றறிந்தோர்மாத்திரம் வாசித்து உய்த்துணரக்கூடிய திறமுள்ளனவாயிருத்தலின், பாடசாலைகளின் உபயோகத்தில் இவைகள் பிள்ளைகளுடைய புத்திக்கெட்டாமல் அவர்களை மயக்குவதன்றி அவர்களுக்கு வெறுப்பான பாடமுமாகி விடுகின்றன. இதனுல் தமிழைக் கூர்ந்து கற்பவர்கள் மிகவும் சொற்பம். சுயபாஷையறியாத கல்விமான்கள் தமிழரில் வெகுபேருண்டு. அற்புத அதிசயமான அனந்தங்கோடி காரியங்களை அங்கிலேய பாஷையில் கற்றுத் தேர்ந்தவர்கள், எண்ணுக் கடங்கா எத்தனையோ வாயிரக்கணக்காயிருப்பினும், தாம் அறிந்தவற்றைத் தம் சுயதேசத்தவர்க்குச் சுயபாஷையில் விளக்கிக்காட்டச் சக்தியற்றவர்களாயிருக்கிறுர்கள்.

இதனுல், பிரஜைகளின் வரிப்பணங்கொண்டு நடத்தப்படுகிற பெரிய கல்விக்களரிகளான காலேஜ் முதலியவைகளில் படித்துத் தேர்ந்தவர்களால் சாதாரண பிரஜைகளுக்குப் பிரயோசனமில்லாமல்,

போகிறது. தேசாதிபதிகளான அங்கிலேய துரைகளும் இவ்வகைக் கல்வியிற் பிரயோசனமில்லை என்று வசைகூற இடமாகிறது.

ஆகையால், தமிழ் இலக்கணம் முனிஷிமார் உதவியின்றி அந்நியரும் பிள்ளைகளும் எளிதில் கற்றுக்கொள்ளத்தக்கதாய், முற்றிலும் நூதனமான முறையாய்த் தமிழில் முதியோர் எழுதிய இலக்கணங்களிலுள்ள எல்லா விஷயங்களையும், அவற்றில் இல்லாத வாக்கியப் பயிற்சிக்கான விதிகளியாவையும் அடக்கியதாய் இப்புஸ்தகம் எழுதப்பட்டது.

இப்புஸ்தகம் எழுதவேண்டுமென்று யோசித்து, இருபது வருஷங்களாகத் தமிழ் இலக்கணங்கள் பலவற்றையும் அச்சிலும் ஏட்டுப் பிரதிகளிலும் வாசித்ததுடன் அனந்தம் இலக்கியங்களையும் தீரப்பரிசோதிக்கவேண்டியதாயிற்று. அங்கிலேய இலக்கணத்தையும், லத்தீன் (Latin), கிரேக்கு (Greek) இலக்கணங்களையும், சம்ஸ்கிருத வியாகரணத்தையும் கலந்து வாசித்து, பிள்ளைகளின் மனோதத்துவம், அதின் கிரமமான வளர்ச்சி, எவ்வகையான பாடங்கள் எவ்வயதில் எப்படிப் புகட்டுவதென்பது முதலியவற்றையும், Normal School, College, High School முதலிய பலவிதக் கல்விச்சாலைகளிலும், விசேஷம் உபாத்தியாயர்களைக் கற்பிக்கும் வித்வசாலையிலும், தலைமை உபாத்தியாயராகவிருந்து, அநுபோகமாய்க் கற்றறியவேண்டியதாயிற்று.

தொல்காப்பியம், வீரசோழியம், நன்னூல், இலக்கண விளக்கம், இலக்கணக் கொத்து, நேமிநாதம், இலக்கண விளக்கச் சூறாவளி, இலக்கணச் சூடாமணி, தொன்னூல் விளக்கம், குவலயானந்தம், காரிகை, யாப்பருங்கலம், இறையனார் அகப்பொருள், தண்டியலங்காரம், தண்டியலங்கார சாரம், இலக்கணத் திரட்டு, நன்னூற் காண்டிகை விருத்தியுரைகள், விசாகப்பெருமாளையர் இலக்கண வினாவிடை, பவர்ஐயர் (Rev. Dr. Bower), போப்பையர் (Rev. Dr. G. U. Pope), பிரதர்ட்டன் ஐயர் (Rev. T. Brotherton, M. A.), ஜாய்ஸ் துரை (Mr. Walter Joyes) ஆகிய இவர்கள் நன்னூலின் மேல் எழுதியவைகள், கால்ட்வேல் அத்தியட்ச ரியற்றிய திராவிட பாஷா தீபிகை (Comparative Grammar of Dravidian Languages by Bishop Caldwell, D. D. &, LL. D.), கல்லாடம், பிரயோக விவேகம் முதலிய பல நூல்களையும் தீரப் பரிசோதித்து இப்புஸ்தகம் எழுதப்பட்டது.

இதில் வசனமாக விதிகளைக் கூறி, நாடோடியபாஷையில் எவரும் அறியக்கூடிய உதாரணங்களை எடுத்துக்காட்டி, இதன்பின் முதியோர் நூல்களிலுள்ள சூத்திரங்களை மனநினைப்புக்காகத் தீட்டியிருக்

கும்; பல இலக்கணங்களுள்ளும் தெளிவும் இலகுவுமான சூத்திரம் எதுவோ அதைத் தெரிந்து பொறுக்கி யமைத்திருக்கும்; சாதாரண வாசகத்துக்குரிய விதிகளை முதற்கூறிப் பின் செய்யுளுக்கே சிறந்த வற்றை எடுத்து வழுத்தியிருக்கும்; இதன்மேல் மேற்கோள்களும், பற்பல நியாயங்களும் அடியில் குறிப்பித்து விளக்கப்பட்டிருக்கும்; அங்கிலேயபாஷை யறிந்தவர்கள் தமிழை முனிஷிமாரின்றிக் கற்றுக் கொள்ளத், தமிழ் இலக்கணப்பிரிவு, வகைவிரிகளுக்குச் சரியான அங்கிலேய பதங்களும் எடுத்துக்காட்டப்பட்டிருக்கும்; ஒவ்வொரு அத்தியாயத்தையும் இலக்கமிட்டு, எண்மானப் பாகுபாடு செய்ததுடன், அவ்வவ்வத்தியாயத்தின் கடைசியில் படலரூபமாய் வகை விவரங்களை விசித்திரப்படுத்தியு மிருக்கும்.

வினையின் மயக்கம் தெளியப்போந்த விதிகளும், கிரியாமாலை, பதமுடிபு, இலக்கணம் கூறும் முறை, மானதத்துவப்படி சுலபமான அணியியலின் விளக்கம், வாசக இலக்கணம், மரபுமொழி, மரபுத்தொடர், பாஷாசரித்திரம், இலக்கண சரித்திரம், பிற பாஷையினின்று தமிழில் வழங்கிவரும் சொற்கள் முதலியவை இந்நூலுக்கே சிறப்பு.

திண்ணைப் பாடசாலைமுதல் காலேஜ்வரையும் உபயோகமாகும்படி இப்புத்தகம் சுலபமான நடையில் எழுதப்பட்டு, பத்திபத்திகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. தாழ்ந்த வகுப்பினர் செய்யுட்போக்கான சூத்திரங்களையும், அடியில் கண்டவைகளையும், வியாக்கியானப் பத்திகளையும் விட்டு விட்டு வாசித்து இலக்கணம் கற்கலாம். இப்படிச் செய்வதில் பிணக்கும் ஒவ்வாமையும் நேராதபடி பத்திவகுப்புகள் நோக்கப்பட்டிருக்கின்றன.

இங்ஙனம் இலக்கணம் எழுதுவது நலம் என முதல்முதல் எனக்குப் போதித்தவர் யாழ்ப்பாணம் நல்லூர் ஆறுமுகநாவலர்; அதன்பின் அது நன்றெனெ அநுகூலித்தவர்கள் வடலூர் இராமலிங்கப் பரதேசியாரும், மாயவரம் மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்களுமே.

இது இலக்கணத்தை எளிதாகவும் பூரணமாகவும் விளக்க எழுதப்பட்ட முதல் நூலானதால், கல்விமான்களும், இலக்கணச் சிங்கங்களும் நாயினுங் கடையேனாகிய யான் எழுதிய இந்நூலிலுள்ள பிழைகளைப் பொறுத்து, அவற்றைத் திருத்தஞ்செய்யவேண்டிய வழி வகைகளை அன்பாய் அடியேனுக்குப் போதிக்க மன்றாடுகிறேன்.

இப்படிக்கு,

VIZAGAPATAM,
3rd January, 1893.

தாவீது யோசேப்பு.
(DAVID JOSEPH, B. A.)

# CONTENTS.

# பொருளடக்கம்.

Portions recommended for each Standard and Form according to the Educational Rules prescribed by Government.

| STANDARD, FORM OR CLASS. | PORTIONS TO BE STUDIED. |
|---|---|
| Second Standard or Class. | Chapters 1, 2, and 3. *N.B.*—Leave all Poetical Rules or Sutrams and Sections 28–34, 40–47 and 50–53. |
| Third Standard or Class. | Chapter 4. *N.B.*—Leave all Poetical Rules or Sutrams. |
| Fourth Standard or Class. | Chapters, 5, 8 and 10. *N.B.*—Leave all Poetical Rules or Sutrams and Chapters 6, 7 and 9. |
| Fifth Standard or First Form. | Chapters 1–10 (both inclusive.) *N.B.*–Leave all Poetical Rules or Sutrams, and Sections 195–211 and 219–223. |
| Sixth Standard or Second Form. | Chapters 11, 12 and 13. *N.B.*–Leave all Poetical Rules or Sutrams. |
| Seventh Standard or Third Form. | Chapters 14 and 15 up to Section 476. Chapter 20, Sections 652, 653 and 654 only and Chapter 21. General remarks on Simile and Metaphor *i.e.*, Sections only. *N.B.*—Leave all Poetical Rules or Sutrams. |
| Fourth Form. | Chapters 1–10, with Poetical Rules. |
| Fifth Form. | Chapters 1–15 up to Section 476, with Poetical Rules. |
| Sixth Form or Matriculation Class. | Chapters 15, 16 and 20, and principal Figures of Rhetoric in Chapter 21 with Poetical Rules. |
| First-in-Arts Class. | The whole Book. |
| B. A. Degree. | The whole Book with one or more authorities mentioned in the preface. |

## சற்காரால் பள்ளிக்கூடங்களுக்கு ஏற்படுத்தப்பட்ட நிபந்தனைகளின்படி, ஒவ்வொரு தரகதியிலும், வகுப்பிலும், போதிப்பிக்கவேண்டிய பாகங்களின் விவரம்.

| தரகதி அல்லது வகுப்பு. | கற்பிக்கவேண்டிய பாகம். |
|---|---|
| இரண்டாம ஸ்ருண்டர்ட் அல்லது வகுப்பு. | 1-ம், 2-ம், 3-ம் அதிகாரங்கள்.<br>28-34, 40-47, 50-53 வரையுள்ள விதிகளையும், செய்யுள் பாகமான சூத்திரங்களனைத்தையும் விடவும். |
| மூன்றும் ஸ்ருன்டர்ட் அல்லது வகுப்பு. | 4-ம் அதிகாரம்.<br>செய்யுள் சூத்திரங்களனைத்தையும் விடவும். |
| நான்காம் ஸருண்டர்ட அல்லது வகுப்பு. | 5-ம், 8-ம், 10-ம் அதிகாரங்கள்.<br>இவற்றிலுள்ள செய்யுள் சூத்திரங்களனைத்தையும், 6-ம், 7-ம், 9-ம் அதிகாரங்களையும் விடவும். |
| ஐந்தாம் ஸ்ருன்டர்ட் என்ற முதலாம் பாரம. | 1 முதல் 10 அதிகாரங்கள் வரை.<br>195 முதல் 211 வரையும், 219 முதல் 223 வரையுமுள்ள விதிகளையும், செய்யுள் சூத்திரங்களனைத்தையும் விடவும். |
| ஆறும் ஸ்ருன்டர்ட் என்ற இரண்டாம் பாரம். | 11-ம், 12-ம், 13-ம் அதிகாரங்கள்.<br>செய்யுள் சூத்திரங்களனைத்தையும் விடவும். |
| ஏழாம் ஸ்ருண்டர்ட் என்ற மூன்றும் பாரம். | 14-ம் அதிகாரமும், 15-ம் அதிகாரத்தில் 476-ம் விதிவரையும், 20-ம் அதிகாரத்தில் 652, 653, 654-ம் விதிகளும், 21-ம் அதிகாரத்தில் உவமை, உருவகம் என்ற இரண்டணிகளின் பொதுவிதிமாத்திரமும்.<br>செய்யுள் சூத்திரங்களனைத்தையும் விடவும். |
| நான்காம் பாரம். | 1 முதல் 10 அதிகாரங்கள் வரை செய்யுள் சூத்திரங்களுடன். |
| ஐந்தாம் பாரம். | அதிகாரம் 1 முதல் 15-ம் அதிகாரத்தின் 476-ம் விதிவரை செய்யுள் சூத்திரங்களுடன். |
| ஆறும் பாரம் என்ற பிரவேச பரீட்சை வகுப்பு. | 15-ம், 16-ம், 20-ம் அதிகாரங்களும், 21-ம் அதிகாரத்தில் விசேஷித்த அணிகளும் செய்யுள் சூத்திரங்களுடன். |
| F. A. பரீட்சை. | புஸ்தகம் முழுவதும். |
| B. A. பரீட்சை. | புஸ்தகம் முழுவதும்; முகவுரையிற் கண்ட இலக்கணங்களுள் இரண்டு மூன்று நூல்களை இப்புஸ்தகத்தோடு ஒத்திட்டு வாசிக்கவும். |

# CONTRACTIONS USED.

## உபயோகிக்கப்பட்ட குறிப்புகளின் விவரம்.

நன் ...................... நன்னூல்.

இ. வி.<br>இல.விள. } ............ இலக்கண விளக்கம்.

மு. வீ.<br>மு. வீரி.<br>முத். வீரி. } ......... முத்துவீரியம்.

வீ. சோ ............... வீரசோழியம்.

யாப்.<br>யாப்பரு. } ............ யாப்பருங்கலம்.

தண்டி ................. தண்டியலங்காரம்.

இ. கொ................ இலக்கணக்கொத்து.

பேர். அகத்.<br>பே. அக. } ......... பேரகத்தியம்.

தொல்.................... தொல்காப்பியம்.

தொன் .................. தொன்னூல் விளக்கம்.

உ-ம்................... உதாரணம்.

c. f ........................ Compare (ஒத்துப்பார்).

N.B ...................... Nota Bene (குறிப்பு).

காரி........................ காரிகை அதாவது யாப்பருங்கலக்காரிகை.



# இலக்கணம்.

## CHAPTER I.

### LANGUAGE.—பாஷை.

1. மனிதர் ஒருவருக்கொருவர் தமது கருத்தை வெளியிடத் தக்க சக்தியையுடையவர்கள். மிருகங்கள், பறவைகள், ஊரும் பிராணிகள் தங்கள் சைகைகளாலும், பற்பலவிதமான தொனிகளாலும் தமது கருத்தை தம்மினமான ஜெந்துக்களுக்கு அறிவிக்கின்றன. மனிதர் இவ்வகையாகமாத்திரமல்ல, பாஷையாலும் தமது எண்ணத்தி லுள்ளவற்றை பிறருக்குப் புலப்படுத்தக்கூடியவர். மனுஷன் உலகத்தை ஆண்டு நடத்தும்படி சிருஷ்டிக்கப்பட்டவனானதால் மற்றெல்லா உலக சிருஷ்டிகளிலும் மேலானவன். பாஷையையுடையவன் எவற்றையும் பகுத்தறிந்து விஸ்தரித்து விளக்கக்கூடியவன்.

நாம் பாஷையால் ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்ளலாம், தூரத்திலிருக்கிறவர்களுக்கு பாஷையால் விருப்ப வெறுப்புகளை எழுதியறிவிக்கலாம். ஆகவே பாஷை பேசவும் எழுதவுமாம்.

சிற்சில பாஷைகள் எழுதப்படாமலிருக்கின்றன. குழுவர், தோடர், வேட்டுவர் முதலியவருக்குப் பேசும் பாஷைகள் உண்டு. அவைகள் எழுத்தால் எண்பிக்கப்படவில்லை. பட்டுநூல்காரராகிய சௌராஷ்டிகர்களுக்கு பேசும் பாஷைமாத்திரமிருந்தது. 1870–வருஷம் அதற்கு எழுத்துக்கிரமம் ஏற்படுத்தப்பட்டது.

2. சமஸ்கிருதம், கிரேக்கு, லத்தின்முதலிய பாஷைகள் முன் காலத்தில் எழுதிப் பேசப்பட்டிருந்தும் இப்போது அவற்றைப் பேசுவாரில்லாததால் எழுதப்பட்டதாய் மாத்திரமிருக்கிறது.

3. தமிழ்பாஷை பேசவும், எழுதவும்படும்.

## GRAMMAR.—இலக்கணம்.[1]

4. ஒரு பாஷையை வழுவறப் பேசவும் எழுதவுந்தக்க விதி வகைகளை விஸ்தரித்துக்காட்டும் நூலுக்கு இலக்கணம் என்று பேர்.

5. தமிழ்ப்பாஷையை வழுவறப் பேசவும் எழுதவுந்தக்க விதி வகைகளை விஸ்தரித்து விளக்கும் சாஸ்திரம் தமிழ் இலக்கணம் எனப்படும்.

6. நாம் பேசும்போது வாக்கியங்களாகப் பேசுகிறோம், அவ் வாக்கியங்கள் பல வார்த்தைகளாலானவை, அவ்வார்த்தைகளோ எழுத்துக்கள் கூடியவை.

புலவர்கள் தமது அரும்பொருட்களைப் பாட்டாய்ப் பாடியிருக்கிறார்கள். இதையும் விசித்திரவிநோதமாய் அமைத்திருக்கிறார்கள்.

ஆகையால் தமிழ்ப்பாஷையை நன்றாய்த் தெரிந்துகொள்ள முதல் முதல் எழுத்துக்களையும், பின்கிரமமாய் வார்த்தை, வாக்கியம், பாட்டு, அலங்காரம் முதலியவற்றையும் கற்கவேண்டும்.

7. நமது முன்னோர்கள் தமிழைப் பேசினார்கள். வாக்கிய சுருபமாகப் புஸ்தகங்களையும் கடிதங்களையும் எழுதுவது அவர்கள் வழக்கமல்ல. பாட்டாய் எழுதுவது அவர்களுக்கு மகா பிரியம். வசனம் எழுதினால் மதிப்பில்லை; இதனால் முன்னோர்கள் எழுதியவையெல்லாம் (வைத்தியம், அகராதி, இலக்கணம், ஸ்தல சரித்திரம், கடிதங்கள் யாவும்) பாட்டாகவேயிருந்தன. பாட்டெழுதத் தெரியாதவன் மூடன் என்னப்பட்டான். இதனால் முன் எழுதிய இலக்கண நூல்களில் வசனரூபமாய் எழுதுவதற்கு விதி வகைகள் விஸ்தரிக்கப்படவில்லை. ஏறக்குறைய 150 வருஷங்களாக வசனரூபமான புஸ்தகங்கள் எழுதப்பட்டுவருகின்றன.

---

[1] இலக்கியம் இன்றி இலக்கணம் இன்றே
எள்ளின் றாகில் எண்ணெயும் இன்றே
எள்ளினின் றெண்ணெய் எடுப்பது போல
இலக்கி யத்தினின் றெடுபடும் இலக்கணம். (பேர் அகத்தியம்.)

இலக்கணம் என்பது சமஸ்கிருதத்திலுள்ள இலட்சணம் என்னும் பதத்தின் திரிபு. இலட்சணம் என்றால் அழகு, கிரமமாய் இருக்கவேண்டிய விதம் என இரண்டர்த்தங்களைத் தரும். பாஷையை எவ்விதமாய்ப் பேசுவது, எவ்விதமாய் எழுதுவது, அதுவும் அழகும் அலங்காரமுமாய் எப்படிப் பேசுவது எழுதுவது என்பதை விளக்கிக்காட்டும் சாஸ்திரத்துக்கு இலக்கணம் என்று பேர்.

வீடுகட்டும் விதத்தைத் தெளிவிக்கும் நூலுக்கு மனையிலக்கணம் என்றும், நெசவுத்தொழிலின் வகையை விவரிக்கும் புஸ்தகத்தை நெசவிலக்கணம் என்றும், "இலக்கணம்" ஒரு பொதுவார்த்தையா யிருந்தாலும் பாஷைநடையைப் பாகுபடுத்திப்பேசும் நூலுக்கு "இலக்கணம்" என்று சிறப்பாய் வழங்குகிறது.

8. இக்காலவியற்கைப்படி தமிழ் இலக்கணம் எட்டு வகையாக விரித்துரைக்கப்படும்.

1. **எழுத்தியல்** ..........எழுத்துக்களைப் பற்றியது.
2. **சொல்லியல்** ........வார்த்தைகளைப் பற்றியது.
3. **தொடர்பியல்** ......வசனரூபமாய் எழுதுவதற்கான விதிகள் அடங்கியது.
4. **புணரியல்** .........வார்த்தைகள் அசைகள் தம்முள் ஒன்றோடொன்று பொருந்தும்போது அடையும் மாறுதல்களை விளக்கியது.
5. **பதவியல்** ...........பதங்களின் மூலம், வகை முதலியவற்றையும், பாஷையின் மரபான (Idiom) பதங்கள் இவை யென்பதையும் விளக்கியது.
6. **யாப்பியல்** .........பாட்டுகளைப்பற்றிய இலக்கணம்.
7. **அணியியல்** ..........அலங்காரங்களை விஸ்தரிப்பது.
8. [1] **பொருளியல்** ........எழுத்துக்களாலாகிய வார்த்தைகளின் பொருட்களைப்பற்றியது.

N.B.—இவற்றோடு பாஷையின் சரித்திரமும், பாயிரமுறையும் கடைசியில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

---

## CHAPTER II.

### LETTERS.—தமிழ் எழுத்துக்கள்.[2]

9. காக்கை கரைவதும், கோழி கூவுவதும், குதிரை கனைப்பதும் ஒருவகையான சப்தம்தான்.

[1] "பொருளியல்" பாஷையின் இலக்கணத்துக்குள் அடங்காத அந்நிய காரியங்களைப் பற்றியது. தமிழ் இலக்கணிகள் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி எனப் பிரித்திருப்பதால் இதைப்பற்றிச் சுருக்கமாயக் கடைசியில் சொல்லப்படும். தொடர்பியல் என்ற வாக்கியவியல் பூர்வ தமிழிலக்கணிகளால் விடப்பட்டதாயினும் இசையும் விதிகளைக் காட்டி விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. புணரியல், பதவியல், சொல்லியலுக்கு முந்தி எழுத்தியலோடு விளக்குவது தமிழ் இலக்கணிகளின் கிரமமாயினும் எளிதில விளங்கத்தக்கதாக சொல்லியலுக்குப்பின் வைக்கப்பட்டது.

[2] எழுத்துக்களை, முதலெழுத்து, சார்பெழுத்தென்று பிரித்து பவணந்தி முனிவரியற்றிய நன்னூலிலும், தொல்காப்பியத்திலும் மற்ற நூல்களிலும் எடுத்துச் சொல்லியிருக்கிறது. இது நியாயத்திற்கும் தற்காலத்திற்கும் ஒவ்வாது. உயிர்மெய், முற்றாய்தம், உயிரளபெடை, ஒற்றளபெடை, குற்றியல் உகரம், குற்றிய

ஆயினும் அர்த்தம் தரக்கூடிய வார்த்தைகளுண்டாவதற்குத் தகுந்த சப்தங்களே எழுத்தெனப்படும்.

"மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி
யெழுத்தது முதல்சார் பெனவிரு வகைத்தே." (நன்.)

**10**. இப்படியாகிய சப்தங்கள் எழுத்தின் ஒலிவடிவாம், அவைகளைப் பிறரறிய வரைவதற்கு அட்சரங்கள் நியமிக்கப்பட்டிருக்கின்றன. இவை எழுத்தின் வரிவடிவாம்.

"எழுதப் படுதலி னெழுத்தா கும்மே." (முத். வீ.)
"எழுத்தொலி வடிவரி வடிவையு மேற்கும்."(முத். வீ.)

எழுத்துக்கு மறுபேர்—இரேகை, வரி, பொறி, அட்சரம்.

**11**. தமிழில் உள்ள எழுத்துக்கள்.

உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய்யெழுத்து, ஆய்தம் என நான்கு வகைப்படும்.

**12**. [1] (Vowels) உயிரெழுத்து—அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ ஆக 12 ஆம்.

உயிர் என்பதற்கு மறுபேர்—அச்சு, ஆவி, சுரம், பூதம்.

(Consonants) மெய்யெழுத்து—க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்.

மெய் என்பதற்கு மறுபேர்—ஒற்று, உடல், ஊமை.

மெய்யெழுத்து தன்னில்தானே உயிரின் உதவியின்றி உச்சரிக்கப்படாதாகையால், மெய், உடல் என்றழைக்கப்படுகிறது.

---

லிகரம், குற்றியல் ஐகாரம், குற்றியல் ஔகாரம், மகரக்குறுக்கம், ஆய்தக்குறுக்கம் ஆகிய பத்துப்பிரிவுகளை சார்பெழுத்தெனப்படும்.

இவற்றில் உயிர்மெய் ஒன்றுதான், உயிரும், மெய்யும் ஒன்றுசேர்ந்து வருவதால் ஒருவாறு சார்பெழுத்தெனப்படலாம் ஆய்தம் ஒன்றையும் சார்ந்து வருவதில்லை, தனிநிலை யென்னும் பெயரையுமுடையது. குற்றியல் இ, உ, ஐ, ஔ, மகரக்குறுக்கம், ஆய்தக்குறுக்கங்கள், உயிர், மெய், ஆய்தம், உயிர்மெய்கள் எச்சமயத்தில் குறுகிய சப்தத்தோடு வருமென்றும், அளபெடைகள் எச்சமயங்களில் நெடிலும், ஒற்றும் நீண்ட ஒலியையுடையதாகுமென்றும் நன்னூல் சார்பெழுத்து சூத்திரங்கள் விளக்குவதினாலே பாட்டு விதிகளாகிய யாப்பிலக்கணத்துக்கு விசேஷித்தவைகளாயல்லாது சாதாரண உபயோகத்துக்கானவைகளுமல்ல, பற்பல வெவ்வேறு வகையான எழுத்துக்களுமல்ல. இவைகளைத் தனித்தனியாய்ப் பலவகை எழுத்துக்களென்று பலரும் மயங்கும்படி விவரிக்காமல் எழுத்துக்களின் உச்சரிப்பைப்பற்றிச் சொல்லுமிடத்து விளக்கிக் காட்டியிருக்கும்.

யாப்புக்கேயுரிய விதிகளை யாப்பியலிலே எடுத்துக் காட்டியிருக்கிறது.

"உயிர்மெய் ஆய்தம் உயிரள பொற்றள, பஃகிய இ, உ, ஐ, ஔ, மஃகான், தனிநிலை பத்தும் சார்பெழுத் தாகும்." (நன்.)

[1] ஏறக்குறைய எல்லாப் பாஷைகளிலும் அ, ஆ என்ற வாய்திறத்தலாலுண்டாய சப்தமே முதலெழுத்தாக நிற்கிறது. இது மனுகுலம், ஓர் தாய்பெற்ற பிள்ளைகள் என்பதற்கு அறிகுறியாய் விளங்குகிறது.

"அம்முத லீரா றுவி கம்முதல்
மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர்." (நன்.)

**13.** உயிரையும், மெய்யையும் முதல் எழுத்தென்று சொல்வார்கள்.

"உயிரும் உடம்புமா முப்பது முதலே." (நன்.)

**14.** அ, இ, உ, எ, ஒ ஐந்தும் குற்றெழுத்து. (Short Vowels) இவைகள் குறுகிய சப்தத்தையுடையவை.

குறிலுக்கு மறுபேர்—குறுமை, இரச்சுவம்.

"அவற்றுள்: அ, இ, உ, எ, ஒ க்குறி லைந்தே." (நன்.)

**15.** ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ ஆகிய ஏழும் நெட்டெழுத்துக்கள். (Long Vowels)

நெட்டெழுத்துக்கு மறுபெயர்—தீர்க்கம், நெடில்.

"ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ நெடில்." (நன்.)

**16.** மெய்யெழுத்துக்களின் பிரிவு.

Hard Consonants or Gutturals.—க், ச், ட், த், ப், ற் வல்லெழுத்தெனப்படும்.

வல்லெழுத்து—வன்மையான தொனியையுடையது. (மார்பினின்று பிறக்கும்.)

Soft Consonants or Nasals.—ங், ஞ், ண், ந், ம், ன் மெல்லெழுத்தெனப்படும்.

மெல்லெழுத்து—மெலிந்த சப்தத்தையுடையது (மூக்கினின்று பிறக்கிறது.)

Medial Consonants or Cervicals or Liquids.—ய், ர், ல், வ், ழ், ள் இடையெழுத்தெனப்படும்.

இடையெழுத்து—நடுத்தரமான சப்தத்தையுடையது (மூக்குக்கும், மார்புக்கும் நடுவிடமான கழுத்தினின்று பிறக்கிறது.)

வல்லெழுத்துக்கு மறுபேர்—வலி, வன்மை, வன்கணம்.
மெல்லெழுத்துக்கு மறுபேர்—மெலி, மென்மை, மென்கணம்.
இடையெழுத்துக்கு மறுபேர்—இடை, இடைமை, இடைக்கணம்
கணம் = கூட்டம்.

"வல்லினம் கசடத பறவென வாறே."
"மெல்லினம் ஙஞணந மனவென வாறே."  (நன்.)
"இடையினம் யரலவ ழளவென வாறே."

**17.** உயிர்மெய்யெழுத்து. மெய் 18மேல் உயிர் 12ம் வந்து பொருந்துவதால் உண்டாகும் 216ம் உயிர்மெய்யெழுத்தாம். (நூலாதாரம் பார்.)

[1]"உயிரே மெய்யணைந் துயிர்மெய் யாகும்
அவைஇரு நூற்றொரு பஃதா றென்ப." (தொன்னூல்.)

**18.** [2]ஆய்தம் ஃ, இது கூஃ என்று முற்காலத்தில் எழுதப்பட்டது. ஆய்தத்துக்கு மறுபேர்—அஃகேனம், தனிநிலை, முப்புள்ளி.

## KINDRED OR COGNATE LETTERS. எழுத்துக்களின் இனம் பின்வருமாறு.

| **19.** நெட்டெழுத்து. | இனமான குற்றெழுத்து. |
|---|---|
| ஆ | அ |
| ஈ | இ |
| ஊ | உ |
| ஏ | எ |
| ஓ | ஒ |
| ஐ | இ |
| ஔ | உ |

ஐ = அ + இ;  ஔ = அ + உ  (சப்தத்தில்)

ஆகையால் இரண்டிற்கும் பொதுவாய் நின்ற அவை நீக்கி மற்றையதை அதாவது இகரத்தை ஐகாரத்திற்கும் உகரத்தை ஔகாரத்திற்கும் இன எழுத்தாகக் கூறியிருக்கிறது.

---

[1] "புள்ளிவிட் டவ்வொடு முன்னுரு வாகியும்
ஏனை யுயிரோ டுருவு திரிந்தும்
உயிரள வாயதன் வடிவொழித் திருவயிற்
பெயரொடு மொற்றுமுன் னாய்வரு முயிர்மெய்" (நன்.)

[2] ஆதியில் முப்புள்ளி ஃ கூஃ குலாயுத வடிவாய் எழுதப்பட்டதால் ஆய்தம் என்றும், ஒன்றையும் சார்ந்து வாராததால் தனிநிலை யென்றும், மூன்று புள்ளியால் குறிக்கப்படுவதால் முப்புள்ளி யென்றும் பெயர் பெற்றது.

"குறியதன் முன்ன ராய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே." (நன்.)

| வல்லினம். | இனமெல்லினம். |
| --- | --- |
| க் | ங் |
| ச் | ஞ் |
| ட் | ண் |
| த் | ந் |
| ப் | ம் |
| ற் | ன் |

இடையெழுத்துக்கும் ஆய்தத்துக்கும் இனமில்லை, உயிர்மெய்யெழுத்துக்களின் இனம், தம்தம் உயிரும் மெய்யும் போலவே.

"ஐ, ஔ, இ, உச் செறிய முதலெழுத்
திவ்விரண் டோரின மாய்வரல் முறையே." (நன்.)

## GENERATION OF LETTERS—பிறப்பு.

**20**. உரம் அல்லது மார்பு, கண்டம் அல்லது கழுத்து, தலை, மூக்கு, இதழ் அல்லது உதடு, நாக்கு, பல், அண்ணம் (Upper root of the mouth) ஆகிய இவைகள் எழுத்துக்களை உச்சரிப்பதற்கான அவயவங்கள். உள்ளிருந்து வெளியில் வரும் சுவாசத்திலுள்ள காற்று மேற்கூறிய அவயவங்களால் திரிபடைய எழுத்துக்கள் உச்சரிக்கப்படும்.

[1] "நிறையுயிர் முயற்சியி னுள்வளி துரப்ப
எழுமணுத் திரளுரங் கண்ட முச்சி
மூக்குற் றிதழ்நாப் பல்லணாத் தொழிலின்
வெவ்வே றெழுத்தொலி யாய்வரல் பிறப்பே. (நன்.)

வளி = காற்று.

---

1 பின் வருவன எழுத்துக்களின் பிறப்பை விரிவாய்க்காட்டிய நன்னூல் சூத்திரங்கள்.

"அவற்றுள், முயற்சியுள் அ ஆ வங்காப்புடைய."

அங்காப்பு = வாய்திறத்தல்.

"இ, ஈ, எ, ஏ, ஐ, அங் காப்போ—டண்பல் முதனா விளிம்புற வருமே."

முதனா = நாக்கின் அடி.

"உ, ஊ, ஒ, ஓ, ஔ இதழ் குவிவே."

"கஙவும் சஞவும் டணவு முதலிடை
நுனிநா வண்ணம் முறமுறை வருமே."

"அண்பல் லடிநா முடியுறத் தநவரும்."

"மீகீ ழிதழுறப் பம்மப் பிறக்கும்."

"அடிநா வடியண முறயத் தோன்றும்."

'அண்ணம் நுனிநா வருட ரழவரும்."

**21.** உயிர், இடையினம் இரண்டும்—கழுத்தினின்று பிறக்கும்.

வல்லினம்—மார்பினின்று பிறக்கும்.

மெல்லினம்—மூக்கினாலுச்சரிக்கப்படும்.

ஆய்தம்—தலையிலிருந்து பிறக்கும்

உயிர்மெய்—மெய்யெழுத்துக்களும் உயிரெழுத்துக்களும் பிறக்கும் இடத்தினின்று இணைந்து பிறக்கும்.

"அவ்வழி, ஆவி யிடைமை யிடமிட றாகும்
மேவு மென்மைமூக் குரம்பெறும் வன்மை." (நன்.)

மிடறு = கழுத்து.

"ஆய்தக் கிடந்தலை யங்கா முயற்சி
சார்பெழுத் தேனவுந் தம்முத லனைய." (நன்.)

## FORM OF LETTERS.—உருவம்.

**22.** நூலாதாரத்தில் இருக்கும் உருவமே ஒவ்வொரு எழுத்திற்கு முரியது; ஆதிகாலம் தொட்டு இவ்வுருவமே வழங்கிவந்தது.

எ, ஒ என்பவை எ̇, ஒ̇ என்று பழையகாலத்தில் எழுதப்பட்டதுண்டு. இது வினாவாய் எழுதுவதில் பிழைகளை வருவித்து வார்த்தையின் பொருள் சிதைய இடமாகுமென்று நிறுத்தப்பட்டது.

"தொல்லை வடிவின வெல்லா வெழுத்துமாண்
டெய்து மெகர வொகரமெய் புள்ளி." (நன்.)

## [1] QUANTITY OF LETTERS.—மாத்திரை.

**23.** முன்னோரெழுதிய புஸ்தகங்களெல்லாம் செய்யுளாகவேயிருந்தமையால், எழுத்துக்கள் எவ்வளவு நீட்டியோ குறுக்கியோ உச்சரிக்கப்படவேண்டியதைப்பற்றித் திட்டமான விதிகளுண்டு.

இப்படி உச்சரிப்பதின் அளவுக்கு மாத்திரை என்று பெயர். கண்ணிமைத்தலும், கைநொடித்தலும், ஒரு மாத்திரையளவு.

---

"அண்பல் முதலு மண்ணமு முறையின்
நாவிளிம்பு வீங்கி யொற்றவும் வருடவும்
லகார ளகார மாயிரண்டும் பிறக்கும்." (நன்.)

"அண்ண நுனிநா நனியுறிற் றனவரும்." (நன்.)

[1] Quantity is as important in Tamil as it is in Latin.

"இயல்பெழு மாந்த ரிமைநொடி மாத்திரை." (நன்.)

மாத்திரையில், கால், அரை என்ற பின்ன பாகுபாடிருப்பதால் அதையும் பின்வருமாறு கணிதப்படுத்தவேண்டியதாம்.

"உன்னல் காலே ஊன்றல் அரையே
முறுக்கல் முக்கால் விடுத்தல் ஒன்றே."
கையால் நொடிக்க நினைத்தல்—கால்
விரல்கள் பொருந்த ஊன்றல்—அரை. ழ.

**24.** [1] மாத்திரை வருமாறு.

| | | | |
|---|---|---|---|
| குற்றெழுத்து | 1 | ஒரு | மாத்திரை. |
| நெட்டெழுத்து | 2 | இரண்டு | ,, |
| மெய் | $\frac{1}{2}$ | அரை | ,, |
| ஆய்தம் | $\frac{1}{2}$ | அரை | ,, |

உயிர்மெய் ஏறிவந்த உயிரின் மாத்திரையளவாம்.

சாதாரண வழக்கத்தில் இவை நீண்டும் குறுகியும் வரும்.

**25.** நீண்டுவருதல். (Lengthening of sound.)

சங்கீதத்திலும் கூப்பிடும் பொழுதும் நீண்டொலிக்கும், தெருவில் சாமான்கள் கொண்டு விற்கும்போது விற்பவர்கள் மாத்திரையளவுக்கு மிஞ்சிக் கூவி யொலிப்பார்கள்; புலம்பும்போது மாத்திரை நீளும்.

உ-ம். (a) ஐயோ ஓ மகனே பெரும்பயணம் போனாயோ ஓ.
(b) கிளையோ ஓ, கிளை.
(c) வாரீர் மண நலங்கிட — ரீஈ, ரீஈ, ழ.

இதன்றி அளவுப்பிரமாணத்துக்குள் அடங்கிய வெண்பா விருத்தம்முதலிய பாட்டுக்களில் ஓசை குறையும்போது நெட்டெழுத்தும் மெய்யெழுத்தும் நீண்டொலிக்கும். இப்படி கிரமப்படி பாட்டுகளில் நீண்டொலிப்பது நெட்டெழுத்தானால் உயிரளபெடை யென்றும்,

---

| | | |
|---|---|---|
| [1] உயிரளபெடை | 3 | மாத்திரை. |
| நெடில் | 2 | ,, |
| குறில், ( ஐ ஔ ) குறுக்கம், ஒற்றளபெடை | 1 | ,, |
| ஒற்று, ( இ, உ ) குறுக்கம், ஆய்தம் | $\frac{1}{2}$ | ,, |
| குறறியல் ( மகரம் ⊦ ஆய்தம். ) | $\frac{1}{4}$ | ,, |

"மூன்றுயி ரளபிரண் டாநெடி லொன்றே
குறிலோ டைஔக் குறுக்க மொற்றள
பளபொற் றிஉக் குறுக்க மாய்தம்
கால்குறள் மஃகா னாய்தம் மாத்திரை." (நன்.)

இதில் மாத்திரை விவரம் விளக்கப்பட்டது.

ஒற்று ஆய்தங்களானால் ஒற்றளபெடை யென்றும் விசேஷப்பேர்க ளிடப்படும். இதன் விவரம் யாப்பியலின் துவக்கத்திற் காண்க. (Vide Sections 426, 427.)

"ஆவியு மொற்று மளவிறந் திசைத்தலும்
மேவு மிசைவிளி பண்டமாற் றாதியின்." (நன்.)

WHEN CERTAIN LETTERS ARE
SHORTENED IN PRONUNCIATION.—ஓசை குறுகிவருதல்.

**26.** ஐ என்னும் நெட்டெழுத்து தனியாய் தை, சை, வை என வரும்பொழுதுமாத்திரம் தனக்குரிய பூரணமான இரண்டு மாத்திரையள வொலிக்கும்.

பலவெழுத்தமைந்த வார்த்தைகளில் முதல், இடை, கடை மூன் றிடத்திலும் சப்தம் குறுகி குற்றெழுத்தைப்போல் ஒரேமாத்திரை யுடையதாகும்.

உ—ம். தைத்து, கதைத்து, பலகை.

**ஔ** என்னும் நெட்டெழுத்து பலவெழுத்துக்களடங்கிய வார்த் தையின் முதலில் குற்றெழுத்துப்போல ஒருமாத்திரை யுடையதாகும்.

சௌந்தரம் இதில் ஔ 1 மாத்திரை.
திரௌபதை —— ஔ 2 ,,

"தற்சுட் டளபொழி ஐம்மூ வழியும்
நையும் ஔவும் முதலற் றாகும்." (நன்.)

**27.** Short உ. குற்றியலுகரம்.[1]

உகரம் தன் மாத்திரையில் குறுகி ஒலிக்கும்போது குற்றியலுகர மெனப்படும்.

உகரம் குறுகிய சப்தமாவதற்கு பின்வரும் இலட்சணங்கள் அமையவேண்டும்.

1. வார்த்தையின் கடைசியில் வரவேண்டும்.

2. வல்லெழுத்தாறில் ஒன்றின்மேல் ஊர்ந்து உகரம் வரவேண் டும்.

3. இவ்வார்த்தை உகர மூர்ந்துவந்த வல்லெழுத்தாகிய கு, சு, டு, து, பு, று ஒன்றைக் கூடி இரண்டுக்கு மேற்பட்ட எழுத்துக்க ளுள்ளதாயிருக்கவேண்டும்.

[1] இது புணரியல், வினையியல்களில் முககிய விசேஷமுள்ளதாகையால் இதைக் கவனமாய்க் கற்கவேண் டியது.

உ—ம். வாக்கு, அமைச்சு, விரட்டு, அங்கலாய்த்து, மூப்பு, கழன்று, வரகு, தினிசு, கூடாது, ௸.

4. கு, சு, டு, து, பு, று ஒன்றோடு ஒரே எழுத்துக்கூடிய பதமாயின் அது நெட்டெழுத்தா யிருக்கவேண்டும். குற்றெழுத்தா யிருக்கக்கூடாது.

N.B.—நெட்டெழுத்து என்றால் உயிரின் நெட்டெழுத்தைமாத்திரமல்ல உயிர்மெய்யின் நெட்டெழுத்தையும் குறிக்கும்.

உ—ம். ஆடு, காது, வீசு, ஈறு, ஆகு, காசு, ரூபு, ௸.

இக்குற்றியலுகரம் அறுவகைப்படும்.

1. தனி நெடில் சேர்ந்துவந்தது — நெடிற்றொடர் குற்றியலுகரம். ஆடு, காசு, ௸.

2. அனேக எழுத்துக்கள்சேர்ந்த பதத்தில் ஈற்று கு, சு, டு, து, பு, றுக்களுக்கு அடுத்து உயிர்மெய் வரின் — உயிர்த்தொடர்க் குற்றியலுகரம். விருது, முரசு, மலடு, பலது.

3. ஈற்றுக்கு அயலெழுத்து வல்லொற்றாயின் வன்றொடர்க் குற்றியலுகரம். பாக்கு, காய்ச்சு, இனிப்பு.

4. ஈற்றுக்கு அயலெழுத்து மெல்லொற்றாயின் மென்றொடர்க் குற்றியலுகரம். நொந்து, பங்கு, பஞ்சு, கன்று.

5. ஈற்றுக்கு அயலெழுத்து இடையொற்றாயின் இடைத்தொடர்க் குற்றியலுகரம். சால்பு, மார்பு, கொய்து, போழ்து.

6. ஈற்றுக்கு அயலெழுத்து ஆய்தமாயின் ஆய்தத்தொடர்க் குற்றியலுகரம். அஃது, கஃசு.

[1] இவ்விதமாய் வருவனவன்றி மற்றெல்லா உகரமும் பூரண ஒலியுடையதாய் முற்றுகரமெனப்படும்.

Exception. "உனது தகப்பன்" என்றர்த்தங்கொள்ளும் "நும் தந்தை" என்பது மருவி "நுந்தை" என்று விசேஷமாய்ப் பாட்டுகளில் வழங்கும். இதில் முதலில் நின்ற "நு" குறுகிய சப்தத்தையுடையதால் குற்றியலுகர மென்னப்படும்.

[1] வு ஈறுபெற்ற மொழிகளில் ஈற்றுகரம் குறுகிய சப்தத்தையுடையதாய் குற்றியலுகரம் ஏற்கும் விதிகளையும் விகாரங்களையும் ஏற்றுவரும். உ-ம். வரவு | இயற்கை=வரவியற்கை, முதல் நூலார் ஆகிய அகஸ்தியர் இதை விட்டுவிட்டதால் பின்னடியார் இதை விட்டுவந்தேயிருக்கிறார்கள். இப்படியே விம்மு முதலியவற்றிலுள்ள உகரமும் குறுகிய சப்தத்தை யுடையதாம்.

c. f. "உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும்,—முற்றுமற் றொரோவழி." (நன்.)

"நெடிலோ டாய்தம் உயிர்வலி மெலியிடை
தொடர்மொழி யிறுதி வன்மையூ ருகரம்
அஃகும் பிறமேற் றொடரவும் பெறுமே." (நன்.)

**28.** Short இ. குற்றியலிகரம்.
இ சிலவேளை குறுகி சப்திக்கும்.

குற்றியல் உக்குப்பின் ய வர்க்கத்தில் ஒரெழுத்தை முதலிலு டைய பதம் வந்து சேரும்போது உகரம் இகரமாய்த் திரியும். அப் போது இகரம் குறுகிய சப்தமுள்ளதாகும்.

உ—ம். செய்வது + யாது = செய்வதியாது.
பத்து + யானை = பத்தியானை.

"யகரம் வரக்குறள் உத்திரி யிகரமும்
அசைச்சொல் மியாவின் இகரமுங் குறிய." (நன்.)

"மியா" என்று பாட்டுகளில் வழங்கும் ஓர் அசைச்சொல்லி லுள்ள "மி"யும் குறுகி ஒலிக்கும்.

**29.** Short ம. மகரக் குறுக்கம்.
ல், ள் என்பது திரிந்து விகாரப்பட்டு வந்த, ன், ண் என்னும் ஒற் றுக்களுக்குப் பின்னும் வகரவர்க்கத் துயிர்மெய்களுக்கு முன்னும் வரும் ம குறுகி யொலிக்கும்.

உ—ம். மருளும் என்பது மருள்ம் என மருவி மருண்ம் என வரும். போலும் என்பது போல்ம் என மருவி போன்ம் என வரும்.
மரம் வேர். எல்லாம் வல்லன்.

[1] "லளமெய் திரிந்த னணமுன்னும் வருமொழி
வகர மிசையும் மகாரங் குறுகும்." (இ. விளக்கம்.)

**30.** ஆய்தமும் குறுகிய ஒலியுடையதாம். ல ள விகாரப்படும் பொழுது ஆய்தமாகும். அப்போது அவ்வாய்தம் குறுகி ஒலிக்கும்.

நெல் + தீயது = நெஃறீயது.
முள் + தைக்கும் = முட்டைக்கும் அல்லது முஃடைக்கும்.

"லளவீற் றியைபினு மாய்த மஃகும்." (நன்.)

---

[1] "ண, ன முன்னும் வஃகான்மிசையு மக்குறுகும்." (நன்.)

**31.** Initial letters. மொழி முதலில் வரும் எழுத்துக்கள்.

வார்த்தையின் முதலில் 12 உயிர் எழுத்தும் க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ வர்க்கத்து உயிர் மெய்களும் வரும்.[1]

உ—ம். அடை, ஆடை, இடை, ஈடு, உடை, ஊடல், எடு, ஏடு, ஐயம், ஒப்பு, ஓதி, ஔவியம்.

கறுப்பு, சரடு, தளிர், நன்மை, பகை, மலை, வம்பு, யாப்பு, ஞாயிறு, அங்ஙனம்.

**32.** இவற்றுள், க, ச, த, ந, ப, ம வர்க்கத்தில் ஒவ்வொன்றிலும் பன்னிரண்டு உயிர்மெய்யும் வரும்.

வகரவர்க்கத்தில்-உ, ஊ, ஒ, ஓ ஏறிய உயிர்மெய் முதலில் வராது, மற்றவற்றில் ஏறிவரும்.

உ—ம். வலி, வாது, விழி, வீம்பு, வெள்ளை, வேளை, வைகல், வௌவினன் (கவர்ந்துகொண்டான்).

யகரவர்க்கத்தில்—அ, ஆ, உ, ஊ, ஓ, ஔ ஏறிய உயிர்மெய் முதலில் வரும்.

உ—ம். யவனர், யானை, யுகம், யூகம், யோகி, யௌவனம்.

ஞகரவர்க்கத்தில் — அ, ஆ, எ, ஒ, ஏறிய உயிர்மெய்கள் மாத்திரம் வரும்.

உ—ம். ஞமலி, ஞாலம், ஞெகிழி, ஞொள்கியது.

[2] "பன்னீ ருயிருங் க ச த ந ப ம வ ய
ஞங வீரைந் துயிர்மெய்யு மொழிமுதல்." (நன்.)
"உ, ஊ, ஒ, ஓ வலவொடு வம்முதல்." (நன்.)
"அ, ஆ, உ, ஊ, ஓ, ஔ யம் முதல்." (நன்.)
"அ, ஆ, எ, ஒவ்வோ டாகு ஞம்முதல்." (நன்.)

---

[1] ங வர்க்க உயிர்மெய், மொழிக்கு முதலில் வரவேவராது. என்றாலும் பழைய இலக்கணிகள் அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், யாங்ஙனம் என்பதில் முதலெழுத்துக்கள் சுட்டும் வினாவுமானதால் ங முதலில் வந்ததென்பார்கள். திராவிட பாஷைகளுள் ஒன்றாகிய மலையாள பாஷையில் ங வர்க்கம் வார்த்தைகளின் முதலில் வருவதுண்டு. அப்பாஷையினின்று வந்து தமிழில் கலந்த வார்த்தைகள் பழமையில் உண்டாகி இப்போ வெகுவாய் மறைந்துபோய்விட்டன. இது பவணந்தி முனிவரின் சூத்திர விபரீதத்தை விளக்குவிக்கும்.

"சுட்டியா வெகர வினாவழி யவ்வை
ஒட்டி ஙவ்வு முதலா கும்மே." (நன்.)

[2] ண வர்க்கம் முதலில் வரவேவராது. உயிரெழுத்துக்குப் பதிலாக யகரவர்க்க உயிர்மெய்களையும் ஞகர வர்க்கத்திற்குப் பதிலாக ணகரவர்க்கத்தையும் பிள்ளைகள் தப்பாக வார்த்தையின் முதலில் எழுதிவருகிறார்கள். இதைக் கண்டித்துத் திருத்துவது அவசியம்.

**33.** Final letters.—*வார்த்தையின் ஈற்றில் வரும் எழுத்துக்கள்.*[1]

> "ஆவி, ஞண நமன யரலவ ழளமெய்
> சாயு முகர நாலாறு மீறே." (நன்.)

ஆவி உயிர். சாயுமுகரம் - குற்றியலுகரம்.

இப்படிப் பொதுப்படச் சொன்னாலும் உயிர்மெய்கள்தான் கடைசியில் வரும். நெட்டுயிர்கள் தனியே நின்று அர்த்தமுள்ள வார்த்தைகளாமேயல்லாது, பல எழுத்துக்களாலான வார்த்தையின் கடைசியில் வராது. பாட்டுக்களில் உயிர் அளபெடுக்கையில் அறிகுறியாகக் குற்றுயிர்கள் கடைசியில் வருமேயல்லாது வேறல்ல. எகர உயிர் மெய் கடைசியில் வரவே வராது. ஒகர உயிர் மெய்யும் "நொ" என்ற ஓர் தனிச்சொல்லிலன்றி கடைசியில் வரவே வராது. இதுவும் ஓரெழுத்துப் பதமாகையால் கடைசி யென்று எப்படிச் சொல்லலாம். அப்படியே ஔகார உயிர் மெய்யும், "கௌ, வௌ" என்ற தனிச்சொல்லிலன்றி கடைசியில் வரவே வராது.

நகரவொற்று "பொருந்" என்ற ஒரே வார்த்தையிலும் வகாரவொற்று அவ், இவ், உவ், தெவ் என்ற நான்கு வார்த்தையிலும் ஞகரவொற்று "உரிஞ்" என்ற ஒரே வார்த்தையிலும் மாத்திரம்கடைசியில் வரும்.

> "குற்றுயி ரளபி னீறா மெகரம்
> மெய்யோ டேலா தொந்நவ்வொ டாமௌக்
> ககர வகரமோ டாகு மென்ப." (நன்.)

**34.** Medial letters.—*மொழி நடுவில் வரும் எழுத்துக்கள்.* மெய்யும் உயிர்மெய்யும் வார்த்தையின் மத்தியில் வரும். க, ச, த, ப ஒற்றுக்கள்தவிர மற்ற 14 மெய்களும், வேறு மெய்யெழுத்துக்களோடு கூடி வார்த்தையின் மத்தியில் வரும். இதற்கு வேற்றுநிலை மெய் மயக்கு என்று பேர்.

உ-ம். பங்கம், பஞ்சம், வெட்கம், வெண்கலம், பந்தம், கம்பர், பாய் கெட்டது, வேர் சிறிது, பால் வண்ணன், தெவ்யாது, (தெவ் = பகை, போர்) கீழ் விழுந்தான், தேள் யாது, கற்கால், நன்செய்.

ர, ழ ஒற்றுக்கள் தவிர, மற்ற 16 ஒற்றுக்களும் தம்மோடுதாமே கூடி இரட்டிக்கும். இதற்கு உடனிலை மெய்மயக்கு என்று பேர்.

---

[1] ணகரவொற்றை னகரவொற்றிற்குப் பதிலாகவும் றகரவொற்றை ரகரவொற்றிற்குப் பதிலாகவும் பிள்ளைகள் தவறாய் வார்த்தையின் கடைசியில் எழுதுவதைக் கண்டித்துத் திருத்தவும்.

உ—ம். பக்கம், அங்ஙனம், பச்சாத்தாபம், அஞ்ஞானம், பட்டு, விண்ணுலகம், பந்து, வெந்நீர், தெப்பம், அம்மா, அய்யா, வெல்லம், இவ்வகை, கள்ளன், கற்றன், தென்னை.

உயிர்மெய்கள் தம்மோடு தாம்சேர்ந்து வருத லியல்பு.

மயக்கு என்பதற்கு மறுபேர், கூட்டம், சையோகம், சங்கம், புணர்ச்சி, கலத்தல், புல்லல், இடைநிலை.

"கசதப வொழித்தவீ ரேழன் கூட்டம்
மெய்ம்மயக் குடனிலை ரழவொழித் தீரெட்
டாகுமிவ் விருபான் மயக்கு மொழியிடை
மேவு முயிர்மெய் மயக்கள வின்றே." (நன்.)

35. Mutation of letters. போலி.

சாதாரண வழக்கத்திலும், பாட்டுகளிலும் ஒரு எழுத்துக்குப் பதிலாக வேறு எழுத்து வந்து விகாரப்படாமல் முன்னெழுத்துப்போலவே வரும். இது விகாரமல்ல, இதுதான் போலி என்னப்படும். இது மூன்றுவகையாம்.

1. Initial mutation.—மொழிமுதற் போலி.

(a) ஐ "அய்" ஆகும். ஐயர், அய்யர்.

(b) ஔ "அவ்" ஆகும். ஔவை, அவ்வை,

N.B.—இவை இரண்டையும் வடநூலார் சந்தியக்கரமென்பார்.

(c) ச, ஞ, ய வர்க்க உயிர்மெய்களுக்கு முன் வந்த அகர உயிரும் உயிர்மெய்யும் ஐ ஆகும்.

உ—ம். மயல் ———— மையல்.
பசல் ———— பைசல்.
மஞ்ஞை ———— மைஞ்ஞை (Peacock.)

(d) ந, ஞ ஆகும்.

உ—ம். நண்டு ———— ஞண்டு.
நாயிறு ———— ஞாயிறு.

2. Medial mutation.—மொழியிடைப் போலி.

(a) ஐக்குப் பின்வரும் ந—ஞ வாகும். ஐந்நூறு, ஐஞ்ஞூறு.

(b) யகரவொற்றுக்குப் பின்வரும் ந—ஞ வாகும். செய்ந்நன்றி, செய்ஞ்ஞன்றி.

(c) ண், ன் என்ற ஒற்றுக்களுக்குப்பின்வரும் ய—ஞ வாகும். பொன்யாத்த, பொன்ஞாத்த; மண்யாத்த, மண்ஞாத்த.

(d) ச, ஞ, ய உயிர்மெய் வர்க்கங்களுக்கு முன் வரும் அ, ஐ ஆகும்.

உ—ம். அமச்சன்———— அமைச்சன் (Minister.)
அரயன்———— அரையன்.
முரஞ்சு———— முரைஞ்சு.

(e) த – ச வாகும். வைத்தான், வைச்சான்.[1]
தைத்தான், தைச்சான்.

(f) ய – ச ஆகும். கயம், கசம்.

3. Final mutation.—மொழியிறுதிப் போலி.

(a) ம் – ன் ஆகும். மரம், மரன்.

(இது அஃறிணைப்பெயரில்மாத்திரம் ஆம் என்பது பெரும்பான்மையோர் துணிபு.)

(b) ல் – ர் ஆகும். சாம்பல், சாம்பர்.

(c) குற்றியல் உ "அர்" ஆகும். சுரும்பு, சுரும்பர் (சுரும்பு= வண்டு.)

(d) ல் – ள் ஆகும். வதில், வதிள். மதில், மதிள்.

N.B.—ஐந்து, அஞ்சு என்றதில் மூவகைப் போலியும் வந்தது.

"மகர விறுதி யஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன வுளவே." (நன்.)

"அ, ஐ முதலிடை யொக்குஞ் சஞயமுன்." (நன்.)

"ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஃகா னுறழு மென்மரு முளரே." (நன்.)

"அம்மு னிகரம் யகர மென்றிவை
யெய்தி னையொத் திசைக்கு மவ்வோ
டுவ்வும் வவ்வு மௌவோ ரன்ன." (நன்.)

**36.** எழுத்துக்களை யெடுத்து இன்னின்னதென்று சொல்லும்பொழுது ஐ, உ, க், கா என்னுமல் ஒவ்வொன்றோடும் ஓர் சாரியை யேற்றிச் சொல்வது வழக்கம்.

[1] This is not classical Tamil but considered vulgar and common place. இது கிராமியம் எனப்படும்.

(a) மெய்களுக்கு "அகரம்" ஏற்றப்படும். ககரவொற்று.

(b) நெட்டுயிருக்கு "காரம்" ........... ஆகாரம்.

(c) ஐ, ஔ இரண்டிற்கும் "காரம்" "கான்" ஏற்றப்படும்.

ஐகாரம், ஐகான்.

ஔகாரம், ஔகான்.

(d) குற்றுயிருக்கும், குற்றுயிர்மெய்க்கும் காரம், கான், கரம் ஆகிய மூன்றிலொன்று ஏற்றப்படும்.

அகாரம், அஃகான், அகரம்.
மகாரம், மஃகான், மகரம்.

நெட்டுயிர்மெய்க்கு சாரியை யேற்றி யுரைப்பது வழக்கமில்லை.

"மெய்களகரமும், நெட்டுயிர்காரமும்,
ஐ ஔ கானு மிருமைக்குறிலிவ்
விரண்டொடுகரமுமாஞ் சாரியைபெறும்பிற." (நன்.)

**37.** எழுத்துக்கள் வார்த்தைகளில் வரும்பொழுது மேற்சொன்ன விதிகளெல்லாம் ஏற்கும்.

"மொழியாய்த்தொடரினு முன்னனைத்தெழுத்தே."(நன்.)

**38.** Letters having special signification.[1]

விசேஷ அர்த்தத்தையுடைய எழுத்துக்கள்.

Demonstratives........சுட்டெழுத்துக்கள்.

அ, இ, உ, மூன்று உயிரும் மொழிக்கு முதலில் வந்து சுட்டுப் பொருளைத் தரும்போது சுட்டெழுத்தாம்.

உ—ம். அவன், அவள், இது, உவை, அப்பக்கம், இத்தட்டு.

அ, தூரத்திலிருக்கும் பொருளைக் காண்பிப்பதால் சேய்மைச் சுட்டெனப்படும்.

இ, சமீபத்திலுள்ளதைக் காட்டுவதால் அண்மைச்சுட்டெனப் படும்.

[1] N. B. விசேஷப் பொருள்தரும் மறற எழுத்துக்களை இலக்கணிகள் ஏற்பாட்டுப்படி இடையியலில் விவரித்திருக்கும். சுட்டு வினு இரண்டையும் அவற்றேடு சேர்த்து அவ்வியலில் காட்டுவது உத்தமமாயினும் முன்னூலார் வழிபாட்டை அநுசரித்து இங்கெழுதியது.

[1] உ, பின்பக்கத்திலும் நடுவிலுமுள்ளதைக் காட்டும்.

அவன், இது என்பவற்றில், அ, இக்களை நீக்கினால் மீந்துநின்ற அன், து பொருளைக்காட்டும் பெயர்கள் அல்ல. ஆகையால் இப்படி வருவதை அகச்சுட்டென்பர். அவ்வீடு, இம்மனிதன் முதலியவற்றில் அ, இக்களைப் பிரிக்க மீந்த, வீடு மனிதன் என்பவை பொருள்தரும்வார்த்தைகளாதலால், இப்படி வருபவைகளை புறச்சுட்டென்பர்.

"அ, இ, உ முதல் தனிவரிற் சுட்டே." (நன்.)

**39. Interrogatives.—வினாவெழுத்துக்கள்.**

எ, யா, ஆ, ஓ, ஏ இவைகள் வினாப்பொருளைத் தரும்போது வினாவெழுத்தென்னப்படும்.

இவற்றில் எ, யா மொழிமுதலில் வரும்.

உ-ம். எவன், யாது, யார், எத்தேசம், யாவிஷயம்.

இவை, சுட்டைப்போல அகவினா, புறவினா என்று வகுத்துக் கூறப்படும். உதாரணத்தில் முந்தின மூன்றும் அகவினா பிந்திய இரண்டும் புறவினா

ஆ, ஓ இவை மொழி இறுதியில் வரும்.

உ-ம். இராமனா வந்தான்.

வாத்தியாரோ போனார்.

இவை எப்போதும் புறவினாவாகவேயிருக்கும்.

ஏ, மொழி முதலிலும் கடையிலும் வரும்.

உ-ம். ஏது, தம்பியே.

"எ, யா முதலும் ஆ, ஓ ஈற்றும்,
ஏயிருவழியும் வினாவாகும்மே." (நன்.) [2]

---

[1] உ சுட்டிப்பொருளைத் தராது வருகிற சொற்கள் மகர சொற்பம். பெரும்பான்மை இவைகள் பாட்டில் வரும்.

"அவையே அசம்புறம் அண்மை சேய்மை பொதுமைக்கணும்." (பேர். அகத்தியம்.)

[2] "யாவேன் வினாவே அஃறிணைப் பன்மை
விகுதி பெறுங்கால் ஐமபாலினும் வினாவாம்." (பேர். அகத்தியம்.)

## 40. TABLE OF SANSCRIT AND TAMIL LETTERS.
## சம்ஸ்கிருத, தமிழ் அட்சரத் தொகுதி.
### Vowels.—உயிர்.

| தொக. | சம்ஸ்கிருதம். | தமிழ். | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | अ | அ | 1. மொழிமுதலில் சம்ஸ்கிருதத்தில் வந்த அ, ஆ வாகும்.<br>உ—ம். சனகன்மகள் சானகி (ஜானகி.)<br>"அகர முதன்மொழி ஆகார மாகும்." (முத். வீரி.)<br><br>2. மொழியின் கடையில் சம்ஸ்கிருதத்தில் வந்த அ, உயர்திணைப் பெயர் ஈற்றனல் தமிழில் அ, அன் என்றாகும்.<br>உ—ம். ராமா, ராமன்.<br>அஃறிணைப்பெயர் ஈற்றனல் அ, அம் என்றாகும்.<br>உ—ம். கும்பா, கும்பம். |
| 2 | आ | ஆ | சாதாரணமாய்ஸம்ஸ்கிருத மொழியில் ஈற்றில் வந்த ஆ, தமிழில் ஐ ஆகும்.<br>உ—ம். தரா, தரை; மாலா, மாலை.<br>"ஆகார விறுபெயர் ஐகார மாகும்." (முத். வீரி.) |
| 3 | इ | இ | மொழி முதலில் சம்ஸ்கிருதத்தில் இ வரின், ஐ ஆகி வருதலுமுண்டு.<br>உ—ம். கிரியிலுள்ளன=கைரிகம். |

| நெம். | சம்ஸ்கிருதம். | தமிழ். | குறிப்பு. |
| --- | --- | --- | --- |
| 4 | ई | ஈ | ஸம்ஸ்கிருதத்தில் மொழியின் ஈற்றில் வந்த ஈ, தமிழில் இகரமாம். உ—ம். புரீ, புரி. "ஈகார விறுபெய ரிகரமா மென்ப." (முத். வீரி.) |
| 5 | उ | உ | மொழிமுதலில் சம்ஸ்கிருதத்தில் உ, ஊ வரின், ஔகாரமாம். உ—ம். குருகுலத்தார்=கௌரவர், சூரன் மகள்=சௌரி. "முதலில் உ, ஊ, ஓ, ஔவாகும்மே." (முத். வீரி.) |
| 6 | ऊ | ஊ | |
| 7 | ऋ | | (ரு. ri) இது தமிழில் இ அல்லது இரு வாகும். உ—ம். ரிஷபம்=இடபம்; ரிஷி = இருடி. "ஏழாமுயிர் இய்யு மிருவு மாகும்." (முத். வீரி.) தமிழில் இவ்வெழுத்துக்களில்லை. இவை வந்தவிடத்தில் ஸம்ஸ்கிருத பதங்களைப்பெயர்த்து தமிழில் எழுதுகையில் இடையினமான ரகரம் எழுதப்படும். ஸம்ஸ்கிருத மெய்யாகிய ரகரம் தமிழில் எழுதப்படும்பொழுது அடையும் திரிபுகளையும் பெறும். (Vide. Consonants.) |
| 8 | ॠ | | (ரூ. rī) |
| 9 | ऌ | | (லூ lri) இது தமிழிலில்லை. |

| | | | |
|---|---|---|---|
| 10 | ए | ஏ | மொழியின் முதலில் சம்ஸ்கிருதத்தில் ஏவரின், ஐகாரமாகத் தமிழிலெழுதப் படும். உ—ம். வேரம்=வைரம். "இ, ஏ, முதற்கை யாமென மொழிப." (முத். வீரி.) |
| 11 | ऐ | ஐ | |
| 12 | ओ | ஓ | மொழிமுதலில் சம்ஸ்கிருதத்தில் வந்த ஓ தமிழில் ஔ ஆகும். உ—ம். சோமன் மகன்=சௌமியன். |
| 13 | औ | ஔ | |
| | | எ | இவை இரண்டும் சம்ஸ்கிருதத்திலில்லை. |
| | | ஒ | |

N.B. 1. சம்ஸ்கிருதத்திற்கும் தமிழுக்கும் பொதுவான உயிர்கள் இவை யென மேற்கண்ட பிரகரணத்தில் தெளிவாகும்.

"இடையி னன்கு மீற்றி லிரண்டும்
அல்லா வுயிர்பொது வாமென மொழிப." (முத். வீரி.)

2. தெலுங்கில் சம்ஸ்கிருதத்திலுள்ள எல்லாவுயிர்களும், தமிழுக்கே சிறப்பான எ, ஒக்களும், (li லு) என்ற உயிரும்கூட உண்டு. ஆகையால் தெலுங்கில் உயிரெழுத்துக்கள் அதிகம்.

## 41. CONSONANTS.—மெய்.

| நெம். | சம்ஸ்கிருதம். | தமிழ். | குறிப்பு. |
|---|---|---|---|
| 1 | क ka | க | சம்ஸ்கிருதத்திலுள்ள கவ்வர்க்கம் நான்கிற்கும் பதிலாய், தமிழில் க எழுதப்படும். |
| 2 | ख kha | | |
| 3 | ग ga | | |
| 4 | घ gha | | |
| 5 | ङ ṅa | ங | |
| 6 | च cha | ச | சம்ஸ்கிருதத்திலுள்ள சவ்வர்க்கம் நான்கிற்கும் பதிலாய், தமிழில் ச எழுதப்படும்; சம்ஸ்கிருத 8-ம் மெய்யை தமிழில் ஜ வென் றெழுதுவதுண்டு. ஜ வுக்குப் பதில் ய வும் வரும். உ-ம். கஜம்=கயம். |
| 7 | छ chha | | |
| 8 | ज ja | | |
| 9 | झ jha | | |
| 10 | ञ ña | ஞ | |

| | | | |
|---|---|---|---|
| 11 | ट ṭa | ட | சம்ஸ்கிருதத்திலுள்ள டவ்வர்க்கம் நான்கிற்கும் பதிலாய், தமிழில் ட எழுதப் படும். |
| 12 | ठ ṭha | | |
| 13 | ड ḍa | | |
| 14 | ढ ḍha | | |
| 15 | ण ṇa | ண | |
| 16 | त ta | த | சம்ஸ்கிருதத்திலுள்ள தவ்வர்க்கம் நான்கிற்கும் பதிலாய், தமிழில் த எழுதப் படும். |
| 17 | थ tha | | |
| 18 | द da | | |
| 19 | ध dha | | |
| 20 | न na | ந | இவ்வெழுத்துக்குப் பதில் ன தமிழில் மொழியின் இடையில்மாத்திரம் எழுதினும் எழுதலாம்; முதலில் எழுதவேண்டியது இந்த ந வே.<br>உ—ம். சிநேகம், சினேகம். (sans ஸ்நேஹம்.)<br>சம்ஸ்கிருத வார்த்தையின் நடுவில் வந்த ந வுக்குமுன் மெய் வரின், அ மெய்க்கேற்றித் தமிழில் எழுதப்படும்.<br>உ—ம். ரத்நம்=அரதனம். இ யும் ஏற்றி எழுதலாம், ரத்நம்=இரத்தினம். |
| 21 | प pa | ப | 1. சம்ஸ்கிருதத்திலுள்ள பவ்வர்க்கம் நான்கிற்கும் பதிலாய், தமிழில் ப எழுதப்படும்.<br>2. சிலவேளை சம்ஸ்கிருத ப வுக்குப் பதில் வ எழுதப்படும்.<br>உ—ம். பாபம்=பாவம். |
| 22 | फ pha | | |
| 23 • | ब ba | | |
| 24 | भ bha | | |

| தெம். | சம்ஸ்கிருதம். | தமிழ். | குறிப்பு. |
| --- | --- | --- | --- |
| 25 | म ma | ம | மொழி நடுவில் சம்ஸ்கிருதத்தில் ம வரின், அதன் முன்னின்ற மெய்க்கு உ ஏற்றித் தமிழில் எழுதப்படும்.<br>உ—ம். பத்மம்=பதுமம். |
| 26 | य ya | ய | சம்ஸ்கிருத ய மொழியின் முதலிலும், நடுவிலும் வரும்போது, தமிழில் இ அதன்முன் சேர்க்கப்படுவதுண்டு.<br>உ—ம். யட்சர்=இயக்கர், வாக்யம்=வாக்கியம். |
| 27 | र ra | ர | (1) சம்ஸ்கிருத மொழியில் முதல் ர வரின், அ, இ, உ என்பவற்றுள் ஒன்றை முன் வைத்துத் தமிழில் எழுதுவது வழக்கம்.<br>உ—ம். ராமன்=இராமன், ரங்கன்=அரங்கன், ரோமம்=உரோமம்.<br>(2) சம்ஸ்கிருத மொழியின் நடுவில் ர வரின், (a) ர வுக்கு முன் வந்தது மெய் யென்கில், அம்மெய்க்கு இ ஏற்றித் தமிழில் எழுதப்படும்.<br>உ—ம். வக்ரம்=வக்கிரம்.<br>(b) முன் மெய் வாராதிருக்கில், ர வுக்கு உ ஏற்றித் தமிழில் எழுதப்படும்.<br>உ—ம். பர்வதம்=பருவதம். |
| 28 | ल la | ல | (1) சம்ஸ்கிருதத்தில் வார்த்தையின்முதலில் ல வரின், இ அல்லது உ முன் சேர்த்துத் தமிழிலெழுதப்படும்.<br>உ—ம். லட்சுமி=இலட்சுமி, இலக்குமி; லோகம்=உலோகம்; லோபம்=உலோபம்.<br>(2) சம்ஸ்கிருதத்தில் மொழி நடுவில் ல வரின், ர வுக்குச் சொன்ன விதிபோல, (a) மெய் முன்னின்றால், மெய்க்கு இ ஏற்றித் தமிழிலெழுதவும். |

| | | | |
|---|---|---|---|
| | | | உ—ம். சுக்லம்=சுக்கிலம்.<br>(b) மெய் முன்னில்லெனில், ல வுக்கு உகரமேற்றித் தமிழிலெழுதவும்.<br>உ—ம். பல்கிறான்=பலுகிறான்.<br>(N. B.) li லூ என்னும் உயிரும் இவ்விதிகளைச் சிறுபான்மையேற்று வரும். |
| 29 | व va | வ | மொழிக்கு நடுவில், வ வுக்கு முன்வந்த மெய்மேல் உ ஏற்றித் தமிழிலெழுத வேண்டும்.<br>உ—ம். பக்வம்=பக்குவம். |
| 30 | श sha | | 30—ம் மெய் சவும், யவும் ஆகும் தமிழில்.<br>உ—ம். சாலை; மசானம்=மயானம். |
| 31 | ष sha | ஷ | 31—ம் மெய் சவும், டவும் ஆகும் தமிழில்.<br>உ—ம். விஷம்=விசம், விடம்; சாதாரணமாய் விஷம் என்றெழுதப்படும். |
| 32 | स sa | ஸ | 32—ம் மெய் சவும், தவும் ஆம்.<br>உ-ம். வாசனை, வாதனை, நாசம். |
| 33 | ह ha | ஹ | 33—ம் மெய் க வாகும்.<br>உ-ம். மகா, விகாரம். |
| 34 | क्ष ksha | க்ஷ | 34—ம் மெய் க்கவும் ட்சவும் ஆம்.<br>உ-ம். இயக்கர், இயட்சர்.<br>N. B. 31 முதல் 34 வரை உள்ள எழுத்துக்களுக்கு, தமிழில் கிரந்த அட்சரம் புதிதாய் அமைக்கப்பட்டிருக்கிறது. அவை, "தமிழ்" என்னும் பத்தியில் கண்டிருக்கின்றபடி யென்றறிக. |

## மேற்கண்ட சம்ஸ்கிருத எழுத்துக்களின் திரிபுகளை விளக்கிய சூத்திரங்கள்.

"இடையி னான்கு மீற்றி லிரண்டும்
அல்லா வச்சை வருக்க முதலீறி
யவ்வாதி நான்மை ளவ்வாகு மையைம்
பொதுவெழுத் தொழிந்த நாலே ழுந் திரியும்." (நன்.)

"அவற்றுள், ஏழாமுயி ரிய்யு மிருவுமை வருக்கத்
திடையின் மூன்று மவ்வம் முதலும்,
எட்டே யவ்வு முப்பது சயவும்
மேலொன்று சடவு மிரண்டு சதவும்
மூன்றே யகவு மைந்திரு கவ்வும்
ஆவீ றையு மீயீறி காரமும்." (நன்.)

ஐவருக்கம் = க, ச, ட, த, ப.
மேலொன்று = 31, இரண்டு=32, மூன்று=33.
ஐந்து = 35
இருகவ்வும் = க்க
ஆவீறையும் = ஆ, ஐஆம்.
ஈ யீறிகரமும = ஈ, இஆம்.

"ரவ்விற கம்முத லாமுக் குறிலும்
லவ்விற் கிம்முத லிரண்டும் யவ்விற்
கிய்யு மொழிமுத லாகிமுன் வருமே." (நன்.)

ர, ல, ய, மாறும் விதம், முறையே கூறப்பட்டது.

"இணைந்தியல் காலை ய, ர, லக் கிகரமும்
மவ்வக் குகரமு நகரக் ககரமும்
மிசைவரும் ரவ்வழி யுவ்வு மாம்பிற." (நன்.)

**42**. ஸம்ஸ்கிருத வார்த்தைகளின் நடுவில் ந, ய, ர, ல, வக்களுக்கு முன் ஒற்று வருமாயின், அவ்வொற்றெழுத்து இரட்டித்து, இ அல்லது உ, முன்சொன்ன விதிப்படியேற்று, தமிழில் எழுதப்படும்.

உ-ம். விக்கினம், வாக்கியம், வக்கிரம், சுக்கிலம், பக்குவம்.

**43**. ஸம்ஸ்கிருதத்தில் இரண்டெழுத்து-(மெய்கள்)-ஒன்றித்து வரும். மூன்றும் நாலும் வருவதியல்பே. இப்படி ஒன்றித்த மெய்களின்பின் நின்றது ந, ய, ர, ல வாகில் அதற்கு முன் நின்ற மெய்யின் மேல் இகரம் ஏற்றித் தமிழில் எழுதப்படும். இது முதலிலுமாம் இடையிலுமாம்.

முதலில் உ-ம். கிநேகம், தியாகம், திரவியம், கிலேசம்.
இடையில் உ-ம். விக்கினம், வாக்கியம், வக்கிரம், சுக்கிலம்.

N.B.—அரதனன் என்று அ ஏறியதுமுண்டு.
இரத்தினமென்று இ ஏறியது முண்டு.

**44.** இரண்டு மெய்கள் ஒன்றித்து வரும்போது பின் நின்றது வ, ம ஆகில் முன் நின்றதற்கு உகரமேற்றித் தமிழில் எழுதப்படும். இதுவும் முதலிலும், இடையிலுமாம்.

உ-ம். முதலில். த்வசம் = துவசம்.
ஸ்மார்த்தன் = சுமார்த்தன்.
இடையில். பக்வம் = பக்குவம்.
சூட்ச்மம் = சூட்சுமம்.

**45.** சம்ஸ்கிருதத்தில் இரண்டு மெய்கள் ஒன்றித்து வந்து அதில் பின் நின்றது ந, ய, ர, ல, வ, மக்களல்லாத மெய்களாயின், தமிழில் எழுதப்படும்பொழுது, மொழியின் முதலில், முதல் நின்ற மெய் கெட்டுப்போம்.

| | ஸம்ஸ்கிருதம். | தமிழ். |
|---|---|---|
| உ-ம். | க்ஞானம், | ஞானம். |
| | ஸ்தானம், | தானம். |
| | ஸ்புடம், | புடம். |
| | ஸ்படிகம், | படிகம். |

**46.** மொழிக்கிறுதியில் வரும் ஸம்ஸ்கிருத ஒற்றுக்கள் தமிழில் வரும்போது, ஒற்று இரட்டித்து, உகரம் ஏறப் பெறும்.

| | ஸம்ஸ். | தமிழ். |
|---|---|---|
| உ-ம். | வாக், | வாக்கு. |
| | விராட், | விராட்டு. |

N.B.—இம்மெய்கள் வல்லினம்.

ஸ், ஆயின் இரட்டாது. உகரம் அல்லது "அன்" ஏற்றித் தமிழில் எழுதப்படும்.

உ-ம். சுவாமிதாஸ், சுவாமிதாசு, சுவாமிதாசன்.

**47.** தமிழுக்கே சிறப்பான எழுத்துக்கள்: — ற, ன, ழ, எ, ஒவ்வும், சார்பெழுத்தில் உயிர்மெய்யும் உயிரளபெடையுமொழிந்த மற்றவையுமாம்.

"றனழ எ ஒவ்வு முயிர்மெய்யு முயிரள
பல்லாச் சார்புந் தமிழ்பிற பொதுவே." (நன்.)

ORTHOEPY.—எழுத்துக்களின் சரியான தொனி.

**48.** தமிழில் உயிரெழுத்துக்களும், மெய்களில் ங, ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ, ள, ஆகப் பன்னிரண்டும் தம் தமக்கு ஒரே தொனியையுடையது.

**49.** (a) க, ச, ட, த, ப என்ற ஐந்தும் சம்ஸ்கிருதத்திலுள்ள எழுத்துக்களுக்குப் பதில் நிற்பதால், இவைகள் வந்தவிடத்து, அப்பதங்கள் சுத்தத் தமிழோ, சம்ஸ்கிருதமோ என்று தெரிந்து, சம்ஸ்கிருதமாயின், அவைகளை சம்ஸ்கிருதத்தில்உச்சரிக்கப்படும் மாதிரியே உச்சரிக்கவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| உ-ம். | க. | கண் | (தமிழ்) |
| | | கடம் | (சம்ஸ்) |
| | | யாகம் | (சம்ஸ்) |
| | ச. | சால்பு | (தமிழ்) |
| | | சத்துரு | (சம்ஸ்) |
| | | சாவடி | (சம்ஸ்) |
| | | செயம் | (சம்ஸ்) |
| | ட. | டம்பம் | (சம்ஸ்) |
| | | கரடி | (தமிழ்) |
| | த. | தலை | (தமிழ்) |
| | | தாசன் | (சம்ஸ்) |
| | | மதம் | (சம்ஸ்) |
| | | மத்தி | (சம்ஸ்) |
| | ப. | அப்பம் | (தமிழ்) |
| | | அம்பலம் | (சம்ஸ்) |
| | | பகவான் | (சம்ஸ்) |
| | | அபவார்த்தை | (சம்ஸ்). |

(b) ற. மூன்று தொனிகளையுடையது.

| | | |
|---|---|---|
| (1) | வெறி | Veri. |
| (2) | வெற்றி | Vetti. |
| (3) | வென்று | Ventru. |

தமிழ் வாசிப்பவர் மிகக் கருத்தாய் பதத்தின் மூலம், தாற்பரியங்களையறிந்து, க, ச, ட, த, ப, றக்களைச் சரியாய் உச்சரிக்கப் பழகவேண்டும். அறிவாளிகள் பேசவும் வாசிக்கவும் கேட்டுப் படித்துக்கொள்ளவேண்டும்.

## ௨௰ எழுத்தியல் விவரம்.

எழுத்து.

1 எண். 2 பெயர். 3 முறை. 4 பிறப்பு. 5 உருவம். 6 மாத்திரை. 7 முதல்வரும் எழுத்து. 8 கடைவரும் எழுத்து. 9 சிவில்வரும் எழுத்து. 10 போலி. 11 இந்நூலில் கூட்டியது. 12 விசேஷபொருள் தருவது.

- 9 — உடனிலை மெய்மயக்கு. வேற்றுநிலை மெய்மயக்கு.
- 11 — தொனி. சமஸ்கிருத எழுத்துகள்.
- 12 — சுட்டு. வினா.

எண் — முதல் 30.

பெயர் — சார்பு. முதல். இடை. கடை.

- முதல் — மூன்று முறைப்படி. இந்நூல் பிரிவுப்படி.
- இந்நூல் பிரிவுப்படி — ஆய்தம். உயிர்மெய்.

முதல் 30 — உயிர் 12. மெய் 18.

- மெய் 18 — வல்லினம். மெல்லினம். இடையினம்.
- உயிர் 12 — குறில். நெடில்.

சார்பு — உயிர்மெய். ஆய்தம். உயிரளபெடை. ஒற்றளபெடை. குற்றியல் இ. குற்றியல் உ. குற்றியல் ஐ. குற்றியல் ஔ. மகரக் குறுக்கம். ஆய்தக் குறுக்கம்.

உயிரளபெடை, ஒற்றளபெடை — (Vide யாப்பியல்.)

குற்றியல் இ. முதல் ஆய்தக் குறுக்கம் வரை — சப்தவிளக்கத்தில் விஸ்தரிக்கப்பட்டது.

இம்முதற் பத்து அங்கங்களோடு, எழுத்ததிகாரத்தில் எழுத்தாலாகிய பதத்தையும் புணரியலையும் கூறி, அது பன்னிரண்டு வகைப்படுமெனப் பிரிப்பது முன்னோர் மரபு. பதம், புணர்ச்சி இவ்விரண்டையும் தனியாகப் பின் விஸ்தரித்திருக்கும். சமஸ்கிருத எழுத்துக்களைப்பற்றிப் புதிதும், நன்னூல் பதவியலிலுள்ளதும், பிறவும் சேர்த்து எழுத்தோடு சொல்லப்பட்டிருக்கிறது.

"எண்பெயர் முறைபிறப் புருவம் மாத்திரை, முதலீ றிடைநிலை போலி யென்றா, பதம்புணர் பெனப்பன் னிருபாற் றதுவே." (நன்.)

**51.** முன் 50-ம் பத்தியில், எழுத்தின் மூன்றும்பாகுபாடு "**முறை**" என நன்னூலில் வகுத்தது, எழுத்துக்களை நூலாசாரத்தில் வைத்திருக்கும் முறையே. இதற்கு மூதோர் பின்வருமாறு நியாயம் கூறுவார். மேலும் உயிரெழுத்து விசேஷமானதால் அவைகள் முதலில் வைக்கப்பட்டது. அவைகளில் குற்றெழுத்தை முந்தியும், நெடிலைப் பிந்தியும் வைத்தது, ஒரு கிரமம் அனுசரிக்கும்படியாக:

தமிழுக்கும், சம்ஸ்கிருதத்திற்கும் பொதுவானவற்றை அ, ஆ, இ, ஈ, உ, ஊ, என அடுக்கி, தமிழுக்கே சிறந்ததாகிய எகரத்தை அவற்றின் பின் வைப்பது நியாயமாயிற்று. அ எனும் சப்தம் வாய்திறத்தலாலுண்டாவதால் அ முதல் வைக்கப்பட்டது. வாய்திறத்தலுக்குப் பிறகு இரண்டாம் தொழில் வாயிழித்தல்; இதனால் வருவது இ, ஈ; மூன்றும் தொழில் வாய்குவித்தல்; இதனால் வருவது உ, ஊ. இம் மூன்று தொழிலும் சிறிது சேர்வதால் வருவது எ, ஏ, என்பவை. அ, இ இரண்டும் சேர்ந்ததுபோலிருக்கிற ஐ அதன் பின்னும், கொஞ்சம் குவித்து வாய்திறத்தலால் உச்சரிக்கப்படுகிற ஒ, ஓ, அதன் பின்னும், அ, உ இரண்டும் சேர்ந்தாற்போலவிருக்கும் ஔ, கடைசியாகவும் வைக்கப்பட்டது. ஆய்தம் உயிருக்கும் மெய்க்கும் நடுவாய் நின்றது.

பின், மெய்யெழுத்தில் சம்ஸ்கிருதத்திற்கும் தமிழுக்கும் பொதுவான வல்லினம் முதலிலும், அவ்வல்லினத்துக்கினமான மெல்லினம் அதை ஒட்டியும், அப்புறம் இடையினமும், கடைசியாக, பூட்டுப்போல் தமிழுக்கே சிறப்பான வல்லினமும், மெல்லினமுமாகிய ற, ன, கடைசியிலும் வைக்கப்பட்டது. இடையினத்தில் தமிழுக்கே சிறந்த ழ அவ்வினபாகத்தில் கடைசியில் வைக்கப்பட்டது.

"சிறப்பினு மினத்தினுஞ் செறிந்தீண் டம்முதல்
நடத்த றனே முறையா கும்மே." (நன்.)

"தான முயற்சி யளவு பொருள்வடி
வானவொன் றுதியோர் புடை யொப்பினமே." (நன்.)

தானம் = எழுத்துக்கள் பிறக்குமிடம்.
முயற்சி = அவை உச்சரிக்கப்பட உதவும் அங்கங்களின் செயல்.
அளவு = மாத்திரை.

இவை முதலியவற்றால் எழுத்துக்கள் தத்தமக்கு "**இனம்**" எனக் கூறப்படும்.

இவ்வினம் பற்றியும், சிறப்பாலும் நூலாதாரத்தில் எழுத்துக்கள் கிரமமாய் வரிசைப்படுத்தப்பட்டிருக்கின்றன.

**52.** [1] ன சப்தத்திற்கு இரண்டு அட்சரங்களுண்டு. மற்றெல்லாவற்றிற்கும் ஒரே அட்சரமே. Tamil Alphabet is phonetic. Each letter has a sound and each sound is represented by a single letter except ன.

**53.** [2] சார்பெழுத்து ஒவ்வொன்றும் இவ்வளவென்று கணக்கிட்டுரைப்பது முன்னோர்கள் மரபு. இதை யனுசரித்து நன்னூலாரும் பின்வருமாறு விரித்திருக்கிறார்.

[1] The Sanscrit words introduced in Tamil, though written in Tamil characters ought to be pronounced like Sanscrit as set forth. The numerous words from Hindustani, Persian and English, now largely introduced, when written in Tamil characters, do not represent the correct pronunciation they have in their respective languages, as there are not sufficient letters in Tamil. Hence it is necessary to add a few more characters to the Alphabet.

[2] உயிர்மெய் 216 என்பது சரியே.

முற்றாய்தம் எட்டெனச் சொல்வதேன்? எழுத்து ஒன்றுதான். க, ச, ட, த, ப, ற என்ற ஆறு வல்லெழுத்தின்மேலும் வருவதால், இது ஆறுவகை வெவ்வேறெழுத்தாகுமா? இது வல்லெழுத்தின்மேல வருவதியல்பு எனப் பொதுப்படச் சொன்னாலே போதுமே. புணர்ச்சியால் வல்லெழுத்தின்முன் வந்தது ஏழாவது ஆய்தமெனவும், செய்யுள் விகாரத்தால் "அஃகான்" என்பதுபோல வருவது எட்டாவது ஆய்தமெனவும் சொல்வதேனோ? இலக்கியம் (Tamil Literature) முழுவதிலும் ஆய்தம் இப்படி இத்தனை வருகின்றதென்று, சிந்தாமணியில் ஐம்பது ஆய்தம், குறளில் நூறு ஆய்தமென எழுதி எண்ணிக் கூறுவது எப்படியிருக்கும்? இப்படியே சார்பெழுத் தொவ்வொன்றின் விரியும், அதின் விகாரமுற் றியாப பிற தொவ்வொன்றென்று அறியலாம்.

தமிழிலுள்ள இலக்கியங்களில் ஒன்றை யெடுத்து அதில் இலக்கணவிதி யிகந்து வருவது எவ்வாறென உரைப்பது வழுவன்று; பிரயோசனமுடையதாகும். கிரந்த கர்த்தாக்கள் இயற்றிய எல்லா நூல்களிலும், பொது விதி பிறழ்ந்து வருவதையெல்லாம், தமிழ் இலக்கணத்தில் தொகுத்துக் கூறுவது அசாத்தியம். இப்படி ஒருங்கு கூறவேண்டுமென்னும் நோக்கத்தோடு ஆதியிலக்கணங்களை நூலாசிரியர்கள், பொது விதிகளோடு விலக்குவிதிகளையும் மற்றவற்றையுங் கலந்து, தமிழ் மாணாக்கருக்கு எளிதில் புலப்படாதிருக்கத்தக்கதாய் எழுதிவிட்டார்கள். ஆகையால் சார்பெழுத்தின் விரி விலக்கத் விடப்பட்டது.

சமஸ்கிருதம், இங்கிலீஷ்முதலிய பாஷைகளில் ஒவ்வொரு எழுத்துக்கும் சப்தம் இரண்டுவகையாம் என விரித்ததுபோல, தமிழில் விரிக்கின், குறுகிய உகரம் ஒரு சப்தமே. அதை (36) முப்பத்தாறு எனறி யப்புவது எப்படி? அப்படியே குற்றியலிகரமும் ஒன்றே; அதை (37) முப்பத்தேழாவதெப்படி? இப்படியே ஒவ்வொரு குறுக்கமும் ஒன்றுமேயல்லாது சப்தத்தில் ஒன்றுக்கு மேற்படாதே. உயிரளபெடை, ஒற்றளபெடைகளும், சப்தப்படி எழும், பதினொன்றுமாமேயல்லாது இருபத்திரண்டா யிருக்காதே. ஆகையால் சப்தப்படி பார்க்கினும், சார்பெழுத்துக்கள் (369) முந்நூற்றறுபத்தொன்பதாகா. ஆகையால் இப்படிச் சார்பெழுத்துக்களை விவரிப்பது மயக்கத்திற்கிடமாகி, மாணாக்கர், தமிழ் இலக்கணம் ஏதோ கூடாதகாரியமென அதை வெறுக்கவும், உபேக்ஷிக்கவும், வாத்தியார் படிக்கக்கட்டாயஞ்செய்வதால், அதைப் பாடஞ்செய்து, தமிழை எட்டிக்காய்போல எண்ணி, பள்ளிக்கூடம் விட்டபின் அதை எறிட்டும் கூடப்பாராமல், எட்டிச்செட்டி இறப்பில் வைத்து, தாய்ப் பாஷையை முற்றும் மறக்க இடமாகிறது. ஆகையால் இவை இந்நூலில் முற்றும் விடப்பட்டது.

"உயிர்மெய் யிரட்டுநூற் றெட்டுயிராய்தம்
எட்டுயிரளபெழு மூன்றொற்றளபெடை
ஆறே ழஃகு மிம்முப் பானேழ்
உகர மாறு றைகான் மூன்றே
ஔகா ரொன்றே மஃகான் மூன்றே
ஆய்த மிரண்டொடு சார்பெழுத் துறுவிரி
ஒன்றொழி முந்நூற் றெழுபா னென்ப." (நன்.)

உயிர்மெய் 216, முற்றாய்தம் 8, உயிரளபெடை 21.
ஒற்றளபெடை 42, குற்றியல் இ 37, குற்றியல் உ 36.
ஐகாரக் குறுக்கம் 3, ஔகாரக் குறுக்கம் 1.
மகரக் குறுக்கம் 3, ஆய்தக் குறுக்கம் 2.

## CHAPTER III.

### ETYMOLOGY.—சொல்லியல்.

54. எழுத்துக்களாலாகி பொருள் தருவது சொல்.

பொருளின்றி "கமஞடணந்து" என்றாற்போல் கூடிய எழுத்தின் தொகை வார்த்தையாகாது.

"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே." (தொல்.)

சொல்,[1] பதம், வார்த்தை, மொழி, கிளவி எல்லாம் ஒன்றிற்கொன்று பிரதிபதங்கள்.

---

[1] பதம் சம்ஸ்கிருதவார்த்தை.
கிளவி தொல்காப்பியத்தில் அடிக்கடி வரும்.
கிளத்தல்=சொல்லுதல்.
கிளவி, கிள எனனும் பகுதியடியாகப் பிறந்த தொழிற்பெயர்.

"எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருடரின்,
பதமா மதுபகாப் பதம்பகு பதமென
இருபா லாகி இயலு மென்ப." (நன்.)

"பகாப்பத மேழும் பகுபத மொன்பதும்
எழுத்தீறாகத் தொடருமென்ப." (நன்.)

நன்னூலார் பதங்களை, பகுபதம், பகாப்பதம் எனப் பிரிப்பர்; மற்றையோர், தனிமொழி, இணைமொழி, துணைமொழி, பொதுமொழி, தணைமொழி, கணைமொழி, கலப்புறுமொழி என எழு வகையாகப் பிரிபபர்.

"தனியிணை துணைபொது தணைக்கணைக் கலப்புற
மொழியோ ரேழென மொழிகரு முளரே." (முத். வீரி.)

**55.** இப்படியானசொல் ஓரெழுத்தாலும் ஆகலாம்.

இரண்டு, மூன்று, நான்கு, ஒன்பது எழுத்துக்கள்வரை கூடவரலாம்.

"எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருடரின்
பதமாம்." (நன்.)

"மொழியே, ஓரெழுத்தாதியொன் பானெழுத்தந்தமாம்."
(முத். வீ.)

உ-ம். கா, அணி, அறம், அகலம், அருப்பம், அம்பலவன், அரங்கத்தான், உத்திராடத்தான், உத்திரட்டாதியான்.

**56.** ஓரெழுத்தாலாகிய பதத்தின் விரிவு.

| | | | |
|---|---|---|---|
| ஆ | = | 1. | பசு, a cow. |
| ,, | = | 2. | ஆக, ஆகிறது, to become. |
| ஈ | = | 1. | a fly. |
| ,, | = | 2. | வண்டு, a beetle. |
| ,, | = | 3. | ஈகிறது or ஈவு, a gift. |
| ஊ | = | | தசை, flesh. |
| ஏ | = | | பாணம், an arrow. |
| ஐ | = | 1. | கடவுள், God. |
| ,, | = | 2. | சுவாமி, Lord. |
| ,, | = | 3. | ஆசான், Priest or Teacher. |
| ,, | = | 4. | அரசன், King. |
| ,, | = | 5. | அழகு, beauty. |
| ,, | = | 6. | இருமல், cough. |
| ,, | = | 7. | கோழை, phlegm. |
| ,, | = | 8. | நுண்மை, acuteness. |
| ,, | = | 9. | ஐந்து, five. |
| ஓ | = | | மடையடைக்கும் கதவு, a flood-gate. |
| மா | = | 1. | இலக்குமி, Lakshmi. |
| ,, | = | 2. | பெரிய, great. |
| ,, | = | 3. | good, fortune or felicity. |

| | | | |
|---|---|---|---|
| மீ | = | 1. | ஆகாயம், the air or atmosphere. |
| ,, | = | 2. | உயர்ச்சி, height or elevation. |
| ,, | | 3. | மேல், above or over. |
| மூ | = | 1. | மூகிறது, (imperative) |
| ,, | = | 2. | பழைய, old. |
| ,, | = | 3. | மூன்று, three. |
| மே | = | | அன்பு, love. |
| மை | = | 1. | அஞ்சனம், a black paint for the eyes or magical paint. |
| ,, | = | 2. | கறுப்பு, Ink or blackness |
| ,, | | 3. | குற்றம், fault. |
| ,, | = | 4. | செம்மறியாடு, a sheep. |
| ,, | = | 5. | நீர், water. |
| ,, | = | 6. | மலடு, barrenness. |
| ,, | = | 7. | மேகம், cloud. |
| மோ | = | 1. | மோக்கிறது, (imperative.) |
| ,, | = | 2. | (an expletive as கேண்மோ.) |
| ஈ | = | | கொடு. |
| தீ | | | நெருப்பு, fire. |
| தூ | | 1. | சுத்தம், purity. |
| ,, | = | 2. | புள்ளிறகு, feather of a bird. |
| தே | = | 1. | கடவுள், God. |
| ,, | = | 2. | கிருபை, Grace. |
| தை | = | | ஓர்மாதம். |
| பா | = | | பாட்டு, கவி, செய்யுள், a poem, a chant. |
| பூ | = | | பூமி, the earth. |
| பே | = | | நுரை, foam or froth. |
| பை | = | 1. | அழகு, beauty. |
| ,, | = | 2. | பாம்பின் படம், the hood of the Cobra. |
| ,, | = | 3. | பை, a bag or purse. |

போ = போகிறது, (imperative) Go.
நா = நாக்கு, tongue.
நீ = நீக்குகிறது, (imperative) Remove.
நே = 1. அன்பு, love.
,, = 2. நன்மை, a benefit.
நை = நைகிறது, (imperative) crush.
நோ = நோதல், a pain.
கா = 1. சோலை, grove.
,, = 2. காத்துக்கொள்.
கூ = 1. பூமி, earth.
,, = 2. clamour, கூகாவென்கிறது.
கை = கரம், the hand.
கோ = 1. பசு, a cow.
,, = 2. அரசன், a king.
வா = அழைத்தல், come.
வீ = 1. சாவு, death.
,, = 2. நீக்கம், removal.
வை = போடு, put.
வௌ = வௌவுதல், (imperative) Desire
சா = சாகிறது, (imperative) Die.
சீ = 1. இலக்குமி, Lackshmi.
,, = 2. விடம், poison.
சே = இடபம் or எருது, a bull.
சோ = அரண், a fort, a wall, fortification.
யா = 1. அசைச்சொல், an expletive.
,, = 2. யாக்கிறது, (imperative) join.
நோ = 1. துன்பம், affliction.
,, = 2. நோய், sickness.
து = சாப்பிடு, eat.

"உயிர்மவி லாறுந் தபநவி லைந்தும்
கவசவி னாலும் யவ்வி லொன்றும்
ஆகு நெடினொது வாங்குறி லிரண்டோ
டோரெழுத் தியல்பத மாறேழ் சிறப்பின." (நன்.)

**57.** இலக்கணப்படி[1] சொற்கள் பெயர், வினை, இடை, உரி என நான்காம்.

Noun. பெயர் கண்டதும், காணப்படாமல், மனதில்பாவிக்கப் பட்டதுமான பொருள்களைக் காட்டுவது

உ-ம். இராமன், கை, கறுப்பு, தேவன்

"பல்பொருட் பெயரே பெயர்ச்சொல லாகும்." (குவலை.)

Verb. வினை. கிரியையைக்காட்டும் சொல்.

உ-ம். போகிறான், வா, அடிபட்டான், பயிற்றுவிக்கிறான்

"பலதொழிற் பெயரே வினைச்சொல் லென்ப." (குவலை.)

Particles. இடைச்சொல் தன்னில்தானே யாதொரு அர்த்தத்தையுடையதல்ல, பெயரோடும் வினையோடுங்கூடி அவைகளின் அர்த்தத்தைத் திரித்து வேறுபடுத்தும்.

உ-ம். பெயர், மரம், மரத்தை (இங்கு ஐ இடைச்சொல்). நட, வினை, நடக்கிறான் என்பதில் நட-தவிர, மிஞ்சி **கிறு ஆன்** என்பவைகள் இடைச்சொல்லாம்.

Qualifying words. உரிச்சொல். பெயரினுடையவும், வினையினுடையவும் குணம் கூறுகளை விவரித்துக்காட்டும் சொற்கள்.

இவைகளும் பெயர்வினையோடன்றி, தனியாய்வாக்கியங்களில் வராது.

உ-ம். தவப்புனிதன் / மிகத்தின்றான் } இவற்றில் தவ, மிக உரிச்சொற்கள்.

---

[1] N. B. சொற்களை வெவ்வேறுவகையாகப் பிரிக்கலாம்.

1. பகாப்பதம்=Primitive word, பகுபதம்=Derivative word, என தாதுமூலம (root) பற்றி வகுக்கலாம்.

2. ஸமஸ்கிருதபதம், தெலுங்குமொழி, மலையாளவார்த்தை, சுத்ததமிழ் என பாஷாந்தரத்திற்புபற்றிப் பிரிக்கலாம்.

3. (a.) ஒரே கருத்தை விளக்கிய தெளிவான சொல்.

(b.) பலபொருளைக் குறித்த ஒரு சொல், என அர்த்த விசேஷத்தை முன்னிட்டும் பிரிக்கலாம.

இப்படிப் பலவகையாயும் பிரித்து முதலிலேயே காட்டுவது மயக்கத்திற்கிடமாகுமாகையால, இலக்கணப்படி பெயர், வினை, இடை, உரி எனபவற்றை விளக்கி விரித்தபின் இவை விவரிக்கப்படும.

"பெயர்வினையிடத்துப்பிறப்பது இடைச்சொல்."(முத். வீரி.)

"பல்குணச்சொல்லே உரிச்சொல்லாகும்."

[1] "பெயர், வினை, இடை, உரி, எனச்சொன் னான்கே."
(முத். வீரி.)

## CHAPTER IV

### NOUN.—பெயர்ச்சொல்.

**58.** [2] அதின் வகைவிவரம். Classifications.

ஒன்று இன்னதெனக் குறிப்பிக்கும் சொல் பெயர். இப்பெயர்கள் பலவகைப்படும்.

---

[1] பெயரும், வினையுமே தனித்து நின்று பொருள் கொடுப்பவை. மற்ற இரண்டும் இவற்றைச் சார்ந்தே வரும். "எல்லாச் சொல்லும் பொருள் கொடுக்கும்" என்று விதித்திருக்க, இடையும், உரியும் தம்மில்தாமே, தனித்தியங்காது நின்று பெயரோடும், வினையோடும் சேரும்போது, அவற்றின் பொருளைப் பேதித்து, விரித்து, சுருக்கி, பலவகையாய் வேறுபடுத்துவதால், அவைகளுக்கும் ஒருவகையாய்ப் பொருளுண்டென்பது சரியே. உப்பைமட்டும் தின்பாரில்லை. சோற்றிற்கு உப்பில்லாவிட்டால் ருசியில்லை. சோறு அவசியம் பிரயோசனமுள்ளதாயினும், சோற்றுக்கு உப்பு எவ்வளவு அவசியமோ, பெயரும் வினையும் சிறந்த பிரயோசனமுள்ள கருப்பொருள் வார்த்தைகளாயினும், இடையும், உரியுமாகிய உப்பின்றி அவை மேன்மையடைந்து உபயோகத்துக்காகா.

"உயிர்ப் பொருள் உயிரிலாப் பொருள் இருவகைய
உறுதல், பறத்தல், நடத்தல் என்றே
மூவகை ஆகும் உயிர்ப்பொருளின்மே
இயற்கை செயற்கை இருவகை யானும்
உயிரிலாப் பொருளென் றுரைத்தனர் புலவர்." (குவலயானந்தம்.)

[2] N. B. 1. இடுகுறிப்பெயர் காரணப்பெயர் என்றும், பொதுப்பெயர், சிறப்புப்பெயர் என்றும், இடுகுறிப் பொது, இடுகுறிச்சிறப்பு, காரணப்பொது, காரணச்சிறப்பு என்றும் பலவகையாய், பெயர்கள் பிரிக்கப் பட்டிருக்கின்றன.

"இடுகுறி காரணப் பெயர் பொதுச் சிறப்பின." (நன்.)

"இடுகுறி காரண மரபோ டாக்கம்
தொடர்ந்து தொழிலல காலந் தோற்றா
வேற்றுமைக் கிடனாய்த் திணைபா லிடத்தொன்
றேற்பவும் பொதுவு மாவன பெயரே." (நன்.)

உ—ம். வேம்பு, மா, பனை } சிறப்புப்பெயர்.

II. சிறப்பு நோக்கி.
வினையாலணைபெயர்—

உ—ம். ஓடினவன்; படிக்கிறவர்கள்.

III. உபயோகம் நோக்கி.
ஆகுபெயர்—

உ—ம். வற்றல் உண்டான்.

N. B. II—ம் III—ம் பிரிவுகள் I—ம், பாகுபாட்டின் அமைக்கப்படத்தக்கவைகளே.

---

5. பெயர்கள் வாக்கியங்களில் வருமிடத்து, அவற்றின் நிலை கருத்து நோக்கி, பொது, சிறப்பு, காரணம், இடுகுறியென்று பாகுபடுதலாமாயினும் குறிக்கத்தக் கிடையாமையால், இதை விசேஷப்படுத்தி இலக்கணப் பெயர்களைப் பிரித்த நூலில் காட்டாமல குறிப்பில் காட்டியது.

௬. தமிழ் இலக்கணிகள் பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் எனப் பெயர்களை அறுவகையாகப் பிரிக்கிறார்கள்.

மக்கள் அல்லது மானிடர்கள், தேவர்கள், நரகர்கள் முதலியவரைப் பொருட்பெயரென்பார்கள். மனுஷர் உயர்ந்தவரும, மரம், நாய் முதலியவற்றைப்போல அல்ல; ஆகையால் மக்கட்பெயரென்று ஒரு வகுப்பு கூட்டப்படுகிறது நலம்.

தேவனையும், நரகனையும் மக்களோடொப்பப் பேசக்கூடாதே என்றாலோ; தேவன் ஒருவன், அவன் ரூபமும் அரூபியுமாயிருக்கிறான், தேவர்கள் என்றது மனிடராயிருந்து, நற்கிரியைகளால் மேம்பாடடைந்தவர்கள் என்பதும் அப்படியே மானிடராயிருந்து துற்கிரியைகளால் தாழ்நிலையடைந்தோர் நரகர் என்பதும் இந்துக்களுடைய சித்தாந்தம்.

நல்ல ஆத்துமாவையும் ஒரு சாமனுஷனையும் தேவதூதர், தேவர் என்றும், கெட்ட ஆத்துமாவையும் பைசாசங்களையும் நரகர் என்றும் வகுப்பது கிறிஸ்தவ சித்தாந்தம்.

இவ்விரு சித்தாந்தங்களிலும் காணப்பட்ட மனுஷரினும் உயர்ந்தவரும், தாழ்ந்தவருமான சித்தவிருத்தியுடைய சிருஷ்டிகளை மக்கட்பெயர் என்று பாகுபடுத்தல் இலக்கண நோக்கமாய வழுவல்ல.

மிருகங்களையும் பறவைகளையும், ஊர்வனவைகளையும் பொருள் என்றே மக்கள் என்றே பாகிக்கத் தக்கதென்று தாக்கம் உண்டாகும். மிருகம் முதலியன மனுஷனைப்போல் ஆத்துமா, எழுத்துவடிவமான பாஷை முதலியன இல்லாதவையாலும், அவைகளை அஃறிணையென்று முன்னோர் விதித்திருப்பதாலும் அவற்றைப் பொருட்பெயராகப் பாகிப்பது சரியே.

7. சினைப்பெயர் அவயவ அல்லது உறுப்பின்பெயர்.

உ—ம். மரம்—முற்றுப்பெயர்.

இலை, பூ, காய், கிளை } சினைப்பெயர்.

அப்படியே உடம்பு முற்றுப்பெயர் கை, கால், மூக்கு சினைப்பெயர். முற்றும், சினையும் எல்லாம் பொருட்பெயராயிருப்பதாலும், முதலே சினையாகவும், சினையே முதலாகவும் பாவிக்கப்பட்டு அவைகள் இடமுதலான நியாயம் எடுத்துக்காட்டி விதிக்கப்படுவதற்கு இடமாகும். ஆகையால் சினைப்பெயரைத் தனிப்படுத்திப் பிரிப்பது சரியன்று.

௮. ஊர், நாடுமுதலியன பொருட்பெயராகாதோ என்கில், அவைகள் இடமாகிய வஸ்துவின் பெயராயிருப்பதை எவரும் எளிதில் அறியலாமே. ஆகையால் அதைப் பிரித்துக் காட்டியிருக்கிறது.

௯. வினையாலணைபெயர். மக்கள், பொருள், இடம், காலம் பண்பு இவற்றில் ஒன்றையே குறிப்பிக்கும்.

59. பொருட்பெயர்—மனுஷர்கள்பெயரும், பொருட்களின் பெயரும்.

இடப்பெயர்.—Names of places. எல்லா இடங்களின்பெயா கண்டம், தேசம், நாடு, நகரம், நதி, மலை, குளம், குட்டை, ஊர், பாடி, முதலியவற்றின் பெயர்.

காலப்பெயர்.—Names of divisions of time. காலவரையறையை நிர்ணயிக்கிற வருஷம், மாதம், தேதி, நாள், நட்சத்திரம் முதலியன.

சினைப்பெயர்.-Names of parts. ஒரு பொருளுக்குரிய உறுப்புகளின் பெயர், வீடு என்னும் பொருளின் அங்கங்களாகிய தூண், சுவர், வாயில், சாளரம் முதலியன சினைப்பெயர். •

மரம், பொருட்பெயர். இலை, காய், பூ, வேர், கிளை, சினைப்பெயர்.

குணப்பெயர்.—Names of qualities. Abstract Nouns. பெருமை, சிறுமை, நீளம், குட்டை என்ற வண்ணமும், உருண்டை, தட்டை, சதுரம் முதலிய வடிவமும், அரை, கால், ஒன்று, இரண்டு முதலிய அளவும், இனிப்பு, கைப்பு முதலிய சுவையும். கொடை, பகை முதலிய தொழிலும், காட்டியவை குணப்பெயர்கள்.

தொழிற்பெயர். Names of acts. பலவகைக் கிரியைகளின் பெயர்

உ—ம். நடத்தல், இருத்தல், போதல்.

வினையாலணை பெயர் (The agents of acts specified.)

ஓர் கிரியை நடப்பித்த மனுஷனையாவது, பொருள் முதலியவற்றையாவது குறிக்கும்.

| | |
|---|---|
| படிக்கிறவன் | மக்களைக்குறித்தது. |
| ஓடுகிறது நாய் | பொருளை ——— |
| இப்போ நிகழ்வது மாசி | காலத்தை ——— |
| நாம் இருந்தது மதுரை | இடத்தை ——— |
| அவர் காட்டியது சினேகம் | பண்பை ——— |
| தர்மஞ்செய்வது சகை | தொழிலை ——— |

...க்கபதிலா பொருள் நோக்க, இவை வந்த இடங்களில் பொருள் இடம் காலம் சினை குணம்தொழிலென ஆறுவகையில் ஒன்றாய் விளங்கிநிற்குமாயினும், அவற்றைத் தனித்தனி விவரமாய் அறிவது அவசியம் ஆகவே இதை வேறுபடுத்திக் காட்டியது முன்னோர் வழக்கத்தை யநுசரித்தும் வினையின்வேறுபிறந்த வி... ஒன்றுள்ளதாலுமே.

10 ஆதிபெயரும் இப்படியே ஆறுவகைப் பெயருக்குள் அடையுமாயினும் முன்னோர் முறைமையை யநுசரித்து அதை விஸ்தரித்திருக்கிறது

ஆகுபெயர்.—(Figurative Nouns or Tropes.)

"பொருளிடங்காலம் சினைகுணம் தொழிலொடு
வினையாலணைபெய ராகு பெயரென
இருநான் குறுப்பும் பெயரின் விரியே." (சுயம்.)

60. இவ்வெட்டுவகைப் பெயருந் தவிர,

சுட்டடியாகப்பிறந்த அவன், அவள், அவர், அது, அவை முதலானவையும்,

வினாவடியாகப்பிறந்த எவன், எவள், எது, எவை, யாவன் முதலானவையும்,

பிற, மற்று என்னும் சொல்லடியாகப் பிறந்த பிறன், பிறர்,பிறத்தியான், பிறத்தியாள்,மற்றவன்,மற்றவர்,மற்றவள், மற்றையாள், மற்றது. மற்றவை முதலியவையும்,

பிரதிப்பெயர்களான நான், நீ, தான், நாம், நீர், தாம், நாங்கள், நீங்கள், தாங்கள் முதலியவையும்,

எண்ணடியாகப்பிறந்த ஒன்று, இரண்டு, ஆயிரம்முதலிய எண்களும், ஒருவன், ஒருத்தி, மூவர்,ஐவர் முதலியவும், எல்லாம், எல்லாரும், எல்லோரும், எல்லீரும் என்ற பொதுப்பெயரும், பல, சில முதலியவைகளும் பெயர்களே.

இவைகள் பிரதிப்பெயரை விஸ்தரிக்குமிடத்துப் பெருக்கி விளக்கப்படும்.

61. [1] ஆகுபெயர் வருமாறு.

கல், மண், நீர் முதலியவை ஆதிதொடுத்து இயற்கையாய் இப்பொருளைக் காட்டிவருதால் இயற்பெயரெனப்படும். ஆயினும் இப்படிப்பட்ட இயற்பெயர்கள் தம் கருத்தை யொழித்து தம்மோடு சம்பந்தப்பட்ட மற்றொரு பொருளைத் தந்து, தொன்றுதொட்டு வெகுகாலமாய் வழங்கிவரும்பொழுது அவை ஆகுபெயராம். இவை பலவகைப்படும்.

உ—ம். 1. தாமரை போன்ற பாதம்.
இங்கு **தாமரைச்** செடியின்பேர் அதின் சினையாகிய பூவைக்குறித்தது. இது பொருளாகுபெயர்.

2. **ஊர்** அடங்கிற்று. ஊரிலுள்ள ஜனம்—இடவாகு பெயர்.

---

[1] ஆகுபெயர் இங்கிலீஷில் Metonomy, Synechdoche எனபவற்றைப் போலுள்ளது. இது இங்கிலிஷில் பெயர்ப்பகுதியாக வல்ல, அலங்காரங்களிலொன்றாகும்.

3. **கார்** அறுத்தார்கள்; (கார்காலத்து நெற்பயிர்). காலவாகுபெயர்.

4. இன்னம் நாலுகையிருந்தால் வேலைமுடியும். கையாகிய சினை கைகளையுடைய மனிதருக்கு வந்தது. சினையாகுபெயர்.

5. வண்ணான் வெள்ளை கொண்டுவந்தான்; (வெளுத்த வஸ்திரம்) பண்பாகுபெயர்.

6. சுண்டல் சாப்பிட்டான்; (சுண்டிய பதார்த்தம்). தொழிலாகுபெயர்.

7. (a) காலாலே நடந்தான்; (கால் ¼, இங்கே தேகத்தின் நாலிலொரு பாகமான கீழ் அங்கம்). எண்ணலளவையாகுபெயர்.

(b) துலாக்கோல். எடுத்தலளவையாகுபெயர்.

(c) நாழி உடைந்தது. முகத்தலளவையாகுபெயர்.

(d) கீழ்த்தடி விளைந்தது; (தடி என்பது தடியால் அளக்கப்படும் வயல் நிலம்). நீட்டலளவையாகுபெயர்.

(e) நன்னூலுக்கு உரையெழுதினான்; (உரையென்ற சொல்லின்பெயர் அதனாலாய பொருளைக் குறித்தது). சொல்லாகுபெயர்.

(f) விளக்கு முறிந்தது; (விளக்காகிய தீபமல்ல, தீபஸ்தம்பம்). தானி ஆகுபெயர். தானி(ஸ்தானம்)=இருப்பிடம்.

(g) கம்பர் எமக்குப்பாடம்; (ஆக்கியோனின் பெயர் அவன் எழுதியநூலுக்கு வந்தது). கருத்தாவாகுபெயர்.

(h) என் பிழைப்புக் கெட்டது; (பிழைப்பாகிய காரியம் அதற்குக் காரணமான உத்தியோகத்துக்கு வந்தது). காரியவாகுபெயர்.

(i) மதுரைக்கு வழி வாயில்; (வாய் என்ற கருவியாலாகிய பேச்சு). கருவியாகுபெயர்.

(k) மூவரும் வந்தார்கள். (சேர, சோழ, பாண்டியர் என்ற மூவரும் வந்தார்கள்.) எண்ணாகுபெயர்.

(l) நீ வெகுபக்தியுள்ள பூனை (பூனையைப்போன்றவன்). உவமையாகுபெயர். &c.

ஆக ஒன்றின்பெயர் ஒன்றிற்கு, சொன்றுதொட்டு வந்து வழங்கும்போது முதல்நின்ற இயற்கைப்பெயரின் நாமமிட்டு இன்ன இன்ன ஆகுபெயரெனப் பாகுபடுத்தவும்.

சினைப்பெயர் முதலுக்கு வந்தால் சினையாகுபெயர்; இவைபோல் வனபிறவும்.

"பொருள்முத லாறோ டளவை சொல்தானி
கருவி காரியங் கருத்த னாதியுள்
ஒன்றன் பெயரா னதற்கியை பிறிதைத்
தொன்முறை யுரைப்பன வாகு பெயரே." (நன்.)

**62.** 1. முறைப்பெயர். (Nouns indicative of relation). உ-ம். மகன், தாய், இராஜன், மைத்துனன், அக்காள், குடி, எஜமான், வேலையாள், &c.

2. தொகுதிப்பெயர். (Collective Nouns).

உ-ம். பவிஞ்சு, சேனை, குழாஅம், கொத்து, மாலை, அணம், குப்பு, சபை, தெரு, தோப்பு, சோலை, &c.

மேற்கண்டபிரிவுகளை தமிழிலக்கணிகள் விசேஷபாகுபாடுகளாக வகுத்துக் கூறாவிடினும் இவை இப்படிப்பட்டவையென்று தெரிந்து கொள்வது நன்று.

INFLEXION OF NOUNS.—பெயரின் இலக்கணம்.

**63.** ஒரு பெயரில் கவனிக்கவேண்டியவை. திணை, பால், இடம், வேற்றுமை என நான்காம்.

"பெயரெனப் படுபவை தெரியுங் காலை
யிடுகுறி காரண மரபோ டாக்கந்
தொடர்ந்து தொழிலல காலந் தோற்று
வேற்றுமைக் கிடனாய்த் திணைபால் இடத்தொன்
றேற்பவும் பொதுவு மாகிப் பாற்படப்
பொருள்புலப் படுப்பன வென்மனார் புலவர்"

(இ. விளக்கம்.)

**64.** [1] திணை (caste.) இரண்டு. 1. உயர்திணை. High caste Nouns.
2. அஃறிணை. Low caste or casteless Nouns.

திணை = ஜாதி, கூட்டம்.

உயர்திணை = உயர்வான கூட்டம்.

"மக்கள் தேவர் நரகர் உயர்திணை
மற்றுயி ருள்ளவும் மில்லவு மஃறிணை." (நன்.)

மனுஷருக்கும், தேவரும், நரகவாசிகளும் உயர்திணை எனப்படுவர். மற்றெல்லா வஸ்துக்களும் அஃறிணையாம்.

N.B.—பொருட்பெயர்தவிர மற்ற இடப்பெயர், காலப்பெயர், சினைப்பெயர், குணப்பெயர், தொழிற்பெயர் அனைத்தும் அஃறிணையே. பொருட்பெயரில் சில உயர்திணை, சில அஃறிணை.

**65.** பால் = பாகுபாடு (division). பான்மை என்ற வார்த்தையினடியாய்ப் பிறந்தது.

உயர்திணையில் மூன்று பால்கள் உண்டு.

1. ஆண்பால். Masculine singular. ஆண்களைக் குறிப்பித்தது.

உ-ம். கந்தசாமி, விஷ்ணு, தேவசகாயம்.

2. பெண்பால். Feminine singular. பெண்களைச் சுட்டியது.

உ-ம். துரோபதை, ரெபேக்காள், சுந்தரி.

3. பலர்பால். Plural of Masculine and Feminine. ஒன்றிற்கு மேற்பட்டவர்களைக் காட்டியது.

உ-ம். குருமார், வீரர், பிள்ளைகள், பெண்டிர்கள்.

"ஆண்பெண் பலரென முப்பாற் றுயர்திணை." (நன்.)

---

[1] இங்கிலிஷில் திணையில்லை. தமிழிலுள்ள பால் இங்கிலிஷிலுள்ள Gender, Number இரண்டுமே சேர்ந்தது.

ஆண்பாலும் பெண்பாலும் உயர்திணையிலே மாத்திரம் உண்டென்றாலும் அஃறிணையிலும் வருவதியல்பு. மிருகங்களிலும், தாபரசங்கமத்திலுங்கூட ஆண் பெண் வித்தியாசம் உண்டு.

உ-ம். ஆண் —— பெண்.
காளை —— பசு.
கட்டுப்பாளை —— பருவப்பனை.
சேவல் —— பெட்டை.

cf. "இருதிணை ஆண்பெண்ணுள் ஒன்றனை யொழிக்கும்—பெயரும் வினையுங் குறிப்பினனே" (என்று நன்னூலாரும் சொல்லுகிறார்).

**66** அஃறிணையில் பால் இரண்டு.

1. ஒன்றன்பால். Neuter Singular.

உ-ம். குதிரை, மரம்,

இது ஒரு வஸ்துவைக் குறித்தது.

2. பலவின்பால். Neuter Plural.

உ-ம். மரங்கள், கத்திகள்,

இது ஒன்றிற்கு மேற்பட்டவற்றைக் குறித்தது.

"ஒன்றே பலவென் றிருபாற் றஃறிணை." (நன்.)

**67**. ஆண்பாற் பெயர்கள் பொதுவாய் னகரவொற்றை யீற்றில் பெற்று விளங்கும்.

உ-ம். அவன், குரவன், ராஜன்.

"னஃகா னொற்றே ஆடூஉ அறிசொல்." (தொல்காப்பியம்.)

ஆடூஉ —ஆண.

"அவற்றுள், கிளையெண் குழூஉ முதற் பல்பொரு டிணைதேய
ஊர்வா னகம்புற முதல நிலனியாண்
டிருது மதிநா ளாதிக் காலம்
தோள்குழன் மார்புகண் காது முதலுறுப
பளவறி வொப்பு வடிவு நிறங்கதி
சாதி குடி சிறப் பாதிப் பல்குணம்
ஓத லீத லாதிப் பல்வினை
இவையடை சுட்டு வினாப்பிற மற்றோ
டுற்றன வீறு நம்பி யாடூஉ
விடலை கோவேள் குரிசி றோன்றல்
இன்னன வாண்பெய ராகு மென்ப." (நன்.)

(a) கிளை=இனம். குழூஉ=கூட்டம். எண் (number) இவை மூன்றும் பொருட்பெயரின் பிரிவு.

(b) திணை=நிலம் அதாவது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணை.

தேம்=தேயம்; ஊர்=கிராமம்; வான்=ஆகாயம்;

அகம்=உட்பக்கம். இவையெல்லாம் இடப்பெயரின் பிரிவு.

(c) யாண்டு=வருஷம்; இருதி=காலம், கார்காலம், வேனிற்காலம் முதலியன; மதி=மாசம், தை, மாசி முதலியன; நாள்=ஞாயிறு, திங்கள் முதலியன.

(d) தோள்=புஜம்; குழல்=கூந்தல்; இவை சினைப்பெயரின் பிரிவு.

(e) அளவு நீளம், அகலமுதலியன; அறிவு=புத்தி, ஞானம் முதலியன; ஒப்பு=சமானமாயிருத்தல்; வடிவு=ரூபம், சதுரம், வட்டம்முதலியன; நிறம்=கறுப்பு, சிவப்புமுதலியன; கதி=நடை, சாயல், மாதிரி முதலியன; ஜாதி=முதலி, நாய்டு,முதலியன; குடி=கோத்திரம்,காணிக்காட்டார், தொழுவர், இலைவாணியர்முதலியன. இவை பண்புப் பெயர்களின் பிரிவுகள்.

(f) ஓதல், ஈதல்முதலியன தொழிற்பெயர்.

இவ்வறுவகைப்பெயரின் அடியாகவும் சுட்டுவினாக்களினடியாகவும், பிற, மற்று, என்னும் சொற்களடியாகவும் பிறந்து னகரவொற்றை ஈற்றில் பெற்றது ஆண்பாற்பெயர்.

சில, னகர ஈற்றைப் பெறாமல் வரினும் ஆண்பாலைக்குறிக்கும். அவையாவன: நம்பி=சிறந்த ஆண்மகன். இது பிராமணருக்கும் ராஜாக்களுக்கும் ஒரு பட்டப்பெயர்.

| | | |
|---|---|---|
| ஆடூஉ | = | ஆண்மகன். |
| விடலை | = | வாலிபன். |
| கோ | = | அரசன். |
| வேள் | = | குசவர்கள்பரியாதைப்பேர் (முதலி, பிள்ளை என்பதைப்போல); அரசன் எனவும் பொருள்தரும். |
| குரிசில் | = | வாலிபவயதுள்ள அரசன், பராக்ரமசாலி. |
| தோன்றல் | = | அரசன். சற்று முதிர்ந்த வயதுள்ளோர்க்கு இப்பேர் வரும். |

உ-ம். 1. பொருளால் வருபெயர்.[1]

அண்ணன், மைத்துனன், அம்மான் = கிளையால்வருபவை.
ஒருவன், நாமுன் = எண்ணால்வருபவை.

[1] பொருளதிகாரத்தில் ஐவகைத்திணைப் பெயர்களும விரித்திருக்கும், ஜாதிப்பெயர்கள், தொழில், இருந்த இடம், குணம் பற்றி வந்ததாகக் கற்பித்து விவரிக்கலாம். உ-ம். பறையர்: பறைபடிப்பதினாலும அதிகாரிகள் சிபாரிதைகளை, தெருத்தெருவாய்ப்போய்க் கூறுவதாலும அவர்களுக்கு இப்பெயர். வேளாளர்=வேளாண்மை (agriculture) செய்கிறபடியால். மறவர் (மறம்) க்ரூரத்தொழில் இயற்றுகிறவர்களாதலால். படுகர் படுகப்பத்து என்ற ஊரிலே குடியிருக்கிற மறவர். &c.

ஜாதிவேற்றுமை மிகுந்த இந்தியாவில், ஜாதி, குடியெனப்பகுபடுத்தி, பண்புபெயராக முன்னோர் கூறியிருப்பது இயல்பே.

சபையான், பஞ்சாயத்தான் = குழூஉவால்வருபவை.
பொன்னன், முரசன் = மற்றப் பொருட்பெயரால் வருபவை.

2. இடத்தால் வருபெயர்.

மலையன், ஆயன், இடையன்=இதில் மலையன் குறிஞ்சித்திணையாலும் மற்ற இரண்டும் முல்லைத்திணையாலும் வந்தது.

சோழியன், பாண்டிநாட்டான், பர்மாக்காரன்=தேசத்தால் வரும் பேர்.

மதுரையான், வேலூரான்=ஊரால் வரும் பெயர்.

வானத்தான், பரமண்டலத்தான், சந்திரமண்டலத்தான்=வானால் வருபெயர்.

இருதயத்தான், உள்ளானோன்=அகத்தால் வருபெயர்.

புறத்தான், வெளியான்=புறத்தால் வருபவை.

பாதலத்தான், அருந்ததியான்=முதலியன மற்ற இடத்தால்வருபவை.

3. காலத்தால் வருவது.

நந்தனன், ஆயிரத்தெண்ணூற்றான்=ஆண்டால் வருபவை.

வேனிலான், பின்பனியான்=பருவம் அல்லது இருதுவால் வருபெயர்.

சித்திரையான், ஆடியான்=மாதத்தால் வருபெயர்.

ஞாயிற்றான், செவ்வாயான்=நாளால் வருபவை.

நவமியான், ஓணத்தான், காலையான்=மற்றைக்காலத்தால்வருபவை.

4. சினையால் வரும்பெயர்.

திணிதோளான், வரைமார்பான், நீள்முடியான், வடிகாதான் முதலியன.

5. குணத்தால் வருபெயர்.

பெரியன், சிறியன்=அளவால் வருபெயர்.

அறிஞன், புலவன்=அறிவால் வருபவை.

பொன்னொப்பான், தூணவான்=ஒப்பால் வருபவை.

கூனன்; தடியன்=வடிவால் வருபெயர்.

கறுப்பன், வெள்ளையன்=நிறத்தால் வருபவை.

சிங்கநோக்கான், பிடிநடையான், தேவன், மனிதன்=கதியால் வருபவை.

வேளாளன், அம்பட்டன்=ஜாதியால் வருபவை.

இலவாணியன், தொழுவன்=வேளாளரின் குடிவகையால் வருபவை.

அகம்படியன், கொண்டையங்கோட்டையான்=மறவர் என்ற ஜாதியின்குடிவகையால் வருபவை.

ஆசிரியன், தலைவன்=சிறப்பால் வருபெயர்.

நல்லன், கள்ளன்=மற்ற குணப்பெயர்களால் வருபவை.

6. தொழிலால் வருபவை.

ஓதுவான், ஈவான், அடிப்பவன், படிப்பவன், ஓடுபவன், &c.

**68.** பெண்பாற் பெயர்கள் பொதுவாய் ளகரவொற்றையும் இகரத்தையும் ஈற்றில் பெற்றவை.

உ-ம். வேலூராள், கறுப்பி.

"அஃகா னீற்றோ மகடூஉ வறிசொல்." (தொல்.)
மகடூஉ=பெண்.

[1] "கிளைமுத லாகக் கிளந்த பொருள்களுள்
ளவ்வொற் றிகரக் கேற்ற வீற்றவும்
கோழி செவிலி மகடூஉ நங்கை
தையலோ டின்னன பெண்பாற் பெயரே." (நன்.)

முன் ஆண்பாலுக்குச்சொன்ன உதாரணங்களைப் பெண்பாலாக்க போந்த உதாரணங்கள் கிடைக்கும்.

**69.** வினையாலணையும் பெயர்கள் சாதாரணமாய் "ள"கர இறுதியைப்பெறும். அதாவது ஆண்பால் ஈற்று அன், ஆன்விகுதிகள் கெட்டு அள், ஆள் ஆக மாறும்.

உ-ம். ஓடுபவன்———— ஓடுபவள்.
காட்டுவான்———— காட்டுவாள்.

**70.** சினைப்பெயரும், பண்புப்பெயரும் விசேஷமாய் ஜாதி, குடிப்பெயர்களும் ஆண்பால் ஈற்று அன்கெட இகர ஈறுபெற்றுப பெண்பாலாகும்.

---

[1] "கிளை, எண், குழூஉ" &c. "கிளைமுதலாகக் கிளந்த &c." என்ற இந்த இரண்டு சூத்திரமும் பெயர்களின் பாகுபாட்டை விவரிப்பது. பாலை விளக்குமிடத்து நன்னூலார் பெயரின வகையையும் விரித்திருக்கிறார். இம்மப்பிரகாரம் இது இந்நூலில் முன்னே சொல்லப்பட்டாயிற்று.

உ-ம். குறவன் ———— குறத்தி.
தடங்கண்ணன் —— தடங்கண்ணி.
கறுப்பன் ———— கறுப்பி.
பிரான் ———— பிராட்டி.
சீமான் ———— சீமாட்டி.

**71.** ஆண்பால், பெண்பால் வித்தியாசங்கள் மூன்றுவகையாய்த் தமிழில் வரும்.

(a) 1. ஆண்பால் **ன்** பெற்றுமுடிந்தால் பெண்பால் **ள்** பெற்று முடியும்.

| | ஆண்பால். | | பெண்பால். |
|---|---|---|---|
| உ-ம். | நாட்டான் | ———— | நாட்டாள். |
| | நெடுங்கையன் | ———— | நெடுங்கையள். |
| | அவன் | ———— | அவள். |
| | மற்றவன் | ———— | மற்றவள். |
| | எவன் | ———— | எவள். |
| | மகன் | ———— | மகள். |

2. ஆண்பால் ன் உடன்முடிந்தால் பெண்பால் இ உடன்முடியும்.

உ-ம். [1] ஒருவன் ———— ஒருத்தி.
வலையன் ———— வலைச்சி
பார்ப்பான் ———— பார்ப்பினி.
குறவன் ———— குறத்தி.
குமாரன் ———— குமாரத்தி or குமரி.

3. **மான்**, **வான்** என்னும் அசைகள் பண்புப்பெயரின் இறுதியில் வந்து ஆண்பாலாகும். இவ்வசைகளை **வந்தி** என்று மாற்ற பெண்பாலாகும்.[2]

உ-ம். புத்திமான் ———— புத்திவந்தி.
குணவான் ———— குணவந்தி.
தனவான் ———— தனவந்தி.

(b) வெவ்வேறு வார்த்தைகளால் ஆண் பெண் குறிக்கப்படும்.

---

[1] ஒருவன், ஒருத்தி என்பதுபோல இருவன், இருத்தி; மூவன், மூத்தி; என்றாகாது. இருவர் என்பது பலர்பால், ஆண்களையும் பெண்களையும் குறிக்கும். அப்படியே மூவர், நால்வர், ஐவர்முதலியன
"ஒருவ னொருத்தி பெயர்மே லெண்ணில" (நன்.)

[2] துரை, துரைசானி என்பதிலுள்ள "சானி" தெலுங்கினின்று வந்தவிகுதி. மந்திரசானியும் அப்படிப்பட்டது. மந்திரசானி=Midwife, மருத்துவச்சி.

| | ஆண்பால். | | பெண்பால். |
|---|---|---|---|
| உ-ம். | ஆண் | —— | பெண். |
| | தம்பி | —— | தங்கை. |
| | அண்ணன் | —— | அக்காள். |
| | தந்தை / தகப்பன் | —— | தாய். |
| | நம்பி | —— | நங்கை. |
| | வேள் | —— | இருளை. |
| | செம்மல் | —— | செவிலி. |
| | ஆடூஉ | —— | மகடூஉ. |
| | மன்னன் | —— | மாது. |
| | விடலை | —— | பெதும்பை. |
| | ஏந்தல் | —— | ஏந்திழை. |
| | அண்ணல் | —— | அணங்கு. |
| | தோன்றல் | —— | மடந்தை. |
| | புருஷன் | —— | ஸ்திரீ. |

72. அஃறிணையில்.

| ஆண். | | பெண். |
|---|---|---|
| காளை | —— | பசு. |
| கடா | —— | கடாரி or கிடாரி. |
| கூகை | —— | போத்து. |
| கட்டுப்பாளை | —— | பருவப்பனை. |
| சேவல் | —— | பெட்டை. |

(c) ஆண், பெண், ஏறு, பிடி என்னும் குறிப்புப்பெயர்களை முன் பின் சேர்ப்பதால் பால் வித்தியாசம் காட்டலாம்.

| | | | |
|---|---|---|---|
| உ-ம். | ஆண்யானை | —— | பெண்யானை. |
| | ஆண்குருவி | —— | பெண்குருவி. |
| | ஆண்குயில் | —— | பெண்குயில். |
| | புலியேறு | —— | புலிப்பிடி. |
| | களிறேறு | —— | களிற்றுப்பிடி. |

73. பெண்பாலை ஏற்காத ஆண்பாற் பெயர்கள் சில உண்டு.

உ-ம். மந்திரி, குரு, (கோயில்) பட்டன், &c.

74. ஆண்பால் இல்லாத பெண்பாற் பெயர்கள் சில உண்டு.

உ-ம். வேசி, பத்தினி, மோகினி, விதவை, ஷ.

75. ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும் பொதுப்பெயர்கள்.

(a) மகவு, பிள்ளை, சேய், &c.

(b) பண்புப்பெயர்கள். சாலி, ஆளி என்னும் விகுதியை யேற்றுப் பொதுப்பெயராம்.

உ-ம். குணசாலி, புத்திசாலி, நோயாளி.

(c) சில காரணப்பெயர்களும் பொதுப்பெயர்களாம்.

உ-ம். ஜெகமிரட்டி, பகட்டி.

76. பலர்பாற்பெயர்கள் ரகர வொற்றையும், கள், ர்கள், மார், மார்கள் என்ற ஈறுகளையுமுடையதாம்.

உ-ம். குறவர், குருக்கள், மறவர்கள், போதகன்மார், தாய்மார்கள்.

"கிளந்த கிளைமுத லுற்றரவ் வீற்றவும்
கள்ளெ னீற்றி னேற்பவும் பிறவும்
பல்லோர் பெயரின் பகுதியாகும்." (நன்.)

முன் ஆண்பாலுக்குச் சொன்ன உதாரணங்களுக்கு ர், கள் முதலிய விகுதிகளை ஏற்றவிடத்து இசைக்க, போந்த உதாரணம் பலர்பாலுக்காகும். (67-ம் பிரிவைப் பார்க்க.)

77. ஒன்றன்பாற் பெயர்கள் அஃறிணை ஒருமைப்பெயர்கள். உ-ம். மாடு, மரம், &c.

ஏற்குமிடத்து, கிளை என்முதலிய பெயர்களுக்கு து விகுதி சேர்க்க, ஒன்றன்பாலாம்.

உ-ம். அது, எது, நிலத்தது, மாசியது, &c.

முன் ஆண்பாலுக்குச் சொன்ன உதாரணங்களில் து விகுதி யேற்ற உதாரணம் கிடைக்கும். (67-ம் பிரிவைப் பார்க்க.)

ஒன்று என்னும் எண்ணும் ஒன்றன்பால்.

"வினைச்சுட் டுடனும் வேறுமாம் பொருள்
ஆதி யுறுதுச் சுட்டணை யாய்தம்
ஒன்றெனெண் ணின்னன வொன்றன் பெயரே." (நன்.)

பொருளாதி=பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில்.

78. பலவின்பாற்பெயர்கள் அ, வை, கள், வைகள் என்ற ஈறுகளைப்பெறும்.

உ-ம். செய்வன, அவை, எவை, முடிப்பவை, குதிரைகள், பெரியவைகள்.

இரண்டுக்கு மேற்பட்ட எண்களெல்லாம் பலவின்பாற்பெயர். உள்ள, இல்ல, உள, இல, சில, பல என்றவைகளும் பலவின்பாற் பெயர்.

"முன்ன ரவ்வொடு வருவை யவ்வும்
சுட்டிறு வவ்வுங் கள்ளீறு மொழியும்
ஒன்ற லெண்ணு முள்ள வில்ல
பல்ல சில்ல வுளவில பலசில
இன்னவும் பலவின் பெயரா கும்மே." (நன்.)

முன்னரவ்வொடு, &c. = கிளை எண்குழூஉ, &c. முதலிய பொருளாதி அடியாகப் பிறந்து, வை, கள், ஈறு பெற்றவைகள். ஆண்பாலில் சொன்ன உதாரணங்களோடு, ஏற்ற விகுதிகளையிசைக்கப்போந்த உதாரணமாம். (67-ம் பிரிவைப் பார்க்க.)

சுட்டிறுவவ்வும் = அவை இவைபோல்வன.
ஒன்றலெண்ணும் = ஒன்றல்லாத மற்றெல்லா எண்களும்.

**79.** ஒன்றன்பால், பலவின்பால்களுக்குப் பொதுவான பெயர்களுமுண்டு. பால் பகுக்கக்கூடாத அஃறிணைப்பெயர்கள் பொதுவாகும்.

உ-ம். குதிரை வந்தது—குதிரை வந்தன. பறவை வந்தது-பறவை வந்தன.

"பால்பகா வஃறிணைப் பெயர்கள்பாற் பொதுமைய." (நன்.)

**80.** திணையும்பாலும் தம்முள் மயங்கி உயர்திணை அஃறிணையாகவும், அஃறிணை உயர்திணையாகவும், ஆண்பால் பெண்பாலாகவும், பெண்பால் ஆண்பாலாகவும், சாதாரண வழக்கத்திலும், வாசகத்திலும் செய்யுளிலும் வருவது இயல்பே.

(a) அஃறிணை வஸ்துக்கள் உயர்திணை வஸ்துவாகிய மனுஷனைப் போல, பேசுவதும், இயற்றுவதுமாகச் சொல்லப்படும். அப்பொழுது அவைகள் உயர்திணை யிலக்கணத்தைப் பெறும்.

உ-ம். பீலேயாமின் கழுதை, ஐயா நீர் இத்தோடே என்னை மூன்றுவிசை அடித்தது நியாயமா என்று கேட்டது.

கார்க்கோடகனென்னும் பாம்பரசு தவளைகளைப் பிடிக்க ஒருவனைத் தேடினன்.

"கேட்குந போலவுங் கிளக்குந போலவும்
இயற்புந போலவும் இயங்குந போலவும்
அஃறிணை மருங்கினு மறையப் படுமே." (நன்.)

(b) மனதில் உள்ள நிகழ்ச்சிப்படி திணைபால்கள் பிறழும்.

1. உவப்பினால், (பிரியம், Love.)

உ-ம். மகனைப்பார்த்து, என்னம்மை வந்தாள் என்றதில் பால் பிறழ்ந்தது.
என்கிளி வந்தது என்றதில் திணை பிறழ்ந்தது.

2. உயர்வினால், (Importance or regard.)

உ-ம். விக்டோரியா நமது இராக்கினி. அவர் மகன் இந்தியாவுக்கு வந்தார். அவள் என்றிராமல் அவரென்றது பால் பிறழ்ந்தது.

3. சிறப்பால், (Special pre-eminence.)

உ-ம் இராஜா இராமசாமி முதலியாரே, இவ்வுலகுக்குத்தாயே, கிருபை செய்யும். இதில் பால் பிறழ்ந்தது; கொடைச்சிறப்புப்பற்றி.

4. செறலால்—கோபத்தால், (Anger.)

உ-ம். பிள்ளை தப்புச்செய்தால் அவனைப்பார்த்து அடா கழுதை, தடிமரமே என்பது.

5. இழிவு, (Contempt.)

உ-ம். புத்தியில்லாதவனைப்பார்த்து நெடுஞ்சுவரென்பது.

"நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவனன் மரம். (மூதுரை.)

இவைகள் இலக்கணப்படி வழுவாயினும் உலகவழக்காதலால் குற்றமில்லை; வழுவமைதி எனப்படும்.

"உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும்
இழிப்பினும் பாறிணை யிழுக்கினு மியல்பே." (நன்.)

(c) அலங்காரங்களிலும் திணைபால்கள் மயங்கிவரும், இவையும் தப்பல்ல; வழுவமைதியாம்.

உ-ம். ஏசுவே மோட்ச வீட்டின் வாசல்.
தரித்திரமே என்னை வளர்த்த தாய்.

"உருவக வுவமையிற் றிணைசினை முதல்கள்
பிறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே." (நன்)

இவற்றிற்கு விஸ்தாரமான உதாரணங்கள் அணியியலிற் காண்க.

PERSON.—இடம்.

**81.** இடம் மூன்றுவகைப்படும்.

**தன்மை.** (1st Person) பேசுகிறவனைக் குறிக்கும்.

**முன்னிலை.** (2nd Person) பேசுகையில் எதிரில் முன்னிற்பவனைக் குறிக்கும்.

**படர்க்கை.** (3rd Person) இவ்விருவரும் தவிர மற்றவனைக் குறிக்கும்.

"தன்மை முன்னிலை படர்க்கைமூ விடனே." (நன்.)

**82.** பிரதிப்பெயர், Pronouns.

| | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| தன்மை. | நான், யான் | நாம், யாம், நாங்கள். |
| முன்னிலை. | நீ | நீர், நீவிர், நீங்கள். |
| படர்க்கை. | தான் | தாம், தாங்கள். |

N.B.—தன்மையும் முன்னிலையும் இருதிணைக்கும் பொது.

படர்க்கைச் சுட்டுப்பெயர்ப் பிரதிப் பெயர்.

| ஆண். | பெண். | பலர். | ஒன்றன். | பலவின். |
|---|---|---|---|---|
| அவன் | அவள் | அவர் | அது | அவை. |
| | | அவர்கள் | அஃது | அவைகள். |
| இவன் | இவள் | இவர் | இது | இவை. |
| | | இவர்கள் | இஃது | இவைகள். |
| உவன் | உவள் | உவர் | உது | உவை. |
| | | உவர்கள் | | |

N.B.—உவன், &c. வெகு அருமையாய் வரும்.

வினைப் பெயர்.

| | | | | |
|---|---|---|---|---|
| எவன் | எவள் | எவர் | எது | எவை. |
| | | எவர்கள் | | எவைகள். |
| யாவன் | யாவள் | யாவர் | யாது | யாவை. |
| | | யாவர்கள். | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மற்று. பிற அடியாய்ப் பிறந்தது. | மற்றவன் | மற்றவள் | மற்றவர் மற்றவர்கள் | மற்றது | மற்றவை. மற்றவைகள். |
| | பிறன் | பிறத்தி | பிறர்;—கள் | பிறிது | பிற. |
| | பிறத்தியான் | பிறத்தியாள் | பிறத்தியார்;—கள் | | |

83. நாம் என்பது தன்னையும் முன்னின்றவர்களையும் படர்க்கை யிடத்தாரையும் சேர்த்துக் குறிப்பிக்கும் பன்மை. (1st, 2nd and 3rd persons together.)

நாங்கள்; முன்னிலை நீக்கி, தன்மையும் படர்க்கையும் சேர்ந்த பன்மை (1st and 3rd persons together.)

நாம் மரியாதையாய், தன்மை ஒருமைக்கும் உபயோகப்படும்.

84. நீ தாழ்ந்தோரைப்பார்த்து வசனிக்கையில் உபயோகப்படும். கோபத்தில் சரிசமானமானவர்க்கும் உயர்ந்தோருக்கும் உபயோகப்படுத்தப்பட்டாலும் இது தப்பு.

"கீழோராயினும் தாழவுரை" என்ற புத்தியை அநுசரித்து நீயென்பதை அருக்கி உபயோகிப்பது உத்தமம்.

நீர் முன்னிலையில் நின்ற ஒருவரையே குறித்து மரியாதையாய் வழங்கிவரும். பாட்டுகளில்மாத்திரம் முன்னிலைப் பன்மைக்காகும்.

நீங்கள் முன்னிலைப் பன்மை. மரியாதைக்காக ஒருமைக்கும் வரும்.

85 அவர், அவர்கள் பலர்பாலாயினும் ஆணுக்கும் பெண்ணுக்கும் மரியாதைபற்றி ஒருமையில் வரும்.

அவர் நீரென்பதைப்போல பாட்டுகளில்மாத்திரம் பலர்பாலாகவும், வழக்கத்தில் மரியாதைப் பன்மையாகவுமிருக்கும்.

86. ஒருவர் என்பது ஒரு ஆளைக் குறிப்பித்தாலும் மரியாதைப் பன்மை.

"ஒருவர் என்ப துயரிரு பாற்றாய்ப்
பன்மை வினைகொளும பாங்கிற் றென்ப." (நன்.)

87. தாம், தாங்கள் என்பவை மரியாதைக்காக முன்னிற்பவரையும் படர்க்கை யிடத்தாரையும் குறிக்கும்.

உ-ம். ஐயா, தாங்கள் எனக்கு உத்தரவு தந்தீர்கள்.

"ஐயா, நீங்கள் எனக்கு உத்தரவு தந்தீர்கள் என்பதற்குச் சரி." ஆனால் நீங்கள் என்பது காரமானது, எதிர்ப்பதுபோலிருக்கிறது. தாங்கள் வணக்கமானது.

**தான், தாம், தாங்கள்** இவை மூன்றும் ஒருவரோடு பேசும் சமயத்து, கூட இருக்காத புறத்திலுள்ள மற்றொருவர் சொன்ன வசனங்களை எடுத்துரைப்பதிலுபயோகப்படும்.

உ—ம். கந்தனும், ராமனும் பேசிக்கொள்ளுகிறார்களென்று வைத்துக்கொள்வோம்.

**கந்தன்:** கோர்ட்டு எப்போது மூடுகிறார்கள்?

**ராமன்:** இந்தமாசம் 15-ம் தேதி.

**கந்தன்:** உனக்கு எப்படித் தெரியும்?

**ராமன்:** பத்திரிகையில் இப்படி விளம்பரஞ்செய்ததைத் **தான்** வாசித்ததாக என் தம்பி சொன்னான்.

**கந்தன்:** ஜூன்மாசம் பூட்டுகிறார்களென்று **தாங்கள்** கேட்டதாக அண்டைவீட்டில் வந்திருக்கும் கட்சிக்காரர் சொல்லுகிறார்கள்.

N.B.—**தான்** இது வற்புறுத்தற் பொருட்டும் உபயோகப்படுத்தப்படும்.

உ—ம். தேவராஜு—தான் தூங்குகிறான்.
மேலச்சுவர்தான் இடிந்தது.
அரபிகள்தான் வந்தவர்கள்.

இந்தத் **தான்** பெயர்ச்சொல் அல்ல இடைச்சொல், இது பன்மைப்பெயர்களோடும் வரும். இதை யேற்ற பெயர்கள் வேற்றுமையடையும்போது தான் என்பது வேற்றுமைப்படாமல் முதல் நின்ற பெயரே வேற்றுமை யேற்கும்.

உ—ம். குளத்தைத்தான் வெட்டினார்கள்.
கையால்தான் முறிக்கவேண்டும்.
கந்தனுக்குத்தான் இனும் கிடைத்தது.

எட்டாம் வேற்றுமையில் பெயர்களோடு தான் சேர்ந்து வராது.

**88. எல்லாம்.** இது இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவான பன்மைப்பெயர். முன்னிலையில் எல்லீரென்றும் இது வரும். இது வேற்றுமைப்படும்பொழுது **உம்** ஏற்கும்.

உ—ம். எல்லாவற்றையும் எல்லாராலும். (வேற்றுமை விரியில் இது நன்றாய் விளக்கப்படும்.)

**89.** **சகலம்.** எல்லாம் என்பதைப்போல் கூட்டத் தொகுதியைக் காட்டிய பொதுப் பிரதிப்பெயர். இது உபயோகத்தில் உம் சேர்ந்தே வரும், இதுவும் பன்மையே.

உ—ம். சகலமும் நல்லதென்று கண்டார். சகலத்தையும் சிருஷ்டித்தவர் கடவுள்.

N.B.—பலர்பாலில் சகலம், எல்லாம் என்ற இரண்டும் அப்பாலுக்குரிய ரகரத்தைப் பெறும்.

உ—ம். சகலரும் எல்லாரும்.

"தான்யா னொரு மொருமை பன்மைதாம்
யாநா மெலாமெலீர் நீயிர்நீர் நீவிர்." (நன்.)

"தன்மை யானு் யாநா முன்னிலை
எல்லீர் நீயிர் நீவிர் நீர்நீ
அல்லன படர்க்கை யெல்லா மெனல் பொது." (நன்.)

**90.** தொழிற்பெயர் எப்போதும் படர்க்கையிடத்திலேயே வரும். வினையாலணையும் பெயரே மூவிடங்களிலும் வரக்கூடியது.

உ—ம். நீ **போவது** நன்று.

இவர் இயற்றிய **செய்கை** சரியா. இவை தொழிற்பெயர்கள், இவ்வேலையை **முடித்தவனாகிய** நான் விருதாவில் **தூங்குபவராகிய** உம்மைப்பழி **கூறுபவர்களாகிய** இவர்களோடு கூடிக்கொண்டேனென்று உமது மனசில் **பட்டது** எப்படி. இவ்வாக்கியத்தில் வினையாலணைபெயர்கள் தன்மை, முன்னிலை, படர்க்கையில் வந்தது காண்க.

"வினையின் பெயரே படர்க்கை வினையால்
அணையும் பெயரே யாண்டு மாகும்." (நன்.)

**91.** திணைபால்களைப்போல் இடமும் தம்முள் பிறழ்ந்துவருவதியல்பு. இது இடவழுவமைதி எனப்படும்.

உ—ம். நானோ, அவனோ யார் இது செய்தார்?
எம்பியை யீங்கு பெற்றேன் என்னெனக்கரிய தென்றான்.
மேகங்கள் வெயிலையெல்லாம் மறைத்தது.

பன்மைக்குப்பதிலாய் ஒருமை வந்தது.

இரண்டு கண்ணும் சிவந்தது.

இரண்டு என்றதால் கண்கள் என்றும் சிவந்தன என்றும் ஆக வேண்டும். இப்படி ஆகாதிருந்தும் தப்பல்ல. வழுவமைதியாம்.

"ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையும்
ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே." (நன்.)

## CASE.—வேற்றுமை.

**92.** இயல்பாய் நின்றபெயர்கள் வாக்கியங்களில் வரும்பொழுது அவற்றின் பொருள் திரிந்துவரும் இதுதான் வேற்றுமை. அப்படித் திரிந்ததற்கு அறிகுறியாக அவற்றின் இறுதியில் சில எழுத்துக்களாவது வார்த்தைகளாவது கூட்டப்படும். அல்லது ஈறு திரிந்துவரும். இப்படிக் கூட்டப்படும் எழுத்துக்களும், வார்த்தைகளும் வேற்றுமை யுருபுகள் எனப்படும்.

உ-ம். பொன்னனுடைய பிள்ளை.

தம்பீ, மரத்தினின்று இறங்கின உனது அணிலை இவன் காலால் உதைத்துக் கொன்று வீட்டுக்கு வெளியில் எறிந்துவிட்டான்.

N.B.—வேற்றுமை சம்ஸ்கிருதத்தில் விபக்தி எனப்படும்.

"விபக்தி என்பது வேற்றுமை யெனப்படும்."
(குவலயானந்தம்.)

வேற்றுமை உருபுகள் தம்மில்தாமே அர்த்தம் இல்லாத அசைகளாயாவது அர்த்தத்தையுடைய சொற்களாயாவது இருக்கலாம். ஐ, ஆல், கு, இன், இவை யசையுருபுகள். உடைய, கொண்டு, பற்றி, நிமித்தம், இடத்தில் முதலியன சொல்லுருபுகளெனப்படும்.

**93.** வேற்றுமை எட்டுவகைப்படும்.

"ஏற்கு மெவ்வகைப் பெயர்க்கு மீறாய்ப்பொருள்
வேற்றுமை செய்வன வெட்டே வேற்றுமை." (நன்.)

"பெயரே ஐ, ஆல், கு, இன், அது, கண்,
விளியென் றாகு மவற்றின் பெயர் முறை." (நன்.)

**94.** [1] Nominative, முதல்வேற்றுமை. எழுவாய்ப்பொருளையுடையது.

---

[1] தமிழிலக்கணிகள் வேற்றுமைகள் கொண்டுமுடியும் சொற்களை, தனித்தனி வெவ்வேறுபொருளாக எடுத்து விவரித்திருக்கிறார்கள். இது மயக்கத்தைக் கொடுக்குமாதலால அடியில்மாத்திரம் அவசியம் வாசிக்க விரும்புவோர்களுக்கு எழுதப்பட்டிருக்கின்றன.

"பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்,
வினைநிலை யுரைத்தல் வினாவிற் கேற்றல்
பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்
றன்றி யனைத்தும் பெயர்ப் பயனிலையே." (தொல்.)

N.B.—இது கருத்தாக் காரகம் எனப்படும். (வீ. சோ.)

“பெயரே அன்றிப் பிறவுரு பேலா.” (அகத்தியம்.)

“பெயர்ப்பின் விகுதி பெறுதலே ஆபவன்
ஆனவன் ஆவான் ஆகின் றவன்முதல்
ஐம்பாற் சொல்லும் பெயர்ப்பின் அடைதலே.”
(இல. கொத்து.)

இயற்கையாய்நின்ற பெயரே எழுவாய். இது வினைமுற்று, பெயர், வினா, இவைகளி லொன்றைக்கொண்டு வாக்கியங்களில் முடிவுபெறும். இப்படி எழுவாய்கொண்டு முடியும் சொல் பயனிலை எனப்படும்.

உ-ம். தாசன் வந்தான்; அது கோட்டை; மகன் வரான்; கண்ணன் யார்? &c.

“எழுவா யுருபு திரிபில் பெயரே
வினைபெயர் வினாக்கொளல் அதன்பய னிலையே.” (நன்.)

**95.** [1]இரண்டாம் வேற்றுமை. (accusative case or object.)
இதற்கு அசை யுருபுமாத்திரம் உண்டு. அது ஐ.
இதன் பொருள். செயப்படுபொருள்.

N.B.—கர்மக்காரகம் எனப்படும். (வீ. சோ.)

எழுவாயின் கிரியை ஏற்றபெயர் செயப்படுபொருள்.
உ-ம். இராமன் அணிலை அடித்தான்.

---

[1] N.B.—Cf. Transitive verbs govern nouns and pronouns in the objective case. Sometimes the accusative relation is expressed by governing prepositions.

தொல்காப்பியர் செயப்படுபொருளை வினையினின்றும் வினைக்குறிப்பினின்றும் தோன்றிற்றென்று, செயப்படு பொருள் கொண்டு முடியும் ஒவ்வொரு சொல்லையும் வெவ்வேறு பொருளாக விரித்திருக்கிறார்.

“காப்பி னொப்பி னூர்தியி னிழையி
னோப்பிற் புகழிற் பழியி னென்றா
பெறலி னிழவிற் காதலின் வெகுளியிற்
செறலி னுவத்தலிற் கற்பி னென்றா
வறுத்தலிற் குறைத்தலிற் றொகுத்தலிற் பிரித்தலி
னிறுத்தலி னளவி னெண்ணி னென்றா
வாக்கலிற் சார்தலிற் செலவிற் கன்றலி
னோக்கலி னஞ்சலிற் சிதைப்பி னென்றா
வன்ன பிறவு மம்முதற் பொருள
வென்ன கிளவியு மதன்பால வென்மனார்.”

இராமன் என்ற எழுவாயின் கிரியையாகிய அடித்தலை யுற்றது அணில்.

இது வினையைக்கொண்டு முடியும்.

"இரண்டா வதனுரு பையே அதன்பொருள்
ஆக்கல், அழித்தல், அடைதல், நீத்தல்
ஒத்தல் உடைமை ஆதி ஆகும்." (நன்.)

**96.** [1] மூன்றும் வேற்றுமை.

ஆல், ஆன், ஒடு, ஓடு என்பவை அசையுருபுகள்.

கொண்டு, உடன் என்பவை சொல்லுருபுகள்.

இதன்பொருள் கருவி, கருத்தா, உடனிகழ்ச்சி.

1. கருவிப்பொருள். முதற்கருவி, துணைக்கருவியென இருவகைப்படும்.

(a) முதற்கருவி, செயப்படுபொருளோடு விட்டுப்பிரியாது எக்காலத்திலுமிருப்பது.

உ—ம். இது மரத்தால் செய்த மேசை, மேசையுள்ளளவும் மரமும் கூட இருக்கும்.

(b) துணைக்கருவி, செயப்படுபொருள் செய்யப்படும்போது மாத்திரம் கூடஇருந்து பின் நீங்கிப்போவது.

உ—ம். இம்மேசையை உளியால் செய்தேன். மேசை செய்கையில் உளியிருந்தது. பின் மேசையோடெப்போதும் இருக்கிறதில்லை.

இவ்விரண்டிற்கும் ஆல், ஆன், கொண்டு என்ற உருபுகள்வரும்.

[1] N.B.—3-ம் வேற்றுமைக்குச்சரியான இங்கிலீஷ்பேரில்லை. முதல் இரண்டு பொருளையும் Instrumental Case என்றும், Ablative of Instrumentality என்றும் சொல்வார்கள். உடனிகழ்ச்சிப் பொருள் Ablative of co-ordination என்றும் சொல்வாருமுண்டு. Ablative வடநூல் பாஷையிலக்கணச்சொல். முன் இரண்டாம்வேற்றுமையைப்போல இதையும் தொல்காப்பியர் விரித்துப் பின்வருமாறு கூறியிருக்கிறார்.

"அதனி னியற லதற்றகு கிளவி
அதன்வினைப் படுத லதனி னாத
லதனிற் கோட லதனொடு மயங்கல்
அதனோ டியைந்த ஒருவினைக் கிளவி
யதனோ டியைந்த வேறுவினைக் கிளவி
யதனோ டியைந்த வொப்ப லொப்புரை
யின்னா னேது வீங்கென வரூஉ
மன்ன பிறவு மதன்பால வென்மனார்." (தொல்.)

2. கருத்தாப்பொருள் வினைமுதல்[1] எனவும் படும். இது ஏவுதல் கர்த்தா, இயற்றுதல் கர்த்தா என்றும், 1—ம் கர்த்தா, 2—ம் கர்த்தா, 3—ம் கர்த்தா எனவும் பிரிக்கப்படும்.

கருத்தா கிரியையைச் செய்தவன்.

உ—ம். இராமனால் கொஜபதியைக்கொண்டு இவ்வீடு கட்டப்பட்டது.

இராமன் ஏவுதல் கருத்தா அல்லது 1—ம் கருத்தா.

கொஜபதி இயற்றுதல் கருத்தா அல்லது 2—ம் கருத்தா.

சர்க்கார் எஞ்சினீரால் ஓவர்சியரைக்கொண்டு கருப்பண்ண மேஸ்திரியால் இப்பாலத்தைக் கட்டினார்கள். இதில் எழுவாய் சர்க்கார். இது நீங்க இன்னும் மூன்று கர்த்தாக்களுண்டு. இவை மூன்றும் வேற்றுமையில் வந்தன.

இதற்கு ஆல், ஆன், கொண்டு என்னும் உருபுகள் வரும்.

3. உடனிகழ்ச்சி. கூட இயங்கி நடத்தல்;

உ—ம். இராஜாவோடு மந்திரியும் வந்தார்; வாத்தியாரோடு பிள்ளைகளும் போகிறார்கள். ஒடு, ஓடு, உடன் இப்பொருட்கு வரும்.

With, accompanied by, என்ற இங்கிலிஷ்பதங்களால் இப்பொருள் இங்கிலீஷில் விளங்கிவரும்.

3—ம் வேற்றுமை வினையைக்கொண்டு முடியும்.

"மூன்றா வதனுரு பாலா னோடொடு
கருவி கருத்தா உடனிகழ் வதன்பொருள்." (நன்.)

97. 4—ம் வேற்றுமை அசையுருபு கு, சொல்லுருபு பொருட்டு, நிமித்தம், பற்றி, ஆக என்பவை.

இது இங்கிலிஷில் Dative Case என்னப்படும்.

கோளிக்காரகம் எனவும்படும். (வீ. சோ.)

(கோளிக்காரகம்=கொள்ளுதற்பொருளை உணர்த்துவது என்றர்த்தமாம்.)

பொருள்:—1. கொடை. (to) உ—ம். கந்தனுக்குப் புஸ்தகம் கொடுத்தான்.

1 இவ்வீட்டைக் கட்டினது யார் என்ற கேள்விக்கு உத்தரம் இராமன் ஆகையால், இராமனால் கட்டப்பட்டது வீடு என்னும் வாக்கியத்தில் இராமனால் மூன்றாம் வேற்றுமையாயினும் கட்டியதொழிலையியற்றிய (வினைமுதல்) கர்த்தா (Agent) ஆக இருப்பதால் இப்பொருளுக்கு இவ்விருபெயரும் வந்தது.

2. பகை. (of, to.) உ-ம். வேந்தனுக்கும் பிராஜை களுக்கும் பகை.
3. நேர்ச்சி. (சிநேகம்) (to, for) உ-ம். கந்தனுக் குப் பொன்னன் இஷ்டம்.
4. தகைமை. (fitness) for உ-ம். இப்புஸ்தகம்பெண் களுக்கு உபயோகம்.
5. அதுவாதல். (for.) உ-ம். சோற்றிற்கு அரிசி உலை யிலிட்டாள் (அரிசியே சோறாயிற்று.)
6. பொருட்டு. for (Purpose) உ-ம். வண்டியைக் கூலிக்கு விடு.
7. முறை. (Relationship) to and of உ-ம். சுவ மணிக்குத் தம்பி வரதன், &c.

இப்படிப் பின்முன் வந்தவார்த்தைகளின் பொருள் நோக்க, பொ ருள் இன்னதென்று பகுத்தறியலாம்.

"நான்கா வதற்குரு பாகும் குவ்வே
கொடைபகை நேர்ச்சி தகவது வாதல்
பொருட்டு முறையா தியி னிதற்கிதெனல் பொருளே." (நன்.)

மேற்கூறிய ஒவ்வொரு பொருளையும் கொள்ளுதல் பொருளாக எண்பிக்கலாம்.

of, for, to, on account of, against முதலிய இங்கிலிஷ் சொற் கள் இவ்வேற்றுமையின் பொருளை விளக்கும்.

இது பெயர், வினைகளைக்கொண்டு முடியும்.

(a) அது ஆதல், முறை, இரண்டும் பெயரையேகொண்டு முடியும்.

(b) பகை, நேர்மை முதலியன பெயரையும், வினையையும் கொண்டு முடியும்.

(c) மற்றப் பொருள்கள் வினையைக்கொண்டு முடியும்.

மேற்கண்ட உதாரணங்களைப் பார்க்க.

**98.** [1] 5-ம். வேற்றுமை அசையுருபு இல், இன்; சொல்லுருபு நின்று, இருந்து, காட்டிலும், விட, பார்க்கிலும்.

[1] N.B.—ஐந்தாம் வேற்றுமை நீக்கற்பொருளை Ablative of separation எனறும், ஒப்பு, எல்லைப் பொருட்களை Ablative of Comparison எனறும், ஏதுப்பொருளை Ablative of cause என றும் சொல்வார்கள்.

இவ்வேற்றுமை,முடியும் சொல் நோக்கி தொல்காப்பியர்,

பொருள்:—1. நீங்கல், (from) இல், இன், நின்று, இருந்து உருபுகள் வரும்.

உ-ம். முகட்டினின்று இறங்கினார்கள்.
மலையின் வீழருவி.

2. ஒப்பு, (comparison) இல், இன், காட்டிலும், விட, பார்க்கிலும் என்ற உருபுகள் வரும்.

உ-ம். தம்பியில் அண்ணன் கெட்டி.
மராட்டியரிலும் வீரர் துலுக்கர்.
சோற்றைவிட பால் நன்று.
சிவப்பைப்பார்க்கிலும் வெள்ளை சிரேஷ்டம்.
கோரம்பாயைக்காட்டிலும் ஓலைப்பாய் விசேஷமோ?

N.B.—சொல்லுருபுகள் வந்தபோது, பெயருக்கு ஐ சாரியை வந்ததைக் கவனிக்க.

3. எல்லை, (boundary;) இல், இன், விட, பார்க்கிலும், காட்டிலும் என்ற உருபுகள் வரும்.

உ-ம் மதுரையில் வடக்கு சேலம், &c.

4. ஏது, (cause) இல் உருபுமாத்திரம் வரும்.

உ-ம். கல்வியில் பெரியவர் கம்பர்.
சத்தியவாக்கில் சிறந்தவன் அரிச்சந்திரன்.

இது அவதிக்காரகம் எனப்படும். அவதி = State, nature. பெரும்பாலும் இது வினையைக்கொண்டே முடியும்.

பெயரையும் சிறுபான்மைகொண்டு முடியும்.

மேற்கண்ட உதாரணங்களைப் பார்க்க.

---

"வண்ணம் வடிவே யளவே சுவையே
தண்மை வெம்மை யச்ச மென்றா
நன்மை தீமை சிறுமை பெருமை
வன்மை மென்மை கடுமை யென்றா
முதுமை யிளமை சிறத்த லிழிதல்
புதுமை பழமை யாக்க மென்றா
வின்மை யுடைமை நாற்றந் தீர்தல்
பன்மை சின்மை பற்று விடுதலென்
றன்ன பிறவு மதன்பால வெனைமனும்"

என்று விரித்திருக்கிறார்.

[1] "ஐந்தா வதனுரு பின்னு மின்னும்
நீங்கலொப் பெல்லை யேதுப் பொருளே." (நன்.)

மூன்றும் வேற்றுமைக் கருவிப்பொருள் செயப்படுபொருளை ஏற்று வரும். ஐந்தாம்வேற்றுமை ஏதுப்பொருள் செயப்படுபொருளை யேற்காது.

**99.** [2] 6–ம் வேற்றுமை. Genitive Case.

அது, ஆது, அ, அசையுருபுகள்.

உடைய, சொல்லுருபு.

N.B.—ஆது உருபு, பாட்டில் விசேஷமாய் வரும்.

**அ** வும் அப்படியே.

இவ்வேற்றுமை பெயரையேகொண்டு முடியும். முடியும் பெயர் ஒருமையாகில் **அது, ஆது** உருபுகளும், பன்மையாயின் **அ** உருபும் வரும். முடியும் பெயரோடு ஒன்றித்து அவாவிய அசை யுருபுகளை யுடையது இவ்வாறும் வேற்றுமை. இது விசேஷிக்கப்படத்தக்கது.

உ–ம். எனது கை, என கைகள்.

சாதாரணமாய் **உடைய** என்னும் சொல்லுருபு வரும். பெரும்பாலும் வேற்றுமை யுருபு தொக்கி நிற்கும்.

உ–ம். என் கை, என்னுடைய கை.

பொருள். கிழமை=(உரிமை, possession.)

கிழமை, தற்கிழமை (Inseparable possession.) பிறிதின் கிழமை (Separable possession.) என இருவகையாம்.

பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் ஆகிய ஆறுவகைப் பெயருள் ஒன்றுகொண்டு இது முடியுமாதலால், முன் மூன்றுபெயர்களும் வரில் பிறிதின் கிழமையும், கடைசி மூன்று பெயர்களையும் கொண்டு முடிந்தால் தற்கிழமையுமாம்.

உ–ம். முருகனுடைய நாய்
——— ஊர்
——— பிறப்புநாள்
} பிறிதின் கிழமை.

[1] "நின்று காட்டியும் நிமித்தம் இவையும்
ஐந்தாம் வேற்றுமை ஆகி வருமே." (குவலயானந்தம்.)

[2] N.B.—In English "*of*" and the possessive case express the ideas of the Tamil 6th case.

முருகனுடைய கை
———— நிறம்
———— குணம் } தற்கிழமை.
———— ஈகை

"ஆற னொருமைக் கதுவு மாதுவும்
பன்மைக் கவ்வு முருபாம் பண்புறுப்
பொன்றன் கூட்டம் பலவி னீட்டந்
திரிபி னாக்க மாந்தற் கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே." (நன்.)

பண்பு = குணப்பெயர்.
உறுப்பு = சினைப்பெயர்.

ஒன்றன் கூட்டம் ............... உ-ம். நெல்லின் குப்பை.
பலவின் ஈட்டம் } தொழில்.... மரக் கூட்டம்.
திரிபினாக்கம் ............... நெற்பொரி.

இதன்பொருள் ஆதாரக்காரகமெனவும்படும். ஆதாரம்=(origin or locality.)

**100.** [1] 7-ம். வேற்றுமை.

அசையுருபு ............ இல்.
சொல்லுருபு .......... கண், கால், கடை, இடை, தலை, வாய், திசை, வயின், முன், தோறும், &c.
பொருள், (a) தற்கிழமையிலும் பிறிதின் கிழமையிலும் வந்த } இடப்பொருள்.
அல்லது
(b) காலப்பொருள்.

ஆறும் வேற்றுமையைப்போல் இப்பொருளும் ஆதாரக்காரகமெனப்படும். இங்கிலிஷ்பேர் Ablative of locality, Ablative of time. இது வினையையும் பெயரையும்கொண்டு முடியும்.

---

[1] "எல்லா ஈற்றும் சொல்லுங் காலை
வேற்றுமை உருபிற் கிளனே சாரியை." (இ. வி.)

உ-ம். இடம். மதுரையினில் மீனாட்சி கோயிலுண்டு.
விளக்கினகண் பிரகாசம் இல்லை.

காலம். சித்திரையினில் வெயில் அதிகம்.
காலையினில் மழை பெய்யும்.

இவ்வேற்றுமை பெயரைக்கொண்டு முடியும்போது ஆறும் வேற்றுமையில் விவரிக்கப்பட்ட ரீதியாய் தற்கிழமைப்பொருள், பிறிதின் கிழமைப்பொருள் என வகைபாடு செய்து இன்ன கிழமை இடப்பொருள் எனக் குறிப்பிக்கவேண்டியது. வினைகொண்டு முடியும்போது இடப்பொருள், காலப்பொருள் என்று குறித்தால் போதும்.

உ-ம். மரத்தின்கண் பறவையைச் சுட்டான்.
ஆசியாவின் தென்தேசங்களுள் இந்தியா ஒன்று.
சித்திரையின்கண் அமாவாசையில் உற்சவ ஆரம்பம்.
மரத்தின்கண் கிளையை வெட்டாதே.
மானிடர்கண் இரக்கம் மாட்சிதரும்.
கட்டிலின்கண் உறங்குவது சவுக்கியம்.
இவை ஆறும் அறுவகைப் பெயரையுங்கொண்டு முடிந்தன.
திங்கட்கிழமையில் கலியாணம் நடக்கும்.
கல்வியின்கண் ஆசை வைத்தான்.
தகப்பனர் தோட்டத்திலிருந்தார்.
இவை வினைகொண்டு முடிந்தன.

N.B.—காலப்பெயர்கள் வேற்றுமை யுருபேற்காமல் வந்து ஏழாம் வேற்றுமைக் காலப்பொருளைத் தரும்.

உ-ம். சாயந்திரம் ஊருக்குப் போவேன், நாளை மறுபடி பட்டணம் வருவேன்.

At, on, upon, in, into முதலிய இங்கிலிஷ் Prepositions இவ் வேற்றுமையை விளக்கும்.

N.B. ஆறும் வேற்றுமையில் கிழமைப்பொருள் விளக்கப்பட்டது.

"ஏழாகுவதே, கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைசெய் யிடத்தி னிலத்திற் காலத்தி
னனைவகைக் குறிப்பிற் றோன்று மதுவே." (தொல்.)

"ஏழ னுருபுகண் ணாதி யாகும்
பொருண்முத லாறு மோரிரு கிழமையின்
இடனாய் நிற்ற லிதன்பொரு ளென்ப." (நன்.)

"கண்கால் கடையிடை தலைவாய் திசைவயின்
முன்சார் வலமிட மேல்கீழ் புடைமுதல்
பின்பா டளைதே முறைவழி யுழியுளி
உள்ளகம் புறமில் லிடப்பொரு ளுருபே." (நன்.)

**101.** இரண்டுமுதல் ஏழுவரையுமுள்ள வேற்றுமைகளில் சில சாரியைகள் வரும். இவற்றில் விசேஷம் வழக்கத்தில் வருவது "இன்" சாரியை.

உ-ம். மரத்தினையும் வெட்டினான். காலினாலும் உதைத்தான்.
கட்டிலிற்குக் காலிட்டான். வீட்டினின்று ஓடினான்.
குதிரையினது வேகம். அவன் ஓட்டத்திற் கிணையில்லை.
கடைசியில் குளத்தினுள் குதித்தான்.

**102**. 8-ம் வேற்றுமை, விளிவேற்றுமை யென்னப்படும்.
விளி=கூப்பிடுதல்.
Vocative case.

"எட்ட னுருபே யெய்துபெயரீற்றின்
திரிபு குன்றன் மிகுத லியல்பயல்
திரிபு மாம்பொருள் படர்க்கை யோரைத்
தன்முக மாகத் தானழைப் பதுவே." (நன்.)

இதற்கு உருபுகளில்லை. இதை, அண்மைவிளி, சேய்மைவிளி, புலம்பல்விளி என வகுத்துரைப்பதுமுண்டு.

விளிக்கப்படும் பெயர்களின் ஈறு வேறுபட்டு மாறும். சிறுபான்மை பெயர்கள் மாறாமலேயிருக்கும்.

**103**. எல்லாப் பெயர்களும் எட்டாம் வேற்றுமை யேற்காது. ஆகையால் எப்பெயர்கள் ஏற்கும், எவை ஏற்கா என்று விரித்துக்கூறி, அவை ஏற்கும்போது எப்படி மாறுமென்று அறியவேண்டியது.

உயர்திணைப் பெயரில் இ, உ, ஐ, ஓ என்னும் உயிரீற்றையும், ன, ர, ல, ள என்னும் மெய்யீற்றையுமுடைய பெயர்கள் பொதுவாய் விளிவேற்றுமையை யேற்கும்.

அஃறிணைப் பெயர்களில் மேல் உயர்திணைக்குக் கூறிய ஈற்றையுடையவை மாத்திரமல்ல மற்றவையும் விளிக்கப்படும்.

சுட்டு, வினா, பிற, மற்று, தம், நும் அடியாய்ப் பிறந்தவை, ன, ள, ர, உ ஈற்றை யுடையவாயினும் விளியேற்கா.

அப்படியே தாம், தான், நான், யான், யாம், நீ, நீர், நீங்கள், யாங்கள், தாங்கள் என்னும் பிரதிப்பெயர்களும் விளியேற்கா.

"இ, உ, ஐ, ஓ விறுதிக் கிளவி
யுயர்திணை மருங்கின் விளியேற் கும்மே." (முத். வீரி.)

"ண ர ல ள வென்னும் நான்கென்ப
புள்ளி யிறுதி விளிகொ ளுயர்பெயர்." (தொல்.)
"நுவ்வொடு வினாச்சுட் டுற்ற னளர
வைதுத் தாந்தா னின்னன விளியா." (நன்.)
"நீயிர் நீவிர்நான் எழுவா யலபெறா." (நன்.)

**104.** விளிவேற்றுமை வரலாறு.

| உதாரணம். | எழுவாய். | விளி. |
|---|---|---|
| இ ஈறு ஈ ஆகும். | தம்பி, | தம்பீ. |
| ஐ ஈறு............ஆய்,<br>ஆ } ஆகும். | தங்கை,<br>அன்னை,<br>அம்மை, | தங்காய்<br>அன்னா.<br>அம்மா. |
| உ, ஓ ஈறு ஏ ஆகும். | வேந்து,<br>கோ, | வேந்தே.<br>கோவே.<br>கோனே. |
| அன் ஈறு ஆ வாகும். | சோழன், | சோழா. |
| N.B. சமீபமாயின், அ ஆகும். | சோழன், | சோழ. |
| சாதாரணப் பெயரில்<br>ஆன் ஈறு மாறாது நிற்கும். } | கோமான், | கோமான். |
| ஆன் பண்புப்பெயர்,<br>வினைப்பெயர்<br>இறுதியாயின் } ஆய் ஆகும். | வந்தான்,<br>கரியான், | வந்தாய்.<br>கரியாய். |
| ன் ஈறு முறை ஒருமைப்<br>பெயரானால், ஏ ஆகும். } | மகன், | மகனே. |
| ஆர், அர்<br>ஈற்றுப்பெயர் } ஈர் ஆகும். | பார்ப்பார்,<br>வந்தார்,<br>கூத்தர், | பார்ப்பீர்.<br>வந்தீர்.<br>கூத்தீர். |
| ல், ள் ஈற்றுப்பெயர் ஈற்றயலெழுத்து<br>நெடிலாயில் மாறாது. } | கோமாள், | கோமாள். |
| ஈற்றயல் குறிலாயில் குறில் நெடிலாம். | குருசில்,<br>மக்கள், | குருசீல்<br>மக்காள். |
| ள் ஈறு முறை ஒருமைப் பெயராயின்,<br>ஏ ஏற்கும். } | மகள், | மகளே. |
| N.B. ஆள் ஈற்றுப்பெயர்,<br>பண்புப்பெயர்,<br>வினைப்பெயராயின், } ஆய் ஆகும். | நல்லாள்,<br>வந்தாள், | நல்லாய்.<br>வந்தாய். |

அஃறிணைப்பெயர்கள் மேற்கூறிய ஈறுகளுடையதாயின் மேற்கூறியபடி விளியேற்கும். இதுவுமன்றி மேற்சொன்ன ஈற்றையும் பிறவீற்றையுமுடைய அஃறிணைப்பெயர்கள், ஏகாரத்தை ஏற்று விளிக்கும்.

உ-ம். மரமே, நரியே, புலியே, &c.

"அவற்றுள், இ ஈயாகும் ஐ ஆயாகும்."
"ஓவும், உவ்வும் ஏயொடு சிவணும்." (தொல்.)
"அண்மைச் சொல்லே இயற்கை யாகும்." (தொல்.)
"அன்னெ னிறுதி ஆவா கும்மே." (தொல்.)
"அண்மைச் சொல்லிற் ககர மாகும்." (தொல்.)
"ஆனெ னிறுதி யியற்கை யாகும்." (தொல்.)
"தொழிலிற் கூறு மானெ னிறுதி
யாயா கும்மே விளிவயி னான." (தொல்.)
"பண்பு கொள்பெயரு மதனோ ரற்றே." (தொல்.)
"ஆரு மருவு மீரொடு சிவணும்." (தொல்.)
"எஞ்சிய விரண்டி னிறுதிப் பெயரே
நின்ற வீற்றய னீட்டம் வேண்டும்." (தொல்.)
"அயனெடி தாயி னியற்கை யாகும்." (தொல்.)
"வினையினும் பண்பினும்,
நினையத் தோன்றும் ஆளெ னிறுதி
யாயா கும்மே விளிவயி னான." (தொல்.)
"கிளந்த விறுதி யஃறிணை விரவுப்பெயர்
விளம்பிய நெறிய விளிக்குங் காலை." (தொல்.)
"ஆவியொடு மொற்று மந்த மாகிய
வஃறிணைப் பெயரெலா மேயொடு சிவணும்." (மு.வீ.)

105. எட்டாம்வேற்றுமை ஏவல் வியங்கோள் முற்றுகளைக் கொண்டு முடியும். "முற்று" என்பது முன்னிலை வினைமுற்று.

உ-ம். தம்பீ வா, அம்மா செய்க, அண்ணா வாராயோ.

"எல்லை யின்னும் அதுவும் பெயர்கொளும்
அல்ல வினைகொளும் நான்கே ழிருமையும்." (நன்.)

இது வேற்றுமைகள் கொண்டு முடியும் சொற்களை விளக்குகிறது.

இது ஒவ்வொரு வேற்றுமையினடியிலும் சொல்லப்பட்டிருக்கிறது. எல்லையின் = 5-ம் வேற்றுமை எல்லைப்பொருள், அது = ஆறும் வேற்றுமை. 4—ம், 7-ம் வேற்றுமைகள் பெயரையும் வினையையுங் கொண்டுமுடியும்.

அதன் முதனிலைப்பாக இச்சூத்திரம்.

**106.** வேற்றுமை மயக்கம்.

ஒரு வேற்றுமை யுருபு மற்றோர் வேற்றுமையுருபுக்குப் பதில் நின்று மற்றை வேற்றுமைப்பொருள் தரும். இது வேற்றுமை மயக்கம் எனப்படும்.

உதாரணம்.

| | | |
|---|---|---|
| ஊரால் ஒருகோயில் | (ஊருக்கு) | 4—ம் வேற்றுமை. |
| மணற்கு முளைத்த நாணல் முளை | (மணலில்) | 7—ம் வேற்றுமை. |
| நாளைக்கு வருவான் | (நாளையில், நாளை) | 7—ம் வேற்றுமை. |
| மதுரையை நீங்கினான் | (மதுரையினின்று) | 5—ம் வேற்றுமை. |
| வழியைச் சென்றான் | (வழியில்) | 7—ம் வேற்றுமை. |
| வீட்டிற்குப் போவான் | (வீட்டில்) | 7—ம் வேற்றுமை. |

மரத்தை நாற்காலி செய்தான் = மரத்தால் நாற்காலியைச் செய்தான்.

பொன்னை நகை செய்தான் = பொன்னால் நகை செய்தான், பொன்னில் நகை செய்தான்.

| | |
|---|---|
| ஊரில் வந்தான் | = ஊருக்கு வந்தான். |
| முதலியாருடைய மகன் | = முதலியாருக்கு மகன். |
| ஈஸ்வரருக்குத் திருவிழா | = ஈஸ்வரரது திருவிழா. |
| பழியையஞ்சும் | = பழிக்கஞ்சும், பழியினஞ்சும். |
| வீட்டினது வாசல் | = வீட்டின்கண் வாசல். |

[1]"யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்." (நன்.)

N.B. [1] இலக்கணக்கொத்தில் இப்படி வேற்றுமை மயங்கிவருவதை விரிவாய்ச் சொல்லியிருக்கும். பொருள் மயக்கங்களுக்கு விசேஷ விதிகள் எழுதுவதுண்டு. அப்படிக் கிரமந்தப்பி வந்த மயக்கங்களையெல்லாம் சொல்லப் புகின் விரிவும், மயக்கமுமாம்.

N. B. கு, ஐ, ஆன் உருபுகள் செய்யுளில் அவ்வாக மாறி நிற்கும்.

"கு, ஐ, ஆனென வரூஉ மிறுதி—அவ்வொடு சிவணும் செய்யு ளுள்ளே." (தொல்.)

"ஐயான்குச் செய்யுட் கவ்வு மாகும்—ஆகா வஃறிணைக் கானல் லாதன." (நன்.)

உ-ம். காவலோனக் களிறஞ்சும்மே=காவலோனைக் களிறஞ்சும்மே.

**107.** வேற்றுமைகொண்டு முடியும் சொல் எதிர்மறையாயினும் பொருள் வேறுபடாது.

உ—ம். மரத்தை வெட்டினான், மரத்தை வெட்டான்.

"எதிர்மறுத் துமொழியினும் பொருணிலை திரியா." (தொல்.)

**108.** வேற்றுமை யுருபுகள் தொக்கியும் வரும். இது வேற்றுமைத் தொகை என்னப்படும்.

உ—ம். கல் எறிந்தான். கல்லை எறிந்தான்.
கல்லால் எறிந்தான்.

"இரண்டு முதலா மிடையா றுருபும்
வெளிப்பட லில்லது வேற்றுமைத் தொகையே." (நன்.)

சாதாரணவழக்கத்தில் வேற்றுமை உருபின்றி பெரும்பாலும் வரும் வேற்றுமை ஆறாவதே. உ—ம். கந்தன் புஸ்தகம்.

வேற்றுமையுருபுகள் தொகையாய்நின்றால் பல வேற்றுமை உருபுகளையும் வைத்துப் பல பொருளைக் கூற இடமாகும்.

உ—ம். தெய்வ வணக்கம். தெய்வத்துக்கு வணக்கம்.
தெய்வத்தை வணங்கும் வணக்கம்.
தெய்வத்தினுடைய வணக்கம்.
தன் சேர்ந்தார். தன்னைச் சேர்ந்தார்.
தன்னொடு சேர்ந்தார்.
தனக்குச் சேர்ந்தார்.
தன்கண் சேர்ந்தார்.

எனப் பல பொருளாய் விரியலாம். இதன் விரிவு தொடர்பியலில் தெளிவாய் விளக்கப்படும்.

வேற்றுமையுருபுகள் விரிந்து வராமல் தொகையாய் வருதலியல்பு, அப்போது அர்த்தம் நோக்கி இன்ன வேற்றுமையென அறியவேண்டும்.

உ—ம். நாளைக் காடுகொளுத்துவார்கள். ஆகையால் மரம் வெட்ட வா.
நாளை, 7—ம் வேற்றுமை. காடு, மரம், 2—ம் வேற்றுமை.

N.B. வேற்றுமையுருபு பொருளைத்தந்ததோ, வேற்றுமையையேற்ற பெயர் கொண்டுமுடியும்சொல் பொருளைத் தந்ததோ எனச் சந்தேகிப்பாருண்டு. வேற்றுமை யுருபுகள் இடைச்சொற்கள். தம்மில்தானே பொருளுடையவைகளல்ல. English இல் Prepositions தாமே தனிநின்று பொருள் கொடாததுபோல இவையும்; என்கிலும் இவை பெயரோடுசேர, பெயர் தன பொருளில் வேறுபட்டுத் தாயைத்தேடிய கன்றுபோல் கொண்டுமுடியுஞ் சொல்லை அவாவி நிற்கின்றன. அவ்வித முடிபுச்சொற்களை நோக்கிப் பெயரின் வேறுபாட்டை உய்த்துணர இடமாயிற்று. இச்சொற்கள் தனிநின்றால் இவ்விதமாய் வேற்றுமைப்பொருள் தராதே. ஆகையால் இவ்விசித்திரத்தை வருவித்த உருபு பொருள் தந்தது என்று கூறப்படுவதுமாயிற்று.

## 109. வேற்றுமைத்தொகுதி.

| வேற்றுமை. | English Name. | அசையுருபு. | சொல்லுருபு. | பொருள். | வீரசோழியர் இடும் பெயர். | English Equivalents. | Remarks. |
| --- | --- | --- | --- | --- | --- | --- | --- |
| 1 | Nominative | | என்பவன், என்பவள், என்பது, என்பவை, ஆனவன், &c. | எழுவாய் | கருத்தாக காரகம் | | |
| 2 | Accusative | ஐ | | செயப்படுபொருள் | கர்மக்காரகம் | Prepositions and Transitive Verbs govern Nouns and Pronons. | |
| 3 | Ablative of Instrumentality | ஆல், ஆன் | கொண்டு | முதற்கருவி, துணைக்கருவி | | With, by. | |
| | | | | ஏவுதல் கருத்தா, இயற்றுதல் கருத்தா | காரணக்காரகம் | by | |
| | Ablative of Co-ordination | ஒடு, ஓடு | உடன் | உடனிகழ்ச்சி | | With, accompanied by. | |
| 4 | Dative | கு | | கொடை | | To | |
| | | | | பகை | | To, of | |
| | | | ஆக | நேர்ச்சி | | To, of | |
| | | | ஆக | தகைமை | | For, To | |
| | | | ஆக | அதுவாதல | கோளிககாரகம் | For, For the purpose of | |
| | | | பொருட்டு, நிமித்தம் | பொருட்டு | | For, For the purpose of | |
| | | | ஆக | முறை | | To, of | |
| 5 | Ablative | இல், இன் | நின்று, இருந்த, பார்க்கிலும், விட | நீக்கல், ஒப்பு, எல்லை, ஏது | அவதிக்காரகம் | From, in, by, by reason of, than, because of, on account of | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 6 | Genitive or Possessive | அது, ஆது (Sing) அ (Plural) | உடைய | தற்கிழமை பிறிதின் கிழமை | ஆதாரக்காரகம் | the Possessive case (Norman and Saxon genitives |
| 7 | Locative or Ablative of Locality. | இல், கண் | கண், கால், கடை, இடை, தலை, வாய், திசை, வயின், முன், சார், வலம், இடம், மேல், கீழ், புடை, முதல், பின், பாடு, அளை, தேம், உழை, வழி, உழி, உளி, உள், அகம், புறம், &c. | தற்கிழமை இடம் பிறிதின்கிழமை இடம் காலம் | ஆதாரக்காரகம் | In, on, upon at, above, down, over into, within, &c. |
| 8 | Vocative | | | விளி | விளிக்காரகம் | |

**110.** வேற்றுமை யுருபுகள் ஏற்றுவரும்போது அடையும் விகாரங்கள், புணரியலில் பொதுவாய்க் கூறப்படும். ஆயினும் இவ்வுருபுகளுக்கே சிறப்பாயுள்ளதை இவ்விடத்தில் சொல்வதவசியம்.

பதத்தோடே வேற்றுமையுருபு வரும்போது இடையில் சாரியைகள் வரலாம். சாரியை அர்த்தமில்லாத இடைச்சொற்களாம்.

"பதமுன் விகுதியும் பதமு முருபும்
புணர்வழி யொன்றும் பலவும் சாரியை
வருதலும் தவிர்தலும் விகற்பமு மாகும்." (நன்.)

"அன், ஆன், இன், அல், அற், இற், றத், தம்,
தம், நம், நும், ஏ, அ, உ, ஐ, கு, ன,
இன்ன பிறவும் பொதுச்சா ரியையே." (நன்.)

மரம் —————— மரத்தை (அம் கெட்டு, அத்து வந்தது.)
புல் —————— புல்லுக்கு (உ வந்தது.)

**111.** "மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்
வன்மைக் கினமாத் திரிபவு மாகும்." (நன்.)

மகரவொற்றை ஈற்றிலுள்ள பெயர்கள் வேற்றுமைப்படும்போது ம் கெடும். அத்துச்சாரியை பெறும். அந்த "அத்து"வின் அகரமும் கெடும்.

உ—ம். குலம் ——— குலத்தை.
மரம் ——— மரத்தை.

என்பதில் குல, மர என்று நின்று அத்துச்சாரியையும் அதன்மேல் வேற்றுமை யுருபும் ஏற்றது. அப்போது மரவத்து + ஐ=மரவத்தை, குலவத்தை என்றாகாமல் அ கெட்டது.

"அத்தின் அகரம் அகரமுனை யில்லை." (நன்.)

**112.** வேற்றுமைப் படும்போது.

| | | | |
|---|---|---|---|
| தான் ' என்பது | தன் | என்றாகும். உ—ம். | தன்னை |
| நான் ——— | என் ——— | | என்னால் |
| தாம் ——— | தம் ——— | | தம்மில் |
| யாம் ——— | எம் ——— | | எம்மால் |
| நாம் ——— | நம் ——— | | நம்மால் |
| நீ ——— | நின் / உன் ——— | | நின்னை / உன்னை |
| நீர் ——— | உம் / நும் ——— | | உம்மில் / நும்மால் |
| நீங்கள் ——— | உங்கள் ——— | | உங்களில், &c. |

நான்காம் வேற்றுமையில் அ கரச்சாரியை யேற்று அதன்மேல் உருபு வரும்.

உ—ம். எனக்கு = என் + அ + கு
தனக்கு = தன் + அ + கு
தமக்கு = தம் + அ + கு

என்னக்கு, தம்மக்கு என்று ஒற்று இரட்டாது.
எனக்கு, தனக்கு, தமக்கு என வரும்.

ஆறும் வேற்றுமையில் தன் + அது = தன்னது என்று ஒற்றிரட்டாமல் தனது என்று வரும், மற்றவையும் இவைபோல விளக்குக.

"தான்தாம் நாம்முதல் குறுகும் யான்யாம்
நீநீர் என்எம் நின்னு மாம்பிற
குவ்வி னவ்வரு நான்கா றிரட்டல." (நன்.)

113. எல்லாம் என்னும் பொதுப்பெயர் வேற்றுமைப்படும் போது,

I. உயர்திணையாகில் படர்க்கையில் எல்லாரும் என்று ஆம்.

(a) எல்லாரையும், எல்லாராலும், எல்லாருக்கும், எல்லாரிலும், எல்லாருடையவும், எல்லாரதும், எல்லார்கண்ணும், &c. என வேற்றுமைப்படும்.

(b) எல்லார்தம் என்றாய் வேற்றுமை உருபை யேற்று உம் இறுதியைப் பெறும்.

எல்லார் தம்மையும்,
எல்லார் தம்மாலும், &c.

(c) முன்னிலையில் எல்லீரும் என்றிருந்தது, உம் நீங்கி எல்லீர் நும் என்றாய், வேற்றுமை உருபேற்று உம் இறுதியைப் பெறும்.

எல்லீர் நும்மையும்,
எல்லீர் நும்மாலும், &c.

II. அஃறிணையாகில் எல்லாம் என்பதில் ம் கெட்டு, அற்றுச்சாரியைபெற்று, அதன்மேல் வேற்றுமை யுருபையும் உம்மையும் பெறும்.

எல்லா + அற்று, ஐ, உம் = எல்லாவற்றையும்,
எல்லாவற்றாலும், &c.

"எல்லா மென்ப திழிதிணை யாயின்
அற்றோ டுருபின் மேலும் முறுமே
அன்றே னம்மிடை யடைந்தற் றாகும்." (நன்.)

"எல்லாரு மெல்லீரு மென்பவற் றும்மை
தள்ளி நிரலே தம்நும் சாரப்
புல்லு முருபின் பின்ன ரும்மே." (நன்.)

எல்லாம் விளிவேற்றுமை யேற்காது.

**114.** அவை வேற்றுமைப் படுகையில் ஐ கெட்டு அற்றுச்சாரியை பெறும்.

உ-ம். அவற்றை, அவற்றால். இவை, இவற்றிற்கு.

"வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே." (நன்.)

எவை, யாவை என்பவை, இப்படியே அற்றுச்சாரியை பெற்று வேற்றுமைப்படும்.

உ-ம். எவற்றை, யாவற்றால்.

அப்படியே, பிற, மற்று, மற்றவை என்ற பலவின்பாற்பெயர்களும் அற்றுச்சாரியை பெற்று வேற்றுமை யேற்கும்.

உ-ம். பிறவற்றை, மற்றவற்றால்.

**115.** அது, இது, உது, அஃது, இஃது, உஃது என்பவை வேற்றுமைப்படும்போது அன் சாரியை பெற்று, பெரும்பாலும் உருபேற்கும். அன் சாரியை பெற்றால் ஆய்தம் கெடும்

உ-ம். அதை, அதனை.
அஃதை, அதனை.

"சுட்டின்முன் னாய்த மன்வரிற் கெடுமே."(நன்.)

**116.** ஆ, மா, கோ, ன்—சாரியை பெற்று, ஆன், கோன், மான் என்றாகி வேற்றுமை யுருபேற்கும். இது செய்யுளில்தான் விசேஷமாய் வரும்.

"ஆமா கோனவ் வணையவும் பெறுமே." (நன்.)

**117.** எண்களில் ஒன்பது என்பது ஒன்பான் என்று மாறியும்,
இருபது ——— இருபான்,
முப்பது ——— முப்பான் என மாறியும்வேற்றுமை யுருபையேற்கும்.

மாறாமல், ஒன்பதை——— ஒன்பதால்,
இருபதை ——— இருபதால் என்றுமாகும்.

ஒன்பதினை, இருபதினை என இன்சாரியை பெற்றும் வரும்.

"ஒன்று முதலெட் டீறா மெண்ணூர்
பத்தின்முன் னான்வரிற் பவ்வொற் றொழியமேல்
எல்லா மோடு மொன்பது மிற்றே." (நன்.)

## 118 பெயர்த்தொகுதி.

**பெயர்.**

- வகை (Classification.)
  - தொல்காப்பியர் முறைப்படி.
    - இடுகுறி.
    - காரணம்.
    - இடுகுறிகாரணம்.
    - மரபு.
      - இடுகுறி—காரணம்.
    - ஆக்கம்.
      - இடுகுறி—காரணம்.
    - முறை.
    - மேறகூறியவற்றில் அடங்காதவை.
  - இந்நூல் முறைப்படி.
    - பொருள்நோக்கி.
      - பொருள்.
      - இடம்.
      - காலம்.
      - சினை.
      - குணம்.
      - தொழில்.
    - உபயோகம்நோக்கி.
      - ஆகு பெயர்.
    - பிறப்புநோக்கி.
      - வினையாலணை பெயர்.
      - சுட்டுப் பெயர்.
      - வினாப் பெயர்.
      - எண்பெயர்.
      - மறறு, பிற அடியாகப் பிறந்தவை.
    - பிரதிப்பெயர்.
      - தான், தாம்.
      - யான், யாம், யாங்கள்.
      - நான், நாம், நாங்கள்.
      - நீ, நீர், நீயிர், நீவிர், நீங்கள்.
      - எல்லாம், எல்லீர். சகலம். (பொது.)
      - சுட்டுப் பெயர்.
- பாகுபாடு (Inflexion.) பின்பக்கம் காண்க.

- திணைபால்.
  - உயர்திணை.
    - ஆண் பால்.
    - பெண் பால்.
    - பலர் பால்.
  - அஃறிணை.
    - ஒன்றன் பால்.
    - பலவின் பால்.
- இடம்.
  - தன்மை. 1st Person.
  - முன்னிலை. 2nd Person.
  - படர்க்கை. 3rd Person.
- வழுவமைதி.
  - திணை.
  - பால்.
  - இடம்.
- வேற்றுமை-வேற்றுமை, பெறும்போ துண்டாம் விகாரம்.
  - 1-ம். எழுவாய். Nominative.
  - 2-ம். செயப்படு பொருள். Accusative.
  - 3-ம். Ablative.
    - கருவி.
      - முதல்.
      - துணை.
    - கருத்தா.
      - ஏவுதல்.
      - இயற்றுதல்.
    - உடனிகழ்ச்சி.
  - 4-ம். Dative.
    - கொடை.
    - பகை.
    - நேர்ச்சி.
    - தகவு.
    - பொருட்டு.
    - முறை.
    - அதுவாதல்.
  - 5-ம். Ablative.
    - நீங்கல்.
    - ஒப்பு.
    - எல்லை.
    - ஏது.
  - 6-ம். Genitive.
    - தற்கிழமை.
    - பிறிதின்கிழமை.
  - 7-ம். Ablative.
    - கிழமை.
    - இடம்.
    - காலம்.
  - 8-ம். Vocative. விளி.
- வேற்றுமை மயக்கம்.

# CHAPTER V.

## VERB.—வினையியல்.

**119.** [1] வினை கிரியையை யுணர்த்தும்.

தன்மை, உண்மை, இன்மை முதலியவற்றை உணர்த்தும் வார்த்தைகளும் வினையினுள்ளடங்கும்.

உ—ம். நடக்கிறான்.
இவன் கொடியன், இங்கே கல் உண்டு,
நெல் இல்லை, இது வேறு.

"வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது.
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்." (தொல்.)

"செய்பவன் கருவி நிலஞ்செயல் காலம்
செய்பொரு ளாறுந் தருவது வினையே." (நன்.)

**120.** வினை முடிந்த கிரியையைக் காட்டினால் முற்றாம்.

உ—ம். நடந்தான்.

முடியாது நின்ற கிரியை காட்டில் எச்சம் எனப்படும்.

உ—ம். நடந்து, நடந்த.

ஆக ஒவ்வொரு வினையும் முற்றாயாவது எச்சமாயாவது இருக்கும்.

**121.** வினை, குறிப்பு, தெரிநிலையென இருவகையாம்.

தெரிநிலை வினை, தன்வினை, பிறவினை என்றும் பாகிக்கப்படும்.

இவை ஒவ்வொன்றும் உடன்பாடாகவும் (Positive) எதிர்மறையாகவும் (Negative) வரும்.

**122.** குறிப்பு வினைமுற்று [2] "பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில்" என்ற ஆறுவகைப் பெயரினடியாய்ப் பிறந்து எழுவாய்க்குப் பயனிலையாக வரும்; காலம் காட்டாது.

---

[1] "வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றிப்
பொருட்புடை பெயர்ச்சி புலப்படப் பதுவே. (இ. வி.)

[2] குறிப்புவினை=Verb To be and a noun, an adjective, an adverb or a prepositional phrase, i. e., it is in English, the compound predicate.

உ—ம். இது தீயது, இது கண்ணனது, அவை கெட்டவை, இவன் வந்தது உண்டு.

வினாப்பெயர்கள் குறிப்பு வினையாக வரும்.

உ—ம். அம்மனிதன் எவன்.
இம்மாது யார்.

எவன் என்பதும், மருவிவந்த என், மருவித் திரிந்துவந்த ஏன். எவை முதலியனவும் குறிப்புவினையாம்.

"பொருண்முத லாறினுந் தோற்றிமுன் னாறனுள்
வினைமுதன் மாத்திரை விளக்கல்வினைக் குறிப்பே." (நன்.)

பெயர்கள் ஆறும் ஏழாம் வேற்றுமை யுருபுகளை யேற்று, குறிப்பாகுதலுமுண்டு.

உ—ம். இப்புஸ்தகம் கோவிந்தனது.
குதிரை விழுந்த இடம் கிணத்தின்கண்.

இங்கே கோவிந்தனது, 6—ம் வேற்றுமை, பயனிலையாதலால், குறிப்புவினை முற்றாயிற்று. கிணற்றின்கண் என்ற 7—ம் வேற்றுமை யேற்ற பெயரும் குறிப்புவினை முற்றாயிற்று.

**123.** தெரிநிலை வினை காலங்காட்டி வரும்.

உ—ம். நடந்தான், நடக்கிறான்.

**124.** வினையில் கவனிக்கப்படவேண்டிய காரியங்கள் பகுதி, விகுதி, இடைநிலை.

Root.—குறிப்புவினையின் பகுதிகள் பெயர்கள்.

தெரிநிலை வினையின் பகுதிகள் ஏவற் பொருள்தரும் வினையின் மூல தாதுக்கள்.

"நடவா மடிசீ விடுகூ வேவை
நொப்போ வெளவுரி உண்பொருந் திருந்தின்
தேய்பார் செல்வவ் வாழ்கே ளஃகென்
றெய்திய விருபான் மூன்றா மீற்றவும்
செய்யெ னேவல் வினைப்பகாப் பதமே." (நன்.)

இது வினைப்பகுதியின் வாய்பாடு. பகுதிகள் அ, ஆ, இ முதலிய ஈறுகளைக் கிரமமாய்ப் பெற்றிருப்பதைக் கவனிக்க.

Inflexional suffixes.—விகுதி வாய்பாடு.

"அன்,ஆன், அள்,ஆள், அர்,ஆர், ப,ம்மார்,
அ,ஆ, கு,டு,து,று, என்,ஏன், அல்,அன்,
அம்,ஆம், எம்,ஏம், ஓமொ டும்மூர்
கடதற, ஐ,ஆய், இ,ம்மின், இர்,ஈர்,
ஈயர், க,ய,வு மென்பவும், பிறவும்
வினையின் விகுதி பெயரினுஞ் சிலவே." (நன்.)

**125.** தெரிநிலை வினைமுற்றுகள் திணை, பால், இடம் காட்டி வருவது விகுதிகளால்; காலம் காட்டிவருவது இடைநிலைகளால்.

Masculine suffixes.

"அன், ஆன் இறுமொழி ஆண்பாற் படர்க்கை." (நன்.)

Feminine suffixes.

"அள், ஆள் இறுமொழி பெண்பாற் படர்க்கை." (நன்.)

High Caste Plural suffixes. பலர்பால்விகுதி.

[1] "அர் ஆர் பவ்வூ ரகரமா ரீற்ற
பல்லோர் படர்க்கை மார்வினையொடு முடிமே." (நன்.)

மார் விகுதி பாட்டில்மாத்திரம் மகா அருமையாய் வரும். ப விகுதி அருகி வழக்குள் வரும்.

உதாரணம்.

| | | | | |
|---|---|---|---|---|
| ஆண். | தவமணி | வந்தான் | வந்தனன். | (தெ. வி.) |
| | இவன் | கரூரன் | சேலத்தான். | (கு. வி.) |
| பெண். | அக்காள் | நடக்கிறாள் | நடக்கின்றனள். | (தெ. வி.) |
| | குறத்தி | மேலூராள் | கீழூரள். | (கு. வி.) |
| பலர். | இவர் | செய்ப | நடப்ப. | (தெ. வி.) |
| | குருமார் | ஜெபித்தனர் | பூசித்தார். | (தெ. வி.) |
| | இடையர் | தாயக்கண்ணர் | நல்லார். | (கு. வி.) |

[1] பெயரிலும் வினையிலும் ஆன், ஆள், ஆர், ஆய் என்னும் விகுதிகள் பாட்டில் ஓன், ஓள், ஓர், ஓய் எனலாம்.

"பெயர்வினை யிடத்து ன, ள, ர, ய ஈற்றயல்
ஆ ஓ வாகலும் செய்யுளு ளுரித்தே." (நன்.)

கரியான் —————— கரியோன்.
வந்தான் —————— வந்தோன்.
கற்றான் —————— கற்றோன்.
கற்றார் —————— கற்றோர்.
செய்தாய் —————— செய்தோய்.

பாட்டுப்போலெழுதிய வாசகங்களிலும் இப்படி ஆவை ஓவாக மாற்றி யெழுதுவதுண்டு. பரிமேலழகர் உரை, பஞ்சதந்திரம் முதலியவற்றில் இப்படி வந்திருப்பதைக் காணலாம்.

**126.** Neuter Singular suffix.—*து ஒன்றன்பால் விகுதி.*

உதாரணம்.

குதிரை வந்தது. (தெ. வி.)
குதிரை சிறியது. (கு. வி.)

[1] "துறுடுக் குற்றிய லுகர வீற்ற
ஒன்றன் படர்க்கை டுக்குறிப்பி னாகும்." (நன்.)

**127.** Neuter plural suffixes —அ, ஆ பலவின்பால் விகுதி; அ உடன்பாட்டில் வரும், ஆ எதிர்மறையில் வரும்.

| | உடன்பாடு. | | எதிர்மறை | |
|---|---|---|---|---|
| உ—ம். | குதிரைகள் | ஓடின. | ஓடா. | (தெ. வி.) |
| | பொம்மைகள் | கரிய | | (கு. வி.) |

"அ, ஆ வீற்ற பலவின் படர்க்கை
ஆவே யெதிர்மறைக் கண்ண தாகும்." (நன்.)

**128.** Suffixes of 1st person singular.—தன்மை ஒருமை விகுதிகள். இவை இருதிணைக்கும் பொது.

அன், ஏன் என்னும் விகுதிகள் சாதாரணமாய் வருபவை.

கு, டு, து, று, அல், என் என்பவை பாட்டுகளில்மாத்திரம் வருபவை.

உ—ம். நான் வந்தன், வந்தேன், வரேன்.

உண்கு, உண்டு, வந்து, சென்று, உண்பல், உண்பென்—இவை போல்வன பாட்டில் வந்தவிடத்துக் காண்க.

"குடுதுறு வென்னுங் குன்றிய லுகரமோ
டல்லன் னென்னே யாகு மீற்ற
இருதிணை முக்கூற் றொருமைத் தன்மை." (நன்.)

முக்கூறு: ஆண், பெண், ஒன்றன்பால் ஆக மூன்று.

**129.** (*a*) Suffixes of 1st person plural.—தன்மைப் பன்மை விகுதி. இவை இருதிணைக்கும் பொது.

---

[1] று, டுக்கள் ஒன்றன்பால் விகுதியாய் வந்த ஒவ்வோரிடத்திலும் உய்த்தாராய்ந்து நோக்கில், து முன்னின்ற எழுத்தோடு சேர்ந்து று, டு ஆகி வந்தது காணலாம்.

அற்று—அத்தன்மை மருவி அன்மையாகி, மை கெட்டு அன் என நின்றது.

அன்+து=அற்று.

"னலமுன் றனவும் ணளமுன் டணவு
மாகுந் தநக்க ளாயுங் காலே." (நன்.)

பொருட்டு—பொருள்+து=பொருட்டு. மேலைச் சூத்திரப்படியே.

சாதாரணத்தில் வருவன—ஓம், அம், ஆம, எம், எம் என்பவை. கும், டும், தும், றும் முதலியன பாட்டில்மாத்திரம் வரும்.

உ-ம். நாங்கள், வந்தோம், வரோம்,
வந்தம், வந்தாம்,
வந்தேம், வந்தெம், வரேம்.

உண்கும், செய்தும், சென்றும், கொண்டும் என்பனபோல்வன பாட்டில் வந்தவிடத்துக் காண்க.

சாதாரணமாகவரும் விகுதி "ஓம்" என்பதுதான்.

| | | |
|---|---|---|
| தன்மைப் பன்மை நாங்கள். | (1) தன்மை நானும் + படர்க்கை அவனும்,<br>(2) தன்மை நானும் + முன்னிலை நீயும்,<br>(3) தன்மை நானும் + முன்னிலை நீயும் + படர்க்கை அவனும் கூடியதாம். | இவை இருதிணைக்கும் பொது. |

இதில் 1க்கு அம், ஆம் விகுதி வரும்;
2க்கு எம், எம், ஓம் விகுதி வரும்;
3க்கு கும், டும், தும், றும் விகுதி வரும் என்பது நன்னூலார் துணிபு; ஆயினும் இங்ஙனம் பாட்டில் வரும்; வழக்கத்தில் வரும்விதம் முன்னே சொல்லப்பட்டது.

"அம்மா மெனபன முன்னிலை யாரையும்
எம்மே மோமிவை படர்க்கை யாரையும்
உம்மூர் கடதற விருபா லாரையும்
தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை." (நன்.)

**130.** Suffixes of 2nd person singular.—முன்னிலை ஒருமை விகுதி இ, ஐ, ஆய். இவை இருதிணைக்கும் பொது.

இவற்றுள் இ பாட்டில் வெகுவாயும் வழக்கத்தில் அருகியும் வரும்.

உ-ம். நீ வந்தி, வந்தை, வந்தாய்.

ஏவற் பகுதிகளும் முன்னிலை ஒருமையில் வரும்.

உ-ம். நீவா, நீதின், நீகொள்.

"ஐயா யிகர வீற்ற மூன்றும்
ஏவலின் வருஉ மெல்லா வீற்றவும்
முப்பா லொ:ருமை முன்னிலை மொழியே." (நன்.)

**131**. Suffixes of 2nd person plural.—முன்னிலைப் பன்மை விகுதிகள் இருதிணைக்கும் பொது.

இவை இர், ஈர், இர்கள், ஈர்கள்; இவற்றுள், ஈர், ஈர்கள் சாதாரணமானவை.

மற்ற இரண்டும் அருகி வழக்கில் வரும்.

ஏவல் ஒருமைக்கு "மின்" விகுதியேற்ற, பன்மையாகி—முன்னிலை வினையாம்.

உ—ம். செய்திர், செய்திர்கள். (Rare)
செய்தீர், செய்தீர்கள். செய்யீர், செய்யீர்கள்.
செய்மின், வாழ்மின்.

**மின்** ஏற்று அருகிவரும்.

**உங்கள்** ஏற்றுவருவது சாதாரண வழக்கு.

உ—ம். வாழ்மின் (செய்யுள்), வாழுங்கள் (வழக்கு).

"இர்ஈ ரீற்ற விரண்டு மிருதிணைப்
பன்மை முன்னிலை மின்னவற் றேவல்." (நன்.)

**132**. வினை எதிர்மறையாயினும் வினையின் திணை, பால், இடம், காட்டிய விகுதிகள் வேறுபடாது.

உ—ம். நீ வந்தாய், வராய். அவன் வந்தான், வரான்.
அது வந்தது, வராது. நான் வந்தேன், வரேன். &c.

"உருபும் வினையு மெதிர்மறுத் துரைப்பினுந்
திரியா தத்தமீற் றுருபி னென்ப." (நன்.)

**133**. பெயரில் திணையும் பாலும் பலகாரணம் பற்றிப் பிறழ்ந்து வருவது போல ஒருமைக்குப் பதிலாய் பன்மையும் பன்மைக்குப் பதிலாய் ஒருமையும் ஒரு இடத்துக்குப் பதிலாக வேறு இடமும், வினையிலும் வருதல் உண்டு.

உ—ம். மேகம் வெயிலெல்லாம் மறைத்தது. **வெயில்** ஒருமை, பன்மையாக வழங்கி எல்லாம் என்பதைப்பெற்றும் ஒருமைவினை கொண்டு முடிந்தது.

இரண்டு கண்ணும் சிவந்தது. பன்மை ஒருமை வினைபெற்றது.
நீயோ அவனோ யாரிது செய்தார். இடம் பிறழ்ந்தது.
நானோ, நீயோ, அவனோ யாரிங்கே வந்தார். இடம் பிறழ்ந்தது.

இவைகள் இடவழுவமைதி எனப்படும் பெயரியலிலும் இவை விவரிக்கப்பட்டது.

**134.** குறிப்பு வினைகளும் இசையுங்காலத்து திணை, பால், இடம் காட்டும் விகுதிகளைப் பெறும். உதாரணத்தில் அவைகள் காட்டப்பட்டன.

"பன்மையு மொருமையும் பாலறி வந்த
வன்ன மரபிற் குறிப்பொடு வரூஉம்
காலக் கிளவி யுயர்திணை மருங்கில்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே." (தொல்.)

"பன்மையு மொருமையும் பாலறி வந்த
வம்மூ விரண்டும அஃறிணை யவ்வே." (தொல்.)

**135.** Tense. காலம் மூன்று.

| தமிழ். | ஸம்ஸ்கிருதம். | English. |
|---|---|---|
| இறந்தகாலம். | (பூதகாலம்) | Past tense. |
| நிகழ்காலம். | (வர்த்தமானகாலம்) | Present tense. |
| எதிர்காலம். வருங்காலம். | (பவிஷியகாலம்) | Future tense. |

"இறப்பெதிர் நிகழ்வெனக் கால மூன்றே." (நன்.)

N.B.—இறப்பும் எதிர்வும் மறைபொருளானவை, நிகழ்வு வெள்ளிடையானது. ஆகையால் மறைவானவற்றை முதலில் வைத்துச் சூத்திரம் சொல்லியது.

## இடைநிலை விவரம்.

### PAST TENSE.

**136.** இறந்தகால இடைநிலை, த், இன் என்பவை.

த் முன் வரும் பகுதியோடு சேரும்போது புணர்ச்சிவிதியால் ட், ற் என்று விகாரமாகும்.

இன் சில இடங்களில் மருவி, இ ஆய், இ யே, ய் ஆகும்.

உ—ம். படித்தான், நடந்தான், அனுப்பினான், போயது.
கொண்டான், சென்றான், அனுபபியது.

| | பகுதி. | இடைநிலை. | விகுதி. | குறிப்பு. |
|---|---|---|---|---|
| படித்தான் | படி | த் | ஆன். | த் இரட்டித்தது விகாரம். |
| நடந்தான் | நட | த் | ஆன். | த் இரட்டித்தது விகாரம். தகரவொற்று ந ஆனது சந்தி விகாரம். |

கொண்டான் கொள் த் ஆன். த் இரட்டித்தது. கொட்டான் என்றாய் கொண்டான் எனச் சந்தி விகாரம் பெற்றது.
சென்றான் செல் த் ஆன். செற்றான் என த் இரட்டித்து விகாரப்பட்டு சென்றான் என ஆயது.
அனுப்பினான் அனுப்பு இன் ஆன். அனுப்பினான்.
போயது போ இன் அது. போயினது என்றாகி இன் மருவி ய் என்றாய் போயது என ஆயிற்று.

"நடறவொற் றின்னே யைம்பால் மூவிடத்
திறந்த காலந் தருந்தொழி லிடைநிலை." (நன்.)

**137**. சில பகுதிகள் இடைநிலை பெறாமல் பகுதி இரட்டித்து இறந்தகாலம் காட்டும். அதாவது பகுதியின் ஈற்றுயிர் மெய்யிலுள்ள மெய், பகுதி நடுவில் எழுத்துப்பேறாய் வந்து இறந்தகாலங் காட்டும்.

உ—ம். சுடு———————— சுட்டான்.
பெறு ———————— பெற்றான்.

**138**. உகரச்சாரியை (ஒற்றுமேல் கொள்—கொள்ளு, செல்—செல்லு, உண்—உண்ணு, தின்—தின்னு எனப்) பெறாமல் இயற்கையாய் உகர உயிர் மெய்யை ஈற்றிலுடைய பகுதிகள் இன் இடைநிலையைப்பெறும்.

உ—ம். விம்மு———————விம்மினான்.
விரவு ———————விரவினான்.
அனுப்பு ———————அனுப்பினான்.
சோறு ———————சோறினான்.
கூறு ———————கூறினான்.
தாவு ——————— தாவினான்.
நீங்கு ———————நீங்கினான்.

தனிக்குறிலணைந்த உகர ஈற்றுப் பகுதிகளுக்கு இன் இடைநிலை வராது.

உ—ம். சுடு——————— சுட்டான்.

N.B.—இவ்விதிக்கடங்காது மிகுந்த பகுதி "போடு" என்ற ஒன்றே. போடு, தனிக்குறிலணையா உகர ஈறாயினும், ஒற்று இரட்டித்து இறந்தகாலங்காட்டிற்று—போட்டான்.

139. புகு, நகு, தகு, அடு, சுடு, படு, பெறு, உறு, அறு, தொடு, விடு, முதலாய உ ஈற்றுப்பகுதிகள் ஒற்று இரட்டித்துக் காலங்காட்டும்.

இதிலும் ஒரேபதம், இருபொருள் தருவதுண்டு. அவைகளின் பொருளறிந்து இறந்தகாலம் கூறவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| உ—ம். | அடு | (To burn or to heat) | அட்டான். |
| | அடு | (To go near) | அடுத்தான். |
| | தொடு | (To touch) | தொட்டான். |
| | தொடு | (To string up) மாலைதொடு. | தொடுத்தான். |
| | விடு | (Thrust or leave) | விட்டான். |
| | விடு | (Send an Errand) | விடுத்தான். |
| | அறு | (Break) | அற்றான். |
| | அறு | (Reap) | அறுத்தான் |
| | படு | (Suffer, die) | பட்டான். |
| | படு | (To lie down, or to arrange) | படுத்தான். |
| | செறு | (To be angry) | செற்றான். |
| | செறு | (To hinder) | செறுத்தான். |
| | கெடு | (To be ruined) | கெட்டான். |
| | கெடு | (To spoil a thing) | கெடுத்தான். |
| | புகு | (To enter) | புகுந்தான். |
| | புகு | (To go) | புக்கான். |

மற்றப் பகுதிகளெல்லாம் த் இடைநிலையைப் பெறும்.

140. ல், ள் ஈற்றையுடைய பகுதிகள் த் இடைநிலை பெற்று த கரத்தை றகரமாக்கும். றகரத்துக்கினமான், ன ஒற்றையும் எழுத்துப்பேறாகவரப் பெறும்.

உ—ம். கல் ———— கற்றான்.
செல் ———— சென்றான்.
தின் ———— தின்றான்.

141. ள ண ஈற்றையுடைய பகுதிகள் தகரத்தை டகரமாக்கும் இனஒற்றெழுத்தாகிய, ண ஒற்றை எழுத்துப்பேறாகவரப் பெறும்.

உ—ம். மருள் ———— மருண்டான்.
உண் ———— உண்டான்.

142. மற்ற உயிரீறுகளையும், மெய்யீறுகளையுமுடைய பகுதிகளில் விசேஷித்துக் காட்டியவை தவிர மற்றவை த் இடைநிலையைப் பெற்று இயைவுப்படி த்த், ந்த் என்று ஆம்.

உ-ம். கொடுத்தான்———— நடந்தான்.
பார்த்தான் ———— உணர்ந்தான்.

N.B.—செயப்படுபொருளில்லாத வினைகளிலும், தன்வினைகளிலும் த் இடைநிலை இரட்டிக்காமலும், இரட்டிக்குமிடத்து ந்த் ஆயும் வரும்.

உ-ம். தொழு———— தொழுதான்.
எழு———— எழுந்தான்.

இவ்வகை வினைப்பகுதிகள் பலவும் இருபொருள் உளவாதலால் பொருளறிந்து "த்த்" ஆகவாவது, "ந்த்" ஆகவாவது தகரவொற்றை மாற்றவேண்டியது.

உ-ம். மடி (Fold) மடித்தான்.
மடி (To die) மடிந்தான்.
முறி (Break) முறித்தான்.
முறி (To feel mental agony) முறிந்தான்.
வீழ் (To fall down oneself) வீழ்ந்தான்.
வீழ் (To make another fall) வீழ்த்தான்.
முடி (End) முடித்தான்.
முடி (Tie) முடிந்தான்
கடி (Forbid) கடிந்தான்.
கடி (Bite) கடித்தான்.
சேர் (Join) சேர்ந்தான்.
சேர் (Cause to join or unite) சேர்த்தான்.
வை (Place) வைத்தான்.
வை (திட்டு, abuse) வைதான்.
அறை (Tell, strike) அறைந்தான்.
அரை (Grind) அரைத்தான்.
உறை (Live) உறைந்தான்.
உரை (Tell) உரைத்தான்.
இறு (To strain) இறுத்தான்.
இரு (To be) இருந்தான்.
தொலை (To pass away) தொலைந்தான்.
தொலை (To lose, to cause to pass away) தொலைத்தான்.
மலை (To be bewildered) மலைந்தான்.
மலை (To be outwitted, To cause others to be bewildered,) மலைத்தான்.
கரை (To cry, or to become emaciated) கரைந்தான்.

கரை (To reduce a thing, to particles) கரைத்தான்.
எரி (To burn, *v. intr* To be angry) எரிந்தான்.
எரி (To burn something) எரித்தான்.
எறி (To throw) எறிந்தான். &c.

IRREGULAR VERBS.

## விதி இகந்துவரும் வினைகள்.

**143.** ஆ —ஆகு என்று கு சாரியை பெற்று ஆகின்றேன் என ஆகும்; ஆனேன் என்று மருவியும் வரும். ஆயினேன் என்றும் வரும்.

போ —போகின்றேன், போனேன், போயினேன் என ஆம்.
கூ —உச்சாரியை பெற்று கூவு என்றாகி, கூவினேன் என்றாம்.

தா —த வாகி தந்தான் என ஆம்.
வா —வ வாகி வந்தான் என ஆம்.
சா —செ ஆகி செத்தான் என ஆம்.
நோ —நொ ஆகி நொந்தான் என ஆம்.
வவ் —வவ்வு } என்றாகி வவ்வினேன் } என ஆம்.
தெவ்—தெவ்வு } தெவ்வினேன் }

**144.** Present Tense.—நிகழ்கால இடைநிலை, கிறு, கின்று, ஆநின்று என்பவை.

இவற்றில் ஆநின்று வழக்கில் அருகி வரும்.

உ—ம். நடக்கிறான், எடுக்கின்றனன், ஓடாநின்றான்.

ந், ந்த் ஆய் இறந்தகாலத்தில் மாறும் திறத்தையுடைய பகுதிகள், கிறு என்னும் நிகழ்கால இடைநிலையைப் பெறும்போது க் இரட்டாது.

ச்—த்த் ஆய் மாறுங்காலையில் "க்கிறு" என்றாகும்.

உ—ம். மடி, மடிந்தான், மடிகிறான்.
மடித்தான், மடிக்கிறான்.

Exception.—இவ்விதி இகந்து வருபவை.

(a) அகர ஈறு பெற்ற பகுதிகள் இறந்தகாலத்தில் "ந்த்" பெற்று வரினும் நிகழ்காலத்தில் "க்கிறு" ஆகும்.

உ—ம். நட, நடந்தான், நடக்கிறான். (நடகிறான் அல்ல.)
திற, திறந்தான், திறக்கிறான், &c.

(b) இரு, இருந்தான், இருக்கிறான். (இருகிறான் அல்ல.)
(c) மோ, மோந்தான், மோக்கிறான்.

ஒவ்வொரு பகுதிக்கும் "ஆநின்று" ஏற்றி நிகழ்காலம் வழுத்தலாம்.

N.B.—ஒற்று இரட்டித்து இறந்தகாலம் காட்டிய பகுதிகள், "கிறு" இடைநிலை பெற்று நிகழ்காலமாகும்போது "க்கிறு" எனவாகாது. இதுபோலவே, விசேஷித்துக் கூறியவை தவிர மற்ற எல்லாப்பகுதிகளும்.

உ—ம். சுடு, சுட்டான், சுடுகிறான்.
உறு, உற்றான், உறுகிறான்.
விம்மு, விம்மினான், விம்முகிறான்.

"ஆநின்று கின்று கிறுமூ விடத்தின்
ஐம்பால் நிகழ்பொழு தறைவினை யிடைநிலை." (நன்.)

**145.** [1] Future Tense. — எதிர்கால விடைநிலை ப், வ் என இரண்டும். கிறு ஆக நிகழ்காலத்தில் பெற்ற பகுதிகள், வ் இடைநிலையையும், க்கிறு ஆகப் பெற்ற மற்றவை, ப் இடைநிலையையும் பெறும்.

---

[1]செய்யுளில் தெரிநிலை வினைமுற்றின் காலங்காட்டுவதற்கு இவ்விடைநிலைகளன்றி வேறுவகைகளும் உபயோகப்படும்.

"றவ்வொடு கர வும்மைநிகழ் பல்லவும்
தவ்வொ டிறப்பு மெதிர்வும் டவ்வொடு
கழிவுங் கவ்வொ டெதிர்வுமின் னேவல்
வியங்கோ ளிம்மா ரெதிர்வும் பந்தம்
செலவொடு வரவுஞ் செய்யுநிகழ் பெதிர்வும்
எதிர்மறை யும்மையு மேற்கு மீங்கே." (நன்.)

| விகுதி. | | என்ன காலம் காட்டியது. | உதாரணம். |
|---|---|---|---|
| று | றும | எதிர்காலம், இறந்தகாலம் | சேறு, சேறும்; கொன்று, கொன்றும். |
| து | தும | ,, ,, | வருது, வருதும்; வந்து, வந்தும். |
| டு | டும | இறந்தகாலம்............... | கொண்டு, கொண்டும். |
| கு | கும் | எதிர்காலம்............... | செய்கு, செய்கும். |
| ஏவல்<br>பகுதி + வியங்கோள் விகுதி | | ,, .................. | உண், உண்ணாய்.<br>வாழ்க, வாழிய, வாழியர். |
| பகுதி + மார் | | ,, .................. | உண்மார். |
| பகுதி + ப | | இறந்தகாலம், எதிர்காலம் ... | உண்ப, தின்ப, செல்ப. |
| பகுதி + உம் | | நிகழ்காலம், ,, ... | செய்யும், போகும். |

இவற்றில் கடைசி சாதாரண வழக்கத்தில் மிகுதியும் வரும். கடைசிக்கடுத்தது அருகிவரும்.
எதிர்மறைக்குக் காலவிதியாசமில்லை.

N.B.—மேலுள்ளதில் ஈற்றில் வரும் விகுதிகள் வினைமுற்றின் காலம் காட்டுவதன்றி.

உ-ம். எழு, எழுந்தான், எழுகிறான், எழுவான்.
மடி, மடித்தான், மடிக்கிறான், மடிப்பான்.
மடிந்தான், மடிகிறான், மடிவான்.
நில், நின்றான், நிற்கிறான், நிற்பான்.

N.B. ண், ன் ஈறுகளையுடைய ஈரெழுத்தாலாய பகுதிகள், நிகழ்காலத்தில் "கிறு" மாத்திரம் பெறினும் எதிர்காலத்தில் "வ்" அல்ல "ப்" என்பதையே இடைநிலையாகப் பெறும்.

உ-ம். காண், காண்கிறேன், காண்பேன்.
உண், உண்கிறேன், உண்பேன்.
தின், தின்கிறேன், தின்பேன்.

"பவ்வ மூவிடத் தைம்பா லெதிர்பொழு
திசைவினை யிடைநிலை யாமிவை சிலவில." (நன்.)

N.B.—பகுதியோடு இடைநிலையின்றி சாரியை பெற்றும் பெறாமலும் உம் விகுதி வரின் நிகழ்காலமும் எதிர்காலமுமாம்.

உ-ம். செய்———— செய்யும்.
நட ———— நடக்கும்.
வா ———— வரும்.

N B —வா, தா என்பவை நிகழ்காலத்தும் எதிர்காலத்தும் வரு, தரு என்றாகி இடைநிலையையும் விகுதியையும் பெறும்.

**146**. Uses of tenses — கால உபயோகம். கடந்த விஷயத்தை இறந்தகாலத்திலும், இனிமேல் நடக்கும் விஷயத்தை எதிர்காலத்திலும், இப்போ நடந்துவருவதை நிகழ்காலத்திலும் எடுத்துரைப்பது கிரமம். ஆயினும் சில விஷயங்கள் திரிகாலத்திலும் இயலும். எப்போதும் உண்மையானவைகள் இன்மையானவைகளை நிகழ்காலத்தில் கூறுவது நியாயமும், மரபும்.

உ-ம். தெய்வம் இருக்கிறார்.
தீ சுடுகிறது.
ஆறு ஓடுகிறது.
நட்சத்திரம் இரவில் தோன்றுகிறது.
சூரியன் கிழக்கே உதிக்கிறது.
அரசர் ஆளுகிறவர்கள்.

"முக்கா லத்தினு மொத்தியல் பொருளைச்
செப்புவர் நிகழுங் காலத் தானே." (நன்.)

**147.** இதுதவிர, விரைவு, மிகுதி, நிச்சயம்பற்றியும், சாதாரண வழக்கத்திலும் எதிர்காலம் இறந்தகாலமாயும், எதிர்காலம் நிகழ்கால மாயும், காலங்கள் நியதி வழுவி வரும். இது பேசுவோர், எழுதுவோர் குறிப்புகளினால் அறியலாம்.

உ-ம். (1) a. "நீர் வாரும்."

b. "இதோ வந்துவிட்டேன்." நான் "வருகிறேன்," கொஞ்சநேரத்தில் "வருவேன்" என்பதற்குப் பதில் "வந்துவிட்டேன்" என்று இறந்தகா லத்தில் சொன்னது விரைவுபற்றி.

(2) பாம்புப்புற்றில் கைவிட்டால் **செத்தாய்.** "**சாவாய்**" என்பது நிச்சயம்பற்றி "**செத்தாய்**" என்றாயது.

(3) இன்னம் கால்மணிதானிருக்கிறது, இன்றைக்கு ரெயில் தப்பிற்று.

இது மிகுதிபற்றி பெரும்பான்மை இங்ஙனம் ஆருமாதலால், "**தப்பும்**" என்று எதிர்காலத்தி லிருக்கவேண்டியது. "**தப்பிற்று**" என்று இறந்தகாலத்தில் வந்தது.

(4) நான் சிறுவயதில் படிப்பது இந்த அறைதான்.

"**படித்தது**" என்றிருக்கவேண்டியது "**படிப்பது**" என்று எதிர்காலத்தில் வந்தது.

இவைகள் இலக்கணப்படி வழுவாயினும் இலக்கியத்தில் வந்த மையால் காலவழுவமைதி எனப்படும்.

"விரைவினு மிகவினுந் தெளிவினும் இயல்பினும்
பிறழவும் பெறூஉ முக்காலமு மேற்புழி." (நன்.)

**148.** Verb proper.—தெரிநிலை வினைமுற்று என்றது செய்பவன், கிரியை, திணை, பால், இடம், காலம் ஆகிய இவற்றைத் தெளிவாய்க் காட்டிவருவது.

கிரியை பகுதியால் விளங்கும்.

திணை, பால், இடம் விகுதிகளால் விளங்கும்.

காலம் இடைநிலைகளால் பெரும்பான்மையும் விளங்கும்.

N.B.—பகுதி இரட்டித்தும், "றவ்வொ டுகரவும்மை, &c." என்ற சூத்திரத்தில் கண்ட விதிகளாலுங் காலம் அறியலாமாதலால் பெரும்பான்மையென்று மட்டிட்டது.

வாக்கியங்களில் பின்முன் வரும் வார்த்தைகளால் கிரியை, செய்த கருவி, இடம், செயப்படுபொருள் விளக்கமாகும்.

உ—ம். கந்தன் கடையில் கருவேம்புக்கட்டை கொண்டு பொடியைக் கடைந்தான்.

இதில் எல்லாம் தெரிந்தது.

உ—ம். முருகன் புஸ்தகத்தை எடுத்தான்.

இதில் இடம் கருவி இல்லை.

உ—ம். தம்பி தூங்குகிறான், இதில் கருவி, இடம், செயப்படுபொருள் மூன்றும் இல்லை.

சில வினைகளுக்கு செயப்படுபொருள் அவசியம் வரவேண்டும்.

உ—ம். வெட்டினான்—என்னத்தை?

"செய்பவன் கருவி நிலஞ்செயல் காலம்
செய்பொரு ளாறுந் தருவது வினையே." (நன்.)

N.B —செய்பவன் (agent) திணை, பால், இடங்களால் அறியப்படும்.

"ஓடுகிறது" என்று எழுவாய் மறைந்தாலும் எழுவாய் அஃறிணை ஒன்றன்பால் படர்க்கை என்று து விகுதியால் தெரியவந்தது.

**149.** தெரிநிலை வினை. (Verbs in Active Voice.)
செயப்படுபொருள் குன்றாதவினை (Transitive Verb.)
செயப்படுபொருள் குன்றியவினை (Intransitive Verb.)
எனஇருவகைப்படும்.

உ—ம். வெட்டினான் (செ-குன்றாதவினை), மரத்தை வெட்டினான்.
ஓடினன் (செ—குன்றியவினை).

**150.** Passive Voice.— "செயப்படுபொருள் குன்றாதவினை" செயப்பாட்டு வினையாய் மாறத்தகுந்தது.

உ—ம். தியாகன் மரத்தை வெட்டினான்.
மரம் தியாகனால் வெட்டப்பட்டது.

செயப்படுபொருள் முதல் வேற்றுமையாக, எழுவாய் மூன்றும் வேற்றுமை வினைமுதல் அல்லது கருத்தாப்பொருளில் வந்து, செய்வினை செயப்பாட்டுவினையாகிற்று.

பகுதியோடு படு, உண் என்னும் துணை வினைகள் சேர்ந்து செயப்பாட்டு வினைப்பகுதிகளாம்.

இடைநிலை, விகுதிகளில் மாற்றமில்லை.

உ—ம். கொல் + படு = கொல்லப்படு.
கொல் + உண் = கொல்லுண்.

கொல்லப்பட்டான், கொல்லப்படுகிறான், கொல்லப்படுவான்.
கொல்லுண்டான், கொல்லுண்கிறான், கொல்லுண்பான்.

**151.** இவ்வகையாய் வந்த தெரிநிலை வினைகள் தன்வினை, பிறவினை என்றும் பிரிக்கப்படும்.

தன்வினை, எழுவாயாய் வந்த செய்பவன், தானே இயற்றிய கிரியையைக் குறிக்கும்.

உ—ம். கஜபதி நடந்தான், அடிர்தான், எழும்பினான்.

Causative verb. பிறவினை எழுவாயாய் வந்த செய்பவன், தானே இயற்றாமல், மற்றவரைக்கொண்டு இயற்றிய கிரியையைக் குறிக்கும்.

உ—ம். கஜபதி நடப்பித்தான், அடிப்பித்தான், எழுப்பினான்.

**152.** [1] FORMATION OF CAUSATIVE VERBS.

## தன் வினைகள் பின்வருமாறு பிறவினைகளாம்.

(1) பகுதியோடு பி, வி, விப்பி சேர்ந்து புதுப் பகுதிகளாதலால்.

| | தன்வினை. | பிறவினை. | |
|---|---|---|---|
| உ—ம். | துடை, | துடைப்பி. | |
| | நட, | நடப்பி, | நடப்பிவி. |

---

1 "செய்யென் வினைவழி விப்பி தனிவரில்
செய்வியென னேவல் இணையினீ ரேவல்." (நன்.)
"விளம்பிய பகுதிவே றாதலும் விதியே" (நன்.)

பகுதி வேறுபடாமல் இடைநிலையோடு சேர்ந்த ஒற்றுக்கள் வித்தியாசப்பட்டு வருபவற்றை தன்வினை, பிறவினை வித்தியாசம் எனபர் சிலர்.

| | | | | |
|---|---|---|---|---|
| உ-ம். | மடிந்தான், | மடிகிறான், | மடிவான். | (தன்வினை.) |
| | மடித்தான், | மடிக்கிறான், | மடிப்பான். | (பிறவினை.) |
| | குறைந்தான், | குறைகிறான். | குறைவான். | (தன்வினை.) |
| | குறைத்தான், | குறைக்கிறான், | குறைப்பான. | (பிறவினை.) |

இவற்றில் ந் வலித்து த் ஆயது; கிறு ஒற்று இரட்டித்து "க்கிறு" ஆயது; எதிர்காலத்தில் வ், ப் (கடினசப்தம்) ஆயது எனபார்கள்.

படித்தான், துறைத்தான் என்கையில் செய்பவன் தானே இயற்றியதல்லாது பிறரைக் கொண்டியற்றவில்லையாதலால், இவ்வகைப்பட்டதை பிறவினை யெனப்படாது.

| | | |
|---|---|---|
| செய், | செய்வி, | செய்விப்பி. |
| தா, | தருவி, | தருவிப்பி. |
| வா, | வருவி, | வருவிப்பி. |

(2) பகுதியிடையில் வந்த மெல்லொற்று வல்லொற்றாகிப் புதுப் பகுதியாதலால்.

| | தன்வினை. | பிறவினை. |
|---|---|---|
| உ-ம். | நீங்கு ———— | நீக்கு. |
| | அடங்கு ———— | அடக்கு. |
| | மடங்கு ———— | மடக்கு. |
| | நீந்து ———— | நீத்து. |
| | தேம்பு ———— | தேபபு. |

இதன்மேல் பி, வி, விப்பி ஏறியும் வரும்.

உ-ம். நீக்குவி, அடக்குவிப்பி, &c.

(3) மெய்யீற்றுப் பகுதிகளோடு கு, சு, டு, து, பு, று வில் இவை யொன்று சேர்ந்து புதுப்பகுதியாம்.

| | தன்வினை. | பிறவினை. | |
|---|---|---|---|
| உ-ம். | காய் ———— | காய்ச்சு. | |
| | புரள் ———— | புரட்டு. | (டு. சேர்ந்தது) |
| | வெருள் ———— | வெருட்டு. | ,, |
| | மிரள் ———— | மிரட்டு. | ,, |
| | எழு ———— | எழுப்பு. | |
| | உறு ———— | உறுத்து. | |
| | அடர் ———— | அடர்த்து. | |
| | துயில் ———— | துயிற்று. | |

இவைமேலும் வி, பி, விப்பி ஏறி வரலாம்.

உ-ம். எழுப்புவி ——— துயிற்றுவி.

(4) பகுதியின் ஒற்று இரட்டித்துப் புதுப் பகுதியாம்.

| | தன்வினை. | பிறவினை. |
|---|---|---|
| உ-ம். | கூடு ———— | கூட்டு. |
| | ஓடு ———— | ஓட்டு. |
| | ஆறு ———— | ஆற்று. |
| | ஏறு ———— | ஏற்று. |
| | நீறு ———— | நீற்று. |
| | மாறு ———— | மாற்று. |

இவைமேலும், வி, பி, விப்பி ஏறிவரலாம்.

உ-ம். ஏற்றுவி, ஓட்டுவி.

இப்புதுப் பகுதிகளோடு இடைநிலை விகுதிகள் சேர பிறவினை முற்றாம்.

**153.** பிறவினை செயப்படுபொருளன்றி வரவே வராது. செயப்பாட்டு வினையுமாகத்தக்கது.

உ-ம். வருவித்தான்—— பிள்ளைகளை வருவித்தான்.
வருவிக்கப்படு —— வருவிக்கப்பட்டான்.
வருவிக்கப்படுகிறான்.
வருவிக்கப்படுவான்.

**154.** தெரிநிலை. { தன்வினை. செயப்படுபொருள் குன்றியவினை. பிறவினை. செயப்படுபொருள் குன்றாதவினை. செயப்பாட்டுவினை. } யாவும், உடன் பாடாகவாவது (Positive.) எதிர்மறையாக வாவது (Negative.) இருக்கும்.

உடன்பாடு, உண்மை கூறல்; எதிர்மறை இல்லையென மறுத்துக் கூறல்.

உடன்பாட்டுவினை வந்தவிதம் முற்கூறியவை யாவும்.

**155.** Negative forms.—எதிர்மறையில் காலம் தெரியாது. ஆகையால் காலத்தைக்காட்டும் இடைநிலைகளும் விகுதிகளும் அவ் வினைக்கவசியமில்லை. ஆயினும் விகுதிகள் திணை, பால், இடம் விளங்க வரும்.

இவை வருமாறு.

(1) பகுதியோடு, நெட்டெழுத்தை முதலிலுடைய விகுதிகள் இடைநிலையின்றிப் புணர்ந்தால் எதிர்மறையாம்.

| | பகுதி. | | விகுதி. | | | |
|---|---|---|---|---|---|---|
| உ-ம். | அடி | + | என் | = | அடியேன். | (தன்மை ஒருமை.) |
| | அடி | + | ஓம் | = | அடியோம். | (தன்மைப் பன்மை.) |
| | அடி | + | ஆய் | = | அடியாய். | (முன்னிலை ஒருமை.) |
| | அடி | + | ஈர் | = | அடியீர். | (முன்னிலைப் பன்மை.) |
| | அடி | + | ஆன் | = | அடியான். | (ஆண்பால் படர்க்கை.) |
| | அடி | + | ஆள் | = | அடியாள். | (பெண்பால் படர்க்கை.) |
| | அடி | + | ஆர் | = | அடியார். | (பலர்பால் படர்க்கை.) |

(2) ஒன்றன் படர்க்கையில் **து**வ்விகுதி முன் **ஆ** வந்து எதிர்மறை காட்டும்.

பகுதி. விகுதி.

உ—ம். அடி + **ஆ** + து = அடியாது.

(3) பலவின்பாலில் **ஆ** விகுதி எதிர்மறை காட்டும்.

பகுதி. விகுதி.

உ—ம். அடி + ஆ = அடியா.
கொடு + ஆ = கொடா.
நட + ஆ = நடவா.

N.B.—சிலவேளை **கு** சாரியை பகுதிக்கும், விகுதிக்கும் இடையே வரும்.

உ—ம். அடிக்கேன்———— அடிக்கார்.
அடிக்காது ———— அடிக்கா.

"எதிர்மறைக் கிடைநிலை யின்றிஎன், எம்,ஓம்
ஆய்,ஈர், ஆன்,ஆள், ஆர்,ஆ, ஆது,ஆ
ஐம்பால் மூவிடத் தாகு மென்ப." (தொன்னூல்.)

**156.** [1]குறிப்பு வினைமுற்று, பெயரினடியாய்ப் பிறக்கும். அன்மை, இன்மை என்னும் பண்படியாய்ப் பிறந்தவை இயற்கையாய் எதிர்மறைப் பொருளைத் தரும்.

உ—ம். அல்லது, அல்லன், அல்லள், அல்லர், அல்ல, அல்லை.
இல்லது, இல்லன், இல்லள், இல்லர், இல்ல, இல்லை.

ஆனால் கரியன், கண்ணன், ஊரது என்பவை பிறபெயரடியாய்ப் பிறந்த குறிப்பு வினை முற்றுக்கள். இவைகளை எதிர்மறுத்துக் கூறும் போது,

அவன் கரியன் அல்லன்.
நேசன் கண்ணன் இல்லன்.

இக்காலை ஊரது அல்லது என, "இன்மை, அன்மைக்" குறிப்பு முற்றுகளேற்றிக் கூறப்படும்.

இங்ஙனம் வழக்குள் அருகியே வரும்.

---

[1] "இன்றி இலவுடைய வென்னுங் கிளவியும்
அன்றுடைத் தல்ல வென்னும் கிளவியும்
பண்புகொள் கிளவியும் உளவென் கிளவியும்
பண்பி னாகிய சினைமுதற் கிளவியும்
ஒப்பொடு வருஉங் கிளவியொடு தொகைஇ
அப்பாற் பத்தும் குறிப்பொடு கொள்ளும்." (தொல்.)

**157.** [1]விசேஷக் குறிப்புவினைகள்.

1. **வேறு இல்லை; உண்டு** இவை இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொது.

"வேறில்லை உண்டைம் பால்மூ விடத்தன." (நன்.)

2. **யார்.**

உ-ம். யார் அவன்? யார் இவர்கள்?
யார் அவள்? யார் இவர்?

என உயர்திணை மூன்றுபாலிலும் **யார்** பொதுவாய் வந்தது.

"யாரென் வினாவினைக் குறிப்புயர் முப்பால்." (நன்.)

3. **எவன்.**

உ-ம். அது எவன்,
அவை எவன்

என, **எவன்** அஃறிணைப்பால் இரண்டிற்கும் பொதுவாய் வந்தது.

"எவனென் வினாவினைக் குறிப்பிழி யிருபால்." (நன்.)

**எவன்** என்பது மருவி "**என்**" என்றும்.

**எவன், என்** என்பவை விசேஷம் செய்யுளில் வரும் "**என்**"என்பது திரிந்து "**ஏன்**" ஆகும். இது இருதிணை ஐம்பால்களுக்கும் பொதுவான வினாக்குறிப்பு வினைமுற்று.

உ-ம். நான் ஏன், நீ ஏன், அவன் ஏன்,
நாம் ஏன், நீர் ஏன், அவள் ஏன்,
அது ஏன், அவர் ஏன், அவை ஏன்
என வருதல் காண்க.

[1] குறிப்புவினைகள் காலங்காட்டியும் வரலாம், எதிர்மறைவினைகள் காலங்காட்டியும் வரலாமென்று சொல்பவருண்டு.

அது சண்முகத்தது ஆனது.
,, சண்முகத்தது ஆகிறது.
,, சண்முகத்தது ஆவது.

சண்முகத்தது என்னும் குறிப்பு வினைமுற்றுக் காலந் தெரியவந்ததென்பர்.

செய்யாதிருந்தான்.
செய்யாதிருக்கிறான். } இவைபோல
செய்யாதிருப்பான்.

[illegible] என்னும் துணைவினை யேற்றிக் காலம் எதிர்மறைக்கும் தெரியலாமென்பர்.

[illegible]னும் காலவிபரீதம் துணைவினையாலன்றி குறிப்புவினையிலாவது, எதிர்மறை வினையிலாவது வரவில்லை, "இருந்தான்." முன்னின்ற "செய்யாது" என்பதை எதிர்மறை வினையெச்சமாகப் பகுத்து இலக்கணங் கூறலாமே.

[illegible]வற்றைக் காலங்காட்டிய எதிர்மறைவினை, குறிப்புவினை யென்பது சரியன்றென்பது ஆன்றோர் மரபு.

N.B எவன் என்ற ஆண்பால் வினாப்பெயர் வேறு.

எவன் என்னும் அஃறிணை இருபாலுக்கும் பொதுவான வினாக் குறிப்பு வினைமுற்று வேறு.

158. வினைகள் முற்றாகமாத்திரமல்ல, எச்சம், ஏவல், வியங்கோள் ஆகவும் வரும்.

"அவைதாம், முற்றும் பெயர்வினை எச்சமு மாகி
யொன்றற் குரியவும் பொதுவு மாகும்." (நன்.)

159. ஏவல் (Imperative form.) கட்டளையிடும் வினை.

ஏவல் முன்னிலைக்கே உரித்து, இருதிணையிலும் வரும்.

குறிப்பு வினை ஏவல் ஆகாது, வியங்கோளுமாகாது.

தெரிநிலை வினைப்பகுதியே ஏவல் ஆகும். தி, ஆய், மோ விகுதிகளோற்றும் வரும்.

உ—ம். செய், நட, இரு.
நடவாய், போதி, கேண்மோ. } உடன்பாட்டு ஒருமை ஏவல்.

பகுதியோடு மின், உம், உங்கள் சேர்ந்தால் உடன்பாட்டுப் பன்மை ஏவல். ஈர், தீர் விகுதிகளும் வரும்.

உ—ம். செய்மின், நடவும், இருங்கள்; நடவீர், போதீர்.

பகுதியோடு ஏல் சேர எதிர்மறை ஒருமை ஏவல்.

உ-ம். செய்யேல், தேடேல், கொடேல்.

பகுதியோடு அன்மின் சேர எதிர்மறைப் பன்மை ஏவலாம்.

உ—ம். செய்யன்மின், எடன்மின்.

பகுதி + ஆது + ஏ =எதிர்மறை ஒருமை ஏவல்.
பகுதி + ஆது + ஏ + உம் or உங்கள்=எதிர்மறைப் பன்மை ஏவல்.

உ—ம். நடவாதே—ஒருமை.
நடவாதேயும், நடவாதேயுங்கள்—பன்மை.

*N.B.*—The Imperative Singular (ஏவல் ஒருமை) is the root form of Tamil verbs as the Infinitive is the root form of English verbs.

"ஏவல் ஒருமைக் கியலும் ஆய்,தி,மோ;
ஏவல் பன்மைக் கீர்,தீர், மின்,மினீர்;
இருமைக் கொரோவிடத் தாகும் குவ்வே." (இலக்.திரட்டு.)

"எதிர்மறை ஏவற் கேலே, அல்லே,
அன்மோ, அற்க, ஆகும், ஒருமை,
ஆமின், அன்மின், அற்பீர், பன்மை." (இலக். திரட்டு.)

N.B. இதில் கண்ட சில விகுதி வியங்கோளுக்குரியது. அற்க, அற்பிர் என்பவை இப்படிப்பட்டவை.

**160.** வியங்கோள் (Optative form.) மரியாதை ஏவல். இது ஒருவருடைய விருப்பத்தைக் காட்டும்.

இது பகுதியோடு **க**, **இய**, **இயர்** என்னும் விகுதிகளில் ஒன்றையாவது, **ஓட்டும்** என்னும் துணை வினையையாவது சேர்க்க வரும்.—காலங் காட்டாது, ஆகையால் இடைநிலைகள் பெறாது.

குச்சாரியை இடையில் சிலவேளை வரும்.

உ—ம். வாழ்க, வாழிய, வாழியர். வாழ் + ஓட்டும் = வாழட்டும்.
(ஓ கெட்டு அ வந்தது.)

இரு—இருக்க, இருக்கட்டும்.

இவ்வியங்கோள் இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும்பொது.

உ—ம். நான் வாழ்க, நாம் வாழ்க,
நீ வாழ்க, நீர் வாழ்க,

அவன், அவள், அவர், அது, அவை—வாழ்க.

எதிர்மறை வியங்கோள்=பகுதி+அல்+க.

உ—ம். செயற்க.

"கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
இயலு மிடம்பா லெங்கு மென்ப." (நன்)

**161.** **எச்சம்** Participles. (Incomplete predications.) இது பெயரெச்சம், வினையெச்சம் என இரண்டுவகைப்படும்.

**தெரிநிலைப் பெயரெச்சம்.**

பெயரெச்சம் பெயரைக்கொண்டு முடியும். இது மூன்று வகையாம்.

**162.** (a) இறந்தகாலப் பெயரெச்சம்=பகுதி+இறந்தகால இடைநிலை+அ விகுதி.

உ—ம். நடந்த மனிதன்.
ஓடின குதிரை.
தந்த புஸ்தகம்.

N.B.—சுடு, பெறு என்பவை முன் விவரித்ததுபோல் ஒற்று இரட்டித்துக் காலங்காட்டி அ ஈறு பெறும்.

உ—ம். சுட்ட, பெற்ற.

(b) நிகழ்காலப் பெயரெச்சம் = பகுதி + நிகழ்கால இடைநிலை + அ விகுதி.

உ—ம். தொடுக்கிற மாலை.
ஓடுகிற மான்.

(c) எதிர்காலப் பெயரெச்சம்=பகுதி+உம். கு சாரியை சிறுபான்மை வரும்.

உ—ம். ஓடும் குதிரை; செய்யும் காரியம்; நடக்கும் வழி; எடுக்கும் சுமை.

N.B.—நிகழ்கால எதிர்கால வினைமுற்றும் இம்மாதிரியாக "உம்" விகுதி பெறுமாதலால் வாக்கியத்தில் வார்த்தை வந்த நிலைநோக்கி முற்று எச்சம் என்று பகுத்தறிந்து கூறவேண்டியது.

உ—ம். வெயில் எறிக்கும் இடத்தில் இவ்வித்து நன்றாய் முளைக்கும்; எறிக்கும்—எச்சம்; முளைக்கும்—முற்று.

பெயரெச்சத்துக்கு கிரியை தெரியும்; காலம் தெரியும்; திணை பால் இடம் தெரியாது.

கொண்டுமுடியுஞ் சொல் பெயர் வகையுள் ஒன்று. காலம் முன் சொன்னபடி இடைநிலையாலும், ஏற்குமிடத்துப் பகுதியின் ஒற்றிரட்டலாலும் தெரியும்.

"செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டில்
காலமுஞ் செயலுந் தோன்றிப் பாலொடு
செய்வ தாதி யறுபொருட் பெயரும்
எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே." (நன்.)

பாடு—வாய்பாடு (Formula.)

**163**. வினையெச்சம், வினைமுற்றையாவது, வினையாலணையும் பெயரையாவது, தொழிற் பெயரையாவது, மற்ற வினையெச்சத்தை யாவது பெயரெச்சத்தையாவது கொண்டு முடியும்.

பின்வரும் உதாரணத்தில் காண்க.

வினையெச்சத்தில் காலம் தெரியும்; கிரியையும் தெரியும்; திணை, பால், இடம் தெரியாது. காலம் இடைநிலையாலல்ல விகுதியால் தான் அறியப்படும்.

"தொழிலுங் காலமுந் தோன்றிப் பால்வினை
யொழிய நிற்பது வினையெச் சம்மே." (நன்.)

**164.** வினையெச்சம் மூன்று வகையாம்.

(a) இறந்தகால வினையெச்சம்.

(1) ஒற்று இரட்டித்து, இறந்தகாலங் காட்டிய பகுதிகள், ஒற்று இரட்டித்து வருதலால் இறந்தகால வினையெச்சமாம்.

உ—ம். சுடு —— சுட்டுத் தின்றான்.
போடு —— போட்டு அழுகிறான்.
பெறு —— பெற்று வருதல்.

(2) இன் இடைநிலையைப் பெற்று இறந்தகாலங் காட்டிய வினைகள் பகுதியோடு இ சேர்வதால் இறந்தகால வினையெச்சமாம்.

உ—ம். ஆடு —— ஆடி அலைகின்றவன்.
விம்மு —— விம்மி யழுதான்.
அனுப்பு —— அனுப்பித் திரும்பிவா.
கலங்கு —— கலங்கிப் பொங்குகிற பாத்திரம்.

(3) மற்றப் பகுதிகளுக்கு **து** விகுதியைக் கூட்ட இறந்தகால வினையெச்சமாம்.

உ—ம். எடு —— எடுத்து வா.
நட —— நடந்து போகிறான்.
மடி —— மடித்து வையாதே.

இறந்தகாலத்தில் **த்**, **ந்** எப்போது எழுத்துப்பேறாய் வரும் என்று விவரிக்கப்பட்டதைக் கவனித்து, பகுதிக்கும், து விகுதிக்கும் நடுவில் கிரமமானவற்றைச் சேர்க்கவும்.

செய்துவந்த காரியம், மழை பெய்துவிட்டது, கொன்று தின்கும் மிருகம் என்பவற்றுள் முந்தின இரண்டிலும் ஓர் எழுத்தும் இடையில் வரவில்லை. பிந்தியது விகாரத்தால் (கொல்+து) கொன்று எனத் திரிந்தது காண்க.

எடுத்து, இதில் **த்** எழுத்துப்பேறு.
நடந்து, இதில் **ந்** எழுத்துப்பேறு.

(b) நிகழ்கால வினையெச்சம்.

பகுதியோடு **அ** விகுதி சேர ஆகும். இடையில் **கு** சாரியை பெரும்பான்மை வரும்.

உ—ம். நட + கு + அ=நடக்கச் சொன்னார்.
மடி + அ=மடியச் செய்தல்.
பெறு + அ=பெற வருபவர்
தா (தரு) + அ=தரச் சொன்னாயோ.

(c) எதிர்கால வினையெச்சம்.

(1) பகுதியோடு இன், இல் விகுதி சேர எதிர்கால வினையெச்சமாம். கு சாரியை இடையில் வருவதுண்டு.

உ—ம். செய்யின், தடுக்கின், வரின், கொடுக்கில், பெறில்.

(2) இறந்தகால வினையெச்சத்தோடு "ஆல்" வர எதிர்கால வினையெச்சமாம்.

| இ. வி. எச்சம். | | எ. வி. எச்சம். |
|---|---|---|
| உ—ம். எடு —— | எடுத்து, | எடுத்தால் சாவாய். |
| முடி —— | முடித்து, | முடித்தால் நல்லது. |

(3) வினைமுற்றோடு "ஏல்" விகுதிவர எதிர்கால வினையெச்சமாம்.

உ—ம். நடந்தேனேல், செய்தானேல்,

(4) பெயரெச்சத்தோடு "கால்" வரின் எதிர்கால வினையெச்சமாம்.

உ—ம். செய்தக்கால்.............. வருவான்.
செய்கின்றக்கால் .......... வருவான்.
செய்யுங்கால் .............. வரான்.

"செய்து, செய்பு, செய்யாச், செய்யூச்,
செய்தெனச், செயச், செயின், செய்யிய, செய்யியர்,
வான், பான், பாக்கின வினையெச்சம் பிற
ஐந்தொன் றாறுமுக் காலமும் முறைதரும்." (நன்.)

இதில், செய்து, செய, செயின் தவிர, மற்றவை பாட்டில்மாத்திரம் வருபவை.

"அவற்றுள், முதலி னான்கும் ஈற்றில் மூன்றும்
வினைமுதல் கொள்ளும் பிறவுமேற் கும்பிற." (நன்.)

எழுவாய் எச்சங்கள் கொண்டு முடிவது சாதாரணம்.

உ—ம். பலரும் தண்ணீர் எடுக்க, கிணறு சுரக்கும்;— அவன் அடிக்க, நான் திரும்பி அடித்தேன்; நீர் வந்தால், நான் பேசுவேன்.

N.B.—வினைமுற்றிற்கு ஆயின், ஆகில் என்ற ஆக்கத் துணை வினை யேற்ற எதிர்கால வினையெச்சம் வருதலுமுண்டென்பர் சிலர்.

உ—ம். வந்தானாயின், நடப்பானாகில்.

இதை இரண்டுவார்த்தையாய்ப் பிரித்து முந்தியதை வினைமுற்றும், பிந்தியதை எதிர்கால வினையெச்சமுமாக இலக்கணங் கூறலாம். இப் படிப் பிரித்துக் கூறுவது சிறப்பு.

**165.** எதிர்மறை யெச்சங்கள், கால வேறுபாடுளவல்ல.

(a) எதிர்மறைப் பெயரெச்சம்.

(1) பகுதியுடன் ஆது { எதிர்மறை விகுதியும் } அ { பெயரெச்ச விகுதியும் } வர உண்டாகும்.

நடுவில் எழுத்துப்பேறு, சாரியை வரும்; விகாரப்புணர்ச்சிப்படி ஒன்றிப் பொருந்தும்.

உ—ம். படி————படியாத பையன்.

படிக்காத = படி + கு+ஆது+அ. இதில் கு சாரியை.

(2) பகுதியும் ஆ விகுதியும்மாத்திரம் வருதலுமுண்டு.

உ—ம். ஓடு + ஆ = ஓடா.
செய் + ஆ = செய்யா.
நட + ஆ = நடவா.

கு சாரியை வரினும் வரும்.

உ—ம். நடக்கா, ஆகா, போகா.

இது ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்ச மெனப்படும்.

(b) எதிர்மறை வினையெச்சம்.

பகுதியோடு ஆது, அல்லது, ஆமல் சேர வரும்.

கு சாரியையும் எழுத்துப்பேறும் பெறும்.

உ—ம். படிக்காது———— படிக்காமல்.
படியாது ———— படியாமல்.
" எடாது———— எடாமல்.

N.B.—"எதிர்மறை எச்சத் தேற்கும் விகுதி
ஆமல், ஆது, ஆமை, ஆவெனலாமே." (இலக். திரட்டு.)

"எதிர்மறைப் பெயர்எச்சத் திசைவல் லியல்பும்
ஈறு கெடுங்கால் மிகுதலும் ஆகும்." (இலக். திரட்டு.

இது எதிர்மறைப் பெயரெச்சங்கள், பெயரோடு சேரும்போ துண்டாகும் விகாரத்தை விளக்கியது.

உ—ம். ஓடாத குதிரை.
ஓடாக் குதிரை.

**166** [1]குறிப்புப் பெயரெச்சம், அ ஈறு பெறும்.

உ—ம். கரிய, சிறிய, வலிய.
கரிய இலை, சிறிய நாய், வலிய வம்பு.

குறிப்பு வினையெச்சம் **து**, **ஆய்** ஈறு பெறும்.

உ—ம். அவன் சிறிது செய்தான்.
பெரிதாய் அறுத்தான்.

இதில் "**ஆய்**," ஆக்க வினையெச்சம்.

**167**. குறிப்பு வினைமுற்று ஆன, உள்ள, இல்ல என்னும் துணை வினையெச்சங்களைப் பெற்றுக் குறிப்புப் பெயரெச்சமாய் வரும்.

உ—ம். கரிதான இலை; அன்புள்ள செய்கை.

[2]இல, இல்லாத, அல, அல்லாத என்னும் துணைப்பதம் சேர எதிர்மறைப் பெயரெச்சங்களும், இல்லாமல், இல்லாது, அல்லாமல், அல்லாது சேர எதிர்மறை வினையெச்சங்களும் வரும்.

உ—ம். கரிதில, அன்பில்லாத, தீயதல, நல்லதல்லாத; அன்பில்லாமல், &c.

**168**. Verbal nouns; i. e. Nouns denoting action.

[3]தொழிற்பெயர் வரலாறு.

[1] குறிப்பு வினையிலும் பெயரெச்சம், வினையெச்சமுண்டென்பது இலக்கணிகளின் துணிபு. குறிப்புவினை, பெயரினடியாய்ப் பிறந்ததால் English இலுள்ள உரிச்சொல் (Adjective Adverb) போல பெயருரிச் சொல்லாய் பெயரைச்சார்ந்தும், வினையுரிச்சொல்லாய் வினையைச்சார்நதும் வருவதால் குறிப்பெச்சம் என்ற பாகுபாடு அவசியம் இல்லை. அப்படிக் குறிப்பெச்சம் என, முன் இலக்கணிகள் கூறியவைவெல்லாம் பெயருரி, வினையுரி என்று பாகுபடுததலாம் என்பர். இது அங்கிலேய பாஷையின் துணிவுபற்றிப் பேசப்படினும் சுயமான தமிழுககு ஏற்காது. ஆகையால் முன்னோர் மரபை அனுசரிதது, குறிப்பு வினைக்கும் எச்சப்பாகுபாடு வகுத்திருககிறது.

[2] "வினைமுற் றேவினை யெச்ச மாகலும்
குறிப்புமுற் றீரெச்ச மாகலு முளவே."

இவைகள் செய்யுளுள் வரும்.

உ—ம். "காணான் கழிந்த வைகலு முண்டென்
றொருநாள் விழுமியது கழிவதாயினும்."
காணான் = காணாமல்.

[3] "ஆழம் உறுதலால் ஆழி என்றோதுக." (அகத்தியம்)
"பறத்தற்றொழிலாற் பறவை எனப்படும்." ,,
"திரையப் படுதலாற் திரையெனச் செப்புக." ,,
"தோழமை கொளலாற் றோழி யெனச்சொலே." ,,
"இழைக்குந் தொழிலால் இழையெனப் படுமே." ,,
"வேட்கைக்குப் பகுதி வேண்அவா ஆகும்." ,,
"கூறுபடுத்தலாற் கூற்றெனப் படும்." ,,

(1) இது பகுதியோடு தொழிற்பெயர் விகுதிகளை ஏற்று வரும்; காலம்காட்டும் இடைநிலைகள் சிறுபான்மை வருதலுமுண்டு; எழுத்துப்பேறு சாரியை வருதலுமுண்டு. இது காலங்காட்டாது.

| விகுதி. | தொழிற்பெயர். |
|---|---|
| தல் | செய்தல். |
| அல் | பாடல். |
| அம் | நாட்டம். |
| ஐ | கொடை. கொலை. |
| கை | செய்கை. ஈகை. |
| வை | சேர்வை. போர்வை |
| கு | போக்கு. நீக்கு. |
| பு | விழிப்பு. |
| உ | வரவு. செலவு. |
| தி | மறதி. |
| சி | உணர்ச்சி. |
| வி | கல்வி. |
| உள் | விக்குள். |
| காடு | சாக்காடு. |
| பாடு | கோட்பாடு. |
| அரவு | தேற்றரவு. |
| ஆனை | வரானை. (rare) |
| மை | பொறுமை. பொறுமை. |
| து | தருவது. செய்வது. . இடைநிலை பெற்றது. |

"தல், அல், அம், ஐ, கை, வை, கு, பு
உ, தி, சி, வி, உள், காடு, பாடு,
அரவு, ஆனை, மை, து தொழிற்பெயர் விகுதி."

(2) பகுதியின் முதல் நீண்டும் வரும்.

உ-ம். கெடு—கேடு; படு—பாடு; பெறு—பேறு; விடு,—வீடு; சுடு—சூடு.

(3) பகுதி விகாரப்பட்டும் வரும்.

உ—ம். கூறு—கூற்று.

(4) பகுதியே நின்றும் தொழிற்பெயராம்.

உ—ம். அடி, கடி, திட்டு, போடு, முட்டு, கொட்டு.
விதி, உதை, மிதி, எறி, அறை, சிரி, களி, விழி.

"பகுதியே நின்றும் பகுதிமுதல் நீண்டும்
தொழிற்பெயர் வருத லியற்கை யாமே."

தொழிற்பெயர், வினைப்பெயர், வினையடிப்பெயர் எனவும் படும்.

**169.** எதிர்மறைத் தொழிற்பெயர், பகுதியோடு ஆமை, ஆதல் என்னும் விகுதிகள் சேரவரும்.

உ—ம். செய்யாமை, செய்யாதல்.

"வினைப்பெய ரனைத்தும் தொழிலெனப் படுமே." (குவல.)

**170.** வினையாலணைபெயர். (Nouns denoting the agent of an action.) இது காலங்காட்டும்.

இறந்தகால, நிகழ்காலப் பெயரெச்சங்களோடு பால் விகுதிகளாகிய அன், அள், அர், அர்கள், து, வை, வைகள் சேர வரும்.

உ—ம். படிக்கிறவன்—வள், வர், வர்கள், து, வை, வைகள்.
படித்தவன்—வள், வர், வர்கள், து, வை, வைகள்.

எதிர்காலத்தில் பகுதியோடு இடைநிலையும், அவ்விகுதியும் சேர்ந்து மேற்படி விகுதிகளைப் பெறும்.

உ—ம். படிப்பவன்—வள், வர், வர்கள், து, வை, வைகள்,

N B.—இடையில் அன்சாரியையும் வரலாம்.

உ—ம். படிக்கின்றனவை.
படிப்பனவை.

**171.** எதிர்மறை வினையாலணையும் பெயர் பகுதியுடன் ஆத என்பதைச் சேர்த்துப் பால் விகுதிகளை ஏற்ற வரும்.

உ—ம். நடவாதவன்—வள், வர், வர்கள், து, நடவாத or நடவாதன, நடவாதவை.

N.B.—தன்மை, முன்னிலை ஒருமைப் பன்மை விகுதிகள் வினையாலணையும் பெயருக்கு வரவே வராது. படர்க்கை விகுதிகள்மாத்திரம் வரும்.

உ—ம். நான் நடவாதவன்——— நடந்தவன்.
நீ நடவாதவன் ——— நடந்தவன்.

**172.** குறிப்பு வினையாலணை பெயர்.

குறிப்புவினையே பெயரடியாய்ப் பிறப்பதால் குறிப்பு வினையாலணைபெயரை, பெயரடியாய்ப் பிறந்த பகுபதமென்று வகுத்து இலகுவாய் இலக்கணங் கூறலாம்.

உ—ம். இல்லர், கரியர், பெரியர்.

இவற்றை இன்மை, கருமை, பெருமை என்னும் பண்படியாய்ப் பிறந்த பெயர்களாய் விளக்கலாம்.

ஆகையால் இவ்வகைப் பெயர்களுண்டென விதிகூறல் அவசியமில்லை.

**173.** Conjugation. கிரியாமாலை.

Active Voice. செய்வினை.

செயப்படுபொருள் குன்றுவினை. Transitive Verb.
உடன்பாடு. Positive Form.

"வெட்டு."

**முற்று.**

இறந்தகாலம்.

| | **ஒருமை.** | **பன்மை.** |
|---|---|---|
| **தன்மை.** | நான் வெட்டினேன், ———வெட்டினன், &c. | நாம், நாங்கள் } வெட்டினோம். |
| **முன்னிலை.** | நீ——வெட்டினாய், ——வெட்டினை, | நீர் வெட்டினீர். நீங்கள் வெட்டினீர்கள். |
| **படர்க்கை.** ஆண். | அவன் வெட்டினான், | அவர் வெட்டினார் |
| பெண். | அவள் வெட்டினாள், | அவர்கள் ——— கள். |
| ஒன்றன். | அது வெட்டினது, | அவை வெட்டின. |

நிகழ்காலம்.

தன்மை. நான் வெட்டுகிறேன்,[1] நாம் or நாங்கள் வெட்டுகிறோம்.

—— வெட்டுகின்றேன், ————கின்றோம்.

—— வெட்டாநின்றேன், —வெட்டாநின்றோம்.

முன்னிலை. நீ வெட்டுகிறாய், நீங்கள் வெட்டுகிறீர்கள்,

———— கின்றாய், ————கின்றீர்கள்.

—— வெட்டுகிறை, நீர் வெட்டுகிறீர்,

—— வெட்டாநின்றாய் ; ———— றை — வெட்டாநின்றீர்கள்.

நீர் வெட்டாநின்றீர்.

படர்க்கை: வெட்டுகிறான், கின்றான்; வெட்டுகிறார், கின்றார். வெட்டாநின்றார்.

————ள், கின்றாள்; வெட்டுகிறார்கள், கின்றார்கள். வெட்டாநின்றார்கள்.

————கிறது, கின்றது; வெட்டுகின்றன. வெட்டுகிற (rarely.) வெட்டாநின்றன.

எதிர்காலம்.

தன்மை. நான் வெட்டுவேன், நாம், நாங்கள் வெட்டுவோம்.

முன்னிலை. நீ வெட்டுவாய், நீர், நீங்கள் வெட்டுவீர்,

—வெட்டுவை, ————வெட்டுவீர்கள்.

படர்க்கை. ஆண். வெட்டுவான், அவர் வெட்டுவார்.

பெண். வெட்டுவாள், அவர்கள்————கள்.

ஒன்றன். வெட்டும், அவை வெட்டும்.

ஏவல்.

ஒருமை வெட்டு.

பன்மை வெட்டும், வெட்டுங்கள், வெட்டுமின்.

---

1 வெட்டுகிறேன்—வெட்டுறேன், வெட்டுகிறீர்—வெட்டுறீர், &c. போல மருவி வருவது நாட்டோடிய வழக்கிலுண்டு; இது கிராமியம்.

[1] வியங்கோள்—வெட்டுக, வெட்டட்டும்.

### பெயரெச்சம்

| இறந்தகாலம். | நிகழ்காலம். | எதிர்காலம். |
|---|---|---|
| வெட்டின | வெட்டுகிற | வெட்டும். |
| வெட்டிய | { வெட்டுகின்ற. வெட்டாநின்ற. } | |

### வினையெச்சம்.

| இறந்தகாலம். | நிகழ்காலம். | எதிர்காலம். |
|---|---|---|
| வெட்டி, | வெட்ட, | வெட்டின் |
| | | வெட்டில். |
| | | வெட்டினால். |
| | | வெட்டினக்கால். |
| | | வெட்டியக்கால். |
| | | வெட்டுகின்றக்கால். |
| | | வெட்டுங்கால். |
| | | வெட்டுவானேல். |
| | | வெட்டுவேனேல். |
| | | வெட்டுவானால். |
| | | வெட்டினானேல். |
| | | வெட்டுகிறானேல், &c. |

தொழிற்பெயர்.—வெட்டு, வெட்டுதல், வெட்டல்.

### வினையாலணைபெயர்.

| | இறந்தகாலம். | நிகழ்காலம். | எதிர்காலம். |
|---|---|---|---|
| ஆண். | வெட்டினவன், | வெட்டுகிறவன், | வெட்டுபவன். |
| பெண். | ————வள், | ————வள், | ——பவள். |
| ஒன்றன். | ————து, | ————து, | ——வது. |
| பலர். | ————வர், | ————வர், | ——பவர். |
| பலவின். | { ————வை, | ————வை, | ——பவை. } |
| | { ————வைகள், | ————வைகள், | ——வன. } |

---

[1] ஆக என்ற துணைவினை சேர்ந்துவந்த வியங்கோள்.

நான் வெட்டுவேனாக —————— நான் வெட்டினேனாக.
நீ வெட்டுவாயாக —————— நீ வெட்டினாயாக.
அவன் வெட்டுவானாகி —————— அவன் வெட்டுகிறானாக.
அவள் வெட்டுவாளாக —————— அவள் வெட்டுகிறாளாக.

இது சரியான வியங்கோளன்று. வினைமுற்றுமேல் ஆக என்னும் துணைவினை வியங்கோளாய் வந்தது காண்க.

## எதிர்மறை—Negative Form.

### ஏவல்.

| ஒருமை. | பன்மை. |
|---|---|
| வெட்டேல் | வெட்டன்மின். |
| வெட்டாதே | வெட்டாதேயும். |
| | வெட்டாதேயுங்கள். |

### முற்று.

| | |
|---|---|
| நான் வெட்டேன், | நாம் } நாங்கள் } வெட்டோம். |
| நீ வெட்டாய், | { நீர் வெட்டீர் { நீங்கள் வெட்டீர்கள். |
| அவன் வெட்டான், | { அவர் வெட்டார் |
| அவள் வெட்டாள், | { அவர்கள் வெட்டார்கள். |
| அது வெட்டாது, | அவை வெட்டா. |

### வியங்கோள்.

[1] வெட்டற்க

### பெயரெச்சம்.

வெட்டா, வெட்டாத.

### வினையெச்சம்.

வெட்டாது, வெட்டாமல்.

### தொழிற்பெயர்.

[2] வெட்டாமை

### வினையாலணைபெயர்.

வெட்டாதவன், வள், து, வர், வர்கள், ன, வை, வைகள்.

174. செயப்பாட்டு வினை. Passive Voice.

செய்வினைப் பகுதி கொல். செயப்பாட்டு வினைப்பகுதி கொல்லப்படு, கொல்லுண்.

---

[1]

| | | |
|---|---|---|
| நான் வெட்டேனாக, | நாம் வெட்டோமாக. | } ஆக வென்னும் துணை வினையாலாயது. |
| நீ வெட்டாயாக, | நீர் வெட்டீராக. | |
| அவன் வெட்டானாக, } அவள் வெட்டாளாக, } | அவர் வெட்டாராக. | |
| அது வெட்டாதாக, | அவை வெட்டாவாக, | |

[2] வெட்டாதிருத்தல்
—— —— க்கை
—— —— க்குதல்
—— —— க்கல்
} இவை "இரு" என்னும் துணைவினையாலாயது.

## உடன்பாடு. Positive Form.

### முற்று.

#### நிகழ்காலம்.

| | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| தன்மை. | நான் சொல்லப்படுகிறேன், | நாம் நாங்கள் சொல்லப் படுகிறோம்— |
| | ——————கின்றேன், | கின்றோம். |
| | ——————படா நின்றேன், | ———படா நின்றோம். |
| முன்னிலை. | நீ சொல்லப்படுகிறாய், | நீர் நீங்கள் } சொல்லப்படுகிறிர், கள். |
| | ——————கிறை, | ———கிறீர், கள். |
| | ——————கின்றாய், | ——————கின்றிர், கள். |
| | ——————கின்றை, | ——————கின்றீர், கள். |
| | ———படாநின்றாய், | ———படாநின்றிர், கள். |
| | ———படாநின்றை, | ———படாநின்றீர், கள். |
| படர். | அவன் அவள் } சொல்லப்படுகிறான்-ள் | அவர் அவர்கள் } சொல்லப்படு — கிறார்கள். |
| | அவன் அவள் } சொல்லப்படுகின்றான்-ள் | ———கின்றார் கள். |
| | ——— படாநின்றான்-ள் | ———படாநின் றார்கள். |
| | அது சொல்லப்படுகிறது, | அவை சொல்லப்படுகிற (rare) |
| | ——————ன்றது, | ——————ன்ற. |
| | ——————படாநின்றது, | ——————படாநின்ற. |

அல்லது.

| | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| தன். | நான் சொல்லுண்கிறேன், | நாம், நாங்கள் சொல்லுண் கிறோம். |
| | ——————கின்றேன், | ——————கின்றோம். |
| | ——————ஞநின்றேன், | ——————ஞநின்றோம். |
| முன். | நீ சொல்லுண்கிறாய், கிறை, | நீர், நீங்கள் சொல்லுண்கி றீர், கள். |
| | ——————கின்றாய், கின்றை, | ——————கின்றீர், கள். |
| | ——————ஞநின்றாய், ஞநின்றை, | ———ஞநின்றீர், கள். |

படர். அவன் } கொல்லுண்கிறான்—ள், அவர் } கொல்லுண்கிறார்—கள்.
அவள் } ——கின்றான்—ள், அவர்கள் } ———கின்றார்—கள்.
————ஆநின்றான்-ள் ————— ஆநின்றார்-கள்.
அது கொல்லுண்கிறது, அவை கொல்லுண்கிற.
————கின்றது, ———— கின்ற—கின்றன.
————ஆநின்றது, ————ஆநின்ற—ஆநின்றன.

இறந்தகாலம்.

| ஒருமை. | பன்மை. |
|---|---|
| நான் கொல்லப்பட்டேன், | நாம் / நாங்கள் } கொல்லப்பட்டோம். |
| நீ கொல்லப்பட்டாய், | நீர் கொல்லப்பட்டீர். |
| ————-பட்டை, | நீங்கள்————கள். |
| அவன் கொல்லப்பட்டான், } | அவர் கொல்லப்பட்டார். |
| அவள்————————ள், } | அவர்கள் கொல்லப்பட்டார்கள். |
| அது கொல்லப்பட்டது, | அவை கொல்லப்பட்ட. (Rare.) |
| | ——— கொல்லப்பட்டன. |

N.B. கொல்லப்பட்டன என அன்சாரியை பெற்று வருவதே சாதாரண வழக்கம்.

| ஒருமை. | பன்மை. |
|---|---|
| நான் கொல்லுண்டேன், | நாம் / நாங்கள் } கொல்லுண்டோம். |
| நீ கொல்லுண்டாய், | நீர் கொல்லுண்டீர். |
| நீ கொல்லுண்டை, | நீங்கள்————கள். |
| அவன் கொல்லுண்டான், } | அவர் கொல்லுண்டார். |
| அவள் கொல்லுண்டாள், } | அவர்கள் கொல்லுண்டார்கள். |
| அது கொல்லுண்டது, | அவை கொல்லுண்ட. (rare) |
| | ——— கொல்லுண்டன. |

N.B.—கொல்லுண்டன என அன்சாரியை பெற்று வருவது தான் சாதாரணம்.

எதிர்காலம்.

| ஒருமை. | பன்மை. |
|---|---|
| நான் கொல்லப்படுவேன், | நாம் / நாங்கள் } கொல்லப்படுவோம். |
| ——கொல்லுண்பேன், | கொல்லுண்போம். |

நீ கொல்லப்படுவாய்—வை, கொல்லுண்பாய்—பை, { நீர் கொல்லப்படுவீர்—வீர். நீங்கள் கொல்லப்படுவீர்கள்-வீர்கள். நீர் கொல்லுண்பீர்—பீர். நீங்கள் கொல்லுண்பீர்கள்-பீர்கள்.

அவன் } கொல்லப்படுவான்-ள், அவர் } கொல்லப்படுவார்—வார்கள்.

அவள் } கொல்லுண்பான்—ள், அவர்கள் } கொல்லுண்பார்-பார்கள்.

அது கொல்லப்படும், கொல்லுண்ணும், —குடம், } அவை { கொல்லப்படும். கொல்லுண்ணும். —குடம்.

## ஏவல்.

| ஒருமை. | பன்மை. |
|---|---|
| கொல்லப்படு, | கொல்லப்படும். கொல்லப்படுமின். கொல்லப்படுங்கள். |
| கொல்லுண்ணு, (rare) | கொல்லுண்ணும். கொல்லுண்மின். கொல்லுண்ணுங்கள். |

## [1] வியங்கோள்.

கொல்லப்படுக, கொல்லப்படட்டும்.
கொல்லுண்க, கொல்லுண்ணட்டும்.

---

| ஒருமை. | | பன்மை. |
|---|---|---|
| [1] நான் கொல்லப்படுவேனாக. கொல்லுண்பேனாக. கொல்லப்படக்கடவன் or கொல்லப்படக்கடவன். கொல்லுண்ணக்கடவன் or கொல்லுண்கக்கடவன். | நாம் நாங்கள் | கொல்லப்படுவோமாக. கொல்லப்படக்கடவோம். கொல்லுண்போமாக. கொல்லுண்ணக்கடவோம. கொல்லுண்கக்கடவோம. |
| நீ கொல்லப்படுவாயாக. கொல்லப்படக்கடவாய or கொல்லப்படக்கடவை. கொல்லுண்பாயாக. கொல்லுண்கக்கடவாய or கொல்லுண்கக்கடவை. | நீர் நீங்கள் | கொல்லுண்பீராக-பீர்களாக. கொல்லப்படுவீராக-வீர்களாக. கொல்லுண்ணக்கடவீர. கொல்லுண்ணக்கடவீர்கள். கொல்லப்படக்கடவீர். கொல்லப்படக்கடவீர்கள். |

## பெயரெச்சம்.

| | |
|---|---|
| கொல்லப்பட்ட | இ. காலம். |
| ————படுகிற | நி. காலம். |
| ————படும் | எ. காலம். |

or

| | |
|---|---|
| கொல்லுண்ட | இ. காலம். |
| ————கிற | நி. காலம். |
| ————ணும், கும் | எ. காலம். |

## வினையெச்சம்.

| | | |
|---|---|---|
| இ. காலம். | கொல்லப்பட்டு, | கொல்லுண்டு. |
| நி. காலம். | கொல்லப்பட, | கொல்லுண்க, கொல்லுண்ண. |
| எ. காலம். | கொல்லப்பட்டால், | கொல்லுண்டால். |
| | ————படின். | ————கின். |
| | கொல்லப்பட்டக்கால், | கொல்லுண்டக்கால். |
| | கொல்லப்படுகின்றக்கால், | கொல்லுண்கின்றக்கால் |
| | கொல்லப்படுங்கால், | கொல்லுண்ணுங்கால். |
| | கொல்லப்படுகிறானேல், | கொல்லுண்கிறானேல். |
| | ————வானேல், | ————பானேல். |
| | ————பட்டானேல், | கொல்லுண்டானேல். |
| | &c. | &c. |

## தொழிற்பெயர்.

கொல்லப்படல். ———— கொல்லுண்டல்.
————படுகை ———— கொல்லுண்ணல்.
————படுகுதல் ———— கொல்லுண்கை.
கொல்லுண்குதல்.

---

அவன் கொல்லுண்பானாக
கொல்லுண்ணக்கடவன்
கொல்லப்படுவானாக
கொல்லப்படக்கடவன்

அவள் கொல்லுண்பாளாக
கொல்லுண்ணக்கடவள்
கொல்லப்படுவாளாக
கொல்லப்படக்கடவள்

அவர் / அவர்கள்.
கொல்லுண்பாராக.
————ர்களாக,
கொல்லுண்ணக்கடவாராக.
————கடவார்களாக.
கொல்லப்படுவாராக.
————ர்களாக.
கொல்லப்படக்கடவர்.
————கள்.

அது கொல்லுண்பதாக
கொல்லுண்ணக்கடவது
கொல்லப்படுவதாக
கொல்லப்படக்கடவது

அவை கொல்லுண்பனவாக.
கொல்லுண்ணக்கடவ.
கொல்லுண்ணக்கடவன.
கொல்லப்படுவனவாக.
கொல்லுண்ணக்கடவ.
கொல்லுண்ணக்கடவன.

ஆகு, கட எனும் துணைவினைகளால் இவைகள் முடிவுபெற்றது காண்க.

## வினையாலணை பெயர்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| இறந்த காலம். | கொல்லப்பட்டவன், | வள், | வர், | வர்கள், | து, | வை, | வைகள், |
| | கொல்லுண்டவன் | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| நிகழ்காலம் | கொல்லப்படுகிறவன், | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| | கொல்லப்படுகின்றவன் | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| | ——படாநின்றவன்— | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| | கொல்லுண்கிறவன் | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| | ——கின்றவன் | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| | ——ணுநின்றவன் | | ,, | ,, | ,, | ,, | ,, |
| எதிர் காலம். | கொல்லப்படுபவன் | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| | கொல்லுண்பவன் | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |

## எதிர்மறை முற்று.

தன்மை. ஒருமை. பன்மை.

நான் கொல்லப்படேன்
——லுண்ணேன்
——கேன்

நாம், நாங்கள் } கொல்லப்படோம்.
கொல்லுண்ணோம்.
——கோம்.

முன்னிலை.

நீ கொல்லப்படாய்
——லுண்ணாய்
——காய்

நீர், நீங்கள் } கொல்லப்படீர்—கள்.
கொல்லுண்ணீர்—கள்.
கொல்லுண்கீர்—கள்.

படர்க்கை.

அவன், அவள் } கொல்லப்படான்—ள்,
கொல்லுண்ணான்—ள்,
கொல்லுண்கான் —ள்,

அவர், அவர்கள் } கொல்லப்படார்—கள்.
கொல்லுண்ணார்—கள்.
கொல்லுண்கார் —கள்.

அது கொல்லப்படாது — அவை கொல்லப்படா.
,, கொல்லுண்ணாது — ,, கொல்லுண்ணா.
,, கொல்லுண்காது — ,, கொல்லுண்கா.

## ஏவல்.

| ஒருமை. | பன்மை. |
|---|---|
| கொல்லப்படேல் | கொல்லப்படன்மின். |
| கொல்லப்படாதே. | கொல்லப்படாதேயும்—கள். |
| | —— டாதிரும். } துணைவினை யாலாயது. |
| | —— டாதிருங்கள். } |

| | |
|---|---|
| கொல்லுண்கேல் | கொல்லுண்ணன்மின். |
| ———— ணேல் | கொல்லுண்ணுதேயும்—கள். |
| கொல்லுண்ணுதே | ———— ணுதிரும். } துணைவினை |
| கொல்லுண்ணாதே | ———— ணுதிருங்கள். } யாலாயது. |

### வியங்கோள்.

கொல்லப்படற்க.
கொல்லுண்ணற்க.

### பெயரெச்சம்.

கொல்லப்படாத—கொல்லப்படா.
கொல்லுண்ணுத—கொல்லுண்ணு.
———— ண்காத—கொல்லுண்கா.

### வினையெச்சம்.

கொல்லப்படாது—கொல்லப்படாமல்.
கொல்லுண்ணுது—கொல்லுண்ணுமல்

### தொழிற்பெயர்.

கொல்லப்படாமை, (கொல்லப்படாதிருத்தல், கொல்லப்படாதிருக்கை, கொல்லப்படாதிருக்குதல் இரு எனும் துணை வினைபெற்று வந்தவை.)

கொல்லுண்ணுமை, (கொல்லுண்ணுதிருத்தல், கொல்லுண்ணுதிருக்கை, கொல்லுண்ணுதிருக்குதல் இரு எனும் துணை வினைபெற்று வந்தவை.)

### வினையாலணைபெயர்.

கொல்லப்படாதவன், வள், வர், வர்கள், து, வை, ன.
கொல்லுண்ணுதவன், வள், வர், வர்கள், து, வை, ன.

175. செயப்படுபொருள் குன்றியவினை.

### இரு.

தன்மை.

| | | இறந்தகாலம். | நிகழ்காலம். | எதிர்காலம். |
|---|---|---|---|---|
| ஒருமை. | நான் | இருந்தேன், | இருக்கிறேன்,<br>———கின்றேன்,<br>இராநின்றேன். | இருப்பேன். |
| பன்மை | நாம்<br>நாங்கள் | இருந்தோம், | இருக்கிறோம்,<br>————ன்றோம்,<br>இராநின்றோம். | இருப்போம். |

முன்னிலை.

| | | | | |
|---|---|---|---|---|
| ஒருமை. | நீ | இருந்தாய் | இருக்கிருய்-றை | |
| | — | இருந்தை | இருக்கின்ருய்-றை | இருப்பாய் |
| | | | இராநின்ருய்-றை | இருப்பை. |
| பன்மை. | நீர், நீங்கள் | இருந்தீர்—கள் | இருக்கிறீர்—கள் | இருப்பீர்—கள |
| | ——— | இருந்திர்—கள் | இருக்கின்றீர்—கள் | இருப்பிர்—கள். |
| | | | இராநின்றீர்—கள் | |

படர்க்கை.

ஆண்பால். } அவன் இருந்தான்; இருக்கிருன். இருக்கின்ருன். இராநின்ருன்; இருப்பான்

பெண்பால். } அவள் இருந்தாள்; ———ள், ———ள், ———ள்; ———ள்

பலர்பால். } அவர் ———ர்; ———ர், ——— ———ர், ——— ———ர்; ———ர்.
அவர்கள். ———ர்கள்; ———ர்கள், ———ர்கள், ———ர்கள், ———ர்கள்

ஒன்றன்பால். } அது இருந்தது; இருக்கிறது, இருக்கின்றது, இராநின்றது; } இருக்கும்.

பலவின்பால. } அவை இருந்தன; இருக்கிற, (rare.) இருக்கும்.
இருக்கின்ற, (rare.)
இராநின்ற, (rare.)
இருக்கின்றன, இராநின்றன; } (Common.)

## பெயரெச்சம்.

| இ. காலம். | நி. காலம். | எ. காலம். |
|---|---|---|
| இருந்த. | இருக்கிற, | இருக்கும். |
| | இருக்கின்ற, | |
| | இராநின்ற. | |

## வினையெச்சம்.

இருந்து; இருக்க; இருந்தால், இருக்கில், இருக்கின், இருந்தக்கால், இருக்கின்றக்கால்,

இருக்குங்கால், இருந்தானேல்,
இருக்கின்றானேல், இருப்பானேல்,
இருப்பாயேல், இருந்தேனேல், &c.

**தொழிற்பெயர்.**—இருத்தல், இருக்கை, இருப்பு.

**வினையாலணைபெயர்.**

| | |
|---|---|
| **இறந்தகாலம்.** | இருந்தவன், வள், வர், வர்கள், து, வை, ன. |
| **நிகழ்காலம்.** | இருக்கிறவன், வள், வர், வர்கள், து, வை.<br>இருக்கின்றவன், வள், வர், வர்கள், து, வை, ன.<br>இராநின்றவன், வள், வர், வர்கள், து, வை, ன. |
| **எதிர்காலம்.** | இருப்பவன், வள், வர், வர்கள், து, வை, ன. |

**ஏவல்.**

| **ஒருமை.** | **பன்மை.** |
|---|---|
| இரு. | இரும், இருங்கள், இருமின். |

**வியங்கோள்.**

இருக்க, இருக்கட்டும்.

**எதிர்மறை முற்று.**

| | **தன்மை.** | **முன்னிலை.** |
|---|---|---|
| **ஒருமை.** | நான் இரேன், | நீ இராய். |
| **பன்மை.** | நாம் / நாங்கள் இரோம், | நீர் இரீர்.<br>நீங்கள் இரீர்கள். |

**படர்க்கை.**

| | | | |
|---|---|---|---|
| **ஆண்.** | அவன் இரான். | **பலர்பால்.** | அவர் இரார். |
| **பெண்.** | அவள் இராள். | | அவர்கள் இரார்கள். |
| **ஒன்றன்பால்.** | அது இராது. | **பலவின்பால்.** | அவை இரா. |

**எச்சம்.**

இரா, இராத } பெயரெச்சம். இராது, இராமல் } வினையெச்சம்.

**வியங்கோள்.**

இரற்க.

**ஏவல்.**—ஒருமை இரேல், இராதே.
பன்மை. இரன்மின், இராதேயும், இராதேயுங்கள்.

தொழிற்பெயர்.—இராமை.

**வினையாலணைபெயர்.**

இராதவன், வள், வர், வாகள், து, வை, ன.

N.B தன்வினை பிறவினைகளின் பகுதிகளையும் மேற்கண்டபடியே கிரியாமாலைப் படித்தவேண்டியது.

**176.** தான் என்னும் இடைச்சொல் வற்புறுத்தற்பொருட்டு பெயரோடு வருவதன்றி வினையோடும் வரும்.

வினையெச்சங்களோடு "தான்" சேர்ந்து தெரிநிலை வினைமுற்றுக்களைக்கொண்டு முடியும்.

தான்சேர்ந்த நிகழ்கால வினையெச்சங்கள் மாத்திரம் குறிப்பு வினைமுற்றுகளைக் கொண்டு முடியும்.

உதாரணம்.

| | | |
|---|---|---|
| (a) அடிக்கத்தான் செய்தேன், | செய்கிறேன், | செய்வேன். |
| ———————செய்தோம், | செய்கிறோம், | செய்வோம். |
| ———————செய்தாய், | செய்கிறாய், | செய்வாய். |
| ———————செய்தீர், | செய்கிறீர், | செய்வீர். |
| ———————செய்தீர்கள், | செய்கிறீர்கள், | செய்வீர்கள். |
| ———————செய்தான், | செய்கிறான், | செய்வான். |
| ———————செய்தாள், | செய்கிறாள், | செய்வாள். |
| ———————செய்தார், | செய்கிறார், | செய்வார். |
| ———————செய்தார்கள், | செய்கிறார்கள், | செய்வார்கள். |
| ———————செய்தது, | செய்கிறது, | செய்யும். |
| ———————செய்தன, | செய்கின்றன, | செய்யும். |
| அடித்துத்தான் கொடுத்தேன், | கொடுக்கிறேன், | கொடுப்பேன். |
| அடித்தால்தான் | | கொடுப்பேன். |

(b) அடிக்கத்தான் வேண்டும்.
———————தகும்.
———————படும்.

N.B.—பெயரெச்சங்களோடு தான் வரவேவராது.

**177.** துணைவினைகள் (Auxiliary Verbs.)

1. படு, உண் இவைகள் செயப்பாட்டு வினைக்கிரியாமாலைக்கு உபயோகமாகின்றன.

உ—ம். கொல்லப்பட்டான், கொல்லுண்டான்.

இவை முதல் வினையாய் வரும்போது வேறர்த்தம் தரும்.

படு = To Lie.
படு = To arrange or set.
உண் = To eat.

2. இரு முதல்வினையாய் (To sit, To exist) உட்காரு, ஜீவி என்னும் அர்த்தங்களில் வரும். துணைவினையாய் முடிவான செய்கையையும், நிர்ணயித்த காலத்துக்குமுன் முடித்த செய்கையையும் காட்டும்.

உ—ம். வீடு வேய்ந்திருக்கிறான், நேற்றே எழுதியிருக்கிறான்.

3. ஆகு (a) ஆக்க வினைக்குறிப்போடு தொடர்ந்துவரும்.

உ—ம். இவன் கள்ளனாயின்; இவன் நல்லனாம்.

(b) தொழிற்பெயரை வினாவாக்க உதவும்.

உ—ம். நீ போகலாமா, அவன் ஓடலாமா.

4. விடு (முதல்வினை=To leave, To thrust, விட்டுவிடு, உட்செலுத்து.) துணைவினையாய் நிச்சயம், திராணிமுதலியவற்றைக் காட்டும்.

உ—ம். சாப்பிட்டுவிட்டான், செய்துவிட்டான்.

5. இடு (முதல்வினை = To Thrust, To put into, To give நுழைப்பி, வை, கொடு.) துணைவினையாய் கூடும், சாத்தியமாகும் என்னும் பொருள்களைக் கொடுக்கும்.

உ—ம். செய்திடுகிறேன், வந்திட்டேன்.

6. போ (முதல்வினை=To go, போதல்.) துணைவினையாய் முடிவு, ஒழிவுகளைக் காட்டும்.

உ—ம். மரித்துப்போனான், தொலைந்துபோயிற்று.

7. [1] மாட்டு (முதல்வினை=To interfix, மத்தியில் வை.) துணைவினையாய்த் திராணியைக் காட்டும்.

உ—ம். இவன் செய்யமாட்டுவான், கொடுக்கமாட்டுவான்.

8. போடு (முதல்வினை=To place, வை.) துணைவினையாய் துரிதம், நீக்கம், முடிவுமுதலியவைகளைக் காட்டும்.

உ—ம். செய்துபோடுகிறான், பல்லியைக் கொன்றுபோட்டான்.

9. கொள் (கொண்டு—எச்சம்.) முதல் வினையாய் (Buying) வாங்கு என்ற அர்த்தத்தில் வரும்.

(a) துணைவினையாய்த் தற்பொருட்டுப் பொருளில் வரும்.

உ—ம். வாங்கிக்கொள்கிறேன்.

(b) வழக்கத்தில் இனிய ஓசைக்காக வரும்.

---

[1] மாடு (மாட்டு) என்பது முதல்வினையாய்க் கன்னடபாஷையில் வழங்குகிறது. அப்பாஷையில் இது முக்கால முற்று "செய்" என்னும் அர்த்தத்தில் வருகிறது.

உ-ம். தேங்காய் வாங்கிவருகிறேன் என்பதற்குப் பதிலாய் "தேங் காய் வாங்கிக்கொண்டு வருகிறேன்" என வரும். வழக்கம்=Idiomatic usage.

*(c)* அப்பியாசம் பழக்கங்கள் (Habit.) காட்டும்.

உ-ம். இரண்டு மணிக்குக் கொஞ்சம் படுத்துக்கொள்வேன்.

10. வை (முதல்வினை = To place, வைத்தல்.) துணைவினையாய் எச்சரிப்பைக் காட்டும்.

உ-ம். இக்கடிதம் எழுதாதுவை, அதாவது இக்கடிதம் எழுதாதே யென்று உன்னை எச்சரிக்கிறேன்.

11. அருள் (முதல்வினை=To give, கொடு.) துணைவினையாய்க் கிருபையைக் காட்டும்.

உ-ம். இயேசுசுவாமி சொன்னார் என்பதற்குப் பதிலாகச் சொல்லி யருளினார் என வரும்.

12. கூடும் முதல்வினையாய்க் கூடு என்ற பகுதியடியாய்ப் பிறந்த எதிர்கால வினைமுற்றும். (Will join, சேரும்.)

துணைவினையாய்த் தன்னாலாகும் (Possibility, Capability.) என்ற பொருளைக் கொடுத்தது.

உ-ம். நான் இதை எழுதக்கூடும்.

13. கட முதல்வினையாய் எவற்பொருளைத் தரும். (Pass, கடந்துபோ.) துணைவினையாய்க் கடமையைக் காட்டும். (Duty, necessity, obligation.)

உ-ம். அவன் செய்யக்கடவானாக.
நான் செய்யக்கடவேன்.

N.B.—இது வியங்கோளில் வரும்.

14. ஒட்டும் முதல்வினையாய் ஒட்டு என்ற பகுதியடியாய்ப் பிறந்த எதிர்கால வினைமுற்றும். (Will stick, பற்றிக்கொள்ளும்.)

துணைவினையாய் கட்டளை, அநுமதி, கவையில்லை, பரவாயில்லை முதலிய பொருள்தரும். (Order, permission, never mind.)

உ-ம். கந்தன் புல்லறுக்கப் போகட்டும். (Order, கட்டளை.)
தம்பி விளையாடட்டும். (Permission, அநுமதி.)
அண்ணன் திட்டினால் திட்டட்டும். (கவையில்லை.)

கவையில்லைப்பொருளில் வரும்போதெல்லாம் "ஒட்டும்" தான் ஏறிய பகுதியினடியாய்ப் பிறந்த எதிர்கால வினையெச்சத்தைத் தொடர்ந்தேவரும். கடைசி உதாரணம் பார்.

N.B.—ஒட்டும் என்பது பகுதி சாரியைகளோடு புணரும்போது ஒ கெடும். இது வியங்கோள் விகுதியாம். செய்ய + ஒட்டும்=செய்யட்டும்.

15. பண்ணு (செய் என்னும் அர்த்தத்தையுடைய ஏவல். இது முதல் வினையாக அருகிவரும்.) துணைவினையாக இயற்றுதல் (doing) என்ற பொருளில் வரும். ஆயினும் வினையோடு சேராமல் பெயரோடு சேர்ந்து வரும்.

உ—ம். பூசைபண்ணுகிறேன்.

**178**. Defective Verbs. குறைவினை.

சில வினைகள் எல்லாக்காலத்தும், எல்லாத் திணைபால் இடங்களிலும், எச்ச வியங்கோள் பாகுபாடுகளிலும் வரா. அப்படிப்பட்டவைகள் குறைவினை யெனப்படும்.

அவைகள் எவையெனின்,

தெரிநிலை வினையில்:—

1. **ஒ**, ஒத்த, ஒப்ப, ஒவ்வ, ஒத்து, ஒக்கும், ஒவ்வும், ஒவ்வாது.
2. **போது**, போதும், போதாது, போதாத, போதாமை.
3. **தகு**, தகுவேன், தக, தக்கும், தகுதி, தகை, தகாது, தகா, தகாத, தகைமை, தக்கவன், தக்கன.
4. **வேண்டு**, வேண்டும் (வேணும்), வேண்டாம், வேண்டிய.
5. **மாட்டு**, மாட்டேன், மாட்டாது, மாட்டாய் மாட்டாமல், மாட்டாத.
6. **கட**, கடவேன், கடவீர், கடவோம், கடவாய், கடவான்.
7. **கூடு**, கூடும், கூடாது, கூடாத.
8. **ஒட்டும்**. (துணைவினை.)

குறிப்பு வினையில்:—

1. **இல**, இன்றி, இன்று, இல்லை, இல்லான், இல்லாள், இலாய், இல்லேம், இல்லீர், இல்லா, இல்லாத, இல்லாது.
2. **அல்**, அன்று, அன்றி, அல்லான், அல்லாள், அல்லாய், அல்ல, அல்லாமல், அல்லாது.
3. **உள**, உள்ள, உளன, உளது, உண்டு, உள்ளன, உள்ளது, உள்ளவை.
4. **வேறு**. (இதுமாத்திரந்தான்; வேறில்லை).
5. தகும். ,,
6. படும். ,,

**179**. Compound Verbs. தொடர்வினை.

துணைப்பதம் தொடர்ந்துவரும் வினை தொடர்வினை யெனப்படும்.

(a) வினை தொடர்ந்து.

உ—ம். கொல்லுண்டான்.
செய்யக்கூடும்.
பண்ணக்கடவோம்.
கண்டெடுத்தான்.
கண்டுபிடிப்பார்.

(b) பெயர் தொடர்ந்து.

உ—ம். பூசை பண்ணு.
மொட்டை அடி.
போக்கடி.

(c) உரிச்சொல் தொடர்ந்து.

உ—ம். பளபளத்தது.
மினுமினுத்தது.
நடுநடுங்கினான்.

(d) இடைச்சொல் தொடர்ந்து.

உ—ம். பின்தொடர்.
முன்செல்.
பின்செல்.

இவைகள் தொடர்ந்துவந்த அடைகளாகிய பெயர் முதலியவற்றோடு, ஏற்குமிடத்துச் செயப்பாட்டு வினையாகும் தன்மையுள்ளவை.

உ—ம். கண்டுபிடிக்கப்பட்டான்.

**180.** "செய்யும்" என்னும் வாய்பாட்டு வினைக்கு ஓர் புறனடை. (Peculiar changes of verbs like செய்யும்.)

"செய்யுமெ னெச்ச ஈற்றுயிர்மெய் சேறலும்
செய்யுளுள் உம்உந் தாகலும் முற்றேல்
உயிரும் உயிர்மெய்யு மேகலும் உளவே." (நன்.)

சேறல்=கெடுதல்.

| | | | |
|---|---|---|---|
| உ—ம். ஆகும் | | ஆம் | என ஆகும். |
| போகும் | | போம் | ——— |
| போலும் | போல்ம் | போன்ம் | ——— |
| மருளும் | மருள்ம் | மருண்ம் | ——— |
| கூப்பெயர்க்கும் | | கூப்பெயர்க்குந்து —இது செய்யுளில் மாத்திரம் ஆம். | |

## 181. வினை.

- I. பாகுபாடு. (Different parts.)
  - 1. பகுதி.
    - 1. பெயர்.
    - 2. வேறு பொருள்தரும் வினை.
  - 2. விகுதி.
    - 1. திணைபால். இடம் காட்டியது. பின்பக்கம் காண்க.
      - 1. பெயரெச்சத்தில் அ.
      - 2. ஏவல். உ, ல, மின், அனமின், உம், உங்கள். &c.
      - 3. வியங்கோள். க, இய, இயர், அக, ஆகியர்.
      - 4. தொழிற்பெயர். தல், அல், அம், ஐ, கை, வை, பாடு, அவு, ஆனை, மை, கு, காடு, &c
    - 2. காலம் காட்டியது.
      - 1. வினைமுற்றில். (தும், டும், தும, கும், உம், &c.)
      - 2. வினையெச்சத்தில் (த, அ, இல, இன, வான், பான், பாக்கு, &c.)
    - 3. மறுதலை.
  - 3. இடைநிலை.
    - 1. இ. காலம். த, இன், (ட், ற, ய்.)
    - 2. நி. காலம். கிறு, கின்று, ஆநின்று.
    - 3. எதிர்காலம். ப, வ்
  - 4. சாரியை (Particles.)
- II. வகை விபரம். (Different kinds)
  - 1. முற்று.
  - 2. எச்சம்
    - 1. பெயர்
    - 2. வினை.
  - 3. ஏவல்.
  - 4. வியங்கோள்.
  - 5. தொழிற்பெயர்.
  - 6. வினையாலணைபெயர்.
- III. பெயர் விபரம். (Different names of verbs.
  - 1. தெரிநிலை.
    - 1. செய்வினை.
    - 2. செயப்பாட்டுவினை.
    - 3. தன்வினை.
    - 4. தொடர்வினை.
    - 5. குறைவினை.
      - 1. ஓர்போக்கம்.
        - 1. தன்வினை.
        - 2. பிறவினை.
      - 2. மற்றோர்போக்கம்.
        - 1. செயப்படுபொருள் குன்றாவினை.
        - 2. செயப்படுபொருள் குன்றியவினை.
  - 2. குறிப்பு.

| 1. தன்மை. | | 2. முன்னிலை. | | 3. படர்க்கை. | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. ஒருமை. | 2. பன்மை. | 1. ஒருமை. | 2. பன்மை. | 1. ஆண். | 2. பெண். | 3. பலர். | 4. ஒன்று. | 5. பல. |
| அன், என், ஆன், ஏன். | அம், ஆம், எம், ஏம், ஓம், கும், டும், தும், றும். | ஐ, ஆய், இ | இர், ஈர், இர்கள், ஈர்கள். | அன், ஆன், ஒன். | அள், ஆள். | அர், ஆர், அர்கள், ஆர்கள். | து (டு, று) | அ, ஆ. |

N. B.—குறிப்புவினைக்கு, ஏவல், வியங்கோள், தொழிற்பெயர் முதலிய வகை விகாரங்களில்லை.

தெரிநிலை வினைக்கு எல்லாவகை விகாரங்களுமுண்டு.

உடன்பாடு (Positive form) எதிர்மறை (Negative form) ஆகிய இருவகையிலும் வினை வரும்.

Parsing of a Verb.

**182.** வினைக்கு இலக்கணம் சொல்லும்போது 181—ம் பத்தியில் விவரிக்கப்பட்டதைக் கவனித்து முதல்முதல் (III) மூன்றும் கிளையிலுள்ள பெயர்ப்படி இன்னதென்றும்,

இரண்டாவது. (II) இரண்டாம் கிளைவகைப்படி இன்னதென்றும் கூறவும்.

இரண்டாம் கிளைப்படி, முற்றாயின், திணை, பால், இடம், காலம் ஆகிய நான்கும் சொல்லி எதைக்கொண்டு முடிகிறதெனக் கூறவும். எச்சமாயின், காலம் சொல்லி எதைக்கொண்டு முடிகிறதெனக் கூறவும்.

ஏவல், வியங்கோளாயின், எதைக்கொண்டு முடிகிறதென்றுமாத்திரம் கூறவும்.

தொழிற்பெயராயின், பெயரிலக்கணங் கூறவும்.

வினையாலணை பெயராயின், வினைமுற்றின் இலக்கணமும் பெயரினிலக்கணமும் இரண்டும் கூறவும்.

பகுதி, விகுதி முதலிய பாகுபாடுகளை வகுத்து விரித்து இதன் மேல் விவரிப்பது, பூரணமா யிலக்கணம் சொல்லுதலாம்.

உ—ம். "கஷ்டப்படுகிறவர்களுக்குப் பலன் கிடைக்கும். நீயும் அப்படிச் செய்தால், உனக்குக் குறைவற்ற நன்மை உண்டு. திக்கற்றவர்களை ஆதரிக்கிற தெய்வம் உனக்குத் துணைசெய்க. நீ பகைக்கப்படுவாய் என்று நினையாதே. பெரியோரை உன் விஷயத்தில் முயற்சிப்பிக்க, தெய்வம் வகைசெய்யமாட்டாரா?"

"கஷ்டப்படுகிறவர்களுக்கு" "கஷ்டம்" எனும் பெயர் தொடர்ந்துவந்ததால் தொடர்வினையான செயப்படுபொருள் குன்றிய, தன்வினையான தெரிநிலை வினையாலணைபெயர். நிகழ்காலம், உயர்திணை, பலர்பால், படர்க்கை, நான்காம் வேற்றுமை தகுதிப்பொருள். "கிடைக்கும்" எனும் வினைமுற்றைக் கொண்டு முடிகிறது.

கஷ்டம்+படு+கிறு+அ+அர்கள்+உ+கு. கஷ்டம் எனும்பெயர் படு எனும் துணைவினையோடு சேர கஷ்டப்படு எனும் தொடர்வினைப் பகுதியாயிற்று. கிறு, நிகழ்கால இடைநிலை. அ, பெயரெச்சவிகுதி. அர்கள், பலர்பால் விகுதி. உ, சாரியை. கு, நான்காம் வேற்றுமை உருபு.

"கிடைக்கும்" செயப்படுபொருள் குன்றிய தன்வினையான தெரிநிலை வினைமுற்று, எதிர்காலம், அஃறிணை, ஒன்றன்பால்படர்க்கை, "பலன்" என்னும் எழுவாய்கொண்டு முடியும் பயனிலை.

கிடை பகுதி, கு சாரியை உம் எதிர்காலம் காட்டிய விகுதி.

N.B.—"தும்" எனும் விகுதி எதிர்காலங் காட்டியதென்பர் சிலர். இது செய்யுளல்ல வாதலால், "கும்" விகுதி ஏற்றதென்பது சரியன்று.

"செய்தால்" செயப்படுபொருள் குன்றாது மறைந்து நின்ற தன்வினையான தெரிநிலை எதிர்கால வினையெச்சம், "உண்டு" எனும் குறிப்பு வினைமுற்றைக்கொண்டு முடிகிறது.

செய் + து + ஆல்.

செய், பகுதி; து, இறந்தகால வினையெச்ச விகுதி.

இரண்டும் சேர்ந்து "செய்து" என்றாகி, எதிர்கால வினையெச்ச விகுதியாகிய "ஆல்" ஏறி "செய்தால்" என ஆயிற்று.

"அற்ற" குறிப்புப் பெயரெச்சம், "நன்மை" எனும் பெயர் கொண்டு முடிகிறது.

அன்மை=பண்புப்பெயர்.

மை கெட்டு, ஒன்றன்பால் விகுதியாகிய, து சேர "அற்று" என ஆயது. பெயரெச்ச விகுதியாகிய அ சேர்ந்து "அற்ற" என ஆயது.

"உண்டு" குறிப்பு வினைமுற்று. "நன்மை" எனும் பெயரின் பயனிலை. அஃறிணை, ஒன்றன்பால் படர்க்கை.

"உண்மை" எனும் பண்புப்பெயரில் மை கெட்டு உள் என ஆய், ஒன்றன்பால் விகுதி து சேர, "உண்டு" என ஆயது.

N.B.— உண்டு ஐம்பால் மூவிடங்களுக்கும் பொது. ஆயினும் எழுவாய் நோக்கி, திணை, பால், இடம் இங்கு குறிப்பிக்கப்பட்டது.

"ஆதரிக்கிற" செயப்படுபொருள் குன்றாத தன்வினையான தெரிநிலை, நிகழ்காலப் பெயரெச்சம், "தெய்வம்" எனும் பெயர்கொண்டு முடிகிறது.

ஆதரி (பகுதி) + கிறு (நிகழ்கால இடைநிலை) + அ (பெயரெச்ச விகுதி.)

"செய்க" செயப்படுபொருள் குன்றாத தன்வினையான தெரிநிலை வினை, வியங்கோள், "தெய்வம்" எனும் எழுவாயின் பயனிலை.

செய் (பகுதி) + க (வியங்கோள் விகுதி.)

"பகைக்கப்படுவாய்" தெரிநிலைச் செயப்பாட்டுவினை, எதிர் காலம், பொதுத்திணை, பொதுப்பால், முன்னிலை ஒருமை.

ஆயினும் மனுஷனை நோக்கிச் சொல்லியதாகத் தோற்றுதலால், இவ்வாசகத்தில் உயர்திணைப் பொதுப்பாலென்கலாம்.

நீ எனும் எழுவாயின் பயனிலை.

பகை + கு + அ + படு + வ் + ஆய்.

பகை, பகுதி; கு, சாரியை; அ, நிகழ்கால வினையெச்ச விகுதி. (படு) செயப்பாட்டு வினையாக்கவந்த துணைவினை, (வ்) எதிர்கால இடைநிலை, "ஆய்"—முன்னிலை ஒருமை விகுதி.

"நினையாதே" செயப்படுபொருள் குன்றிய தன்வினையான தெரிநிலை எதிர்மறை ஒருமை ஏவல். "நீ" எனும் தோன்றா எழுவாயின் பயனிலையாய் முடிவுபெற்றது.

நினை (பகுதி) + ஆது (எதிர்மறை விகுதி) + ஏ (தேற்றத்தையும், ஏவலையும் காட்டவந்த இடைச்சொல்.)

"முயற்சிப்பிக்க" செயப்படு பொருள் குன்றாத, பிறவினையான தெரிநிலை நிகழ்கால வினையெச்சம். "செய்யமாட்டாரா" எனும் வினையைக்கொண்டு முடிந்தது.

முயல் = பகுதி.

சி, பி, இரட்டித்த பிறவினை காட்டவந்த ஈறுகள்.
அனைத்தும் சேர "முயற்சிப்பி" எனும் பிறவினைப் பகுதியாயிற்று.
கு—சாரியை. அ நிகழ்கால வினையெச்ச விகுதி.

"செய்யமாட்டாரா" "மாட்டு" எனும் துணைவினை பெற்று வந்த செயப்படு பொருள் குன்றாத, தெரிநிலை எதிர்மறை வினைமுற்று. உயர்திணை, பலர்பால், படர்க்கை, "தெய்வம்" எனும் எழுவாயின் பயனிலை.

செய் (பகுதி) + அ (நிகழ்கால வினையெச்ச விகுதி) + மாட்டு (துணைவினை.) அனைத்தும் சேர்ந்து செய்யமாட்டு எனும் பகுதியாய், ஆர் எனும் நெடில் முதலிலுடைய பலர்பால் விகுதி இடைநிலையின்றிப் புணர, எதிர்மறையாயிற்று.

ஆ, ஈற்றில் வந்து வினாப்பொருளைத் தந்தது.

N.B. மேல்கண்டபடி பகுதி, விகுதிகளைக் கூறி, பதம் முடித்துக் காட்டும்போது அடைந்த விகாரங்களுக்குச் சூத்திரத்துடன் விதி சொல்வது அவசியம். புணரியல் படித்தபின் இதை விவரமாய்ச் சொல்லக் கற்பிப்பது நலம். இவ்விடத்தில் அவ்விதிகளை இப்போது எடுத்துக் கூறும்போது மயக்கத்துக்கிடமாகும் என்று அவைகளை விட்டிருக்கிறது.

# CHAPTER VI.

## இடையியல். PARTICLES

**183.** தன்னில் தான் அர்த்தமில்லாமல் பெயரோடும், வினையோடும் சேர்ந்து பொருள்தருவது இடைச்சொல்.

உ-ம். ஐ, து, அன், &c.

> [1] "இடையெனப் படுப பெயரொடும் வினையொடும்
> நடைபெற் றியலும் தமக்கியல் பிலவே." (தொல்.)

"பெயர்வினையிடத்துப்பிறப்பதிடைச்சொல்." (முத்.வீரி.)

**184.** இடைச்சொற்கள் பலவகைப்படும்.

1. வேற்றுமை யுருபுகள் (Case endings.) (இதன் விரி பெயரியலில் காண்க.)

2. வினையுருபுகள் (Verbal particles.) திணை, பால், இடம், காலம் காட்டவந்தவை. விவரம் வினையியலில் காண்க. (Sections 125—134, 136, 144, 145.)

3. சாரியை (Euphonic meaningless particles.)

4. ஒப்புருபுகள் (Particles expressing similitude.)

5. இசை நிறை இடைச்சொற்கள் (Particles to make up the quantity in Poetry.)

6. அசைநிலை (Meaningless particles).

7. குறிப்புப்பொருள் தருபவை (Onomotopiac particles.)

8. இவைகளன்றி வேறுபொருளை விசேஷித்துத் தருவதற்கு உபயோகிக்கப்படும் இடைச்சொற்கள் (Particles with special meanings.)

---

1 "புணரிய னிலையிடைப் பொருணிலைக் குதவவும்
வினைசெயல் மருங்கிற் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயி னுருபா குநவும்
அசைநிலைக் கிளவி யாகி வருநவும்
இசைநிறைக் கிளவி யாகி வருநவும்
தத்தம் குறிப்பிற் பொருள்செய் குநவும்
ஒப்பில் வழியால் பொருள்செய் குநவும்
அப்பண் பினவே நுவலுங் காலை." (தொல்.)

[1] "வேற்றுமை வினைசா ரியையொப் புருபுகள்
தத்தம் பொருள விசைநிறை யசைநிலை
குறிப்பெனெண் பகுதியிற் றனித்நிய லின்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் னோரிடத்
தொன்றும் பலவும வந்தொன்றுவ திடைச்சொல்."(நன்.)

185. (a) அசைநிலை யாதொரு பொருளும் தராதது.

உ—ம். தருவானோ என்பதிலுள்ள ஓ.

N.B.—போனாரே என்பதில் ஏ உச்சரிப்பு இனிமையாதற்பொருட்டு வரும்போதும் சாரியை அசைநிலை யெனப்படும்.

(b) பாட்டில் ஓசை குறைந்தவிடத்து நிறைக்க வருவது இசைநிறை.

உ—ம். "இன்று கொல் அன்று கொல் பின்றையே நின்றது கூற்றம் என்றெண்ணி, &c." இதில் **கொல்** இசை நிறை இடைச்சொல்.

(c) உச்சரிக்கும் வார்த்தையின் தொனியே கருத்து விளக்க நிற்பது குறிப்பு.

உ—ம். திம் என விழுந்தது.
சள்சள் என்று குலைத்தது நாய்.

186. சாரியைகள் பின்வருவன:—

"அன்ஆன் இன்அல் அற்றிற் றத்தம்
தம்நம் நும்ஏ அ உ ஐ கு ன
இன்ன பிறவும் பொதுச்சா ரியையே." (நன்.)

புற்றுஞ்சோறு என்பதில் வந்த "ஆம்" சாரியை.

அவன்தான் } என்பதில் "தான்" "தாம்" சாரியை.
அவர்தாம் }

உ—ம். தம்பிதான் வந்தான்.

"இல்லாப்பொருள்" என்பதில் ஆ சாரியை வந்தது.
இவை மேற்கூறிய சூத்திரத்திலில்லாதவை.

சாரியைகள் வார்த்தையின் நடுவிலும் கடையிலும் வரும், முதலில் வரா.

---

[1] இலக்கண விளக்கத்துள் "குறிப்பு" நீக்கி மற்ற எழ்பொருளும் விரிக்கப்பட்டிருக்கின்றன.

**187.** ஒப்புருபுகள்.

"போலப் புரைய வொப்ப வுறழ
மானக் கடுப்ப வியைய வேய்ப்ப
நேர நிகர வன்ன வின்ன
என்பவும் பிறவு முவமத் துருபே." (நன்.)

இவற்றில் போல, இயைய, அன்ன என்பவை வழக்கில் வரும். மற்றவை பெரும்பாலும் செய்யுளில் வரும்.

உ-ம். புலிபோலப் பாய்ந்தான்.
கொடும்பதியைப் பேசினான்.
கற்கண்டன்ன சுவையுள்ள மருந்து.

இவைகள் வார்த்தையின் கடையில் வரும்.

**188.** தத்தம் பொருள்காட்டிய இடைச்சொற்கள் காட்டும் பொருள்கள்.

தெரிநிலை = Clearance of doubt.
தேற்றம் = Emphasis, certainty, தெளிவு.
ஐயம் = Doubt, சந்தேகம்.
முற்று = End, Implying a finality.
எண் = Numbering.
சிறப்பு = Importance.
எதிர்மறை = Negation.
எச்சம் = Implying incompleteness.
வினா = Interrogation.
விழைவு = Desire, விருப்பம்.
ஒழியிசை = Implying the omission of a particular word.
பிரிப்பு = Separation.
கழிவு = Pity, இரக்கம்.
ஆக்கம் = Formation (Like the Latin faceo and the English "To make.")

"தெரிநிலை தேற்ற மையமுற் றெண்சிறப்
பெதிர்மறை யெச்சம் வினாவிழை வொழியிசை
பிரிப்புக்கழிவாக்க மின்னன விடைப்பொருள்." (நன்.)

189. ஏ ஆறுபொருள் தரும்.

"பிரிநிலை வினாவெண் ணீற்றசை தேற்றம்
இசைநிறை யெனவா றேகா ரம்மே." (நன்.)

உ-ம். பிரிநிலை. இவ்வகுப்பில் கந்தனே வயதில் மூத்தவன்.

வினா. நீயே அதை உடைத்தாய். (Did you break it?)

எண். நிலனே, நீரே, தீயே, வளியே. (Land fire, water and wind.)

ஈற்றசை. அவர் போனாரே.

தேற்றம். இராமனே இதைச் செய்தான்.

இசைநிறை. வந்தாரே துணை வந்தாரே.

N.B.—ஏ எதிர்மறைப் பொருளிலும் வரும் என்பது இலக்கண விளக்கத்தார் துணிபு.

நான் வாங்கவே வந்தேன் என்பது நான் வாங்க வரவில்லை, வேறு காரியமாய் வந்தேன் என்னும் பொருள்பட வரும்போது ஏ எதிர் மறைப் பொருளாம்.

190. ஓ எட்டுப்பொருள் தரும்.

"ஒழியிசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப் பெனவெட் டோவே. (நன்.)

ஒழியிசை. "விளக்கோ அணைக்கிறீர்" என்பதில் "படுக்கப் போகச் சமயமாயிற்று" என்னும் ஒழிந்துநின்ற பொருள் வந்தது.

வினா. நீர் என்னைத் தேடியது பகலிலோ?

சிறப்பு. ஓ, ஓ, மகா வல்லவன்.
ஓ, ஓ, கொடிய துஷ்டன்.

எதிர்மறை. "சாப்பிடவோ போகிறீர்" என்பது "சாப்பிடவல்ல குளிக்க அல்லது வேறெதையும் செய்ய" என்று அர்த்தமாகுமானால் எதிர்மறையாம்.

தெரிநிலை. அதோ வருகிறவர் வாத்தியாரோ, அவரல்ல, நமது நண்பன் ராமானுஜமோ, ஆம், அவன்தான்.

கழிவு. ஓ, ஓ, அடிபட்டுக் கிடக்கிறான்.

அசைநிலை. (செய்யுளில் பெரும்பாலும் வரும்.)
"வாரீரோ, வாரீரோ, வாரீர் மேசையா."

பிரிப்பு. பேதுருவோ பன்னிரு சீஷரில் முந்திப்பேசுகிற வன்.

**191.** என, என்று ஆறுபொருளைத் தரும்.

"வினைபெயர் குறிப்பிசை யெண்பண் பாறினும்
எனவெனு மொழிவரு மென்று மற்றே." (நன்.)

**வினை.** இராஜா வந்தாரெனச் / இராஜா வந்தாரென்று } சொல்கிறார்கள்.

**பெயர்.** தோமாஸ் எனவொரு நியாயாதிபதி.
விக்றர் என்று பேர் பெற்றவன்.

**இசை.** டம்மென வெடித்தது.
பொட்டென்று போட்டுடைத்தான்.

**குறிப்பு.** திடும் என வந்தான்.
கொல்லென்று சிரித்தார்.

N.B.—இசையும் குறிப்பும் ஒருவாறொக்கும். ஒலியால் குறிக்கப்படுவது இசை. மற்றவகையால் குறிக்கப்படுவது குறிப்பு என நண்ணியதாய்ப் பாகுபடுத்தியிருக்கிறது.

**எண்.** நிலனென, நீரென, தீயென, வளியென, அல்லது நிலனென்று, நீரென்று, தீயென்று, வளியென்றாய நான்குடன் ஆகாயஞ்சேர பஞ்சபூதங்களாம், &c.

**பண்பு.** வெள்ளென விடிந்தது.
செக்கச் செவேரெனப் பழுத்தது.
மஞ்சள் மசேர் என்றாயது.

**192.** ஒடு எண்பொருளைத் தரும்.

"என்றா வெனாவோ டெண்ணுக் குறித்தியலும்." (இ. விளக்.)

உ—ம். ஆட்டோடு, மாட்டோடு, கூட்டோடு, போகிறது யார்?

**193.** "உம்" எட்டுப் பொருள் தரும்.

"எதிர்மறை சிறப்பைய மெச்சமுற் றளவை
தெரிநிலை யாக்கமோ டும்மை யெட்டே." (நன்.)

**எதிர்மறை.** இவன் பரீட்சையில் தேறுவதுமுண்டென்று சொல்வார்களோ? என்பது தேறமாட்டான் எனப் பொருள் தந்தது.

**உயர்வு சிறப்பு.** ஞானிக்கும் விளங்காத வித்தை.

**இழிவு சிறப்பு.** பிள்ளையும் மனதில் செய்து, சொல்லிவிடும்

ஐயம். (Doubt.) இக்கல் புஷ்பராகமும் ஆகலாம். பத்தாயினும் எட்டாயினும் கொடும்.

எச்சம். (a) இறந்தது தழுவியது. அண்ணனும் வந்தான். (தம்பியும் வந்துவிட்டான் எனப் பொருள்படின்.)
(b) எதிரது தழுவியது. அண்ணனும் வந்தான். (தம்பியும் வருவான் எனப் பொருள் படின்.)

முற்று. எல்லாரும் வந்துவிட்டார்கள்.

எண். சிகாமணியும், பொன்னனும், நேசனும் பட்டணத்திலிருக்கிறார்கள்.

தெரிநிலை. அங்கே நிற்பவர் சங்கரநாயருமல்ல, சங்கரமேனோனுமல்ல, கிருஷ்ணசாமி ஐயர்தான்.

ஆக்கம். என் தமையன் எனக்கு வாத்தியாருமாயினார்.

**194** "உம்" அடுக்கப்படும் வார்த்தைகளின் கடைசியில்மாத்திரம் வந்து எண் பொருளைத் தரும்.

"பெயர்ச்செவ் வெண்ணே யென்றா வெனாவெண்
ணான்குந் தொகைபெறு மும்மையென் றெனவோ
டிந்நான் கெண்ணு மஃதின்றியு மியலும்." (நன்.)

"ஏ" "என" "என்று" என்பவை அடுக்கப்படும் வார்த்தைகளின் கடைசியில் "உம்" பெற்றும் வரும், பெறாமலும் வரும்.

உ-ம். 1 தீயென, காற்றென, மண்ணென, ஜலமெனவும் தேகாம்சங்களைப் பிரிக்கலாம்.

2. மண்ணென்று கல்லென்று பாராமல் தின்றான், &c.

என்று, என, ஒடு என்பவையும் அடுக்கப்படும் வார்த்தைகளின் கடைசியில்மாத்திரம் வரலாம்.

"என்றும் எனவும் ஒடுவும் ஒரோவழி
நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும்." (நன்.)

பெயர்கள் மாத்திரமல்ல வினைகளும் அடுக்கி எண் பொருளில் வரும்.

உ-ம். அடித்தும், மிதித்தும், உதைத்தும், கன்னத்தறைந்தும், துப்பியும், பற்றுதெனச் சிலுவையில் அறைந்தும் வதைத்தனர்.

"வினையொடு வரினுமெண் ணினைய வேற்பன" (நன்.)

195. "மற்று" மூன்று பொருள் தரும்.

"வினைமாற் றசைநிலை பிறிதெனு மற்றே." (நன்.)

**வினைமாற்று.** முன் சொன்ன வினையை மறுத்து அதற்கெதிரிடையான வினையை உபயோகப்படுத்த வரும்போது இப்பொருள் தரும்.

உ-ம். இழுத்ததுமன்றி மற்றும் அடித்ததும் உண்டே. (வினைமாற்றுப் பொருள்.)

**பிறிதுப்பொருள்.** உ-ம். என் மகன்தான் கூடலூருக்குப் போனான்; மற்றவர்கள் எங்கே போயிருக்கிறார்கள்.

**அசைநிலை.** உ-ம். கல்விக் கழகத்தாங் கொற்கமின் றாத்தைவா யங்காத்தல், வல்லுரு வஞ்சுவபோல், மற்றுத்தம் புல்லுரு வஞ்சன்மின். (மற்று, அசைநிலை.)

"மற்றைய தென்பது சுட்டிய தற்கினம்." (நன்.)

196. "தில்" மூன்று பொருள் தரும். இது பாட்டில்தான் விசேஷம் உபயோகப்படும்.

"விழைவே கால மொழியிசை தில்லே." (நன்.)

விழைவு=விருப்பம்.

உ-ம். "வார்ந்திலங்கும் வையெயிற்றுச் சின்மொழி
யரிவையைப் பெறுகதில்லம்ம யானே." (விழைவு)
"பெற்றாங் கறிகதில்லம்ம விவ்வூரே." (காலம்.)
"வருகதில்லம்ம வெஞ்சேரி சேர." (ஒழியிசை)

197. "மன்" ஆறுபொருளைத் தரும், இதுவும் பாட்டிலேயே உபயோகப்படும்.

"மன்னே யசைநிலை யொழியிசை யாக்கங்
கழிவு மிகுதி நிலைபே றாகும்." (நன்.)

உ-ம். 1. "அது மற்கொண் கன்றேரே." (அசைநிலை.)
2. "கூரியதோர் வாண்மன்." (ஒழியிசை.)
(வாள்திட்பமா யிருப்பினும் கூரியது.)
திட்பமாயிருத்தல் குறிப்பிக்கப்பட்டதால் ஒழியிசை.

3. "சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே." (கழிவு.)
4. "பண்டு காடு மன்." (ஆக்கம்.)

இப்போது "கயல் புரளும் வயலாயிற்று" எனப் பொருள் தருதல் காண்க.

5. "மன்னும் மாதர் பெருங் கற்பென் றறிந்தேன் வாழி காவேரி." (மிகுதி.)
6. "மன்னு வுலகத்து மன்னியது புரிமே. (நிலைபேறு.)

198. "ஆம் என்னும் இடைச்சொல், பெயர் அனைத்தினும் வருமே."

உம். மண்ணுங்கட்டி.
புற்றுஞ்சோறு.

பின்வருவன செய்யுளிலேயே வரும் இடைச்சொற்கள்.

199. "கொல்" இருபொருள் தரும்.

"கொல்லே யைய மசைநிலைக் கூற்றே." (நன்.)

உ-ம். "குற்றிகொல் மகன்கொல்." (ஐயம்.)
"பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்ற நங்காதலர் வருவர்கொல் வயங்கிழாய்." (அசைநிலை.)

200. "ஒடுவுந் தெய்யவு மிசைநிறை மொழியே." (நன்.)

201. "அந்திலாங் கசைநிலை யிடப்பொரு ளவ்வே." (நன்.)

அந்தில், ஆங்கு என்ற இரண்டும் அசைநிலைப் பொருளையும் இடப் பொருளையும் தரும் இடைச்சொற்கள்.

"அந்தி லாங்க சைநிலை யவற்றுள்
அந்திலிடப் பொருட் டாகலு முரித்தே" (இ. விள.)

202. "அம்ம வுரையசை கேண்மினென் றாகும்." (நன்.)

ம். அம்ம வாழிதோழி.(அம்ம=hear me, listen to me. கேண்மின்.)

203. "இட்டுவிட் டிரண்டும் வினையிடைச் சொல்லே." (அகத்தியம்.)

204. கோன். "அச்சம் பயமிலி காலம் பெருமையென் றப்பா ளன்கே கோனைச் சொல்லே." (இ. விளக்.)

அச்சம்=fear; பயமிலி=fearlessness.
காலம் =time; பெருமை-greatness.

205. எற்று. "எற்றென் கிளவி யிறந்த பொருட்டே."
(இ. விளக்கம்.)

இறந்தது, (ஒன்று) போய்விட்டது என்ற அர்த்தம் தரும்.

உ-ம். எற்றெனுடம்பி னெழினலம்.

206. மன்ற. "மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்."
(இ. விளக்கம்.)

தேற்றம்=தெளிவு, நிச்சயம்.

உ-ம். கடவுளாயினுமாக, மடவே மன்ற வாழிய முருகே.

207. தஞ்சம். "தஞ்சக் கிளவி யெண்மைப் பொருட்டே."
(இ. விளக்கம்.)

எண்மை=எளிமை. (Easy.)

உ-ம். முரசு கெழுதாயத்தரசே தஞ்சம்=It is easy to give the kingdom.

208. எல். "எல்லே யிலக்கம்." (தொல்காப்பியம்.)

இலக்கம்=அலங்காரம். (Ornament.)

209. "மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல்.
(இ. விளக்கம்.)

உ-ம். புற்கை யுண்கமா கொற்கையோனே.

210. "மியாயிக மோமதி யத்தை யித்தை
வாழிய மாள வீயாழுமுன் னிலையசை."
(இ. விளக்கம்.)

முன்னிலை (2nd person)முடிபில் வருபவை.

211. "யா, கா, பிற, பிறக்கு, அரோ, போ, மாது, இரும்,
சின், குரை, ஒரும், போலும், இருந்து, இட்டு,
அன்று, ஆம், தாம், தான், கின்று, நின்று அசை
[மொழி." (நன்னூல்.)

இவற்றில், தாம், தான், ஆம் முதலிய சில வழக்கத்திலும் வரும்.

# CHAPTER VII.

## QUALIFYING WORDS, ADJECTIVES AND ADVERBS.

## உரியியல்.

**212.** பெயரையாவது, வினையையாவது தழுவி அவற்றின் குணத்தை, அல்லது விசேஷத்தை விளக்கும் சொல் உரிச்சொல் எனப்படும்.

[1] இவைகளுக்கு திணை, பால், இடம், வேற்றுமை, காலம் முதலிய பாகுபாடுகள் இல்லவே இல்லை.

உ—ம். சால, உறு, சகல, மெல்ல.

"எழுத்துப் பிரிந்திசைத்தவிவணியல் பின்றே." (தொல்.)

பதம் பிரித்துப் பால், திணை முதலியன காட்டுவது உரிச்சொல்லுக்கில்லை.

இடைச்சொல் பலபொருளைத் தரும்.
உரிச்சொல் குணத்தைமாத்திரம் காட்டும்.

[2] "உரிச்சொல் லென்ப உரியபற் குணசொல்
ஆகிப் பெயர்வினை அணைந்து வருமே." (தொன்னூல்.)

**213.** உரிச்சொல்லினடியாய்ப் பெயரும் வினையும் பிறந்து தத்தமக்குரிய பாகுபாடுகளைப் பெற்றுவருதல் உண்டு.

உ—ம். சகலம், சகலத்தையும், சகலத்தாலும்.
நொசிந்த, நொசிகிறது, &c.

இப்படி வருவதினால் மயங்கவேண்டுவதில்லை.

---

[1] பண்புப்பெயர், தொழிற்பெயர், பெயரெச்ச வினையெச்சங்கள் இவ்வுரிச்சொற்கள்போல பெயர்வினைகளின் குணக்கூறுகளை விளக்குமாயினும் அவைகள் தத்தம் பாகுபாடுகளைப் பெறறுவருவதால் அவைகளை உரிச்சொற்களெனப்படாது. (They have regular inflections.)

[2] உரிச்சொற்கள் செய்யுளுக்கே உரியதால் இப்பெயர் பெற்றதென்பார் சிலர்.
உரிச்சொற்கள் செய்யுளில்மாத்திரம் விசேஷமாய் வரும,
வழக்கிலும அருகிவருகின்றன.

"குறிப்பும் பண்பும் இசையுந் தோன்றிப்
பெயரும் வினையும் போன்றவை யிரண்டற்கு
மடியு மாகிய வற்றேற் புழிநின்
றொருபொருட் குரிமையும் பல்பொருட் குரிமையு
முடைய வாகி யுணரா தவற்றை
யுணர்ந்தவை சார்த்தி யுணர்வன வுரிச்சொல். (இ.விளக்.)

214. உரிச்சொற்களில் சில குறிப்புப்பொருள் தரும்.

உ—ம். பரவு, பழிச்சு } வழுத்துதல், சொல்லுதல் என்றபொருளைக் குறித்தது.

சில பண்புப்பொருளைத் தரும்.

உ—ம். விற, முற, வெறு } = அடர்ந்த.

சில இசைப்பொருளைத் தரும்.

இசை = தொனி, சப்தம்.

உ—ம். கலி, கம்பலை } அரவம் என்ற பொருள் கொடுத்தது.

இனி,

உறு, தவ, நனி, கூர், கழி என்ற ஐந்து உரியும் மிகுதி என்ற ஒரு பொருளில் வந்தன.

நனி என்னும் ஓர் உரி, பெருமை, செறிவு என இரண்டு பொருள் தந்தது.

N.B.—உரிச்சொற்களின் பொருள் அறிதற்கருமையானதால், தெரிந்த தெளிவான வார்த்தைகளைக்கொண்டு, கருகலான பதங்களை விளக்கவேண்டியது.

215. உரிச்சொற்களில் வாசகம், வழக்குகளில் வருவனவற்றை முதல் விவரித்துப் பின்செய்யுளுக்கே யுரியவைகள் விவரிக்கப்படும்.

216. வாசகத்தில் வருவன:—

இவை பெயருரி, வினையுரி என இருவகையாம்.

I. பெயருரி, இயல்புப்பெயருரி, திரிபுப்பெயருரியென இரண்டாம்.

**இயல்புப்பெயருரி,** ஆதிகாலந்தொட்டுத் தனிமொழியாய் யாதொன்றின் அடியாயும் பிறவாதவை.

உ—ம். பல, சில, நனி, கூர், கழி, மகா, வெகு, வீண், &c.

**திரிபுப்பெயருரி**, பெயர்கள் உருவு திரியாமலும், திரிந்தும், சில அசைகளைப் பெற்றும் வருவன.

(a) இயல்பாய் உருபு திரியாது வருபவை.

உ—ம். [1] பொன் நகை ————பொன்—பெயருரி.
மண் சுவர் ————மண்—பெயருரி.

(b) பெயர் திரிந்து வருவது.

(1) பெயரீறு கெடுதலால்.

உ—ம். வட்டக்கிணறு, கருங்கோழி, செந்தாமரை.

(2) இய, [2] ஆன, உள்ள, அ முதலிய அசைகளைச் சேர்ப்பதால்.

உ—ம். குறுகிய, பலமான, அன்புள்ள, நெடிய.

(3) பெயர் திரிவதால்.

உ—ம். எருத்துமாடு, குருட்டுக்கண்.

**217.** II. வினையுரியும் இயல்பு வினையுரி, திரிபு வினையுரியென இருவகையாம்.

(a) இயல்பு வினையுரி,

சால, பைய, மெத்த, இனி, சற்று, இன்னம், இன்னும், மெள்ள, சீக்கிரம், நிரம்ப.

(b) திரிபு வினையுரி.

1. இது பிறசொற்களடியாய்ப் பிறந்து வரும்.

| | பெயர் | பிறந்த உரி. |
|---|---|---|
| உ—ம். | மென்மை, | மெல்ல. |
| | எதிர், | எதிரே. |
| | அங்கு, | அங்கே, ஆங்கு. |

---

[1] இவற்றைப் பொன்னால் செய்யப்பட்ட நகை, மண்ணால் கட்டிய சுவர் என விரித்து வேற்றுமைத்தொகையென்றும், வேற்றுமை யுருபும் கொண்டு முடியும் சொல்லும் தொக்கதென்றும் சொல்வாருளர். இது அமையினும் அமையலாம்; என்றாலும், பித்தளை நகையல்ல, வெள்ளி நகையல்ல, பொன்னகையாகும் என்று, நகையின் விசேஷத்தைக் குறிப்பித்தலால் இதை உரிச்சொல்லெனச் சொல்வது தகுதி.

[2] ஆன, உள்ள என்பவற்றை பெயரெச்சமெனக்கொண்டு, பலம், அன்பு என்னும் பெயர்கள் முதல் வேற்றுமைப் பெயரென்றும் மேற்கண்ட பெயரெச்சங்களைக்கொண்டு முடிந்தன என்றும் சொல்வாருமுண்டு. மேல்நின்ற பலம், அன்பு என்னும் பெயர்களை நீக்கி ஆன குதிரை, உள்ள தங்கை என்றால், மற்றப் பெயரெச்சங்களைப்போல் பொருள் முடியாது, குறைவு காணப்படுவதால் பலமான, அன்புள்ள என்பவற்றைத் தனித்தனியே ஒரே வார்த்தையாகக்கொண்டு பெயருரி என்பது தகுதி என விளங்கும்.

2. [1] பெயர்கள் திரியாமலும் வரும்.

உ—ம். அங்கு, எங்கு, நாளை.

3. பெயருடன், ஆய, ஆக, சேர்வதால் வரும்.

உ—ம். அன்பாய், துரிதமாக.

**218.** இவ்வகை வினையுரிச்சொற்களின் விவரம். [2]

1. Adverbs of Time.—**காலங் காட்டுவன.**

(a) பெயரடியாய்ப் பிறந்தது.

முன், பின், முன்னே, பின்னே, முன்பு, பின்பு, நேற்று, நாளை, இன்று, உடனே, பிற்பாடு, பிறகு, மறுபடி, வருஷாந்தரம், மாதாந்தரம், நாடோறும், அன்றுடகம், அடிக்கடி, ஒருக்கால், (எண்ணோடு சேர்ந்த விசை, தடவை, வேளை,) &c.

உ—ம். நாலுவிசை, மூன்றுதடவை, ஒருவேளை.

N.B.—காலப்பெயர் கு உருபைப் பெற்றும் வரும். நாளைக்கு, இன்றைக்கு, பின்னைக்கு.

(b) சுட்டடியாய்ப் பிறந்தவை இப்போ, அப்போ, இப்போழ்து, அப்போழ்து, இப்போது, அப்போது, இம்மட்டும், இதற்குள், இந்நேரம், &c.

(c) வினாவடியாய்ப் பிறந்தவை எப்போ, எப்போழ்து, எப்போது, என்றும், என்றைக்கும், &c.

2. Adverbs of Place.—**இடங் காட்டுபவை.**

---

[1] இடம், காலம், அளவு, விதம் காட்டிய எல்லாப்பெயர்களும், திரிந்தும், திரியாமலும் வினையுரியாம். இவைகளைப் பெயர்களென்று கூறப்படாதோ எனில், அவைகள் பெயர்களைப்போல, ஒன்றுமுதல் எழு வேற்றுமைகளைப் பெறுவதேயில்லை. ஏழாம் வேற்றுமை காலப்பொருள், இடப்பொருள்களில்தான வரும். ஆகையால் இவற்றை உரியென்று சொல்வது தகுதி. வினையுரிச்சொற்கள், வினையைத் தழுவி வருவதால் கிரியை செய்த காலம் இடம் காரணம் வகை முதலியவற்றை விவரிக்க வரும்.

உ—ம். துரிதமாக வந்தான்.
அன்பாய் ஆதரித்தான்.

இவற்றில், "துரிதம்" "அன்பு" என்பவற்றை பெயர்முதல் வேற்றுமையென்றும், "ஆக" "ஆய்" என்னும் வினையெச்சங்களைக்கொண்டு முடிந்ததென்றும் சொல்வார்கள். இங்கு வந்த ஆக்க வினை, பெயரின அர்த்தத்தை விளக்கவந்து, பெயரை நீங்கி வினையோடுமொத்திடம் நின்றால், மற்ற வினையெச்சங்கள்போல விளக்கமான பொருளைத் தராது நிற்றலால், "துரிதமாக" "அன்பாய்" என்று தொடுத்து ஒரே வார்த்தையாக எடுத்து வினையுரியென்று கூறுவது தகுதி.

[2] இவைகளையும், இதுபோல் வருபவற்றையும், பெயரென்றும், வினையென்றும் இலக்கணம் கூறும்போது, உரியின் விவரம் இங்ஙனமென்று வகுத்துக் காட்டியதோ டொத்துப்பார்த்து, நியாயம் கண்டு உரியோ பெயரோ வினையோ எனப் பாகுபாடு செய்யவேண்டியது.

(a) பெயரடியாய்ப் பிறந்தவை, மேலே, கீழே, பின், முன், பின்னே, முன்னே, இடமே, வலமே, குறுக்கே, நெடுக்கே, நடுவே, உள்ளே, புறமே, புறத்தே, வெளியே, &c.

(b) சுட்டடியாய்ப் பிறந்தவை.

இங்கு, இங்கே, ஈங்கு, ஈண்டு.
அங்கு, அங்கே, ஆங்கு, ஆண்டு.
இவ்விடம், அவ்விடம், &c.

(c) வினவடியாய்ப் பிறப்பது.

எங்கு, எங்கே, எங்ஙனம், எவ்விடம், &c.

3. Adverbs of Manner.—**வகை காட்டுவன.** (அளவும் இதனுள் படும்.)

(a) பெயரடியாய்ப் பிறந்தது:—வரை, வரையிலும், வரைக்கும், மட்டும், மட்டிலும், ஒருவாறு, ஒருங்கே, &c.

(b) சுட்டடியாய்ப் பிறப்பது:—அவ்வளவு, அவ்விதமாய், இவ்வாறு, அவ்வண்ணம், அத்தனை, இத்தனை, அம்மாத்திரம், அப்படி, &c.

(c) வினவடியாய்ப் பிறந்தவை:—எவ்வாறு, எவ்வளவு, எப்படி, எவ்விதம், &c.

(d) பார்க்கிலும், காட்டிலும், ஆயினும், &c.

4. Adverbs of Cause and Effect.—காரணம் காட்டுவது.

ஆனால், ஆகில், ஏனெனில், ஏனென்றால்.

**219.** செய்யுளில்மாத்திரம் வழங்கிவரும் உரிச்சொற்கள் பின்வருவன.

N.B.—இவற்றில் ஒன்று இரண்டு காலசம்பவத்தால், வழக்கிலும் வருதலுண்டு.

இவற்றின் பொருளும் இங்கிலீஷில் காட்டியிருக்கிறது.

1. "**சால, உறு, தவ, நனி, கூர் கழி மிகல்.**" (நன்.) { Large, great.

(சால வழக்கிலும் வரும்.)

2. "**உரு உட்காகும் புரையுயர் பாகும்.**" (தொல்.)

உரு, உட்கு, புரை. High, grand.

3. "**குருவும் கெழுவும் நிறனாகும்மே.**"

குரு, கெழு. Color in general.

4. "செல்ல லின்ன லின்னு மையே,
மல்லல் வளனே." (தொல்.)
செல்லல், இன்னல்=Troublesome.
மல்=Flourishing and Flooding.

5. "உகப்பே யுயர்தல் உவப்பே உவகை." (தொல்.)
உகப்பு=Elevated or grand.
உவப்பு=Cheery or Lovely, Joyful or glad.

6. "பயப்பே பயனும் பசப்பு நிறனுகும்." (தொல்.)
பய shows effect. பசப்பு = Green color.

7. "அலமரல் தெருமர லாயிரண்டும் சுழற்சி." (தொல்.)
Confused, confounded.

8. "மழவும் குழவு மிளமைப்பொருள." (தொல்.) young.

9. "சீர்த்தி மிகுபுகழ்." Laudatory or Eulogistic.

10. "மாலை யியல்பே." Ordinary.

11. "கூர்ப்புங் கழிவும் உள்ளது சிறக்கும்." (தொல்.) Best or worst of its kind.

12. "கதழ்வுந் துனைவும் விரைவின் பொருள." (தொல்.)
Fast.

13. "அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கஞ் செய்யும்." (தொல்.)
Quivering, agitated.

14. "வார்தல் போகல் லொழுகல் மூன்றும்
நேர்வும் நெடுமையுஞ் செய்யும்பொருளாம்." (தொல்.)
Straight, high or long.

15. "தீர்தலும் தீர்த்தலும்விடற்பொருட்டாகும்." (தொல்.)
Quitting.

16. "கெடவரல் பண்ணையா யிரண்டும் விளையாட்டு." (தொல்.) Playful.

17. "தடவும் கயவும் நளியும் பெருமை." (தொல்.)
Magnificent.

18. "தடவென்கிளவி கோட்டமுஞ்செய்யும்." (தொல்.) Great, many.
19. "கயவென் கிளவி மென்மையு மாகும்." (தொல்.) Thin or soft.
20. "நளியென் கிளவி செறிவு மாகும்." (தொல்.) Thick,
21. "பழுது பயமின்றே." (தொல்.) Fearless.
22. "சாயல் மென்மை." (தொல்.) Soft.
23. "முழுதென் கிளவி யெஞ்சாப் பொருட்டே."(தொல்.) Full.
24. "வம்பு நிலையின்மை." (தொல்.) Fickle, whimsical
25. "மாதர் காதல்." (தொல்.) Amorous.
26. "நம்பும் மேவும் நசையா கும்மே." (தொல்.) Desirous, lustful.
27. "ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅ
யாவயி னான்கும் உள்ளத னுணுக்கம்." (தொல்.)
Small, minute.
28. "புலம்பே தனிமை." (தொல்.) Lonely.
29. "துவன்று நிறைவாகும்." (தொல்.) Full.
30. "முரஞ்சல் முதிர்வே." (தொல்.) Ripe.
31. "வெம்மை வேண்டல்." (தொல்.) Burning.
32. "பொற்பே பொலிவு." (தொல்.) Beautiful, lovely.
33. "வறிது சிறிதாகும்." (தொல்.) Little.
34. "ஏற்றம் நினைவும் துணிவு மாகும்." (தொல்.) Thinking, determining.
35. "பிணையும் பேணும் பெட்பின் பொருள." (தொல்.) Covetous.
36. "பணையே பிழைத்தல் பெருப்பு மாகும்." (தொல்.) Erroneous. Large in size.
37. "படரே யுள்ளல் செலவு மாகும்." (தொல்.) Thoughtful, spreading.

38. "பையுளுஞ் சிறுமையும் நோயின் பொருள." (தொல்.) Sick, indisposed.
39. "எய்யா மையே யறியா மையே." (தொல்.) Foolish, ignorant.
40. "நன்று பெரிதாகும்." (தொல்.) Great.
41. "தரவே வலியும் வருத்தமு மாகும்." (தொல்.) Painful, Wearisome.
42. "தெவுக்கொளற் பொருட்டே." (தொல்.) Buying.
43. "தெவ்வுப் பகையாகும்." (தொல்.) Envious, hateful.
44. "விறப்பு முறப்பும் வெறுப்புஞ் செறிவே." (தொல்.) Irritating, or angry.
45. "விறப்பே வெரூஉப் பொருட்டு மாகும்." (தொல்.) Shrinking and fearful.
46. "கம்பலை சும்மை கலியே யழுங்க
லென்றிவை நான்கு மரவப் பொருள." (தொல்.)
cry—mournful sounds.

அவற்றுள்,—

47. "அழுங்க லிரக்கமும் கேடு மாகும்." (தொல்.) Pitiful and lost.
48. "கழுமென் கிளவி மயக்கஞ் செய்யும்." (தொல்.) Confused.
49. "செழுமை வளனும் கொழுப்பு மாகும்." (தொல்.) Flourishing, fat.
50. "விழுமஞ் சீர்மையும் சிறப்பு மிடும்பையும்." (தொல்.) Correct or fit, good and sorrowful.
51. "கருவி தொகுதி." (தொல்.) Elliptical.
52. "கமம் நிறைந்தியலும்." (தொல்.) Full.
53. "அரியே யம்மை." (தொல்.) Beautiful.
54. "கவ அகத்திடுமே." (தொல்.) Inside.

55. "துவைத்தலுஞ் சிலைத்தலு மியம்பலு மிரங்கலும்
இசைப்பொருட்கிளவியென்மனார்புலவர்." (தொல்.)
Different kinds of sounds.

அவற்றுள்,—

56. "இரங்கல் கழிந்த பொருட்டு மாகும்." (தொல்.) Past.

57. "இலம்பா டொற்கமா யிரண்டும் வறுமை." (தொல்.)
Poor.

58. "கவர்வு விருப்பாகும்." (தொல்.) Desirous.

59. "சேரே திரட்சி." (தொல்.) Collective.

60. "வியலென் கிளவி யகலப் பொருட்டே." (தொல்.)
Extensive.

61. "பேநாம் உருமென வரூஉங் கிளவி
யாமுறை மூன்று மச்சப் பொருள." (தொல்.)
Frightful, Frightening.

62. "வயவலி யாகும்." (தொல்.) Painful, especially pains of labor.

63. "வாளொளி யாகும்." (தொல்.) Bright.

64. "துயவென் கிளவி யறிவின் றிரிபே." (தொல்.) Understood.

65. "உயாவே யுயங்கல்." (தொல்.) Circling.

66. "உசாவே சூட்சி." (தொல்.) Discerning.

67. "வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம்." (தொல்.)
Lascivious, lustful.

68. "கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள." (தொல்.)
Angry (When they do not denote color.)

69. "நிறத்துரு வுணர்த்தற்கு முரியவென்ப." (தொல்.)

70. "நொசிவு நுழைவு நுணங்கு நுண்மை." (தொல்.) Thin, small.

71. "புனிறென்கிளவியீன்றணிமைப்பொருட்டே." (தொ.)
Just born, quite young.

72. "நனவே களனு மகலமுஞ் செய்யும்." (தொல்.) Local and broad.

73. "மதவே மடனும் வலியு மாகும்." (தொல்.) mad, ignorant, powerful.

"மிகுதியும் வனப்பு மாகலு முரித்தே." (தொல்.) also மத=more, beautiful.

74. "புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி." (தொல்.) renewing.

75. "அமர்தல் மேவல்." (தொல்.) Resting.

76. "யாணுக் கவினும்." (தொல்.) Covering.

77. "பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள." (தொல்.) Telling.

78. "கடியென் கிளவி, வரைவே, கூர்மை,
காப்பே, புதுமை, விரைவே, விளக்கம்,
மிகுதி, சிறப்பே, யச்சம், முன்றேற்றோ
டையமுங் கரிப்பும் மணமு மறைதலும்
முறையென மொழிப முறையுணர்ந் தோரே. (இ. வி.)

கடி=1 வரைவு=Changing, separating, perverse.

2 கூர்மை = Sharp.
3 காப்பு = Defensive, covering.
4 புதுமை = New.
5 விரைவு = Fast, quick.
6 விளக்கம் = Clear, bright.
7 மிகுதி = Great, much.
8 சிறப்பு = Significant, grand.
9 அச்சம் = Fearful.
10 முன்றேற்று = Mentally imagining the presence of God or some great being.
11 ஐயம் = Doubtful.
12 கரிப்பு = Saltish.
13 மணம் = marriage.

79. "ஐ வியப்பாகும்." (தொல்.) Wonderful.

80. "முனைவு முனிவாகும்."(தொல்.) Rebuking, chiding, forbidding.

81. "வையே கூர்மை." (தொல்.) Sharp.

82. "எறுழ் வலியாகும்." (தொல்.) Strong.

83. "மாற்ற நுவற்சிசெப் புரைகரை நொடியிசை
கூற்றுப் புகறன் மொழிகிளவி விளம்பறை
பாட்டுப் பகர்ச்சி யியம்பல் சொல்லே." (நன்.)

மாற்றம் முதல் சொல்லப்பட்ட பதினாறு (16) வார்த்தைகளும் சொல்லென்னும் ஓர் பொருளைத் தந்தன.

84. "முழக்கிரட் டொலிகலி யிசைதுவை பிளிறிரை
இரக்கமுழங் கியம்ப லிமிழ்குளி றதிர்குரை
கனைசிலை சும்மை கௌவை கம்பலை
அரவ மார்ப்போ டின்னன வோசை." (நன்.)

முழக்குமுதல் இருபத்திரண்டு வார்த்தைகளும் ஓசைகளை விளக்கியது.

**220.** நன்னூலார் பண்பு என்றதனை விளக்கும்பொருட்டு உலகிலுள்ள வஸ்துக்களையெல்லாம், ஓரறிவுயிர், ஈரறிவுயிர், மூவறிவுயிர், நாலறிவுயிர், ஐயறிவுயிர் என வகுத்து, அவற்றின் குணங் கூறுகள் பண்பெனக் கூறுகிறார். இவ்வாறு புலன் பொறிகளைக்கொண்டு உலகத்திலுள்ள வஸ்துக்களைப் பிரித்தல் இலக்கணத்துள் அமைந்ததல்ல.

| பொறிகள். | | அப்பொறிகளாலாய புலன்கள். | |
|---|---|---|---|
| மெய், | Body. | ஸ்பரிசம், | Touch. |
| நா, | Tongue. | இரசம், | Taste. |
| மூக்கு, | Nose. | கந்தம், | Smell |
| நாட்டம், | Eyes. | ரூபம், | Sight. |
| செவி, | Ears. | சப்தம், | Hearing. |

ஸ்பரிசம்மாத்திர முள்ளது............. ஓரறிவுயிர்.
முதலிரண்டு முள்ளது .................. ஈரறிவுயிர்
முதல் மூன்று முள்ளது.................. மூவறிவுயிர்.
முதல் நான்கு முள்ளது.................. நாலறிவுயிர்.
ஐந்து முள்ளது........................... ஐயறிவுயிர்.

"உயிருயி ரல்லதாம் பொருட்குணம் பண்பே." (நன்.)

"மெய்ந்நா மூக்கு நாட்டஞ் செவிகளின்
ஒன்று முதலாக்கீழ்க் கொண்டுமே லுணர்தலின்
ஓரறி வாதியா வுயிரைந் தாகும்." (நன்.)

"புன்மா முதலவுற் றறியுமோ ரறிவுயிர்." (நன்.)

இது ஸ்பரிச அறிவு.

"முரணந் தாதிநா வறிவொடீ ரறிவுயிர்." (நன்.)

முரண் = இப்பி.
நந்து = சங்கு.

"சிதலெறும் பாதிமூக் கறிவின்மூ வறிவுயிர்." (நன்.)

சிதல் = கறையான்.

"தும்பிவண் டாதிகண் ணறிவினு லறிவுயிர்." (நன்.)

"வானவர் மக்க ணரகர் விலங்குபுள்
ளாதி செவியறிவோ டையறி வுயிரே." (நன்.)

N.B.—மனுஷருக்கு ஆத்துமா உளதாதலால், ஐயறிவுயிரான விலங்கு புள்ளினங்களோடு அவர்களைச் சேர்க்கப்படாது; ஆறறிவுயிர் எனப் பகுப்பது சரி.

**221**. உயிர்களின் குணங்களையும் தொழில்களையும் வடிவுகளையும் விரித்துக் கூற முடியாது, இக்காலத்தறிவின்படி இவைகள் மிகப் பெருக்கமாம்.

"அறிவரு ளாசை யச்ச மானம்
நிறைபொறை யோர்ப்புக்கடைப்பிடி மையல்
நினைவு வெறுப்புவப் பிரக்கநாண் வெகுளி
துணிவழுக் காறன் பெளிமை யெய்த்தல்
துன்ப மின்ப மிளமை மூப்பிகல்
வென்றி பொச்சாப் பூக்க மறமதம்
மறவி யினைய உடல்கொ ளுயிர்க்குணம்." (நன்.)

மேற்சூத்திரத்தில் கண்ட முப்பத்திரண்டு (32)ம், பிறவும் உயிர்களின் குணம்.

222. "துய்த்தல் துஞ்சல் தொழுத லணிதல்
உய்த்தலாதி யுடலுயிர்த் தொழிற் குணம்." (நன்.)

உயிரின் தொழில் மேலே சொல்லப்பட்டது.

223. [1]"பல்வகை வடிவிரு நாற்றமை வண்ணம்
அறுசுவை யூறெட்டுயிரல்பொருட்குணம்." (நன்.)

இதில் உயிரில்லா வஸ்துக்களின் தன்மை யின்னதென்று விளக்கப்பட்டது.

| | | |
|---|---|---|
| பல்வகைவடிவு | = | வட்டம், சதுரம் முதலியன. |
| இருநாற்றம் | = | நற்கந்தம், துர்க்கந்தம். |
| ஐவண்ணம் | = | ஐந்துநிறம்,—வெண்மை, செம்மை, கருமை, பொன்மை, பசுமை. |
| அறுசுவை | = | கைப்பு, புளிப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, கார்ப்பு, இனிப்பு. |
| ஊறெட்டு (ஊறு | = | ஸ்பரிசத்தில் காணுமியல்பு.)<br>வெம்மை (Hot).<br>தண்மை (Cold).<br>மென்மை (Soft).<br>வன்மை (Hard).<br>நொய்மை (Tender and thin).<br>சீர்மை (Level and plain).<br>இழுமெனல் (Slippery, oily).<br>சருச்சரை (Rough and tough). |

"தோன்றல் மறைதல் வளர்தல் சுருங்கல்
நீங்க லடைதல் நடுங்க லிசைத்தல்
ஈத லின்னன விருபொருட் டொழிற்குணம்." (நன்.)

உயிருள்ளதும் உயிரில்லாததுமான எல்லா வஸ்துக்களின் குணம் மேற்சொல்லியது.

[1] 220 முதல் 223-ம் பத்திவரையுமுள்ள விஷயம் தற்காலத்தக் கொத்துவராது. ஆயினும் நன்னூல் துணிவு இவ்வனம் என எடுத்துக்காட்ட இவ்விடத்தில் விரித்ததேயன்றி வேறல்ல.

# CHAPTER VIII.

## SYNTAX.—தொடர்பியல்.[1]

**224**. வார்த்தைகள் தொடர்ந்து வரும்போது அடையும் விதிகளை விளக்குவது தொடர்பியல்.

இன்னின்ன சொற்கள் இன்னின்னவற்றைக்கொண்டு முடியும் என்றும், இன்னின்னவை இன்னின்ன ஆட்சியைப் பெறுமென்றும் பலவகை விதிகளையும் எடுத்துக் காட்டுவது இவ்வியலின் திறமாம்.

வாக்கியத்தில் வார்த்தைகள் அடுக்கிவருவது தொடர் எனப்படும்.

### பெயரின் தொடர்பு.—SYNTAX OF NOUNS.

**225**. எழுவாய் அல்லது முதல்வேற்றுமை பயனிலையை அவாவிநிற்கும். இப்பயனிலை பெயராகவாவது வினைமுற்றாகவாவது இருக்கும்; அது உண்மைப்பொருள் இன்மைப்பொருள் அல்லது வினாவாக விருக்கும்.

உ-ம். 1. இங்கே நின்றது ஓர் நாய்—ஓர் நாயா?
2. இராமன் போகிறான்—போகிறானோ?

"எழுவா யுருபு திரிபில் பெயரே
வினைபெயர் வினாக்கொளல் அதன்பய னிலையே." (நன்.)

N.B.—எழுவாயின் திணை பால் இடம் எதுவோ அதுவே பயனிலையின் திணை பால் இடமுமாகும்.

**226**. தொடர் வாக்கியங்களுள் எழுவாய், வினையெச்சம் பெயரெச்சங்களையும் கொண்டு முடியும்.

உதாரணம்.

**கந்தன் வந்தால்** இந்தக் காரியம் நடக்கும்.

**கோபாலன் ஓட** துரைசாமி இடுப்புக்கட்டி அவனைத் தொடர்ந்தான்.

**நீ** இக்கல்லை இரண்டு துண்டு செய்து **பிளந்தால்** நான் ஐந்து ரூபாய் தருவேன்.

**நான் கொண்டுவந்த** புஸ்தகம் எங்கே.

[1] நன்னூல் முதலிய பழைய இலக்கணங்களில் இவ்விதிகளைத் தனித்து ஓர் இயலிற் கூறாமல் பல வியல்களிலும் பல சூத்திரங்களிடையிலும் எடுத்துரைத்திருக்கும்.

"அவற்றுள், முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும்
வினைமுதல் கொள்ளும் பிறவும் ஏற்கும்பிற." (நன்.)

**227.** முன்னிலை தன்மைகளில் திணை பால் வித்தியாசமின்றி ஒருமை பன்மை வித்தியாசம்மாத்திரமுள்ளதாதலால் பயனிலையும் அதற்கிசைய விருக்கவேண்டும்.

இது முற்றுவினைக்கு மாத்திரம் அமையும்.

**228.** (a) உயர்திணை ஒருமைப்பெயர்கள் உம்மால் இணைக்கப்பட்டு வரும்போது வினை பலர்பாலாகும்.

உ—ம். இராமனும், தவமணியும், கஜபதியும் வருகிறார்கள்.

(b) அஃறிணை யொருமைப்பெயர்கள், "உம்" முதலியவற்றால் இணைக்கப்பட்டால், வினை பலவின்பாலாகும்.

உ—ம். யானையும், குதிரையும், மாடும் வயலில் மேய்ந்தன.

"உயர்திணை யும்மைத் தொகைபல ரீறே." (நன்.)

**229.** என், ஆகு என்ற பகுதியடியாய்ப்பிறந்த தெரிநிலை வினைகளும், அல், இல் என்னும் பகுதிப்யடியாய்ப்பிறந்த குறிப்பு வினைகளும் இரண்டு எழுவாய் பெற்று வருதலும் உண்டு.

உ—ம். 1. இராமர் சக்கரவர்த்தியானார்.
2. வாத்தியார் என் பிள்ளை கெட்டிக்காரனென்றார்.
3. "பெற்றோரெல்லாம் பிள்ளைகளல்லர்."
4. தேவதாசன் மகனல்ல மைத்துனன்.

"ஆக்கப் பெயர்வினை ஆக்கமின் றியலா." (நன்.)

**230.** வாக்கியத்தில் இயல்பாய் எழுவாய் முன்னும், பயனிலை பின்னுமாய் வரும்.

உ—ம். இராஜா வருகிறார்.

பொருள் வற்புறுத்தும்பொருட்டு வழக்கிலும், இதற்காகவும் இசைக்காகவும் பாட்டுகளிலும், இவ்வொழுங்கு தவறி வருதல் சாதாரணம்.

உ—ம். (a) அடித்தான் இச்சிறுபையன்.
(b) "ஓடும்மீன் ஓட ஒருமீன் வருமளவும்
வாடி யிருக்குமாம் கொக்கு."
(c) முடித்தேன் உமது சித்தம் ஐயா உலகில் நான் போய்.

**231.** 2-ம் வேற்றுமை வினையைக்கொண்டு முடியும்.

உ-ம். இராமசாமி மரத்தை வெட்டினான்.

N.B.—வினைகொண்டு முடியும் என்ற இடத்தெல்லாம் வினையடியாய்ப் பிறந்த தொழிற்பெயரையும், வினையாலணையும் பெயரையும் கொண்டு முடியும் என்றும் அறிக.

உ-ம். கல்லைப் பிளக்குதல் கடினம்.
வானத்தை வில்லாய் வளைத்தவன் யார்?

**232.** செயப்படுபொருள் கொண்டு முடியும் வினையோடு அவ்வினையடியாகப் பிறந்த தொழிற்பெயர் வரின் அதுவும் இரண்டாம் வேற்றுமைச் செயப்படுபொருளாம்.

உ-ம். தேவராஜ் கனகமணியை ஓர் அடி அடித்தான்.

N.B.—இத்தொழிற்பெயரின் இரண்டாம் வேற்றுமை யுருபு விரிந்து வராது. (It is cognate object in English.)

**233.** 3-ம் வேற்றுமை வினைகொண்டு முடியும்.

உ-ம். தேவன் ஆதாமைச் செம்மண்ணால் சிருஷ்டித்தார்.
தேவன் ஏவாளை எலும்பால் உருப்பிடித்தார்.
என்னோடு வந்தவன் முனிசாமி.
மண்ணால் வீடுகட்டுதல் நன்றன்று.

**234.** 4-ம் வேற்றுமைக் கொடைப்பொருளும், பொருட்டுப் பொருளும் வினைகொண்டு முடியும்.

பகை, நேர்ச்சி, முறை, தகுதி, அதுவாதல் என்னும் பொருள்கள் பெயர்வினைகளில் ஒன்றைக்கொண்டு முடியும்.

உதாரணம் பெயரியலில் காண்க.

**235.** ஐந்தாம் வேற்றுமை எல்லைப்பொருள் பெயர்கொண்டு முடியும்.

உ-ம். மதுரையின் வடக்குத் திரிசிரபுரம்.

மற்றெல்லாப் பொருளிலும் 5-ம் வேற்றுமை வினைகொண்டு முடியும்.

உதாரணம் பெயரியலில் காண்க.

**236.** 6-ம் வேற்றுமை பெயரையேகொண்டு முடியும்.

உதாரணம் பெயரியலில் காண்க.

**237.** 7-ம் வேற்றுமை பெயரையாவது வினையையாவது கொண்டு முடியும்.

உதாரணம் பெயரியலில் காண்க.

"எல்லை இன்னும் அதுவும் பெயர்கொளும்
அல்ல வினைகொளும் நான்கே ழிருமையும்
புல்லும் பெரும்பாலு மென்மனார் புலவர்." (நன்.)

N.B.–சாதாரணமாய் வேற்றுமையேற்ற பெயர்கள், கொண்டு முடியும் வினைகளுக்கும் பெயர்களுக்கும் முன்னே நிற்கும். ஆறும் வேற்றுமை தவிர மற்றெல்லாவற்றிலும் உருபேற்ற பெயர்கள் கொண்டு முடியும் சொற்களுக்குப் பின்வருதல் வழக்கத்திலும் செய்யுளிலுமுண்டு.

உ–ம். (1) வெட்டினான் மரத்தை.
(2) உதைத்தான் காலால்.
(3) நான்போவேன் என் தம்பியோடு.
(4) விலை தருவேன் புஸ்தகத்துக்கு. &c.

**238.** 8–ம் வேற்றுமை, ஏவல் வியங்கோள் முன்னிலை வினைகளைக்கொண்டுமுடியும்.

இதுவும் கொண்டுமுடியும் வினைகளுக்கு முன்னே வருதல் சாதாரணமாயினும் இவ்விதி கடந்து செய்யுளிலும் வழக்கிலும் வருதலியல்பே.

உ–ம். இங்கு நிற்காதே தம்பீ.
ஓடிவா மகனே.

**239.** "உருபுபல வடுக்கினும் வினைவே றடுக்கினும்
ஒருதம் மெச்சம் ஈறுற முடியும்." (நன்.)

பெயரெச்சம் பெயரைக்கொண்டு முடியும்.
வினையெச்சம் வினையைக்கொண்டு முடியும்.

"எச்சப் பெயர்வினை யெய்து மீற்றினும்." (நன்.)

இவ்விதிகள் தெளிவானவை. உதாரணங்களும் போந்தமட்டும் பெயரியல் வினையியல்களில் எடுத்துக் காட்டியிருக்கின்றன.

**240.** எழுவாய்க்கும் பயனிலைக்கும் மத்தியிலும், பெயர்களுக்கும் பெயர்கள் கொண்டு முடியும் சொற்களுக்கும் மத்தியிலும், வேற்றுமையுருபேற்ற பெயர்களுக்கும் பெயரெச்சம் வினையெச்சங்களுக்

(c) மரூஉமொழி (Elision in words or syncōpe).

உ–ம். சோணாடு = சோழன் நாடு.
அருமந்த பிள்ளை = அருமருந்தன்ன பிள்ளை.
உந்தை = உன் தந்தை.
மலாடு = மலையமான் நாடு.

**246.** தகுதி வழக்கு (Artificial Colloquial language).
பெரியோரால் சரிதானெனக் கொள்ளப்பட்டது.

(a) இடக்கரடக்கல் (Polite form of indicating obscene idea).
இடக்கான வார்த்தையை நீக்கி, அதற்குப் பதிலாய் வேறுவார்த்தை உபயோகித்தல்.

உ–ம். பவ்வீ, for (Excrement) பீ.
கால்கழுவி வருகிறேன், for (I go for cleaning the buttocks.)
வெளியே, போகிறேன் for (I go to answer the calls of nature.)

(b) [1] மங்கலம் (Euphemism).
அமங்கலமானவற்றை மங்கலவாக்கா லுரைத்தல்.

உ–ம். திருமுகம் = Letter, carrying death news.
துஞ்சினார் = Died.
நன்காடு = Burial ground.

இவ்வார்த்தைகள் சாதாரணமாய் வேறர்த்தமும் தரும்.

திருமுகம் = கடவுள் தரிசனம்; இலட்சுமியின் முகம்.
துஞ்சினார் = நித்திரை செய்தார்.
நன்காடு = நல்ல காடு.

(c) குழூஉக்குறி (Code words of a guild).
ஒரு கூட்டத்தார் தமக்குமாத்திரம் தெரியும்பொருட்டு பிறர் அறியாதிருக்க வழங்கிவரும் சொற்கள்.

உ–ம். சொல்விளம்பி = (Toddy) கள்.
பிஞ்சு வெள்ளை = கால் ரூபாய்.
கறுப்புக் குதிரை யேறியிருக்கிறான் = சாராயம் குடித்திருக்கிறான்.

[1] இத்தக்கள் சகுனம் நாள் முதலியன பார்க்கிறவர்கள் ஆகையால் சில பதங்களைத் துர்ச்சகுனம் எனச் சொல்லுவார்கள். இதை நீக்கி மறுவார்த்தைகளால் அவற்றைத் தெரிவிப்பது வழக்கம். இது மங்கலம்.

N.B.—English grammarians will take all the but five the irst as idioms, but Tamil grammarians divide this minutely.

"இலக்கண முடைய திலக்கணப் போலி
மரூஉவென் றாகும் மூவகை யியல்பும்
இடக்கர டக்கன் மங்கலம் குழூஉக்குறி
எனுமுத் தகுதியோ டாறும் வழக்கியல்." (நன்.)

247. உயர்திணை அஃறிணைகளுக்கும் பால்களுக்கும் பொதுவான பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும், பின்முன் வருகிற வார்த்தைகளால் பொதுமை நீங்க இன்ன திணை, இன்ன பாலென அறியப்படும். இப்படி விளக்கும் சொற்கள் குறிப்புச்சொற்களெனப் படும்.

உ—ம். 1. இம்மாடு ஒரு படிபால் கறக்கும்.
மாடு பொதுமை நீங்க, (பசு) பெண்பாலைக் குறிப்பித்தது.

2. ஆயிரம்பேர் யுத்தஞ்செய்தார்கள்.
ஆண் பெண்களுக்குப் பொதுவான பேர் ஆண்களைக்குறிப்பித்தது.

குதிரை வந்தது.
குதிரை வந்தன.
இவன் நீரோ என்பவன் (மனுஷன்).
இது நீரோ என்றது. (நாய்.) (Nero, A. Dog.)

"இருதிணை யாண்பெணு ளொன்றனை யொழிக்கும்
பெயரும் வினையுங் குறிப்பி னானே." (நன்.)

248. (a) சில வினைகள் பொதுவாகவும், சில அப்பொது வினைகளின் திரிபுகளைப் பிரித்துக் குறிக்கிறவைகளாகவுமிருக்கும்.

உ—ம். மிசைந்தார், அயின்றார் (Took in, ate.) பொதுவினை.

சோறு உண்டார்.
மிட்டாயி தின்றார்.
தேன் நக்கினார். } இவைகள் சிறப்புவினை.
பால் குடித்தார்.
இரசம் பருகினார்.

பொதுவினை, அணிந்தார், தாங்கினார் } என்பவை.

சிறப்புவினை. { கிரீடம் தரித்தார்.<br>பூ முடித்தார்.<br>மாலையிட்டார்.<br>வஸ்திரம் உடுத்தினார். &c.

"பொதுப்பெயர் வினைகளின் பொதுமை நீக்கும்
மேல்வரும் சிறப்புப் பெயர்வினை தாமே." (நன்.)

(b) இப்படியே தத்தம் சிறப்பு வினைகள் ஏற்றுவரத்தகும் சிறப்புப்பெயர்களுமுண்டு.

உ—ம். 1. சாதம் வட்டித்தார்.
2. ஏற்றம் இறைத்தான்.

இது தமிழ் நடை யியல்பு; இது அனுபோகத்தாலன்றி அறிய முடியாதவை.

சிறப்புப்பெயர்கள் கலந்துவந்தால் தனித்தனியே சிறப்புவினையைக் கூட்டி முடிக்கவேண்டும்; அல்லது பொதுவினை சார்த்தி முடிக்கவேண்டும்.

உ—ம். இவர் சிலநாள் சோறும், சிலநாள் பாலும், சிலநாள் நீரும், சிலநாள் சருகும் அயின்றார்.

அல்லது, இவர் சிலநாள் சோறுண்டார்.
,, சிலநாள் பால் குடித்தார்.
,, சிலநாள் நீர் பருகினார்.
,, சிலநாள் சருகு தின்றார் என வரலாம். இது தமிழ்மரபு.

"வேறுவினைப் பல்பொருள் தழுவிய பொதுச்சொலும்
வேறவற் றெண்ணுமோர் பொதுவினை வேண்டும்." (நன்.)

**249. Elliptical Expressions.**—ஒரு வாக்கியத்துள் வார்த்தைகள் தொடர்ந்து வருவது தொடர் எனப்படும்.

உ—ம். இராஜன் இடும் கட்டளையைக் கைக்கொண்டு நடப்பவன் சுகமடைவான்.

இப்படி வார்த்தைகள் தொடர்ந்து வரும்பொழுது இலக்கணப்படி பூரண முடிவு பெறாமல் சில குறைந்து வரும்.

சுடுசாதம் சாப்பிட்டால் நல்லது என்பது, சுடுகின்ற, சுட்டசுடும் சாதத்தைச் சாப்பிட்டால் நல்லது என்று இலக்கணப்படி முடிவுபெறும்.

ஆயினும் வழக்கத்தில் இப்படிக் குறைந்து வருவது சாதாரணம். இவைகளுக்குத் தொகைநிலை யென்று பேர்.

"பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளி னவற்றி னுருபிடை
ஒழிய விரண்டு முதலாத் தொடர்ந்தொரு
மொழிபோ னடப்பன தொகைநிலைத் தொடர்சொல்." (நன்.)

**250**. இத்தொகை ஆறு.

"வேற்றுமை வினைபண் புவமை யும்மை
அன்மொழி யெனவத தொகையா றாகும்." (நன்.)

**251**. வேற்றுமைத் தொகை (Ellipsis of case endings).
2-ம், 3-ம், 4-ம், 5-ம், 6-ம், 7-ம் வேற்றுமை யுருபுகள் விரிக்கப்படாமல் வருவது வேற்றுமைத் தொகையாம்.

உ-ம். மரம் வெட்டினான்.
தலை வணங்கினான்.
என் சிநேகிதர் மகள்.
மலைவீழருவி.
தம்பி புஸ்தகம்.
நிலக்கிழங்கு.

"இரண்டு முதலா மிடையா றுருபும்
வெளிப்பட லில்லது வேற்றுமைத் தொகையே." (நன்.)

**252**. இவ்வேற்றுமைத் தொகை வாக்கியத்தில் அடுக்கிய வார்த்தைகளின் இடையில் விசேஷித்து வரும்.

இரண்டாம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் தொகையாக வாக்கிய முடிவில் வரலாம். மற்றவைகள் வாக்கிய முடிவில் தொகையாய் வருத லரிது.

உ-ம். வெட்டினார் மரம்.
இக்கூகை இருந்தது குன்றத்து.

"ஐயும் கண்ணும் அல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகாஅ விறுதி யான." (தொல்.)

**253**. சிலவேளை வேற்றுமை யுருபுமாத்திரமல்ல, அதுகொண்டு முடியும் சொல்லும் தொக்கி நிற்கும். இது உருபும் பயனும் உடன் தொக்க தொகை யெனப்படும்.

உ-ம். பொற்றாலி = பொன்னால் செய்யப்பட்ட தாலி.
சமையலரிசி = சமையலுக்கு வைக்கப்பட்ட அரிசி.
மலையருவி = மலையினின்று விழும் அருவி.
மலைக்கழுகு = மலையில் வாழும் கழுகு.

N.B.—ஆறாம் வேற்றுமையில் இவ்வுருபும் பயனும் உடன் தொக்க தொகை வராது.

**254**. Ellipsis of Verbs.—வினைத்தொகை. வினைப்பகுதிமாத்திரம் நின்று, காலங்காட்டும் இடைநிலையும் விகுதிகளும் வராமலிருக்கும் பெயரெச்சம், வினைத்தொகையாம்.

உ-ம். சுடு சோறு.
ஆடு பாம்பு.

இதை விரிக்கும்போது சுட்டசாதம், சுடுகிற சாதம், சுடும் சாதம் என மூன்று காலத்திலுமாம், &c.

"காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை. (நன்.)

**255**. Ellipsis of qualifying words. — பண்புத்தொகை. பண்பை விளக்கும் ஆன, ஆகிய, உள்ள என்ற சொற்கள் தொகையாய் நின்றால் பண்புத் தொகையாம். இரண்டு பெயர்கள் ஒரே பொருளுக்கு வந்தாலும் பண்புத் தொகையே. இது இருபெயரொட்டுப் பண்பு எனப்படும்.

உதாரணம்.

செந்தாமரை, கரும்புனல், வட்டமேசை—பண்புத்தொகை; சாரைப்பாம்பு, வேப்பமரம்—இருபெயரொட்டுப் பண்புத்தொகை

• பண்பு நான்குவகையாம். அவையாவன:

உதாரணம்.

1. வண்ணம் ———————— கருங்குதிரை, செந்தாமரை.
2. வடிவு ———————— வட்டப்பலகை, சதுரக்கல்.
3. அளவு ———————— ஒருபொருள், முக்குணம்.
4. சுவை ———————— துவர்க்காய், தீங்கரும்பு.

"பண்பை விளக்கும் மொழிதொக் கனவும்
ஒருபொருட் கிருபெயர் வந்தவுங் குணத்தொகை." (நன்.)

"வண்ணஞ் சுவையே வடிவே யளவே
யென்பவும் பிறவு மிதன்குண நுதலி
வருஉ மியற்கை பண்பின் றொகையே." (மு. வீ.)

பிற என்றதனுல் ஈகைக்குணம் என்றாற்போலுள்ள தொழிற்பண்பும் அமையும்.

**256.** Ellipsis of words expressing similarity.—உவமையுருபு தொக்கி நின்றால் உவமைத்தொகை.

உ-ம். மழைக்கை.
துடியிடை.

"உவம வுருபில துவமத் தொகையே." (நன்.)

"போலப் புரைய வொப்ப வுறழ
மானக் கடுப்ப வியைய வேய்ப்ப
நேர நிகர வன்ன வின்ன
என்பவும் பிறவு முவமத் துருபே." (நன்.)

N.B.—துடியிடை யென்பது துடிபோல் இடை என விரித்தால் உவமைத்தொகை. துடியைப்போலிருக்கின்ற இடையென விரித்தால் இரண்டாம் வேற்றுமை யுருபும் அதன் பயனும் தொகுத்து வருதலால் உருபும் பயனும் உடன்தொக்க இரண்டாம் வேற்றுமைத் தொகையாம்.

**257.** Ellipsis of Conjunctions.—உம்மைத்தொகை. கூட்டி எண்ணப்படுவதற்கு உபயோகமான உம், தொக்கியிருந்தால் உம்மைத் தொகை யெனப்படும்.

உ-ம். 1. ஆயிரத்து முந்நூற்று இருபத்தைந்தேகால் ரூபாய்.
2. இரண்டரைப் பலம்.
3. மூன்றேமுக்கால் படி.
4. இருபத்தைந்து கெஜம்.
5. இராப் பகல்.
6. அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் வந்தார்கள்.

N.B. இரண்டரை தொகை. இரண்டும் அரையும் விரி. &c.

"எண்ண லெடுத்தன் முகத்த னீட்டல்
எனுநான் களவையு ளும்மில தத்தொகை." (நன்.)

எண்ணல் = தொகைப்படுத்தல் (Numbering).
முகத்தல் = அளத்தல், உப்பு நெல்போல (Measuring).
நீட்டல் = (Linear, square and cubic measures).

**258.** அன்மொழித் தொகை (Paraleipsis).

வார்த்தையில் கண்டிராத வேறோர் பதம் தொக்கியிருப்பது. இது மேற்கூறிய ஐந்து தொகைகளில் ஒன்றின்மேல் மாத்திரம் வரும்.

N.B.—இது இங்கிலீஷில் ஒரு அலங்காரமாம்.

உ—ம். பூங்குழல் = பூவையுடைய குழலையுடைய **பெண்.**
பூவையுடைய குழல்—வேற்றுமைத்தொகை.

ஆகையால் பூங்குழல்.—வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. பெண் வாக்கியத்தில் இல்லாத மொழி.

கிள்ளி குடி = கிள்ளியினுடைய குடியிருக்குமூர்.—இதுவும் வேற்றுமைத் தொகைப்புறத்து பிறந்த அன்மொழித் தொகை.

தாழ்குழல் = தாழ்ந்த, தாழ்கிற, அல்லது தாழும் குழலுடைய பெண்.—வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகை.

கிளிமொழி = கிளிபோல மொழியையுடைய **மாது.**—உவமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

கருங்குழல் = கருமையான கூந்தலையுடைய **பெண்.**—பண்புத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

"ஐந்தொகை மொழிமேற் பிறதொக லன்மொழி." (நன்.)

**259.** தொக்கிவந்த தொடர்மொழிகளை, பின்முன் வரும் வார்த்தைகளின் பொருளை அனுசரித்து, விரிக்கவேண்டும். இரண்டு வார்த்தைகள் மாத்திரம், தொகைத்தொடராய் எழுதப்பட்டு, பின்முன் னிற்கும் பதங்கள் தெரியாதபோது பலவகையாய்ப் பொருள்படுத்துவதற்கிடமாகும். இரண்டுமுதல் ஏழுபொருள்வரை சொல்லலாம். சில வேளைகளில் ஏழுக்கும் அதிகமாகும்.

உதாரணம்.

| | | |
|---|---|---|
| தெய்வ வணக்கம் = | தெய்வத்தை வணங்கும் வணக்கம்<br>தெய்வத்துக்கு வணக்கம். | 2 பொருள். |
| தாழ்குழல் = | தாழ்ந்த குழல்<br>தாழ்ந்த குழலையுடைய மாது. | 2 பொருள். |
| பொன்மணி = | பொன்னும் மணியும்<br>பொன்னாகிய மணி<br>பொன்னாலாகிய மணி<br>பொன்னோடுசேர்ந்த மணி<br>பொன்னே மணியாயிற்று<br>பொன்னின்கண் மணி | 6 பொருள். |

சொற்பொருள் = சொல்லை விளக்கும்பொருள்
சொல்லாலாய பொருள்
or சொல்லாலறியப்படும் பொருள்
சொல்லுக்குப் பொருள்
சொல்லினுடைய பொருள்
சொல்லின்கண் பொருள்
சொல்லாகிய பொருள்
சொல்லே பொருள்—ஆயது. } 7 பொருள்.

"தொக்குழி மயங்கு நவிரண்டு முதலேழ்
எல்லைப் பொருளின் மயங்கு மென்ப." (நன்.)

**260.** இப்படி எழுத்து வித்தியாசமின்றி இயலும் தொடர்மொழிக்குப் பல பொருள் வருமாதலால் பொருளின்னதென்று வார்த்தைகளை அசை பிரித்திசைக்கும் விதம் முதலியவற்றால் அறியலாம். ஒலிவடிவன்றி வரிவடிவில் மாத்திரம் இருக்குமாயின் இத்தொடர்கள் பல தாற்பரியங்களுக்கு இடமாகும்.

"எழுத்திய றிரியாப் பொருடெரி புணர்மொழி
இசைத்திரி பாற்றெளி வெய்து மென்ப." (நன்.)

**261.** சில வேளைகளில் மயக்கம் தெளியக்கூடாமலிருக்கும். பின்முன் வரும் வாக்கியத்தின் பொருள் நோக்கி "தொகையாய் வந்த தொடர் சொல்" இன்ன கருத்துத்தானென்று நிச்சயிக்கவேண்டும்.

இதற்குதவியாக ஓர் உபாயஞ் சொல்லப்படும்.

இரண்டு பெயர்கள் ஒன்றித்து வந்து முன்னின்றபெயர் மனுஷன் பெயரோ இடப்பெயரோ என்று மலைவு கொள்ளுகையில் இருபெயருக்கும் நடுவில் வந்தது மெல்லொற்றாயின், ஆளின் பெயரெனவும், வல்லொற்றாயின் இடத்தின் பெயரெனவுந் துணியலாம்.

உ—ம். வடுகங்கண்ணன் = வடுகன் என்றது மனுஷன் பெயர்.
வடுகக்கண்ணன் = வடுகம் என்றது நாட்டின் பெயர்.

அப்படியே துளுவஞ்சாத்தன், துளுவச்சாத்தன் என்பவையும்.

"வல்லொற்று வரினே இடத்தொகை யாகும்
மெல்லொற்று வரினே பெயர்த்தொகை யாகும்." (நன்.)

**262.** Repetition of words—For Emphasis. பயம், கோபம், அன்புமுதலிய மனோபாவங்களைத் தெளிவாய் உணர்த்துவதற்காக ஒரேவார்த்தை இரண்டுதரமும், சிற்சிலவேளைகளில் மூன்று

நாலுதரமும் தொடுத்துச் சொல்லப்படும். இதற்கு அடுக்குத்தொடர் என்று பேர்.

உ—ம். பாம்பு, பாம்பு; தீ, தீ, தீ; போ, போ, போ, போ.

N.B.—இவைகள் பாட்டில் வரும்போது மனோபாவங்களைமாத்திரம் காட்டாது. பாட்டில் இசை குறைந்தால் முடிப்பதற்காகவும் அர்த்தமில்லாமல் வரி நிறைப்பதற்காகவும் வரும்.

"அசைநிலை பொருணிலை யிசைநிறைக் கொருசொல்
இரண்டு மூன்றுநான் கெல்லை முறையடுக்கும்." (நன்.)

N.B.—பொருணிலை = பயம்முதலிய பொருளைத் தந்து நிற்றல்.

**263**. Repetition of words—Idiomatic usage. ஆனால் சில பதங்கள் தாமே இரட்டை இரட்டையாய் வந்துதான் பொருள்தரும். அவைகளில் ஒன்றை நீக்கினால் பொருளிராது; சுவையுமிராது. இவைகள் **இரட்டைக்கிளவி** யெனப்படும்.

உ—ம். கலகலத்த மனிதன்; வானம் **மடமட**வென்கிறது.
இச்சிறுவன் **தறு தறு**வென்று உபத்திரவிக்கிறான்.

"இரட்டைக்கிளவி யிரட் டிற்பிரிந் திசையா." (நன்.)

N.B.—அடுக்குத்தொடர் பிரிக்கப்பட்டாலும் பொருள் தரும். இரட்டைக்கிளவியோ பிரித்தால் பொருள் கொடாது.

**264**. தொகாநிலையாய் எப்போதும் விரிந்துவருந் தொடர்கள், முற்று, பெயரெச்சம், வினையெச்சம், முதல்வேற்றுமை, எட்டாம் வேற்றுமை, உருபு விரிந்த ஆறுவேற்றுமைகள், இடைச்சொல், உரிச்சொல், அடுக்குத்தொடர் என்பவைகளே.

"முற்றீ ரெச்ச மெழுவாய் விளிப்பொருள்
ஆறுரு பிடையுரி யடுக்கிவை தொகாநிலை." (நன்.)

**265**. சொற்களுக்குப் பொருள் வெளிப்படையாயுமிருக்கும், கருகலாய்க் குறிப்பினால் அறியத்தக்கதாயுமிருக்கும்.

குறிப்புச்சொற்கள் பின்வருவன.

"ஒன்றொழி பொதுச்சொல் விகாரந் தகுதி
யாகு பெயரன் மொழிவினைக் குறிப்பே
முதறொகை குறிப்போ டின்ன பிறவும்
குறிப்பிற் றருமொழி யல்லன வெளிப்படை." (நன்.)

1. ஒன்றொழி பொதுச்சொல் (Vide Sections. **247** & **248**).

2. விகாரம். உ-ம். குறுத்தாட்பூதம். குறுந்தாட்பூதம் என்பது விகாரத்தால் குறுத்தாட்பூதம் என நிற்கும்போது அர்த்தம் அறிதற்குக் கருகலாகும்; குறிப்பினால் அறியவேண்டியதாயிற்று.

மரைமலர் சூடினான் என்பதில் தாமரை என்பது விகாரத்தால் "மரை" என்றாயது. (புணரியல், செய்யுள் விகாரம் பார்.)

3. தகுதி வழக்கு (Vide Section **246**).

4. ஆகுபெயர் (Vide Section **61**).

5. அன்மொழித்தொகை (Vide Section **258**).

6. குறிப்புவினை (Vide Section **122**). திணை பால் இடம் குறிப்பினால் அறியவேண்டியது.

7. முதற்குறிப்பு. பாட்டு வாசகங்களின் முதல் வார்த்தை மாத்திரம் வருவது; இது முழுப்பாட்டையும் வாசகத்தையும் குறித்துக் காண்பிக்கும்.

உ-ம். 1. "ஆவியின் கனியோவென்றால்" என்பதில் அடக்கமாயதுதான் கிறிஸ்தவ இலட்சணம். "ஆவியின் கனியோவென்றால் அன்பு, சந்தோஷம், நீடிய பொறுமை, நற்குணம், விசுவாசம், சந்தோஷம், இச்சையடக்கம்" என்ற கலாத்தியர் நிருபத்திலுள்ள சுலோகம் இங்கு குறிப்பிக்கப்பட்டிருக்கிறது.

2. "அறத்தாறிதுவென வெள்ளைக்கிழிப்பு" என்ற காரிகையில் குறள் வெண்பாவுக் குதாரணம், "அறத்தாறிதுவென" என்னுந் துவக்கத்தையுடையது.

அதாவது,

"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை."

8. தொகைக் குறிப்பு. எண்கள் மாத்திரம் சொல்லப்படும்போது அவ்வெண்களால் குறிக்கப்பட்ட வஸ்துக்களைக் குறிப்பால் அறிய வேண்டும்.

உ-ம். (a) துரோபதையோடு ஐவரும் வந்தார். இங்கு ஐவர் என்பது பஞ்சபாண்டவரைக் குறித்தது.

(b) ஆறிலும் சாவு நூறிலும் சாவு. இங்கு ஆறும் நூறும், இளமை மூப்புகளைக் குறித்தன.

(c) எட்டும், இரண்டும் அறியாத மூடரப்பா. இதற்கு அ, உ என்பதின் மந்திரார்த்தத்தைத் தெரிந்து நிஷ்டைநிலை அறியாதவர் என்பது பொருளாகும்.

(d) ஐந்து கல்லால் ஒருகோட்டை—அந்த ஆனந்தகோட்டைக்கு ஒன்பதுவாசல் என்பதில் "ஐந்து கல்லால் ஒரு கோட்டை" என்பதற்குப் பிரிதிவு, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்ற ஐம்பூதங்களாலாய தேகம் என இந்துமதக் கொள்கைப்படி அர்த்தமாதல் காண்க.

இதை ஐம்பொறி புலன்களுள்ள மாளிகை எனப் பொருள் படுத்துவாருமுண்டு.

**266.** Idiom = தமிழ்நடை, மரபு.

சிலவேளைகளில் ஒரேவார்த்தை பலபொருளைத் தருமாதலால் குறித்தபொருள் இன்னதென்பது பின்முன் வரும் வார்த்தைகளால் அறியலாம். அப்படி அறியக்கூடாத நிலையில் வாக்கியம் நிற்குமாயின் சிறப்பு வார்த்தைகளை யேற்றி விளங்கக் கூறவேண்டியது.

உ—ம். மா; மா, மரம், வண்டு, லட்சுமி, பெரிய, குதிரை எனப் பலபொருள் தந்தது.

மாப்பிசைந்தான்; மா = flour.

மா பூத்தது; மா = மரம்.

மாவிழுந்த நொச்சிமரம்; மா = வண்டு.

சேனை யானை தேர் மாக்களோடு வந்தான்; மா = குதிரை.

மாமறுத்த மலர்மார்பன் = லட்சுமியைத் தாங்கியிருக்கும் மார்பையுடைய விஷ்ணு. மா = லட்சுமி.

மாவேறினான் என்றால் மரமோ, குதிரையோ என மயங்கவேண்டுமே. அது நீக்கி மாமர மேறினான் என்றும், பாய்மா வேறினான் என்றும் சொல்வதால் பொருள் விளங்கும்.

மேற்கூறியவைகளும் குறிப்பினால் பொருள் அறியவேண்டியவைகள்.

"வினைசார் பினமிடம் மேவி விளங்காப்
பலபொரு ளொருசொல் பணிப்பர்சிறப் பெடுத்தே." (நன்.)

**267.** வாக்கியத்தில் வரும் வார்த்தைகள் இன்னின்னதைத் தழுவி வந்தது தழுவாது வந்தது என்றும், தொகையோ தொகாநிலையோ என்றும் வகைப்படுத்தி விரித்துச்சொல்வது அவசியம்.

தொடுத்துவந்த இரண்டு வார்த்தைகளில் முதல் நின்றது இரண்டாவதைக்கொண்டு முடியுமானால் தழுவுதொடர்; கொண்டு முடியா

விட்டால் **தழாத்தொடர்.** முதல் நின்ற வார்த்தையின் இலக்கணப் பேரிட்டுத் தழுவுதொடர், தழாத்தொடர் எனக் கூறவேண்டியது.

உ—ம். பூர்வம், மகததேசத்தின்கண் புஷ்பபுரி யென்றும் பாடலி புரமென்றும் பெயர்பெற்ற நகரமொன்றுண்டு.

**பூர்வம் மகதம்.**—ஏழாம் வேற்றுமைத் தொகைநிலைத் தழாத் தொடர்.

**மகததேசத்தின்கண்.**—இருபெயரொட்டுப்பண்புத் தொகை நிலைத் தழுவுதொடர்.

**தேசத்தின்கண் புஷ்பபுரி.**—ஏழாம் வேற்றுமைத் தொகாநிலைத் தழாத்தொடர்.

**புஷ்பபுரிஎன்றும்.**—எழுவாய்த் தழுவுதொடர்.

**என்றும்பாடலிபுரம்.**—விரிஉம்மை வினையெச்சத்தழாத்தொடர்.

**பாடலிபுரம் என்றும்.**—எழுவாய்த் தழுவுதொடர்.

**என்றும்பெயர்.**—விரி உம்மை வினையெச்சத் தழாத்தொடர்.

**பெயர் பெற்ற.**—இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத் தழுவுதொடர்.

**பெற்ற நகரம்.**—பெயரெச்சத் தழுவுதொடர்.

**நகரம் ஒன்று.**—பண்புத் தொகைநிலைத் தழுவுதொடர்.

**ஒன்று உண்டு.**—எழுவாய்த் தழுவுதொடர்.

**268. தொடர்கள் இருவகையாம்.**

(a) வேற்றுமைத்தொடர்.—2–ம், 3–ம், 4–ம், 5–ம், 6–ம்,7–ம் வேற்றுமை ஆக ஆறுரும்.

(b) அல்வழித்தொடர்—
- வினைத்தொகை
- பண்புத்தொகை அல்லது விரி
- உவமைத்தொகை அல்லது விரி
- உம்மைத்தொகை அல்லது விரி
- அன்மொழிதொகை
- எழுவாய்
- விளி
- பெயரெச்சம்
- வினையெச்சம்

தெரிநிலை முற்று
குறிப்பு முற்று
இடை
உரி
அடுக்கு ஆக 14 ஆம்.

"வேற்றுமை ஐம்முத லாறு மல்வழி
தொழில்பண் புவமை யும்மை யன்மொழி
எழுவாய் விளியீ ரெச்சமுற் றிடையுரி
தழுவு தொடர்அடுக் கெனவீ ரேழே." (நன்.)

இப்படி தொடர் சொன்னபிறகு ஒவ்வொரு வார்த்தைக்கும் இலக்கணம் கூறவேண்டியது.

**269.** இலக்கணங் கூறும் விதம்.—Mode of parsing.

**பூர்வம்.** காலப்பெயர், அஃறிணை, ஒன்றன்பால், படர்க்கை, ஏழாம்வேற்றுமைத்தொகை, காலப்பொருள்; "உண்டு" என்னும் குறிப்பு வினைமுற்றைக்கொண்டு முடிந்தது.

**மகததேசத்தின்கண்.** (மகதமென்ற தேசத்தின்கண்.) இருபெயரொட்டுப் பண்புப்பெயர் இடப்பெயராயிற்று; அஃறிணை, ஒன்றன்பால், படர்க்கை, ஏழாம்வேற்றுமை விரி, இடப்பொருள்; உண்டு என்பதைக்கொண்டு முடிந்தது.

**புஷ்பபுரி.** இருபெயரொட்டுப் பண்புப்பெயர் இடப்பெயராயிற்று; அஃறிணை, ஒன்றன்பால், படர்க்கை, எழுவாய் வேற்றுமை; "என்றும்" என்பதைக்கொண்டு முடிந்தது.

**என்றும்.** என என்ற இடைச் சொல்லடியாய்ப்பிறந்த செய்வினையான தெரிநிலை இறந்தகால வினையெச்சம்; "பெற்ற" என்பதைக்கொண்டு முடிகிறது.

**பெயர்.** பொருட்பெயர்; அஃறிணை, ஒன்றன்பால், படர்க்கை, இரண்டாம் வேற்றுமைத்தொகை, செயப்படுபொருள்; "பெற்ற" என்பதைக்கொண்டு முடிந்தது.

**பெற்ற.** செய்வினையான தெரிநிலை இறந்தகாலப் பெயரெச்சம்; "நகரம்" என்பதைக்கொண்டு முடிந்தது.

நகரம். இடப்பெயர்; அஃறிணை, ஒன்றன்பால், படர்க்கை, எழுவாய்; "ஆகிய" என்னும் தொக்கி நின்ற பண்பைவிளக்கும் பெயரெச்சத்தைக்கொண்டு முடிந்தது.

ஒன்று. எண்ணுப்பெயர்; அஃறிணை, ஒன்றன்பால், படர்க்கை, எழுவாய்; "உண்டு" என்பதைக்கொண்டு முடிந்தது.

உண்டு. அஃறிணை, ஒன்றன்பால், படர்க்கை, குறிப்புவினைமுற்று; ஒன்று என்பதற்குப் பயனிலையாய் நின்றது.

## GENERAL REMARKS, பொதுக்குறிப்புகள்.

**270.** இலக்கணிகள் எச்சங்கள் பத்துவகை யென்பார்கள். அவை எவையெனில்,

பெயரெச்சம். (Vide Section **162**).

வினையெச்சம். (Vide Sections **163** & **164**).

உம்மையெச்சம். உம் தொக்கி நிற்பது; உ—ம். இரண்டேகால். (Vide Section **257**.)

சொல்லெச்சம். "சொல்" என்னும் வினை தொக்கி நிற்பது.

உ—ம். 1. நீபோ என்றான்=நீபோ என்று சொன்னான்.

2. "இசையா தொருபொரு ளில்லென்றல் யார்க்கும் வசையன்று." இதில் என்றல் = என்று சொல்லல்.

பிரிநிலையெச்சம். உ—ம். சாத்தனே கொண்டான். (See meanings of எ, ஒ, இடையியல், Sections **189**, **190**, &c.)

ஒழியிசையெச்சம். உ—ம். "வருகதில்லம்ம." இதில் வந்தாலின்னின்ன செய்வானென்பதுஒழிந்து நிற்றல்காண்க. (See இடையியல் Section **190**, **196**, &c.)

[1]எதிர்மறையெச்சம். (Vide இடையியல், Section **193**).

---

[1] "எதிர்மறை யெச்சம் எதிர்மறை கோடலும்
பிரிநிலை யெச்சம பிரிநிலை கோடலும
ஒழியிசை யெச்சம ஒழியிசை கோடலும்
உம்மை யெச்ச மிருவீற் றானும்
தன்வினை யொன்றிய முடிபா குதலும்
சொல்லெ னெச்சம் வினையொடு முடிதலும்
எஞ்சிய மூன்று மேல்வந்து முடிக்கும்
எஞ்சு பொருட்கிளவி யிலவா மவைதாம்
தத்தங் குறிப்பி னெச்சஞ் செப்பலும
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே." (இ. விளக்கம்.)

**எனவேனெச்சம்.** உ–ம். காரெனக் கறுத்தது. (See இடையியல், Section **194**).

**இசையெச்சம்.** பெரும்பான்மை பாட்டுகளிலும் சிறுபான்மை வழக்கிலும் வாக்கியத்துள், வராத வார்த்தை ஒன்றை வருவித்துப் பொருள் சொல்லும்போது இப்படி வருவிக்கப்பட்டது இசையெச்சமாம்.

உ–ம். 1. "அற்றகுளத்தி னறுநீர்ப்பறவைபோல்."

அற்ற=(தண்ணீர்) அற்ற; "**தண்ணீர்**" இசை யெச்சம்.

2. "**உ**ற்றவிடத்தி லுயிர்வழங்குந் தன்மையோர்."

உற்ற=(அவமானம்) சம்பவித்த, நேர்ந்த; "**அவமானம்**" இசையெச்சம்.

**குறிப்பெச்சம்.** ஒன்றொழி பொதுச்சொல், &c. (Vide Section **265**, &c.)

"பெயர்வினை யும்மைசொற் பிரிப்பென வொழிபிசை
எதிர்மறை யிசையெனுஞ் சொல்லொழி பொன்பதும்
குறிப்புந் தத்த மெச்சங் கொள்ளும்." (நன்.)

**271.** இலக்கணத்துக்கு மாறாய் வருவதும், தமிழ் மரபு அல்லது தமிழ் நடைக்கு மாறாய் வருவதும் **வழு** எனப்படும்.

இவ்வழு ஏழுவகைப்படும்.

"திணையே பாலிடம் பொழுது வினாவிறை
மரபா மேழும் மயங்கினும் வழுவே." (நன்.)

1. **திணை வழு.** அஃறிணையை, உயர்திணையாயும், உயர்திணையை அஃறிணையாயும் பேசுதல்.

சில சமயங்களில் இப்படி வரலாம். இது திணைவழுவமைதி. (See பெயரியல்.)

2. **பால்வழு.** ஆணைப் பெண்ணாகவும், பெண்ணை ஆணாகவும், ஒன்றைப் பலவாகவும் மாற்றி இசைத்தல் பால்வழு. இப்படி சிலவேளை வரலாம். அப்படி வரின் அது பால்வழுவமைதி. (See பெயரியல்.)

3. **இடவழு.** ஓர் இடம் மற்றதாக மயங்கி, தன்மை முன்னிலையாகவும், முன்னிலை தன்மை படர்க்கையாகவும் வருவது. இப்படி சிலவேளை அமையும். இது இடவழுவமைதி யெனப்படும். (See பெயரியல்.)

4. **காலவழு.** ஓர் காலம் மற்றக்காலமாக வருதல். இது சிலவேளை தகுதியாதலின் காலவழுவமைதியாம். (See வினையியல்.)

[1] **272**. 5. வினாவழு. கேள்வி கேட்டால் தனக்குத் தெரியாத போதும், பிறர் உத்தரம் சொல்வார் என்று தெரிந்தும், தெளிந்த சொற்களோடும் அக்கேள்வியைக் கேட்பது நியதி என்பது தமிழ் மரபு. இது சிலவேளை மாறிவருத லியற்கையாதலால் இதை வினா வழுவமைதி என இலக்கணிகள் சொல்வார்கள்.

(*a*) அறிவு வினா. வாத்தியார் பிள்ளையைக் கேட்கையில் தனக்கு உத்தரம் தெரிந்தே கேட்பார்.

உ—ம். குற்றியலுகரமென்றா லென்ன? .

(*b*) **அறியா** வினா. மாணாக்கன் வாத்தியாரைக் கேட்பது.

உ—ம். வழுவென்றா லென்ன?

(*c*) ஐயுறல் அல்லது **சந்தேக** வினா. உ—ம். நான் எழுதியது சரியா பிழையா?

(*d*) **கொளல்** வினா. வாங்கும்பொருட்டுக் கேட்பது.

உ—ம். இவ்வேஷ்டி நாலு ரூபாய்க்குக் கொடுப்பீரா?

(*e*) **கொடை** வினா. ஒன்றைக் கொடுக்கும்படி யுத்தேசித்துக் கேட்பது.

உ—ம். அப்பா உனக்கு வயிறு பசிக்குதோ? சாப்பிடு.

(*f*) **ஏவல்** வினா. ஏவி வேலையிடுவதற்காய்க் கேட்பது.

உ—ம். தூங்கவா போகிறாய்? இதை எழுது.

"அறிவறி யாமை யையுறல் கொளல்கொடை
ஏவ றரும்வினா வாறு மிழுக்கார்." (நன்.)

**273**. 6. **விடைவழு**. உத்தரங் கொடுப்பதும், நேராய்க் கேட்ட கேள்விக்குச் சரியாய்த் தெளிந்தநடையா யிருக்கவேண்டும். இது மாறிவரினும் அமையலாம். இதை இலக்கணிகள் விடைவழுவமைதி என்பார்.

(*a*) **சுட்டு** விடை. சுட்டுச்சொல்லால் மாத்திரம் உத்தரம் சொல்லல்.

உ—ம். **வினா**. மதுரைக்கு வழியெப்படி?
**விடை**. இது.

[1] It is the peculiarity of Tamil grammarians to speak thus of questions and answers. The matter is properly speaking quite out of the province of grammar. Yet out of respect to authorities they are quoted. The readers can find any number of examples in colloquial use.

(b) நேர் விடை. சரியாய் உத்தரஞ்சொல்லல்.

உ—ம். நீ படிப்பாயா? நான் படிக்கிறேன்.

(c) ஏவல் விடை. ஒரு வேலை ஏவுதலால் உத்தரம் பகர்தல்.

உ—ம். வினு. நீ நாளைப் பணம் கொடுப்பாயா?

விடை. நீர் உமது தம்பியைக் கூட்டிக்கொண்டு நகையை எடுத்துவாரும்.

(d) வினு விடை. ஓர் கேள்வி கேட்பதால் உத்தரஞ் சொல்லல்.

உ—ம். வினு. வீட்டை விட்டுப் போவீரா?

விடை. நீர் அடமானத் தொகையை எண்ணிவைப்பீரா?

(e) உற்றதுரைத்தல் விடை. முன் நடந்தவற்றைச் சொல்வதால் ஒருபோங்காய் உத்தரம் சொல்லுதல்.

உ—ம். வினு. நாளைக் குளத்தில் போய் ஸ்நானஞ் செய்வாயா?

விடை. போனவாரம்செவ்வாய்க்கிழமை குளத்தில் முழுகிக் குளிர்காய்ச்சல் வந்ததே.

(f) உறுவது கூறல் விடை. இனி நடக்கப்போகிறவற்றைச் சொல்லி உத்தரங் கூறல்.

உ—ம். வினு. இந்தப் புஸ்தகத்தைப் பேர்த்தெழுதுவாயா?

விடை. கை நோகும்.

(g) இனமொழி விடை. கேட்டதற் கினமான ஓர் வார்த்தையைச் சொல்லுதல்.

உ—ம். வினு. உன் மாமனுர் வீட்டுக்குப் போகிருயோ?

விடை. என் அண்ணன் வீட்டுக்குப் போகிறேன்.

(h) எதிர்மறுத்தல் விடை.

உ—ம். வினு. நீ கொடுப்பாயா?

விடை. நான் கொடேன்.

"சுட்டு மறைநே ரேவல் வினுதல்
உற்ற துரைத்த லுறுவது கூறல்
இனமொழி யெனுமெண் ணிறையு ளிறுதி
நிலவிய வைந்துமப் பொருண்மையி னேர்ப." (நன்.)

இறை=விடை.

274. 7. ஒரு மனிதனுக்காவது, வஸ்துவுக்காவது இயற்பெயர் தவிர, குணம், பிறந்த இடம், நிலம், உருவம், கல்வி, தொழில், ஜாதி முதலியவற்றில் எதையாயினும் பற்றி ஓர் சிறப்புப்பெயரும் இருக்கு

மானல், இயற்பெயர் பின்னும் மற்றவை முன்னுமாய் வருதல் சிறப்பு. இது மாறிவரின் மரபு வழுவமைதியாகக் கொள்ளலாம்.

உ-ம். கோட்டோன் முருகன்
கறுப்பன் இராமசாமி
பள்ளன் கந்தசாமி
} என்பவை இலக்கண நேர்மை.

இராமலிங்க முதலி
பின்னைவனம் பிள்ளை
ரங்கசாமி நாயுடு
கிருஷ்ணசாமி ஐயர்
} எனப் பின்வருவது மரபு வழுவமைதி.

"திணைநிலஞ் சாதி குடியே யுடைமை
குணந்தொழில் கல்வி சிறப்பாம் பெயரொ
டியற்பெய ரேற்றிடிற் பின்வரல் சிறப்பே." (நன்.)

**275.** பெயர்களுக்கு அடையாக வரும் சொற்கள் பெயரால் குறிக்கப்பட்ட பொருளுக்கு இன்றியமையா இயைபுடையதும் அப்படி இல்லாததுமாக இருவகையாக விருக்கும். (இன்றியமையா இயைபுடைமையை இலக்கணிகள் இனம் என்பர்.)

உ-ம். தோய்தயிர், நாளரும்பு, உப்பளம், செம்போத்து. இவற்றில் அடைமொழிகளாகிய தோய், நாள், உப்பு, செம்மை என்பவை இன்றியமையா இயைபுடையவை. நெய்க்குடம், பூமரம், செந்தமாரை என்பவற்றுள் அப்படியல்ல. நெய்க்குடம்போல, பாற்குடம், தயிர்க்குடம், தண்ணீர்க்குடம், எண்ணெய்க்குடம் என வரலாம். அப்படியே பூமரம், காய்மரம், &c. எனவும், செந்தாமரை, வெண்டாமரை எனவும் வருதல் காண்க.

"பொருள்முத லாறு மடைசேர் மொழியினம்
உள்ளவு மில்லவு மாமிரு வழக்கினும்." (நன்.)

**276.** பெயர் வினைகளின் அடைமொழிகள் தமக்கினமில்லாதவையாக வருவதும் அநேகமுண்டு.

உ-ம். முகில்வண்ணன்.
பொன்னுபரணம்.

"அடைமொழி யினமல் லதுந்தரு மாண்டுறின்." (நன்.)

**277.** உலகில் இல்லாத பொருளைக்குறித்தும், நன்றாய்த் தெரிந்த வஸ்துக்களைக்குறித்தும் பேசும்போது உம் ஏற்றி உரைப்பது மரபு.

உ—ம். மண்ணில் படமுமில்லை.
ஒளிமுன் இருளுமில்லை.
நூலில் கடமுமில்லை.

"இனைத்தென் றறிபொரு ளுலகி னிலாப்பொருள்
வினைப்படுத் துரைப்பி னும்மை வேண்டும்." (நன்.)

N.B.—இவ்விதி, வரவர மங்குகிறது.

## CHAPTER X.

### வாக்கிய விவகரணம்.—(SYNTAX)

**278**. ஒவ்வொரு வாக்கியத்திற்கும் எழுவாய், பயனிலை இரண்டும் அவசியம்.

**எழுவாய்**—பெயர்ச்சொல்.

எவ்விதப் பெயரும் முதல் வேற்றுமையில் வரின் எழுவாயாம்.

**பயனிலை**. (a) பெயரா யிருக்கலாம்.
(b) தெரிநிலை, குறிப்பு வினைமுற்றுகளில் ஒன்றாகலாம்.
(c) ஏவலும், வியங்கோளும் ஆகலாம்.
(d) எச்சமா யிருக்கலாம்.

உ—ம். இம்மனிதன் தெலுங்கன். (பெயர்ப் பயநிலை.)

N.B.—ஆம் என்னும் வினை தொக்கி நின்றது என்றும், அதுவே பயனிலை யென்றும் சிலர் கூறுவார்கள். இப்படிச் சொல்பவர்கள் வினைமுற்று மாத்திரமே பயனிலை யாகலாம் எனச் சாதிப்பார்கள்.

கந்தன் தூங்கினன்; இதைப் படிப்பவர் இல்லை.

நீ ஓடு; தம்பி வாட்டும்; நான் சொல்ல நீ எழுதின கடிதம் தபாலிலிட்டாயா?

விளி வேற்றுமைகள் வாக்கியத்தில் எழுவாயாக அல்லது கர்த்தாவாக வருமாயின், ஏவல் முன்னிலை வினைமுற்றுகள் பயனிலையாம்.

உ—ம். அண்ணா வா
மகளே இரங்காய் இரங்காயோ.

**279**. பயனிலை. செயப்படுபொருள் குன்றாதவினையாயின் வாக்கியத்துக்கு வேண்டிய 3—ம் அம்சம் செயப்படுபொருள்.

உ-ம். அரசன் சிறைகளை மீட்டான்
சிங்கம் யானையைக் கொன்றது.

செயப்படுபொருள் இரண்டாம் வேற்றுமையை யேற்ற பெயர்.

**280.** வாக்கியத்துக்கு அவசியம் வேண்டிய அம்சம் இரண்டு; சிறுபான்மை மூன்று.

N.B.—English பாஷையைப்போல் செயப்படுபொருள் குன்றுவினை (Transitive Verbs) வந்த இடமெல்லாம் செயப்படுபொருள் (Object) வாக்கியத்துள் அமைக்கப்படவேண்டிய அவசியம் தமிழிலில்லை.[1]

உ—ம். நான் தின்றேன்.

இங்கே தின்றேன் செயப்படுபொருள் குன்றுவினையாயினும் செயப்படுபொருளின்றி உபயோகிக்கப்பட்டது. இது தமிழில் வெகு சாதாரணம். இலக்கணங் கூறும்போது மாத்திரம் இவ்வினை செயப்படுபொருள் ஏற்கத்தகுந்ததோ இல்லையோ என உய்த்தாராய்ந்து இலக்கணங் கூறவேண்டியது.

**281.** செயப்படுபொருளும் பெயராதலால் வாக்கியத்தின் அம்சம் இரண்டே; இவைகள் ஒவ்வொன்றும் அடையடுத்து வரும்.

**282.** எழுவாய் அடைகள் பின்வருவன.

1. சுட்டெழுத்து.

உ—ம். இம்மனிதன்.

2. வினாஎழுத்து.

உ—ம். எம்மனிதன்.

3. சுட்டு வினாக்களி னடியாய்ப்பிறந்த உரி.

உ—ம். இந்த, அந்த, எந்த—வீடு.

4. குறிப்புப் பெயரெச்சம்.

உ—ம். பெரிய, சிறிய—அறை.

---

[1] இவ்வழக்கத்தால்தான் தமிழ்பாலியர் இங்கிலீஷ் Transitive Verb (செயப்படுபொருள் குன்றுவினையை) Object இல்லாமல் இங்கிலீஷில் தப்பிதமாய் எழுதுகிறார்கள். இதைக் கவனித்துக் கண்டிக்கவும்.

5. ஆறாம் வேற்றுமைப் பெயர்.

உ—ம். என் கை.
அவனுடைய புஸ்தகம் கிழிந்தது.
வீட்டுவாசல் திறக்கப்பட்டது.

6. திரிந்தும் திரியாமலும் வந்த பெயர்.

உ—ம். மண்மேடு உயர்ந்தது, செந்தாமரை பூத்தது, கரியமணி சிதறிற்று.

7. ஆன, உள்ள என்பவற்றை ஏற்றுவந்த பண்புப்பெயர்.

உ—ம். வட்டமான குளம் இங்கு உண்டு.
அன்புள்ள மனுஷர் அருமை.

8. உரிச்சொல்.

உ—ம். தவப்புனிதன், கழிநாற்றம்.
தவப்புனிதன் சொர்க்கம் சேர்வான்.

9. எல்லைப்பொருளில் வந்த ஐந்தாம் வேற்றுமை, &c.

உ—ம். மதுரையின் வடக்குச் சேலம்.

10. முறைப்பொருளில் வந்த நான்காம் வேற்றுமை.

உ—ம். எனக்குத் தம்பி இராமன்.

11. ஏழாம் வேற்றுமை ஏற்ற பெயர்.

உ—ம். கடற்கண் சிப்பி, முத்து விளைவிக்கும்.

N.B.—முறைப்பொருளில் வந்த நான்காம் வேற்றுமை உரு பேற்காமல் ஆறாம் வேற்றுமைப் பெயர்போல் மயங்கிவருவது சாதாரணம்.

உ—ம். என் மகன் ஜெயராஜன் பரலோகஞ் சென்றான்.

ஏழாம்வேற்றுமை, பெயரின் அடையாய்ப் பாட்டுகளில் வரும். வழக்கத்தில் உள்ள, இருக்கிற முதலிய பெயரெச்சங்களைப் பெற்று பெயர்க்கடையாய் வரும்.

உ—ம். கடலிலுள்ள பாசி } மேசைமேலிருக்கிறது.
கடலிலிருக்கிற பாசி }

**283.** "தொடர்மொழியான எழுவாய் அடை"—பெயரெச்சத்தைக்கொண்டு முடியும் வேற்றுமைத் தொடர் வினைத்தொடர் யாவும் தொடர்மொழியான எழுவாய் அடையாம்.

உ—ம். பூர்வகாலத்தில் நடந்த சங்கதி இதில் எழுதப்படும்.
பெரியவர்கள் எழுதி முடித்துவைத்த இலக்கணம்.
சகலமும் தெரிந்தவர்போல் நடித்து நடக்கிற மனிதன் இங்கே வருவார்.

எழுவாய் வினைமுற்றுப்பெற்ற வாக்கியமும் பெயர் அடையாய் வரலாம். இப்படி வரும்போதெல்லாம் என் என்னும் இடைச்சொல்லடியாய்ப் பிறந்த என்ற, என்கிற, என்னும் எனும் பெயரெச்சத்தை ஏற்றுப் பெயர் அடையாகும்.

உ—ம். நீர் வந்தால்தான் நான் கொடுப்பேன் என்ற அம்மனிதன் நான் போனால் தருவானோ.

N.B.—பெயரின் அடை, பெயரின் குணம், விசேஷம் முதலியவற்றைக் காட்டும். ஆதலால் பெயர் அடையை வடநூலார் விசேஷணம் என்பார்.

**284.** வினையடை அல்லது விசேடகம் வார்த்தையாயில்

(a) வேற்றுமை யுருபேற்ற பெயர்களாம்.

"எல்லை யின்னு மதுவும் பெயர்கொளும்
அல்ல வினைகொளும் நான்கே ழிருமையும்" (நன்.)

என்றதில் பெயர்கொண்டு முடிபவைகள் நீங்க மற்ற வேற்றுமை யுருபேற்ற பெயர்கள்.

N.B.—இரண்டாம் வேற்றுமை யேற்றதும் வினைகொண்டு முடியுமாயினும் அது செயப்படுபொருளெனப் பிரித்துக் கூறப்பட்டதால் அதையும் நீக்குக.

உ—ம். காலா லுதைத்தான்.
எனக்குத் தந்தான்.
கூலிக்கு வேலை செய்தான்.
மரத்தினின்று இறங்கினான்.
தரையில் விழுந்தான்.

(b) வினையெச்சங்களாம்.

உ—ம். ஆடிப் பாடினார்.
நடக்கப் போவோம்.
(வேலை) செய்தால் கூலி கிடைக்கும்.

(*c*) வினை உரிச்சொல்லாம். (Vide Sections **217** & **218**).

உ-ம். சாலத் தின்றான்.
மிகப் பேசினான்.

**285**. (*a*) தொடர்மொழியாகில் மேற்கண்ட (*a*), (*b*) யிலுள்ள வார்த்தைகள் ஏற்று வரக்கூடிய தொடரெல்லாம் சேர்ந்து இவைகளைச் சார்ந்து வினைஅடையாய் வரும்.

உ-ம். சேறும் அழுக்குமுள்ள காலா லுதைத்தான்.
இரவும் பகலும் உழைத்த எனக்குத் தந்தான்.
தோட்டத்தின் மத்தியில் பழம் நிறைந்த மரத்தினின்று இறங்கினான்.
கல்லும் கரடும் நிறைந்த தரையில் விழுந்தான்.
பூசுவதெல்லாம் முழுவதும் பூசிவைத்தார்கள்.
நீ சொன்ன காரியங்களைச் செய்தால் காரியம் முடியும்.
அவன் சிறிய இடுப்பொடிய அடித்தார்கள்.

(*b*) பெயர்கள் உவமையுருபேற்று விசேடகமாகும்.

உ-ம். இலட்சுமணன் அடிபட்டுப் பனமரம்போல விழுந்தான்.

(*c*) வினையெச்சங்களும் உவமையுருபேற்று விசேடகமாகும்.

உ-ம். கள்ளன் வந்தாற்போல நீ வருகிறாய்.

(*d*) பண்புப்பெயர்கள் தம்மை விளக்கும் ஆய், ஆக என்பவற்றைப்பெற்று விசேடகமாகும்.

உ-ம். செவ்வையாய்ச் செய்தான்.
அன்பாய் அணைத்தான்.

N.B.—மற்றப் பெயர்களும் பண்பை விளக்குகிற ஆய், ஆக என்னும் மொழிகளைப் பெற்று விசேடகமாகும்.

உ-ம். ஊரெல்லாம் நெருப்பாய்ப் பறக்கிறது.
வீடெல்லாம் காகிதமாகக் கிடக்கிறது.

(*e*) எழுவாய் வினைமுற்றுகளைப் பெற்ற வாக்கியங்களும் "என்று" "என்றால்" என்னும் வினையெச்சங்களை யேற்று விசேடகமாகும்.

உ-ம். "சத்தியம் ஜயம் பெறும்" என்று அவர் தைரியம் சொன்னார்.

"உழைப்பு ஊதியம்" என்றால் நான் நிச்சயமாய் மேன்மை அடைவேன்.

**286.** இங்கிலீஷில் வினையின் விசேடகத்தை, பொருள் நோக்கி காலம், இடம், வகை, காரணம் முதலியவைகளைக் காட்டியதெனப் பிரிப்பது வழக்கம். இப்படித் தமிழிலும் பிரிப்பது உத்தமம். இங்கிலீஷில் Prepositions என்ற இடைச்சொற்கள் இவ்வர்த்தங்களைத் தரும். தமிழிலும் வேற்றுமை யுருபுகளும், வினையெச்சங்களும், உவமையுருபுகளும், பண்புருபுகளும் இவற்றை விளக்கும்.

| பொருள். | வரலாறு. | உதாரணம். |
|---|---|---|
| 1. காலம். (Time.) | (1) காலப்பெயர். ஏழாம்வேற்றுமை யுருபேற்றும் ஏற்காமலும் வருவன. | (a) போன சித்திரை மாதத்தில் கலியாணம். (b) அவர் நாளை வருவார். |
| | (2) நிகழ்கால வினையெச்சம். N.B.—இது இங்கிலீஷில் "When" என்ற திட்டமானகாலம் குறிப்பிக்கும். (Point of time.) | இலட்சுமி சோறு சமைக்க நான் மிளகாய் அரைத்தேன். |
| | (3) எதிர்கால வினையெச்சம். N.B.—தொழிற் பெயர்மேல் "இல்" ஏற்ற எதிர்கால வினையெச்சம். இதைக் காலப்பொருட்டாகிய 7-ம் வேற்றுமையேற்ற தொழிற்பெயர் என்பாரும் உளர். (This denotes Point of time.) | பாண்டவர்கள் போகையில் கிருஷ்ணர் எதிர்ப்பட்டார். |
| 2. இடம். (Place.) | (1) இடப்பெயர். 7-ம் வேற்றுமை யுருபேற்றும் ஏற்காமலும் வருவன. | (a) இவர் கீழேயிருக்கிறார். (b) தம்பி வேலூர் மணியகாரன். |
| | (2) 5-ம் வேற்றுமை நீக்கற்பொருள். | மெத்தையினின்று குதித்தான். |
| | (3) 4-ம் வேற்றுமை யுருபேற்று வருவது. | அவர் மதுரைக்குப் போகிறார். |

| பொருள். | வரலாறு. | உதாரணம். |
|---|---|---|
| 3. வகை. (Manner) | (1) பெயர்கள். "ஆய்" "ஆக" என்னும் பண்பை விளக்கும் மொழி பெற்றுவருவன.<br><br>(2) 3-ம் வேற்றுமை. உடனிகழ்ச்சி, துணைக்கருவிப் பொருள்களில் வருவன.<br><br>(3) உவமை யுருபேற்ற பெயர்களும், எதிர்கால வினையெச்சங்களும். | (a) செவ்வையாய்ச் செய்தான்.<br>(b) எங்குமுள்ளதாகவிருக்கிறது.<br>(a) ரதகஜதுரக பதாதிகளோடு இராஜன் வந்தார்.<br>(b) கையால் அடித்தான்.<br>(a) தீப்போல எரிகிறது.<br>(b) அவன் தூங்கினாற்போலக் காணப்படுகிறது. |
| 4. காரணம். (Cause.) | (1) ஏதுப்பொருளில் வந்த 3-ம் வேற்றுமை.<br><br>(2) ஏதுப்பொருளில் வந்த 5-ம் வேற்றுமை.<br><br>(3) "ஆல்" ஏற்ற தொழிற் பெயர். இதை எதிர்கால வினையெச்சமாகவுங் கூறுவர். | பசியால் செத்தான்.<br><br>கல்வியில் பெரியவர் கம்பர்.<br><br>புளித் தின்றதால் பல் கூசுகிறது. |
| 5. [1] நியமம் or ஏற்பாடு. Condition. | (1) எதிர்கால வினையெச்சம். | நீர் வந்தால் காரியம் வாய்க்கும். |

[1] இங்கிலீஷ்போல எல்லாக்கிலம் நியமத்தை உணர்த்தும்.

உ-ம். நீ வா, அப்போது தருவேன்.

| பொருள். | வரலாறு. | உதாரணம். |
|---|---|---|
| 6. நோக்கம். (Motive and purpose.) | 1. பொருட்டு, தகைமை, அதுவாதற் பொருளுள்ள நான்காம் வேற்றுமை.<br>2. நிகழ்கால வினையெச்சம். | a. கோபம் உனக்கு நல்லதல்ல.<br>b. அவள் நூல் விற்பதற்கு சந்தைக்குப் போனாள்.<br>c. சோற்றிற்கு அரிசி உலையிலிடு.<br>பத்திரம் எழுதப்போகிறார்கள். |
| 7. கருவி. (Material) | முதற் கருவிப் பொருளில் வந்த 3–ம் வேற்றுமை. | கண்ணாடியாற் செய்த விளக்கு. |
| 8. பயன். (Effect.) | நிகழ்கால வினையெச்சம். | எலும்பு நொறுங்க அடித்தான்.<br>பழத்தைத் தீயச் சுட்டான். |

**287.** [1]இங்கிலீஷில் சங்கரவாக்கியம் (Complex Sentence) பிரதமவாக்கியம் (Principal Sentence) எனவும், அவாய்நிலை வாக்கியம் (Subordinate sentence) எனவும் வருவதுபோல, தமிழிலும் வரலாமென்பது சிலர் அபிப்பிராயம்; இது தப்பு. இங்கிலீஷில் அவாய்நிலை வாக்கியங்கள் முதலியன முற்றுவினையைப் பெற்றுவரும். தமிழிலோ முற்றுவினை பெற்ற வாக்கியம் ஒன்றினுள், எச்சவினைகளைக்கொண்டு முடிந்தனவாய், விசேடிய விசேடகத் தொடர்மொழிகளாய் அவைகள் இயங்கிவரும்.

சிற்சில வாக்கியங்கள் விசேஷிய விசேஷகமாய் இங்ஙனம் வருமென்பது முன் கூறப்பட்டது.

[1] இங்கிலீஷிலுள்ள வாக்கிய அன்வயம் (Analysis of sentences) போலத் தமிழுக்கும் ஏற்படுத்துவது அருமை. தொடர்வாக்கியங்களின் சம்பந்தங்களைமாத்திரம் எடுத்துக்காட்டலாம். தொடர்களை விவரித்த பிரகரணங்களால் இது எளிதாய் விளங்கும். இன்னவார்த்தை இன்னவார்த்தையைக்கொண்டு முடிந்தது என்று தொடர் கூறுவதினால் வாக்கிய இயைபு தெளிவாய் விளங்குமே.

தனித்தனியாய் வாக்கியங்கள் வந்து, (Compound Sentence) தொடர்வாக்கியமாவது தமிழுக்கியல்புதான்.

உ—ம். இராமர் புறப்பட்டார்; சீதா பிராட்டியும், இலட்சுமணரும்கூடத் தொடர்ந்தனர்; அயோத்திமாநகர ஜனங்களெல்லாரும் கூடப் புறப்பட்டார்கள்; தசரதரோ படுக்கையாய் வீட்டிலிருந்தார்; இச்செய்திகள் கேட்டதால் விசனமுண்டாகி அவர் ஜீவன் விட்டார்.

## CHAPTER XI.

### புணரியல்.—COMBINATION OF WORDS.

**288.** பதங்கள் வேற்றுமைத்தொடராகவும், அல்வழித்தொடராகவும் சேர்ந்து, தழுவியும், தழுவாமலும் வரும்போது, அவைகள் அடையும் எழுத்துத் திரிபு, தோன்றல், கெடுதலாகிய வேறுபாடுகளை விளக்குவது இவ்வியலின் கூற்று.

[1]"மெய்யுயிர் முதலீ றாமிரு பதங்களும்
தன்னொடும் பிறிதொடு மல்வழி வேற்றுமைப்
பொருளிற் பொருந்துழி நிலைவரு மொழிகள்
இயல்பொடு விகாரத் தியைவது புணர்ப்பே." (நன்.)

**289.** தொடர் விவரம் முன்பே கூறப்பட்டது.

"வேற்றுமை ஐம்முத லாறா மல்வழி
தொழில்பண் புவமை யும்மை யன்மொழி
யெழுவாய் விளிஈ ரெச்சமுற் றிடையுரி
தழுவு தொடரடுக் கெனவீ ரேழே." (நன்.)

**290.** தொடர்ந்துவந்த இரண்டு வார்த்தைகளில் முதல் நின்றது நிலைமொழியெனவும், பின் நின்றது வருமொழியெனவும் பேர்பெறும், விகாரமின்றி வருவது இயல்பு எனப்படும்.

"விகார மனைத்தும் மேவல தியல்பே." (நன்.)

---

[1] இலக்கண விளக்கத்தார், வினைத்தொகை, பண்புத்தொகை, அன்மொழித்தொகை மூன்றையும் அல்வழித் தொடரோடு சேர்க்கமாட்டார். வினைத்தொகையை விரிக்கின் பெயரெச்சமாகிறது. பண்புத்தொகையும் அப்படியே. அன்மொழித் தொகையை விரிக்கின் அதுவும் எச்சமாகலாவது, வேற்றுமையேற்ற பெயராகலாவது மாறும் ஆதலின்.

**291**. விகாரம் மூன்றுவகையாம், தோன்றல், திரிதல், கெடுதல் என. இவைகள் வார்த்தையில் முதலிலும், இடையிலும், கடையிலும் வரும்.

உ-ம். யாறு—ஆறு
யானை—ஆனை } — மொழி முதலில் ய கெட்டது.
தாமரை—மரை — மொழி முதலில் தா கெட்டது.
நண்டு—ஞண்டு — மொழி முதலில் ந ஞ வாகத்திரிந்த போலி.

பூ + கொடி =பூங்கொடி—வருமொழி முதலில் ங தோன்றியது.
மரம் + வேர் =மரவேர்— நிலைமொழி ஈற்றில் ம கெட்டது.
மருந்து —மருத்துவச்சி — வார்த்தையின் நடுவில் திரிந்தது.
வேகும் —வேம் — வார்த்தையின் நடுவில் கெட்டது.
ஆம் —ஆகும் — வார்த்தையின் நடுவில் தோன்றியது.

"தோன்றல் திரிதல் கெடுதல் விகாரம்
மூன்றும் மொழிமூ விடத்து மாகும்." (நன்.)

**292**. ஒரே புணர்ச்சியில் ஒன்றும், இரண்டும், மூன்றுமான விகாரங்கள் வரலாம்.

உ-ம். பழம் + காய் = பழ + காய் = பழக்காய் — ம் கெட்டு க் தோன்றியது.

"ஒருபுணர்க் கிரண்டும் மூன்றும் உறப்பெறும்." (நன்.)

**293**. புணர்ச்சி பலவகையாம்.

(a) உயிரீறுள்ள நிலைமொழிகள் வேற்றுமை அல்வழிகளில் வருமொழியோடு புணர்தல் உயிரீற்றுப் புணர்ச்சியாம். (Combination of vowel endings.)

(b) மெய்யீறுள்ள நிலைமொழிகள் அவ்வாறு வருமொழியோடு புணர்தல் மெய்யீற்றுப்புணர்ச்சியாம். (Combination of Consonantal endings.)

(c) செய்யுளில்மாத்திரம் வரும் விகாரங்கள் செய்யுள் விகாரம் எனப்படும். (Poetical combinations.)

(d) சமஸ்கிருதவார்த்தைகள் தமிழில் வந்து வழங்கும்போது சம்ஸ்கிருத வியாகரண நியதிப்படி உண்டாகும் விகாரம் சந்தியென்றும், திரட்டு என்றும் சொல்லப்படும். (Sanscrit combinations.)

திரட்டு என்பது வீரமாமுனிவர் தொன்னூலிலிட்ட பேர்.

## GENERAL RULES OF COMBINATION.—புணர்ச்சிப் போதுவிதிகள்.

| No. | நிலைமொழி ஈறு. | வருமொழி முதல். | வேற்றுமையிலோ அல்வழியிலோ. | விகாரம் எவ்விதம். | உதாரணம். | சூத்திரம். | குறிப்பு. |
|---|---|---|---|---|---|---|---|
| 294 | 24 ஈற்றெழுத்தும். | ஞ, ந, ம, ய, வ. | இருவழியிலும். | இயல்பு. | விள, பலா, கிளி, தீ, கடு, பூ, சே, பனை, கோ, கௌ, உரிஞ், உண், பொருந், மரம், பொன், வேய், வேர், வேல், தெவ், யாழ், வாள் என்றவற்றில் ஒவ்வொன்றோடும், ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது என்றவற்றில் ஒவ்வொன்றையும் முறையே கூட்ட. | "என்மூ வெழுத்தீற் றெவ்வகை மொழிக்கும் முன்வருஞ் ஞநமய வக்க ளியல்பும் குறில்வழி யத்தனி ஐநொது முன்மெலி மிகலுமாம் ணளனல வழிநத் திரியும்." (நன்.) | |
| 295 | மேற்சொன்னவற்றுள், தனிக் குறிலுக்குப் பின் வரும் ய், தனி ஐ, தனி நொ, தனி து. | Do. | Do. | வருமொழி முதலிலுள்ள மெய் மிகும். | அல்வழி.<br>மெய்+ஞான்றது=மெய்ஞ்ஞான்றது.<br>மெய்+நீண்டது=மெய்ந்நீண்டது.<br>மெய்+மாண்டது=மெய்ம்மாண்டது.<br>கை+ஞான்றது=கைஞ்ஞான்றது.<br>கை+நீண்டது=கைந்நீண்டது.<br>கை+மாண்டது=கைம்மாண்டது, &c.,<br>வேற்றுமை.<br>மெய்+ஞாற்சி=மெய்ஞ்ஞாற்சி.<br>மெய்+நீட்சி=மெய்ந்நீட்சி.<br>மெய்+மாட்சி=மெய்ம்மாட்சி.<br>கை+ஞாற்சி=கைஞ்ஞாற்சி.<br>கை+நீட்சி=கைந்நீட்சி.<br>கை+மாட்சி=கைம்மாட்சி, &c., | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | | | | அல்வழி.<br>[1]ஞொ+ஞொள்ள=ஞொஞ்ஞொள்ள.<br>ஞொ+நாகா=ஞொந்நாகா.<br>ஞொ+மாடா=ஞொம்மாடா, &c.<br>து+ஞொள்ள=துஞ்ஞொள்ள.<br>து+நாகா=துந்நாகா.<br>து+மாடா=தும்மாடா.<br>து+யவனா=துய்யவனா.<br>து+வலவா=துவ்வலவா. |
| 296. | மேற் சொன்ன 24-ல் ண, ள, ன, ல. | • | Do. | ந திரியும். | கண்+நன்று=கண்ணன்று.<br>கண்+நலம்=கண்ணலம்.<br>கள்+நன்று=கண்ணன்று.<br>கள்+நலம்=கண்ணலம்.<br>பொன்+நன்று=பொன்னன்று.<br>பொன்+நலம்=பொன்னலம்.<br>புல்+நன்று=புன்னன்று.<br>புல்+நலம்=புன்னலம். |
| 297. | மெய்யீற்றுப் பொதுப் பெயர், உயர்திணைப் பெயர். | வல்லெழுத்து. | Do. | இயல்பு. | கொற்றன் ஆண் } + { குறியன, சிறியன், தீயன, பெரியன்; குறித, சிறித, தீது, பெரிது; கை, செவி, தலை, புறம்.<br>அவன் + குறியன், சிறியன் தீயன், பெரியன்; கை, செவி, தலை, புறம். |
| 298. | உயிர், ய், ர், ஈற்றுப் பொதுப்பெயர், உயர்திணைப் பெயர். | வல்லெழுத்து. | Do. | Do. | கொற்றி, தாய்+குறியள், &c., கை, &c.,<br>நம்பி + குறியன, &c., கை, &c.,<br>அவர் + குறியர், &c., கை, &c. |
| 299. | உயிர், அல்லது மெய்யீற்று உயர் திணைப் பெயர் கள். | நாற்கணமும். | Do. | விகாரமாம் (ஏற்குமிடத்து.) | கபிலன+பரணன்=கபிலபரணா.<br>அரசன்+வள்ளல்=அரசவள்ளல்.<br>வடுகன்+நாதன்=வடுகநாதன்.<br>குமரன்+கோட்டம் = குமரகோட்டம் or குமரக்கோட்டம், &c. |

1. ''பொதுப்பெயர், உயர்திணைப் பெயர்க ளீற்றுமெய் வலிவரி னியல்பாம். (நன்.)

2. ஆவியரழுன், வன்மை மிகாசில விகாரமா முயர்திணை.'' (நன்.)

[1] ஞொ = ஞொள்குபோ (வினை); து = சாப்பிடு (வினை) ஆகையால் வேற்றுமை வழியில் வராது.

N. B.—''எருவாய்ச் சுந்தியின் இசைவலி யியல்பே.'' (அகத்தியம்.)
''வியங்கோள் விகுதி முன்வலி இயல்பாம்.'' (அகத்தியம்.)
''இரண்டன் விபத்தி எஞ்சிடவலி இயல்பாம்.'' (அகத்தியம்.)
''மூன்றன் உருபிலும், ஆறன் உருபிலும் வல்லெழுத்து மிகுதல் இல்லென மொழிப.'' (இ. விளக்கம்.)

| No. | நிலைமொழி ஈறு. | வருமொழி முதல் | வேற்றுமையிலோ அல்வழியிலோ. | விகாரம் எவ்விதம். | உதாரணம். | சூத்திரம். | குறிப்பு. |
|---|---|---|---|---|---|---|---|
| 300. | விளிப்பெயர்க ளினீறு ஆ, ஏ, ஓ, யா. | வல்லெழுத்து. | அல்வழி. | இயல்பு. | தம்பியா கொண்டான், சென்றான், போனான், தந்தான். தம்பியே கொண்டான், சென்றான், போனான், தந்தான். தம்பியோ கொண்டான், சென்றான், போனான், தந்தான். யா குறிய, சிறிய, பெரிய, தீய. | "ஈற்றியா வினாவிளிப் பெயர்முன்வலி யியல்பே." (நன்.) "ஆவி யரழ விறுதி முன்னிலை வினை ஏவல்முன் வல்லினம் இயல்பொடு விகற்பே." (நன்.) | N. B.—சாதாரண வழக்கத்தில் இரட்டித்ததாக வழங்கும், பாட்டுகளில் அருமையாய் இரட்டின இடத்துக் கண்டுகொள்க. |
| 301. | உயிர் ஈறு, மெய் யீறு பெற்ற விளிப்பெயர். | Do. | Do. | Do. | தம்பீ கொடு, செல், போ, தா. அன்னாய் கொடு, செல், போ, தா. | | |
| 302. | உயிர், ய், ர், ழ், ஈற்ற முன்னிலை வினை, ஏவல்வினை. | வல்லெழுத்து | அல்வழி. | இயல்பாம். (சில வேளைகளில் வெகு அருமையாய் இரட்டித்து வரும்.) | உண்டனை + கொற்றா, சாத்தா, பாலா, தாதா. உண்டாய் + கொற்றா, சாத்தா, பாலா, தாதா. உண்டீர் + கொற்றா, சாத்தா, பாலா, தாதா. எறி + கொற்றா, சாத்தா, பாலா, தாதா. கொய் + கொற்றா, சாத்தா, பாலா, தாதா. சேர் + கொற்றா, சாத்தா, பாலா, தாதா. தாழ் + கொற்றா, சாத்தா, பாலா, தாதா, &c. | | |

## COMBINATION OF VOWEL ENDINGS.—உயிரீற்றுப் புணர்ச்சி.

| No. | நிலைமொழி ஈறு. | வருமொழி முதல். | வேற்றுமையிலோ அல்வழியிலோ. | விகாரம் எவ்விதம் | உதாரணம். | சூத்திரம். | குறிப்பு. |
|---|---|---|---|---|---|---|---|
| 303. | இ, ஈ, ஐ, ஈற்று எவ்வார்த்தையும். | உயிரில் ஏதாவது. | இருவழி. | ய், தோன்றும். (ய், உடம்படு மெய்யெனப் படும்.) | மணி + ஆயிற்று = மணியாயிற்று. தீ + ஏது = தீயேது. தலை + ஈரம் = தலையீரம். | "இ ஈ ஐவழி யவ்வும் ஏனை, யுயிர் வழி வவ்வும் ஏமுனிவ் விருமையும், உயிர் வரின் உடம்படு மெய்யென் றாகும்." (நன்.) சில வடசொல் புணருமிடத்து இவ்விதி யமையாது. உ-ம். மாயிரு ஞாலமுண்டோன். (ராமா.) | N.B.-போ + இன் + ஆன் = போயினான். இது இவ்விதிக்கு விலக்காகாது. ஆயினன் என்பது மப்படியே. |
| 304. | அ, ஆ, உ, ஊ, எ, ஓ, ஒ, ஔ ஈற்று எவ்வார்த்தையும். | Do. | Do. | வ், தோன்றும். (வ், உடம்படு மெய்யெனப்படும்.) | பல + ஆறு = பலவாறு. தா + என்றார் = தாவென்றார். அது + ஏது = அதுவேது. பூ + அழகு = பூவழகு. போ + என்றார் = போவென்றார், &c. | | |
| 305. | ஏ. | Do. | Do. | ய், அல்லது வ், தோன்றும். (அது உடம்படு மெய்யெனப்படும்.) | நீயே + அறிவாய் = நீயே யறிவாய். சே + ஏறினான் = சேவேறினான். | | |
| 306. | எகர வினா, அ, இ, உ சுட்டு. | உயிர் ஏதாயினும், யகர வர்க்கம் ஏதாயினும். | அல்வழி. | வ், தோன்றும். | எ + அணி = எவ்வணி; அவ்வணி, இவ்வணி, எ + ஆடை = எவ்வாடை; அவ்வாடை, இவ்வாடை, எ + எலி = எவ்வெலி; அவ்வெலி, இவ்வெலி, எ + யானை = எவ்யானை; அவ்யானை, இவ்யானை, ௸. | "எகர வினாமுச் சுட்டின் முன்னர், உயிரும் யகரமும் எய்தின் வவ்வும், பிறவரின் அவையும் தூக்கிற் சுட்டு நீளின் யகரமும் தோன்றுதல் நெறியே." (நன்.) தூக்கு = பாட்டு. | N.B.—பாட்டில் அ, இ, உ; ஆ, ஈ, ஊ வாகுமாகில் இவ்விதி பெறாமல் ய் தோன்றும். உ-ம். ஆயிடை புறக்கேறி. |
| 307 | Do. | ய், தவிர மற்ற மெய்களில் ஏதாயினும். | Do. | வருமொழி முதல் மெய் தோன்றும், அல்லது இரட்டும். | எ + காரியம் = எக்காரியம்; அக்காரியம், இக்காரியம், எ + சொல் = எச்சொல்; அச்சொல், இச்சொல், எ + ஞானம் = எஞ்ஞானம்; அஞ்ஞானம், இஞ்ஞானம், எ + மரம் = எம்மரம்; அம்மரம், இம்மரம், எ + வால் = எவ்வால்; அவ்வால், இவ்வால், &c. | | |

| No. | நிலைமொழி ஈறு. | வருமொழி முதல். | வேற்றுமை யிலே அல் வழியிலே. | விகாரம் எவ்விதம். | உதாரணம். | சூத்திரம். |
|---|---|---|---|---|---|---|
| 308. | குற்றியல் உ. | உயிரில்தொடங்கும். | இருவழி. | உ கெட்டு மெய்மேல் உயிர் ஏறும். | காடு+அகலம்=காட்டகலம், கொத்து+ஆகாது=கொத்தாகாது, அடிபட்டு+ஓடினன்=அடிபட்டோடினன், ஷ. | "உயிர்வரின், உக்குறள் மெய்விட்டோடும், யவ்வரினியாம் முற்றுமற் றொரோவழி." (நன்.) |
| 309. | Do. | யகரவர்க்கத்தில் தொடங்கும். | அல்வழி. | உ, இ யாகத் திரியும். | பட்டு+யாது=பட்டியாது, ஷ. | |
| 310. | செய்பிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். | வல்லெழுத்து. | அல்வழி. | இயல்பு. | நாடிய+கொண்டான், ,, +செய்தான், ஷ. | |
| 311 | அ, ஈற்றுப் பெயரெச்சம். | Do. | Do. | Do. | வந்த காலம். போன செம்போத்து. ஓடுகிற பாம்பு. | "செய்பிய வென்னும் வினையெச்சம் பல்வகைப், பெயரி னெச்சம்முற் றாறனுருபே, அஃறிணைப் பன்மை யம்மமுன்னியல்பே." (நன்.) |
| 312 | அ, ஈற்று வினைமுற்று. | Do. | Do. | Do. | வந்தன குதிரைகள். ஓடின சிங்கங்கள். | |
| 313. | அ, ஈற்று ஆறனுருபு. | Do. | வேற்றுமை. | Do. | தன கைகள். | |
| 314. | அ, ஈற்று அஃறிணைப் பன்மைப் பெயர். | Do. | இருவழி. | Do. | செய்வன+செய்தான். படிப்பன+பகரும். | |
| 315. | அம்ம என்னும் சொல். | Do. | அல்வழி. | Do. | அம்ம+கொற்றா. | |
| 316 | ஆ, மா என்னும் பெயர். | Do. | Do. | Do. | ஆ குறிது, மா குறிது; ஆ சிறிது, மா சிறிது; ஆ பெரிது, மா பெரிது; ஷ. | |
| 317. | மியா ஈறு. | Do. | Do. | Do. | கேண்மியா கொற்றா. கேண்மியா செலவனே. கேண்மியா பெரியவா. | "அல்வழி யா மா, மியா முற்று முன் மிகா." (நன்.) |
| 318. | ஆ, ஈற்று எதிர்மறை வினைமுற்று. | Do. | Do | Do. | ஓடா+குதிரை. கூவா சேவல். | |

குறிப்பு.

N.B.-குற்றியலுகரம் சொல்லப்பட்டபொழுது, வு, இறுதியுள்ள வார்த்தைகளில், வு—வும் குற்றியலுகரமாக ஆன்றோர் கொள்வார்களாதலால், வு—இறுதிப்பெயர்களும இவ்விதிகளை யேற்கும்.

உ-ம். செலவு+ஏது=செலவேது. அறிவு+யாது=அறிவியாது.

உயிரீற்றுக்குமுன் உயிர் வரும்போது தோன்றிய மெய் உடம்படு மெய். மெய்யீற்றுக்கு முன் உயிர் வரும்போது தோன்றிய மெய் அப்பேர் பெறாது. செல்+உழி=செல்வுழி—வ் இடைச்சொல் எழுத்துப்பேறு எனப்படும்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 319. | இ, ஐ, ஈற்ற அஃறிணைப் பெயர். | வல்லெழுத்து. | அல்வழி. | இயல்பு ஆகும், வலி தோன்றலும் ஆம். | இளி+குறிது = இளிகுறிது. திணை+குறிது = திணைகுறிது. இரட்டித்த திணைக்குறிது என ஆவது சிறுபான்மை மாத்திரம. | "அல்வழி இ ஐ ம் முன்ன ராயின், இயல்பும் மிகலும் விகற்பமு மாகும்." (நன்.) |
| 320. | பீ, நீ. | Do. | Do. | இயல்பு. | பீ குறிது. நீ கெட்டவன. நீ செய். | |
| 321. | மீ. | Do. | Do. | இயல்பும் ஆம்; விகாரமும் ஆம்; வலவெழுத்தும், இனமெல்லெழுத்தும் தோன்றவும் பெறும. | மீகண். மீ+கூற்று=மீக்கூற்று. மீ+தோல்=மீகதோல். | "பவ்வீ நீமீ முன்ன ரல்வழி, இயல்பாம் வலிமெலி மிகலுமா மீக்கே." (நன்.) |
| 322. | உ, ஈற்ற மூன றும் வேற்றுமையுருபு. | Do. | வேற்றுமை. | இயல்பு. | அவனொடு போனான். அவனொடு கண்டான். அவனொடு செய்தான். | |
| 323. | ஐ, ஈற்ற 6-ம் வேற்றுமையுருபு. | Do. | Do. | Do. | தன கைகள், செவிகள, பைகள், தலைகள். | "மூன்று றுருபெண் வினைத் தொகை சுட்டீ, றாகு முகர முன்ன ரியல்பாம்." (நன்.) |
| 324 | உ, ஈற்ற வினைத் தொகை. | Do. | அல்வழி. | Do. | அடுகளிறு, சுடுசாதம். | |
| 325 | உ, ஈற்ற எண்ணுப் பெயர். | Do | Do. | Do. | மூன்றுகை, ஏழுபானை. | |
| 326 | உ, ஈற்ற சுட்டுப்பெயர். | Do. | இருவழி. | Do. | அது கண்டான், அது சிறிது. | |
| 327. | வன்றொடர் ஒழிந்த மற்றக குற்றியலுகரம். | Do. | அல்வழி. | இயல்பு. | ஆடு கறப்பு, எஃகு சிறிது, குரங்கு பெரிது, வரகு நீண்டது, தெள்கு கொடிது. | "வன்றொடர் அல்லன முன் மிகா அல்வழி." (நன்.) |
| 328. | நெடிற் றொடர்க் குற் உ; ட், ற் மேல் வருவன. | சாற்கணமும். | வேற்றுமை (சிறுபான்மை அல்வழியிலும்.) | வல்லெழுத்து மாத்திரம் இரட்டும். | ஆடு+கால் = ஆட்டுக்கால். நாடு+மனிதன் = நாட்டுமனிதன். சீறு+அறை = சீற்றறை. | 'நெடிலோடுயிர்த்தொடர்க்குற்றுகரங்களுள், டறவொற்றிரட்டும்வேற்றுமைமிகவே.' ந. |

N.B.—குற்றியல் உகரவீற்றுப் பெயர்கள் சாரியை பெற்று இயல்பாம்.
உ—ம். ஈறு+கடுமை = ஈறின்கடுமை.

| No. | நிலைமொழி ஈறு. | வருமொழி முதல். | வேற்றுமையிலோ அல்வழியிலோ. | விகாரம் எவ்விதம். | உதாரணம். | சூத்திரம். | குறிப்பு. |
|---|---|---|---|---|---|---|---|
| 329. | உயிர்த் தொடர்க் குற். உ; ட், ற், மேல் வருவன. | காற்கணமும் | வேற்றுமை. (சிறுபான்மை அல்வழி.) | வல்லெழுத்து மாத்திரம் இரட்டும். | வயிறு + வலி = வயிற்றுவலி. குறடு + காது = குறட்டுக்காது. களிறு + யானை = களிற்றுயானை. | க், த், ஏற்ற உ-வும் சிலவேளை இவ்விதிபெறும். உ-ம். வெருகு + கண் = வெருக்குக்கண்; எருது + மாடு = எருத்து மாடு. | |
| 330. | மென் றொடர்க் குற். உ. | Do. | வேற்றுமை. | மெல்லொற்று வல்லொற்றாம். | மருந்து + பை = மருத்துப்பை. கரும்பு + வில் = கருப்புவில். கன்று + ஆ = கற்றா. | "மென்றொடர் மொழியுள் சிலவேற்றுமையில், தம்மினவன்றொடர் ஆகா மன்னே." (நன்.) | |
| 331. | இடைத் தொடர்க் குற். உ-வும் ஆய்தத்தொடர்க் குற். உ-வும், நெடிற்றொடர்உயிர்த்தொடர்க்குற். உ-வும். 329-லகண்டபடி ஒற்றிடையில் மிகா. | வல்லெழுத்து. | வேற்றுமை. | இன சாரியை பெறு, இயல்பாம் | தெள்கு + கண்மை = தெள்கின்கண்மை. எஃகு + கண்மை = எஃகின்கண்மை. நாகு + கண்மை = நாகின்கண்மை. வரகு + கண்மை = வரகின்கண்மை. | "இடைத்தொடர் ஆய்தத்தொடர் ஒற்றிடையில், மிகாநெடி லுயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை." (நன்.) | |
| | இப்படி, சிறப்பு விதிகள் பல சொல்லி பொதுவாய்ப் பின்வருமாறு என்று இலக்கணிகள் நிட்டியிருக்கிறார்கள். | | | | | | |
| 332. | [1] இயல்பாயும், விதியாயும் நின்ற உயிர் ஈறு. | வல்லெழுத்து. | இருவழி. | ஒற்றிரட்டும்; இயல்புமாம். | ஆடிகொண்டான்; எருது பெரிது. &c. | [2] "இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன், க-ச-த-ப மிகும் விதவாதன மன்னே." (நன்.) விதவாதன = முன் சொல்லப்படாதவை. | [2] பொதுவிதியான மேற்கண்டவற்றில் அடங்காமல் வருமிடத்து நியாயம் சொல்லவேண்டியதற்கு நன்னூலார் இச்சூத்திரங் கூறினர். |

[1] இந்த விதி பொது; இப்படிச் சொன்னபோதிலும், பெரியோர் நூல்களில் அமைதிபெற்றதும், மேற்கண்ட 29 விதிகளிலும் உடன்படாததுமான வார்த்தைகளுக்குமாத்திரம் இவ்விதியை அனுசரித்த விகார இயல்புகள் அமைக்கலாமேயன்றி மனோகர் நினைத்தவாறெல்லாம் இப்பொதுவிதியை கருதித் தர்க்கிக்கக்கூடாது. இலக்கியங்களில் அமைவுபெற்றதும் உலகநடை வழக்கு இனவென்பதும் தெரிந்த விகாரங்களுக்குச் சூத்திரம் எடுத்துக்கோடல் தரும.

## EXCEPTIONAL WORDS WITH VOWEL ENDINGS.

## சிற்சில விசேஷித்த உயிரீற்று வார்த்தைகள் அடையும் விகாரம்.

**333.** 1. மரப்பெயர்கள் உயிரீறுபெறின், வல்லினம் வருமொழி முதலிலாம்போது, மெல்லெழுத்துத் தோன்றுவதுமுண்டு.

உ-ம். மா + கனி = மாங்கனி.
விள + காய் = விளங்காய்.

"மரப்பெயர் முன்ன ரினமெல் லெழுத்து
வரப்பெறு னவுமுள வேற்றுமை வழியே." (நன்.)

2. பூ என்ற வார்த்தைக்குமுன் வல்லினம் வரின் இன மெல்லினந் தோன்றும்.

உ-ம். பூ + சோலை = பூஞ்சோலை.
பூ + தாது = பூந்தாது.

"பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன்றும்." (நன்.)

3. வாழிய என்னும் வார்த்தைக்குப்பின், வல்லினம் வருமொழி முதலில் வருகையில், ய கெடும்.

உ-ம். வாழிய + கொற்றவா = வாழிகொற்றவா.

"வாழிய வென்பத னீற்றி னுயிர்மெய்
யேகலு முரித்தஃ தேகினு மியல்பே." (நன்.).

4. பல சில என்பவற்றின்பின், அவையே, (பல, சில வே) வரின், இயல்புமாகும்; ப், ச், முறையே தோன்றும்; ல், ற் ஆகும்.

உ-ம். பல + பல = பல பல, பலப்பல, பற்பல.
சில + சில = சில சில, சிலச்சில, சிற்சில.

5. பல சிலவின்பின், வல்லெழுத்து, ஞ முதலிலுள்ள வேறு வார்த்தைகள் வரின் பல விகாரமடையும்.

உ-ம். பல + படை = பலபடை; பல்படை.
பல + நாள் = பலநாள்; பன்னாள்.
பல + மணி = பலமணி; பன்மணி.

"பலசில வெனுமிவை தம்முன் தாம்வரின்
இயல்பு மிகலு மகர மேக
லகரம் றகர மாகலும் பிறவரின்
அகரம் விகற்ப மாகலு முளபிற." (நன்.)

6. புளி என்னும் வார்த்தைக்குமுன் வல்லினம் வந்தால் இனமெல்லெழுத்துத் தோன்றும்.

உ-ம். புளி + கறி = புளிங்கறி. புளி + தயிர் = புளிந்தயிர்.

"சுவைப்புளி முன்னின மென்மையுந் தோன்றும்." (நன்.)

7. நாழி + உரி = நாடுரி.
உரி + உப்பு = உரியஉப்பு.
உரி + பயறு = உரியபயறு.
உரி + மிளகு = உரியமிளகு.
உரி + வரகு = உரியவரகு.

"உரிவரி னாழியி னீற்றுயிர் மெய்கெட
மருவும் டகர முரியின் வழியே
யகரவுயிர் மெய்யா மேற்பன வரினே." (நன்.)

8. சில குற்றியல் உகரம், வருமொழி எவ்வெழுத்தைக் கொண்டு தொடங்கினும் உ, ஐ ஆகும்.

பண்டு + காலம் = பண்டைக்காலம்.
இன்று + நாள் = இற்றைநாள்.
அன்று + கூலி = அற்றைக்கூலி.

"ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே." (நன்.)

9. தெங்கு + காய் = தேங்காய்.

"தெங்குநீண் டீற்றுயிர் மெய்கெடும் காய்வரின்." (நன்.)

10. பனை + கொடி = பனைக்கொடி or பனங்கொடி.
பனை + காய் = பனங்காய்.
பனை + கூந்தல் = பனங்கூந்தல்.
பனை + திரள் = பனைத்திரள் or பனந்திரள்.
பனை + அட்டு = பனாட்டு.

"பனைமுன் கொடிவரின் மிகலும் வலிவரின்
ஐபோ யம்முந் திரள்வரி னுறழ்வும்
அட்டுறி னைகெட்டந் நீள்வுமாம் வேற்றுமை." (நன்.)

11. இடைச்சொல், ஏ, ஓ ஈற்றுக்குமுன் வல்லினம் வந்தால் இயல்பாம்.

உ—ம். அவனே கொண்டான், அவனோ கொண்டான்.

"இடைச்சொல் ஏ, ஓ முன்வரி னியல்பே." (நன்.)

12. இருவழியிலும், ஐ ஈற்றுப்பெயர்கள், ஐ கெட்டும் கெடாமலும் அம் சாரியை பெறும்.

உ—ம். புன்னை + கானல் = புன்னைக்கானல், புன்னையங்கானல்.
வழுதுணை + காய் = வழுதுணைக்காய், வழுதுணங்காய்.
ஆவிரை + வேர் = ஆவிரைவேர், ஆவிரம்வேர்.
புன்னை + மரம் = புன்னைமரம், புன்னமரம்.

"வேற்றுமை யாயி னைகா னிறுமொழி
ஈற்றழி வோடும் அம்மே‌ற்பவு முளவே." (நன்.)

13. வடக்கு + கிழக்கு = வடகிழக்கு.
குடக்கு + திசை = குடதிசை.
குணக்கு + கடல் = குணகடல்.
மேற்கு + நாடு = மேனாடு.
தெற்கு + கிழக்கு = தென்கிழக்கு.
தெற்கு + மேற்கு = தென்மேற்கு.
தெற்கு + தேசம் = தென்தேசம், தென்றேசம், தெற்குத்தேசம்.
மேற்கு + தேசம் = மேல்தேசம், மேற்றேசம்.

வடக்கு மேற்கென விகாரமின்றியும் வரலாம்.

"திசையொடு திசையும் பிறவும் சேரின்
நிலையீற் றுயிர்மெய் கவ்வொற்று நீங்கலும்
றகரம் னலவாத் திரிதலு மாம்பிற." (நன்.)

14. தனிக்குறிலைச்சேர்ந்த ஆ வீற்றுப்பெயர்கள், ஆ குறுகி அ கரமாகி உ கரமும் ஏற்கும்.

உ—ம். நிலா = நிலவு, புறா = புறவு, இரா = இரவு.

"குறியதன் கீழாக் குறுகலு மதனோ
டுகர மேற்றலு மியல்புமாந் தூக்கின்." (நன்.)

15. "அன்றி, இன்றி" என்னும் வினையெச்சங்கள், விசேஷமாய்ச் செய்யுளில், அன்று, இன்று எண, இ, உ வாக மாறிவரும்.

உ—ம். "உப்பின்று புற்கை யுண்கமா."

"அன்றி இன்றியென் வினையெஞ் சிகரம்
தொடர்பினுள் உகர மாய்வரி னியல்பே." (நன்.)

தொடர்பு=பாட்டு.

16. அது + அன்று = அதான்று எனப் பாட்டில்மாத்திரம் வரும்.
= அதன்று, அதுவன்று என வழக்கில் சாதாரணமாய் வரும்.

"அதுமுன் வரும்அன் றுான்றுந் தூக்கின்." (நன்.)

334. எண்கள் புணர்ச்சி பின்வருமாறு.

1. ஒன்று ஓர் எனவும், ஒரு எனவும் திரியும்.
உ—ம். ஓர் மனிதன், ஒரு மனிதன்.

2. இரண்டு ஈர் எனவும், இரு எனவும் திரியும்.
உ—ம். ஈராயிரம், இருகைகள்.

3. மூன்று மு, மூ என்றும்.
உ—ம். முப்பது, மும்முடி, மூவாயிரம், மூவகை.

4. நான்கு நால், நாலு என ஆகும்.
உ—ம். நாற்பது; நாலாயிரம், நாலு மனிதர்.

5. ஐந்து ஐ என்றுகும்.
உ—ம். ஐம்பது, ஐங்குரவர், ஐயாயிரம்.

6. ஆறு அறு என ஆம்.
உ—ம். அறுபது; அறுசுவை.

7. ஏழு ஏழ், எழு என வரும்.
உ—ம். ஏழ்கடல், எழுசுடர், எழுவேந்திய கையா சரணம்.

8. எட்டு எண் என ஆம்.
உ—ம். எண்பது, எண்ணாயிரம்.

இவைகள் "பத்து" ஒடு சேரும்போது, "பத்து" "பது" எனவாம்.

உ-ம். இரண்டு + பத்து = இருபது.
எழு + பத்து = எழுபது, &c.

"எண்ணிறை யளவும் பிறவு மெய்தின்
ஒன்று முதலெட் டீறா மெண்ணுள்
முதலீ ரெண்முத னீளுமூன் றாறேழ்
குறுகும் ஆறே ழல்ல வற்றின்
ஈற்றுயிர் மெய்யும் ஏழ னுயிரும்
ஏகு மேற்புழி யென்மனார் புலவர்." (நன்.)

"ஒன்றன் புள்ளி ரகர மாக
இரண்ட னொற்றுயி ரேகவுவ் வருமே." (நன்.)

"மூன்றனுறுப் பழிவும் வந்தது மாகும்." (நன்.)

"நான்கன் மெய்யே லறவா கும்மே." (நன்.)

"ஐந்தனொற் றடைவது மினமுங் கேடும்." (நன்.)

"எட்ட னுடம்பு ணவ்வாகு மென்ப." (நன்.)

9. ஒன்பது + பத்து = தொண்ணூறு.
ஒன்பது + நூறு=தொள்ளாயிரம் (தொளாயிரம்).

"ஒன்பா னொடுபத்து நூறு மொன்றின்
முன்னதி னேனைய முரணி யொவ்வொடு
தகர நிறீஇப் பஃதகற்றி னவ்வை
நிரலே ணளவாத் திரிப்பது நெறியே." (நன்.)

10. இருபஃது, ஒருபஃது என்று வருவதியல்பு.
இதோடு கீழெண்கள் சேரின் ஆய்தம் கெட்டு த் தோன்றும்.

இருபஃது + மூன்றனை = இருபத்து மூன்றனை.

"ஒருபஃ தாதிமுன் னொன்றுமுத லொன்பான்
எண்ணு மவையூர் பிறவு மெய்தின்
ஆய்த மழியவாண் டாகுந் தவ்வே." (நன்.)

## COMBINATIONS OF CONSONANTAL ENDINGS.- மெய்யீற்றுப் புணரியல்.

| No. | நிலமொழி ஈறு. | வருமொழி முதல். | வேற்றுமை யிலோ அல் வழியிலோ. | விகாரம். எவ்விதம். | உதாரணம். | சூத்திரம். | குறிப்பு. |
|---|---|---|---|---|---|---|---|
| 335. | எந்த மெய்யெழுத்தும். | எந்த உயிரெழுத்தும். | இருவழி. | மெய்மேல் உயிர் ஏறிப் பொருந்தும். | கந்தன் + எங்கே = கந்தனெங்கே. அவன் + உறுப்பு = அவனுறுப்பு. | "உடன்மேல் உயிர்வந் தொன்றுவ தியல்பே." (நன்.) | N.B.-பின் சொல்லப்படும் விலக்குவிதிகளைக் கவனிக்க. |
| 336. | தனிக்குறிலணைந்த மெய்யீற்றுப் பதம். | Do. | Do. | மெய் இரட்டித்து உயிர் ஏறப்பெறும். | கண் + அழகு = கண்ணழகு. பொன் + ஏது = பொன்னேது. பொன் + ஆசை = பொன்னாசை. கல் + எடுத்தான் = கல்லெடுத்தான். | "தனிக்குறில் முன்னொற் றுயிர்வரி னிரட்டும்." (நன்.) | N.B.—ல், ள், ஈற்றுத் தொழிற்பெயர் உ சாரியை பெறாது. வல்லெழுத்து வருமொழி முதலில் வரின் 348 முதல் சொல்லப்பட்ட விதிப்படி விகாரமும் இயல்புமாகும். "ல,ள,வீறு தொழிற்பெயர் ஈரிடத்து முவ்வுறு, வலிமெலி வல்வழி யியல்புமா வனவுள." (நன்.) உ-ம். ஆடல் சிறந்தது, ஆடணன்று. } கோள்கடிது, கோட்கடிது, கோணன்று, ஆடற்சிறப்பு, ஆடல்வன்மை, } கோள்வலிது, கோட்கடுமை, &c. |
| 337 | ய் தவிர மற்ற மெய்யீறு. | ய, வர்க்க உயிர்மெய். | Do. | இ — சாரியை பெறும். | மண் + யாது = மண்ணியாது. கால் + யாப்பு = காலியாப்பு. | "தன்னொழி மெய்ம்முன் யவ்வரினிகரம், துன்னுமென்று துணிநரு முளரே." (நன்.) | |
| 338. | ஞ், ண், ந், ம், ல், வ், ள், ன், ஈற்றுத்தொழிற்பெயர், வல. | ய் அல்லாத வேறுவர்க்கம். | Do. | பெரும்பாலும் உகரசாரியை பெறும். | உரிஞ் + கடிது = உரிஞுக்கடிது. தின் + சோற்றை = தின்னுசோற்றை. உண் + பண்டத்தை = உண்ணுபண்டத்தை. உரிஞ் + பரிசை = உரிஞுபரிசை, ஓ. N.B.-பொருந் என்னும் தொழிற்பெயர், வேற்றுமை வழியில், உகரமன்றி அ-சாரியையும் பெறும். உ-ம். பொருநக்கடுமை. | "ஞ, ண, ந, ம, ல, வ, ள, ன வொற்றிறு தொழிற் பெயர், ஏவல்வினை நனி யவ்வல் மெய்வரின், உவ்வுறு மேவ லுறுசில சில்வழி." (நன்.) "நவ்விறு தொழிற்பெயர்க் கவ்வுமாம் வேற்றுமை." (நன்.) | |
| 339. | ண், ன், ஈறு. | வல்லெழுத்து. | வேற்றுமை. | ண, ட, ஆகும் ன, ற ஆகும். சிறுபான்மை யியல்புமாகும். | மண் + பானை = மண்பானை or மட்பானை. பொன் + குடம் = பொற்குடம். விண் + சுடர் = விண்சுடர். பொன் + தகடு = பொற்றகடு, ஓ. | "ண, ன, வல்லினம்வரட் டறவும் பிறவரின், இயல்புமாகும் வேற்றுமைக் கல்வழிக், கனைத்தமெய் வரினு மியல்பா கும்மே." (நன்.) | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 354. | Do. | வல்லெழுத்து. | அல்வழி. | இயல்பும் ஆம், விகாரமும் ஆம். | கல்+கடுகும்=கால்கடுக்கும். வேல்+படை=வேற்படை. தேள்+பெரிது=தேள்பெரிது. வாள்+படை=வாட்படை. | " |
| 355. | நிலைமொழி ல், ள். | Do. | வேற்றுமை. | இயல்பு. | கால் பிடித்தான். தோள் தொட்டான். | "னலமுன் றனவும் ணளமுன் டணவும், ஆகும் தநக்கள் ஆயுங் காலே." (நன்.) |
| 356. | ன், ல். | த். | இருவழி. | ன், ல், த், ற், ஆகத் திரியும். | பொன்+தகடு=பொற்றகடு. பொன்+தகடு=பொற்றகடு. கல்+தூண்=கற்றூண். பல+தெரிந்தது=பற்றெரிந்தது. | |
| 357. | Do. | ந். | Do. | ந், ன், ஆகத்திரியும்; ல், ன, ஆகும். | பொன்+நன்று=பொன்னன்று. பொன்+நலம்=பொன்னலம். கல்+நன்று=கன்னன்று. கல்+நுணுக்கம்=கன்னுணுக்கம். பகல்+நன்று=பகனன்று. | |
| 358. | ண், ள். | த். | Do. | த், ட், ஆகத் திரியும்; ள், ட், ஆகும். | பெண்+தோகை=பெண்டோகை. பெண்+தொடர்ந்தான்=பெண்டொடர்ந்தான். கள்+தீது=கட்டீது. கள்+தித்திப்பு=கட்டித்திப்பு. | |
| 359. | Do. | ந். | Do. | ந், ண், ஆகும். ள், ண், ஆகும். | மண்+நன்று=மண்ணன்று. மண்+நலம்=மண்ணலம். பாண்+நலம்=பாணலம். கொள்+நன்று=கொண்ணன்று. கொள்+நாற்றம்=கொண்ணாற்றம். திரள்+நகில்=திரணகில். | |

## EXCEPTIONAL WORDS WITH CONSONANTAL ENDINGS.
## சிற்சில விசேஷித்த மெய்யீற்றுமொழிகள் அடையும் விகாரம்.

### 360. ண் ஈறு.

1. பரண், கவண் என்பவையும், ண் ஈற்றுச்சாதிப்பெயரும், கூட்டத் தொகுதிப்பெயரும், வேற்றுமையிலும் அல்வழியிலும், பொது விதிக்கு மாறாக இயல்பாம்.

உ—ம். பரண்கால், கவண்கல், பாண்குடி, அமண்குடி, ஷ.

2. சாண், எண் என்பவை அல்வழியில் பொது விதிக்கு மாறாக விகாரப்படும்.

உ—ம். சாண் + கோல் = சாட்கோல்.
எண் + கடிது = எட்கடிது.

இவைகள் வாசக வழக்கில் இப்படி விகாரப்பட்டு வருவது அருமை, பெரியோர் எழுதிய பாட்டுக்களில் இவை வந்திருக்கின்றன.

"சாதி குழூஉப் பரண்கவண் பெயரிறுதி
இயல்பாம் வேற்றுமைக் குணவெண் சாண்பிற
டவ்வா கலுமா மல்வழி யும்மே." (நன்.)

### 361. ன் ஈறு.

3. ன் ஈற்று ஜாதிப்பெயர், வருமொழி முதலில் வல்லினம், ஷ வரின் இயல்பாகும்; அ-சாரியைபெற்று வல்லினம் தோன்றுதலு முண்டு.

உ—ம். எயின் + தோட்டம் = எயின்தோட்டம்,
எயினத்தோட்டம், &c.

எயின் = பாலைநிலத்தில் வசிக்கும் குடியானவன்.
= The natural tenant of a treeless desert.

"னஃகான் கிளைப்பெய ரியல்பு மஃகான்
அடைவு மாகும் வேற்றுமைப் பொருட்கே." (நன்.)

4. "மீன்" என்பதிலுள்ள ன், வருமொழி முதலில் வரும் வல்லினம் கண்டு றகரமாக மாறும்; இது செய்யுளுக்கே சிறப்பு.

உ—ம். மீன் + கண் = மீற்கண், மீன் + தோல் = மீற்றோல்,
மீன் + சினை = மீற்சினை, ஷ.

"மீன்றவ் வொடுபொருஉம் வேற்றுமை வழியே." (நன்.)

5. "தேன்" இல் ஈற்று ன் (a) வருமொழி முதலில் வல்லினம் வரின், ன் கெட்டு, வல்லொற்று மிகும்; அல்லது இனமெல்லொற்றைப் பெறும்.

உ—ம். தேன் + குழம்பு = தேக்குழம்பு, தேங்குழம்பு.
தேன் + குடம் = தேக்குடம், தேங்குடம்.

(b) வருமொழி முதலில் மெல்லினம் வரின் ன் கெடும்.

உ—ம். தேன் + மலர் = தேமலர், தேன் + மொழி = தேமொழி.

(c) இயல்பாய் வருதலுமுண்டு.

உ—ம். தேன்மொழி, தேன்குடம், தேன்யாது, தேன்யாப்பு.

"தேன்மொழி மெய்வரி னியல்பு மென்மை
மேவி னிறுதி யழிவும் வலிவரின்
ஈறுபோய் வலிமெலி மிகலுமா மிருவழி." (நன்.)

6. எகின் = 1. அன்னம்.
= 2. மரம்.

எகின் அன்னத்தைக் குறிக்கும்போது வல்லினம் வருமொழி முதலில் வரின், இயல்பாகும். அன்றியும், அ—சாரியை பெற்று, வல்லினமோ, இனமெல்லினமோ மிகப்பெறும்.

உ—ம். எகின்கால், எகின் கண்டேன்.
எகினக்கால், எகினம் கண்டேன், ௸.
எகினங்கால்.

"மரமல் லெகின்மொழி யியல்பு மகரம்
மருவ வலிமெலி மிகலு மாகும்." (நன்.)

7. குயின், ஊன் என்பவை வருமொழி முதலில் வல்லொற்று வரின் வேற்றுமை வழியிலும் பொதுவிதிக்கு மாறாக இயல்பாகும்.

உ—ம். குயின் கடுமை, ஊன் பெருமை.
குயின்=மேகம் (cloud.) ஊன் =மாமிசம் (flesh.)

"குயினூன் வேற்றுமைக் கண்ணு மியல்பே." (நன்.)

8. மின்=lightning. பின்=after. பன்.= { (1) a tax. (2) பத்து=ten. (3) பன்னு=weave. }

இவைகள் வருமொழியோடு புணருங்காலே, இயல்பாய் வரும்; ஆயினும் பொதுவாய் உ—சாரியை பெறும்.

உ—ம். மின்னுக்கடுமை, மின்னுக்கடிது.
பின்னுக்காட்டும், பின்னுக்கண்டேன்.
பன்னுக்கடிது, பன்னுக்கடுமை, பன்னுநீதி, பன்னு நோக்கம்.

9. கன்=சிறு தராசுத்தட்டு=a small scale or dish of a balance.

இது வருமொழிகளோடு புணரும்போது அகரச் சாரியை பெற்று நிற்கும். வல்லொற்றுவரின் வல்லொற்று மிகலும், இன மெல்லொற்றாகலு முண்டு.

உ—ம். கன்+தட்டு=கன்னத்தட்டு, கன்னந்தட்டு, கன்னநெறி.

இயல்பாதலு முண்டு.

உ—ம். கன்யாது, கன் தட்டு.

"மின்,பின், பன்,கன் றொழிற்பெய ரனைய
கன்னவ் வேற்று மென்மையோ டுறழும்." (நன்.)

10. "தன்" வருமொழி முதலில் வல்லினம் வரில், ன, ற ஆய்த் திரியப்பெறும்; நின் அப்படியல்லாமல் இயல்பாகும்.

உ—ம். தன் + பகை = தற்பகை; நின் + பகை = நின்பகை.

"தன்னென் னென்பவற் றீற்றுனவ் வன்மையோ
டுறழு நின்னீ றியல்பா முறவே." (நன்.)

362. ம் ஈறு.

11. நும், தம், எம், நம் என்பவை (தானென்பது தன் என்றும் நீ, நின் என்றும் வேற்றுமைப்படும்பொழுது திரிந்ததுபோல) நீர், தாம், யாம், நாம் என்பவை திரிந்ததாலாயவை. இவைகளுக்குப்பின் வரு மொழி முதலில் ஞ, நக்கள் வந்தால், இவைகளினீற்று மகரம், முறையே ஞ, ந வாகும்.

உ—ம். தம் + நாணம் = தந்நாணம், &c.
தம் + ஞாண் = தஞ்ஞாண், &c.

"நுந்தம் எம்நம் மீறு மவ்வரு ஞநவே." (நன்.)

12. அகம் என்பதோடு, செவி, கை வரின், அகம்—அம் என்றாகி, இயற்கையாய்க் கொள்ளவேண்டிய விகாரத்தைப் பெறும்; இயல் பாகவு மிருக்கும்.

உ-ம். அஞ்செவி, அங்கை; அகஞ்செவி, அகங்கை.
"அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடும்." (நன்.)

13. ஈம் = சுடுகாடு (Cremation ground.)
கம் = கம்மியர்தொழில் (Smith's Work.)

இவையிரண்டும் வருமொழியோடு, அ, உ-சாரியைகளைப்பெற்று விகாரமடையும்.

உ-ம். ஈமுக்காற்று, கம்முக்குடம்,
ஈமக்காற்று, கம்மக்குடம்,
ஈமுநாற்றம். கம்முநலம், ௳.

14. உரும் = இடி, Thunder.

இது வருமொழியோடு புணரும்போது உ-சாரியை பெறும்.

உ-ம். உருமுக்குமுறல்.

"ஈமுங்கம்மு முருமுந் தொழிற்பெயர் மானும்
முதலன வேற்றுமைக் கவ்வும் பெறுமே." (நன்.)

மானும் = போலும்.

## 363. ழ் ஈறு.

15. தமிழ் என்பது வருமொழியோடு புணரும்போது வேற்றுமை வழியில் அ-சாரியை பெற்றும், இன் சாரியை பெற்றும், இயல்பாய் வருதலுமுண்டு. கோல் என்ற வார்த்தை, தாழ்மேல் வரும்போது மாத்திரம் தாழ், அ-சாரியை பெறும்.

தாழ் = a bolt, தாழ்ப்பாள்.

உ-ம். தமிழநாடு, தமிழவரசன், தமிழின் சுவை, ௳.
சுவர்ப்புறத்து நீண்ட உத்திரம் தாழக்கோல்.

"தமிழவ் வுறவும் பெறும்வேற் றுமைக்கே
தாழுங் கோல்வந் துறுமே லற்றே." (நன்.)

16. கீழ் என்பதோடு வருமொழிகள் புணரும்போது இயல்பாய் வருதலே சிறப்பு.

விகாரப்பட்டு அருமையாய் வரும்.

உ-ம். கீழ்சாதி, கீழ்குலம்; கீழ்க்குலம் என வருவது அருமை.

"கீழின் முன்வன்மை விகற்பமு மாகும்." (நன்.)

**364.** ல் ஈறு.

17. வல் = சூதாடும் கருவி (a Chess Board.)

இது வருமொழியோடு புணரும்போது இருவழியிலும் உ-சாரியை பெறும்.

வருமொழியாய்ப் பலகை, நாய் என்ற வார்த்தைகள் வரின் வேற்றுமை வழியில் அ-சாரியையும், உ-சாரியையும் பெறும்.

உ-ம். வல்லுக்கட்டு, வல்லுநன்று; வல்லப்பலகை, வல்லுப் பலகை; வல்லநாய், வல்லுநாய்.

"வல்லே தொழிற்பெய ரற்றிரு வழியும்
பலகைநாய் வரினும் வேற்றுமைக் கவ்வுமாம்." (நன்.)

18. நெல், செல், கொல், சொல் என்பன அல்வழியிலுங்கூட றகரமாகத் திரியும். (கொல் = கொல்லர்தொழில்; செல் = மேகம்.)

உ-ம். நெற்கறுப்பானது, கொற்கடியது, செற்கீழ்நோக்கிற்று, சொற்கடுமையானது.

"நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லும்,
அல்வழி யானும் றகர மாகும்." (நன்.)

**365.**

19. இல் (negative) என்பது ஐ ஏற்று இல்லை என ஆகும். அப்போது வருமொழி வல்லினம் தோன்றலும் இயல்பாதலுமுண்டு.

இல் என்பதோடு ஆ சேர வருமொழி வல்லினம் தோன்றியே வரும்.

உ-ம். இல்லைபொருள், இல்லைப்பொருள்; இல்லாப் பொருள்.

இல் என்பதுமாத்திரம் வருமொழியோடு புணருமாயின் யாதொரு விகாரமு மடையாது.

உ-ம். இல் பொருள்.

"இல்லெ னின்மைச் சொற்கை யடைய
வன்மை விகற்பமு மாகா ரத்தொடு
வன்மை யாகலு மியல்பு மாகும்." (நன்.)

**366.** ள் ஈறு.

20. வள் = Edge, Ear, sheath of a sword, leathern tong.
புள் = பறவை (Bird).

இவைகள் வருமொழியோடு புணரும்போது தொழிற்பெயரைப் போல் உ-சாரியை ஏற்கும்.

உ—ம். புள்ளுக்கூட்டம், வள்ளுக்கடுமை, புள்ளு நன்று, வள்ளு மேலானது.

"புள்ளும் வள்ளுந் தொழிற்பெயர் மானும்." (நன்.)

**367.** வ் ஈறு.

21. அவ், இவ், உவ் என்கிற சுட்டுப்பெயர்களின் வ், வருமொழியில் வல்லினம் வரின் ஆய்தமாகும்.

உ—ம். அவ்+கடிய=அஃகடிய, &c.

இவற்றோடு மெல்லின முதலிலுள்ள வருமொழி புணரின், வ் அம் மெல்லினமாக மாறும்.

உ—ம். அவ்+ஞானம் = அஞ்ஞானம்,
அவ்+நாண்கள்= அந்நாண்கள், &c.

இவற்றோடு இடையினம் முதலிலுடைய வருமொழி புணரில், வ் இயல்பாகும்.

உ—ம். அவ்யாது, &c.

*N.B.*—அ=சுட்டிடைச்சொல். அவ்=பன்மையையுணர்த்திய சுட்டுப் பெயர்ச்சொல்.

"சுட்டு வகரமூ வினமுற முறையே
ஆய்தமு மென்மையு மியல்பு மாகும்." (நன்.)

22. தெவ்=பகை (hatred).

தெவ் வருமொழியுடன் புணரும்போது, தொழிற்பெயர்போல உ—சாரியை பெறும்.

உ—ம். தெவ்வுக்கோஷ்டம், தெவ்வு மாறிற்று, &c.

வருமொழி முதலில் மகரம் வந்தால் சிறுபான்மை "தெவ்" இலுள்ள வ், ம் ஆக மாறும்.

உ—ம். தெவ்+முனை=தெம்முனை.

"தெவ்வென் மொழியே தொழிற்பெய ரற்றே,
மவ்வரின் வஃகான் மவ்வு மாகும்." (நன்.)

COMBINATION OF PARTS OF A WORD.—உருபு புணரியல்.

**368.** வேற்றுமை யுருபுகளும், வினையின் பகுதி, விகுதி, இடைநிலைகளும் கூடிப் புணரும்போது உயிரீற்று மெய்யீற்றுப் புணரியலின் விதிகளையே பெரும்பாலும் ஒத்து வரும்.

உ—ம். பற+கிறு+அ+து=பறக்கிறது. இதில் க் இரட்டி, றுவ்வில் உ கெட்டு, அ, ற் மேலேறியது முன்கூறிய விதிப்படியே, &c.

"உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்." (நன்.)

"ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியின்
ஒக்குமன் னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே." (நன்.)

"விகுதி பதஞ்சா ரியையுரு பனைத்தினும்
உரைத்த விதியினோர்ந் தொப்பன கொளலே." (நன்.)

**369.** இப்படிப் புணரும்போது, சாரியைகள் வருதலியல்பே.

"பதமுன் விகுதியும் பதமு முருபும்
புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை
வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகும்." (நன்.)

சாரியைக ளிவையென்றும், நான், தான், தாம், நாம், நீ, நீர், அவை, எல்லாம் என்பவை வேற்றுமைப் படும்போது அடையும் விதிக ளிவையென்றும் பெயரியலிலேயே எடுத்துக்காட்டியாயிற்று.

**370.** இரண்டாம்வேற்றுமையுருபு, பொது விதிகளை மீறி வருத லியல்பு.

"இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்
உயர்திணை யிடத்து விரிந்துந் தொக்கும்
விரவுப் பெயரின் விரிந்து நின்றும்
அன்ன பிறவு மாகுமை யுருபே." (நன்.)

உ–ம். வழிபடுதெய்வம் நிற்புறங்காப்ப என்பதில், நின்+புறங் காப்ப=நின்புறங்காப்ப என் றியல்பாக வேண்டியது, "நிற்புறங் காப்ப" என்று விகாரப்பட்டது.

மண் கொண்டான் என்பது மட்கொண்டான் என்றாகாமல் இயல் பாயிற்று.

இராமன் தம்பியைக் கூப்பிட்டான் } என உயர்திணையில் விரிந்
இராமன் தம்பி கூப்பிட்டான் } தும், தொக்கும் வந்தன.

சாத்தனைக்கொணர்ந்தான், என் மகள் ஒரு ஆண் பெற்றாள் என விரவுப்பெயரில் விரிந்தும் தொக்கும் வந்தன. இவ்விதி செய்யு ளியற்றுவோர்க்கு அநுகூலமானது வாசகத்தில் சாதாரணமான விதியே விசேஷம்.

**371.** ஆறும் வேற்றுமை யுருபுகள் உயிரீறு பெற்று வரும். அப் படியே மூன்றாம் வேற்றுமையும் "ஒடு" "ஓடு" என்னும் உருபுகளை யேற்றபொழுது உயிரீறு பெறும். இவற்றிற்குப்பின் "இயல்பினும் விதியினும் நின்ற உயிர் முன், க, ச, த, ப மிகும் விதவாதன மன்னே"

என்றபடி வல்லெழுத்து முதலிலுள்ள பதம் வரின் ஒற்று இரட்டிக்காது.

உ—ம். கந்தனோடு சென்றான்.
தன கைகள், எனது கை.
தம்பியது படைக்கலம்.

"மூன்ற னுருபினு மாற னுருபினும்
வல்லெழுத்து மிகுத லில்லென மொழிப."

(இல. விள.)

372. எவ்வகை யீற்றுப் பெயர்களும், மூன்றாம் வேற்றுமைக் கருத்தாப்பொருளில் தம் தொழிலைக் காட்டிய வல்லெழுத்தை முதலிலுடைய வினைகளோடு புணரும்போது இயல்பும் விகற்பமும் ஆகும்.

உ—ம். பேய்பிடிக்கப்பட்டான், புலிகடிக்கப்பட்டான்; பேய் கோட்பட்டான், பேய்க்கோட்பட்டான், புலிகோட்பட்டான், புலிக் கோட்பட்டான், ௳.

"புள்ளியு முயிரு மாயிரு சொன்முன்
தம்மி னாகிய தொழின்மொழி வரினே
வல்லினம் விகற்பமு மியல்பு மாகும்." (நன்.)

373. மேற்சொன்ன பொது விதிகள், சிறப்பு விதிகளில் அமையாதவைகளையெல்லாம் பெரியோர் காட்டிய அமைப்புக்கு இசைய முடித்துக்காட்டி, புணர்ச்சி விதி கூறுக.

"இதற்கிது முடிபென் றெஞ்சா தியாவும்
விதிப்பள வின்மையின் விதித்தவற் றியலான்
வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே." (நன்.)

374. மையீற்றுப் பண்புப்பெயர்கள் பலவகை விகாரங்களை அடையும். (பதவியலில் காண்க.)

375. செய்யுள் விகாரங்கள்.—POETICAL COMBINATIONS.

1. Hardening of Consonants.—வலித்தல் விகாரம், மெல்லொற்று வல்லொற்றாதல்.

உ—ம். "குறுத்தாட் பூதம் சுமந்த, அறக்கதிராழி யெம்மண்ணலைத் தொழினே."—குறுந்தாள், குறுத்தாள் என்றாயது.

2. Softening of Consonants.—மெலித்தல் விகாரம், வல்லொற்று மெல்லொற்றாதல்.

உ—ம். "தண்டையி னினக்கிளி கடிவோள்."—தட்டை, தண்டை என்றாயது.

3. Elongation.—நீட்டல் விகாரம், குறில் நெடிலாதல்.

உ-ம். "தீத்தொழிலேகன்றித் திரிதந்தெருவைபோற், போத்த ருர் புல்லறிவினுர்."—பொத்து, போத்து என்ருயது.

4. Shortening.—குறுக்கல் விகாரம், நெடில் குறிலாதல்.

உ-ம். "பதம் பணிந்து மகிழ்ந்து."—பாதம், பதம் என்ருயது.

5. Prosthesis, Epenthesis Paragoge.—விரித்தல் விகாரம், இல்லாத எழுத்தைச் சேர்த்தல்.

உ-ம். பால்போலுமே—பால்போலும்மே என்ருவது; மக—மகவு என்ருவதும் அது.

6. Elision.—தொகுத்தல் விகாரம், உள்ள எழுத்து நீங்குவது.

உ-ம். தெய்வம் தொழாதார்—தெய்வம் தொழார் என்ருவது.

"வலித்தன் மெலித்த னீட்டல் குறுக்கல்
விரித்த றெகுத்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி." (நன்.)

7. ஒரு வார்த்தை முதல், இடை, கடை மூன்றில் ஓரிடத்தில் குறைவதும் செய்யுள் விகாரமாம்.

உ-ம். "மரையிதழ் புரையு மஞ்செஞ் சீறடி."—தாமரை, மரை என்ருயது முதற்குறை.

"வேதின வெரிநி னேதி முதுபோத்து."—ஓந்தி, ஓதி என்ருயது இடைக்குறை.

"நீலுண்டுகிலிகை."—நீலம், நீல் என்ருயது கடைக்குறை.

"ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே." (நன்.)

**376**. செய்யுளில் புணர்ச்சிப் பொதுவிதியை மீறி வருபவை அங்கங்கே பிரித்துக் காட்டப்பட்டது.

## சந்தி.—SANSCRIT COMBINATION.

**377**. சமஸ்கிருதத்தில் வார்த்தைகள் கூடி வரும்போது சில விகாரங்களை ஏற்று வரும். தமிழிலும் அவ்விகாரங்கள் அங்ஙனம் வழங்கிவரும். இது சந்தி யெனப்படும். இது மூவகை யென்பாரா யினும் நான்காய் வகுக்கப்படும்.

"சந்தி தீர்க்கம் குணமே விருத்தி
யெனமூ வகைப்படு மென்மனுர் புலவர்." (முத். வீரி.)

இவை பின்வருமாறு:—

## 378. I. தீர்க்க சந்தி.

| No. | நிலைமொழி ஈறு. | வருமொழி முதல். | எவ்வாறும். | உதாரணம். | சூத்திரம். | குறிப்பு. |
|---|---|---|---|---|---|---|
| 1. | அ. | அ, ஆ. | இரண்டும் கெட ஆகாரமாம். | புண்ணிய+அநுஷ்டானம்=புண்ணியாநுஷ்டானம். வேத+ஆகமம்=வேதாகமம். | "அ,ஆ விறுதிமுன் அ,ஆ வரினே, யிருமையுங் கெட ஆ வேற்கு மென்ப." (மு.வீரி.) | |
| 2. | ஆ. | Do. | Do. | சக்கர+அமிர்தம்=சக்கராமிர்தம். பரா+ஆதீனம்=பராதீனம். | | |
| 3. | இ. | இ, ஈ. | இரண்டும் கெட ஈகாரமாம். | சசி+இந்திரம்=சசீந்திரம். கிரி+ஈசன்=கிரீசன். | "இ, ஈயிறுதிமுன், இ,ஈ வரினே, யிருமையுங் கெட ஈ யேற்கு மென்ப." (மு.வீரி.) | |
| 4. | ஈ. | Do. | Do. | மகீ+இந்திரன்=மகீந்திரன். மகீ+ஈசன=மகீசன். | | |
| 5. | உ. | உ, ஊ. | இரண்டும் கெட ஊகாரமாம். | குரு+உற்பத்தி=குரூற்பத்தி. குரு+ஊகை=குரூகை. | "உ,ஊ, விறுதிமுன் உ,ஊ வரினே, யிருமையுங் கெட ஊ வேற்கு மென்ப." (மு.வீரி.) | |
| 6. | ஊ. | Do. | Do. | சுயம்பூ+உபதேசம்=சுயம்பூபதேசம். சுயம்பூ+ஊர்ஜிதம்=சுயம்பூர்ஜிதம். | | |

## 379. II. குண சந்தி.

| No. | நிலைமொழி ஈறு. | வருமொழி முதல். | எவ்வாறும். | உதாரணம். | சூத்திரம். | குறிப்பு. |
|---|---|---|---|---|---|---|
| 1. | அ. | இ, ஈ. | இரண்டும் கெட ஏகாரமாகும். | சுர+இந்திரன்=சுரேந்திரன். சுர+ஈசன்=சுரேசன். | "அ,ஆ விறுதிமுன் இ, ஈ வரினே, யிருமையுங் கெட ஏ யேற்கு மென்ப." (மு. வீரி.) | |
| 2. | ஆ. | Do. | Do. | தரா+இந்திரன்=தரேந்திரன். உமா+ஈசன்=உமேசன். | | |
| 3. | அ. | உ, ஊ. | இரண்டும் கெட ஓகாரமாகும். | ஞான+உதயம்=ஞானோதயம். ஞான+ஊர்ஜிதம்=ஞானோர்ஜிதம். | "அ,ஆ விறுதிமுன் உ,ஊ வரினே, யிருமையுங் கெட ஓ வெய்து மென்ப." (மு. வீரி.) | |
| 4. | ஆ. | Do. | Do. | தயா+உற்பத்தி=தயோற்பத்தி. தயா+ஊர்ஜிதன்=தயோர்ஜிதன். | | |

## 380. III. விருத்தி சந்தி.

| No. | நிலைமொழி ஈறு. | வருமொழி முதல். | எவ்வாறும். | உதாரணம். | சூத்திரம். | குறிப்பு. |
|---|---|---|---|---|---|---|
| 1. | அ. | ஏ, ஐ. | இரண்டும் கெட ஐகாரமாம். | சிவ+ஏகன்=சிவைகன். சிவ+ஐக்கியம்=சிவைக்கியம். | "அ,ஆ விறுதிமுன் ஏ,ஐ வரினே, யிருமையுங் கெடஐ யெய்து மென்ப." (மு. வீரி.) | |
| 2. | ஆ. | Do. | Do. | தார+ஏகவீரன்=தரைகவீரன். மகா+ஐக்கியம்=மகைக்கியம். | | |
| 3. | அ. | ஓ, ஔ. | இரண்டும் கெட ஔகாரமாம். | கோமல+ஔடதி=கோமௌடதி. திவ்விய+ஔடதம்=திவ்வியௌடதம். | "அ,ஆ விறுதிமுன் ஓ,ஔ வரினே, யிருமையுங் கெட ஔ வெய்து மென்ப." (மு. வீரி.) | |
| 4. | ஆ. | Do. | Do. | மகா+ஔடதி=மகௌடதி. மகா+ஔடதம்=மகௌடதம். | | |

381. IV. தத்திதாந்தம்.

(1) பதங்களின் முதலிலுள்ள இ, ஈ, ஏ மூன்றும், ஐ ஆகும்

உ-ம். சிவ சம்பந்தம் = சைவம்.
வீரத்தின் தன்மை = வைரம்.
கேவல சம்பந்தம் = கைவல்யம்.

"இ ஈ ஏ முதற்கை யாமென மொழிப." (மு. வீரி.)

(2) பதங்களின் முதலில் வரும் உ, ஊ, ஓ மூன்றும், ஔ ஆகும்.

உ-ம் புத்தனைத் தொழுவோன் = பௌத்தன்.
பூத சம்பந்தம் = பௌதிகம்.
கோசலைநாட்டில் பிறந்தவள் = கௌசலை.

"முதலில் உ, ஊ, ஓ ஔவா கும்மே." (மு. வீரி.)

(3) பதங்களின் முதலிலுள்ள அ, ஆவாகும்.

தசரதன் குமாரன் = தாசரதி.
ஜனகன் புத்திரி = ஜானகி.

"அகர முதன்மொழி ஆகார மாகும்." (மு. வீரி.)

(4) பதங்களின் முதலில் வரும் ஐ (Rhi,) ஆர் ஆகும்.

கிருத்திகை புத்திரன் = கார்த்திகேயன்.

(5) மிகுதிகாட்ட இரண்டுபதங்கள் சேர்ந்து வரும்போது, நடுவில் ஆவரும்.

கோடி + கோடி = கோடாகோடி.
இலட்சம் + இலட்சம் = இலட்சாலட்சம்.



# CHAPTER XII.

## பதவியல்.—WORDS.

**382.** இவ்வியலில், பதங்களின் பிரிவும், தாதுமூலம் முதலியனவும், பிறபாஷைகளினின்று தமிழில் கலந்த பதங்களும் இவையென்று வகுத்துக் காட்டப்படும்.

**383.** பதங்கள் பகுபதமென்றும் பகாப்பதமென்றும் இருவகையாம்.

"எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருடரின்
பதமா மதுபகாப் பதம்பகு பதமென
இருபா லாகி யியலு மென்ப." (நன்.)

**384.** Simple words.—பகாப்பதம், பிரித்தால் அர்த்தம்கொடாமல் ஆதிதொட்டு ஒன்றாய் இயங்கிவருவது. இது பெயர்ப் பகாப்பதம், வினைப்பகாப்பதம், இடைப்பகாப்பதம், உரிப்பகாப்பதம் எனப் பாகுபாடு செய்யப்படும்.

உ-ம். நாய்; வா; மற்று; தவ, சால.

"பகுப்பாற் பயனற் றிடுகுறி யாகி
முன்னே யொன்றாய் முடிந்தியல் கின்ற
பெயர், வினை, யிடை, யுரி நான்கும் பகாப்பதம்." (நன்.)

**385.** பகாப்பதம் ஓரெழுத்தாலாவதுமுண்டு.

அவைகள் எவையெனில்,

"உயிர்மவி லாறுந் தபநவி லைந்தும்
கவசவி னாலும் யவ்வி லொன்றும்
ஆகு நெடிநொது வாங்குறி லிரண்டோ
டோரெழுத் தியல்பத மாறேழ் சிறப்பின", (நன்.)

என்கிற சூத்திரத்திலுள்ள இந்நாற்பத்திரண்டும், பிறவுமாகிய அர்த்தம் கொடுக்கிற தனிப்பதங்களே. இவைகள் முன்னே விவரிக்கப் பட்டாயின. (Vide Section **56**.)

**386.** Derivatives or Divisible words.—பகுபதம், பகுத்துப் பிரிக்கப்பட்ட அம்சங்கட்குப் பொருளுள்ளது.

வினையும், வினையாலணைபெயரும், பொருளாதியாறனடியாய்ப் பிறந்த பெயரும் பகுக்கக்கூடியவைகள்.

உதாரணம்.

| | | |
|---|---|---|
| ஓடினான் | = ஓடு +இன் + ஆன்.—வினை. | |
| செய்கிறவன் | = செய்+கிறு+அ+வ்+ அன்.—வினையாலணைபெயர். | |
| பொன்னன் | = பொன் +ன் + அன். | பொருளாதி யாறனடியாய்ப் பிறந்தபெயர்கள். |
| மதுரையார் | = மதுரை +ய் + ஆர். | |
| ஞாயிற்றான் | = ஞாயிறு + ஆன். | |
| தடங்கண்ணன் | = தடம் + கண்+ அன். | |
| தீயவர் | = தீமை + அ + வ்+அர் | |
| நாட்டுதல் | = நாட்டு + தல். | |

N.B.—ஏவல் வினை, பகுதியாகும்.

வியங்கோள், எச்சம் பகுதி விகுதிகளையும், முற்று இவ்விரண்டோடு காலங்காட்டும் இடைநிலைகளையும் பெறும்; சாரியைகள் வருவது மியல்பே. பெயர்களுள் இயற்பெயர், இடுகுறிப்பெயர்கள் பொதுப்பட பகாப்பதம்; மற்றவை பகுபதமாம். எச்சமும் சில வேளை இடைநிலை பெறும்.

"பொருளிடங் காலம் சினைகுணந் தொழிலின்
வரும்பயர் பொழுதுகொள் வினைபகு பதமே." (நன்.)

**387.** Parts of a divisible word.—பதத்தைப் பிரித்து, பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம் ஆகியவற்றை எடுத்துக் காட்டி, அவைகள் புணர்ச்சிக் கிலக்கணங் கூறுவது பதமுடிபெனப் படும்.

"பகுதி விகுதி யிடைநிலை சாரியை
சந்தி விகார மாறினு மேற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்." (நன்.)

**388.** Root.—பகுதி, பகாப்பதமான முதல் நின்ற தாதுச் சொல்லே.

"தத்தம்பகாப் பதங்களே பகுதி யாகும்." (நன்.)

**389.** Some special roots of abstract nouns. — பண்புப் பெயர்கள், செம்மை, சிறுமை, நன்மை போன்றவை.

"செம்மை சிறுமை சேய்மை தீமை
வெம்மை புதுமை மென்மை மேன்மை
திண்மை யுண்மை நுண்மை யிவற்றெதிர்
இன்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே." (நன்.)

**390**. Changes of abstract nouns ending in மை.— "மை" யீற்றுப் பண்புப்பெயர்கள் அநேக வகையாய் விகாரப்படும்.

(*a*) "மை" ஈறு கெடும்.

உ—ம். செம்மை+பறவை=செம்பறவை.

(*b*) வார்த்தையின் நடுவில் வரும் உ, இ ஆம்.

உ—ம். கருமை+பானை=மை கெட்டு கரு என்றாகி, உ, இ ஆய் கரி என்றாய், கரிப்பானை எனப்பகரம் இரட்டித்து வந்தது.

கரியபானை என அ வும் இடையிற் பெற்று வரலாம்.

(*c*) வார்த்தையின் முதல் நின்ற குறில் நெடிலாம்.

உ—ம். பசுமை+பயறு=மை கெட்டு, உ இ ஆகி, பசி என்றாய், முதல் ப, பா வாய், பாசிப்பயறு என ஒற்று இரட்டித்து வந்தது.

(*d*) வார்த்தையின் முதல் நின்ற அ, ஐ ஆகும்.

உ—ம். பசுமை+குழல்=சு, மை இரண்டும் கெட்டு, ப, பை ஆகி, பைங்குழல் என்றாயது. க இனமான ங ஒற்று இடையில் வந்தது காண்க.

(*e*) வார்த்தையின் நடுவில் வந்த ஒற்று இரட்டிக்கும்.

உ—ம். பசுமை+பயறு=பச்சைப்பயறு.—மை கெட்டது; சு வில் உ கெட்டது; ச் இரட்டித்தது; ஐச்சாரியைபெற்றது; ப் தோன்றியது.

(*f*) வார்த்தையின் நடுவிலுள்ள மெய் திரியும்.

உ—ம். செம்மை+ஆம்பல்=சேதாம்பல்.—மை கெட்டது; ம், த் ஆய்த்திரிந்தது; செ, சே ஆயது.

(*g*) இனமான மெய்யெழுத்து வார்த்தையின் நடுவில் தோன்றும்.

உ—ம். *d*யின் அடியிற்கண்ட உதாரணத்தில் ங் தோன்றியது காண்க.

இப்படிப் பலவகையாய் "மை" ஈற்றுப் பண்புப் பெயர்கள் விகாரப்படும்.

"ஈறு போத லிடையுகர மிய்யாதல்
ஆதி நீட லடியகர மையாதல்
தன்னொற் றிரட்டன் முன்னின்ற மெய்திரிதல்
இனமிக லினையவும் பண்பிற் கியல்பே." (நன்.)

**391.** Sanscrit Prefixes.—சம்ஸ்கிருதத்திலுள்ள அர்த்தந் தரும் பகுதிகள் சில தமிழில் உபயோகிக்கப்படும். அவைகள் உபசர்க்கங்கள் எனப்படும்.

(1) இன்மையைக் காட்டும் உபசர்க்கங்கள்.

| உபசர்க்கம். | | உதாரணம். | உபசர்க்கம். | | உதாரணம் |
|---|---|---|---|---|---|
| அ | = | அரூபம். | அந் | = | அநாதி. |
| நிர் | = | நிர்விசாரம். | வி | = | விமலம். |
| ந | = | நபுஞ்சகன். | நி | = | நிமலன். |
| கு | = | குதர்க்கம். | அப | = | அபஜெயம். |
| அவ | = | அவமானம். | அனு | = | அனுவிருஷ்டி. |
| நிஷ் | = | நிஷ்களங்கம். | | | |

(2) பல அர்த்தங்களைக் கொடுக்கும் உபசர்க்கங்கள்.

| உபசர்க்கம். | | அர்த்தம். | | உதாரணம். |
|---|---|---|---|---|
| (a) பிர | + | மிகவும் | = | பிரயோகம். |
| (b) பரா | + | வேறு | = | பராமுகம். |
| (c) சம், சக | + | கூட | = | சம்பந்தம். சகபாடி. |
| (d) அநு | + | கூட | = | அநுபானம். |
| (e) துர், துன் | + | கெட்ட | = | துர்க்குணம். துன்னூற்றம். |
| (f) ஆ | + | நல்ல | = | ஆசாரம். |
| (g) அதி | + | மிகவும் | = | அதிபால்யம். |
| (h) அபி | + | மிகவும் | = | அபிவிருத்தி. |
| (i) சு | + | நல்ல | = | சுவிசேஷம். |
| (j) உத் | + | பெரிய | = | உத்பாதம், உற்பாதம். |
| (k) பிரதி | + | திரும்ப | = | பிரதிவிம்பம். |
| (l) பரி | + | முழு | = | பரிபூரணம், பரிசுத்[தம் |
| (m) உப | + | துணை | = | உபசாரம். |
| (n) அதோ | + | கீழ் | = | அதோமுகம். |
| (o) அந்தர் | + | மேல் | = | அந்தர் நோக்கு. |
| (p) சன், சத் | + | நல்ல | = | சன்மார்க்கம். சத்விஷயம். சற்குரு. |

| உபசர்க்கம். | | அர்த்தம். | | உதாரணம். |
|---|---|---|---|---|
| (q) சுப | + | நல்ல | = | சுபமங்கிலி. |
| (r) உஸ் | + | மேல் or உள்ளே | = | உஸ்வாசம் |
| (s) நிஸ் | + | கீழே or வெளியே | = | நிஸ்வாசம். |
| (t) திரு | + | பரிசுத்த (Sacred) | = | திருமங்கிலியம். |
| | | தெய்வீக (Divine) | = | திருத்தொண்டர். திருவிழா. |

இவைகள் சம்ஸ்கிருத பதங்களோடுமாத்திரம் அல்ல, தமிழ்ப் பதங்களோடும் சேர்ந்து தமிழில் வழங்கும்.

## பதங்கள் —KINDS OF WORDS.

**392.** சொற்கள் பிறப்பு நோக்கி இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் எனப் பகுக்கப்படும்.

"அதுவே இயற்சொற் றிரிசொ லியல்பிற் பெயர்வினை
எனவிரண் டாகு மிடையுரி யடுத்து
நான்கு மாந்திசை வடசொ லணுகாவழி." (நன்.)

**393.** இயற்சொல், செந்தமிழாகி இலகுவாய்ப் பொருள் அறியக்கூடிய சொல்.

உ—ம். மண், கல், தீ, காற்று.

"செந்தமி ழாகித் திரியா தியார்க்கும்
தம்பொருள் விளக்குந் தன்மைய வியற்சொல்." (நன்.)

**394.** [1]திரிசொல், பொருள் தெளிவில்லாமல் கருகலாய் ஆராய்ந்து அறியக்கூடியது. ஒரே வார்த்தைக்குப் பலபொருளிருக்கும்; பல வார்த்தைகள் ஒரேபொருளைக் குறிப்பிக்கும். இவையெல்லாம் "**திரிசொல்**" எனப்படும்.

உ—ம். பெயரில்,

1. கிள்ளை, சுகம், தத்தை என்ற மூன்று வார்த்தைகளும் கிளி (Parrot) என்ற ஒருபொருளைக் குறித்தன.

---

[1]திரிசொல் = திரித்து அர்த்தஞ் சொல்லப்படுவது; அதாவது முன் பின்வரும் வார்த்தைகளையும் பொருளையும் நோக்கி இஷ்டம்போலும் பொருள்படுத்திக்காட்டக்கூடிய சொல்.

2. வாரணம் என்பது, யானை (Elephant), கோழி (Hen), சங்கு (Conch) எனப் பலபொருள் குறித்தன.

வினையில்,

1. படர்ந்தான், புக்கான், சென்றான் என்பவை போனான் என்னும் ஒருபொருளைக் குறித்தன.

2. வரைந்தான் என்பது, எழுதினான் (Wrote), நீக்கினான் (Left or passed away), கொண்டான் (Bought) எனப் பலபொருள் குறித்தது.

இடைச்சொல்லில்,

1. எண் என்ற ஒருபொருளைக் காட்ட என, ஒடு, என்று, உம் என்கிற நான்கும் வரும்.

2. ஏ ஆறுவகைப் பொருளைத் தந்தது. (Vide இடையியல்.)

உரிச்சொல்லில்,

1. சால, உறு, தவ, நனி, கூர், கழி ஆகிய இவை, மிகுதிப் பொருளொன்றையே காட்டின.

2. கடி என்பது, மணமான, காப்பான, கூர்மையான முதலிய பலபொருள் கொடுத்தது.

"ஒருபொருள் குறித்த பலசொல் லாகியும்
பலபொருள் குறித்த வொருசொல் லாகியும்
அரிதுணர் பொருளன திரிசொல் லாகும்." (நன்.)

**395.** சம்ஸ்கிருத பதங்கள் வடசொல்லாம். இப்பதங்கள் சம்ஸ்கிருதத்திற்கும் தமிழிற்கும் பொதுவான எழுத்துக்களாலும், சம்ஸ்கிருதத்திற்கே சிறந்த எழுத்துக்களாலும், மேற்கூறிய இரண்டு எழுத்துக்களாலும் ஆகும்.

உ—ம். (1) அமலம், உருவம்—பொதுவெழுத்தாலாயவை.

(2) போகி, சுத்தி—சம்ஸ்கிருதத்திற்கே சிறந்த எழுத்தாலாயவை.

(3) அரன், ஜலம், கடினம்—ஈரெழுத்தாலும் மியைந்தவை.

"பொதுவெழுத் தானுஞ் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானு மியைவன வடசொல்." (நன்.)

**396.** [1]திசைச்சொல், பிறதேசத்துப் பாஷைகளினின்றும் தமிழில் வழங்கும் வார்த்தைகள்.

மகம்மதியர் இந்தியாவுக்கு வருமுன் தமிழ்ப்பாஷையில் வழங்கி வந்த பிறவார்த்தைகள், ஆரியர் கொண்டுவந்த வடமொழி அல்லது சம்ஸ்கிருத வார்த்தைகளும், தமிழ் நாட்டைச் சுற்றியிருக்கிற நாடுகளில் வழங்கிவந்த வார்த்தைகளில் சிலவும்மாத்திரம்.

"செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற் றிரண்டினிற் றமிழொழி நிலத்தினும்
தங்குறிப் பினவே திசைச்சொல் லென்ப." (நன்.)

1 2 3 4 5 6
"தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி
7 8 9
பன்றி யருவா வதன்வடக்கு—நன்றாய
10 11 12
சீத மலாடு புனனாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிருநாட் டெண்."

ஒன்பதிற்றிரண்டு = பதினெட்டுப் பாஷைகள்; இந்தியாவில் வழங்கிவந்த 18 பாஷைகள்.

உ—ம். தென்பாண்டி—பெற்றம் (Cow). சொன்றி=சோறு (rice). குட்டநாடு—தள்ளை=தாய். கற்காநாடு—கையர்=வஞ்சர் (The deceitful).

குடநாடு—அச்சன்=தகப்பன். வேணாடு—கிழார்=தோட்டம் (Garden.)

---

[1] மதுரை, திரிசிரபுரம் (திரிச்சினாப்பள்ளி), தஞ்சாவூர், தென் ஆற்காடு, செங்கல்பட்டு என்ற ஐந்து ஜில்லாக்களிலும் தமிழ் ஆதிகாலந்தொட்டு வழங்கிவருகிறது.

N.B.—செங்கல்பட்டு ஜில்லாவின் தென்பாகமாத்திரம் தமிழ் நாட்டுள் அடங்கியது.

இத்தேசத்தைச்சூழ்ந்த நாடுகள்தான் தென்பாண்டி, குட்டம் முதலியன.

| | | | |
|---|---|---|---|
| தென்பாண்டி | = நாகர்கோவிலையடுத்த நாடு. | பன்றி | = வடஆற்காடு. |
| குட்டநாடு | = திருவனந்தபுரம், கொச்சி. | அருவாநாடு | = கோயம்புத்தூர். |
| குடநாடு | = மலையாளதேசம். | சீதநாடு | = நீலகிரிமலை. |
| கற்காநாடு | = கரூர், ஈரோட்டுமுதலிய பட்டணங்களுக்கடுத்தது. | மலாநாடு | = ஆனைமலை, பழனிமலையடுத்தது. |
| பூழி | = சேலம், சிவராய்மலை. | புனனாடு | = சிம்மளதேசம் (Ceylon). |

பூழிநாடு—பாழி=சிறுகுளம் (Small lake).

அருவாநாடு — செய்=செறுவு. அருவாவடதலையார்—எகின்=புளி (Tamarind).

சீதநாடு—எலுவன்=தோழன் (Friend). மலாடு அதாவது மலைநாடு—நரி=புலி (Tiger).

புனனாடு—இகுளை=தோழி.

**397.** இதுதவிர பல பாஷைகளிலுமிருந்து தமிழில் அநேக வார்த்தைகள் வழங்குகின்றன.

தெலுங்கு — அக்கட, இக்கட.

இங்கிலீஷ் — கேற் (Gate), ஷாப் (Shop), குளோப்பு (Globe) கவர்ணர் (Governor), ஜட்ஜ் (Judge), கலெக்றர் (Collector),

இந்துஸ்தானி—சுபைதார், ஜமேதார், தாசில்தார், காடி (Ghadi-வண்டி), பாணி (Water-தண்ணீர்.)

**398.** சம்ஸ்கிருத வார்த்தைகள் தொடர்ந்தும் தனித்தும் வருவதுமுண்டு.

உ—ம். கதாசித் = எவ்வேளையாவது.
திேனதினே = பிரதிதினமும்.
அகஸ்மாத் = தற்செயலாக.
ஆச்சந்திரார்க்கம் = சந்திர சூரியர் இருக்குமளவும்.
லோகேபின்னருசி = ஜனங்களுக்கு இன்பம் பல மாதிரி வேறுபாடாகும்.
சர்வசங்க பரித்தியாகம் = எல்லாரையும் எல்லாவற்றையும் விட்டுவிடுதல்.
சாக்ஷாத் = பிரத்தியட்சமாய்.
கிஞ்சித் = கொஞ்சம்.
யதா = எப்படி.
ததா = அப்படி.
நாஸ்தி
நகிநகி } = ஒன்றுமில்லை.
சூன்யம்

பஞ்சகௌவியம்=ஐந்து பதார்த்தங்கள் சேர்ந்து ஆனது; அதாவது, பால், நெய், தயிர், கோமூத்திரம், கோமயம் or சாணம் என்பன.

பஞ்சகல்யாணி = ஐந்திடங்களில்வெண்ணிறமுடையகுதி [ரை.
பஞ்சாயம் = ஐந்துபேர் கூடிய சங்கம்.
கேசாதிபாதபரியந்தம் = தலைமுதல் கால்வரை முழுவதும்.
பாதாதிகேசபரியந்தம் = கால்முதல் தலைவரை முழுவதும்.
சந்நியாசி = சகலமும் விட்டுத் துறந்தவன்.
பாணிக்கிரகணம் = மணமகன் மணமகளை கைபிடித்து மணம்புரிதல்.

N.B.—எப்பாஷையினின்றும் வார்த்தைகளைத் தமிழில் எளிதாய் அமைக்கலாம்.

**399.** பதமுடிபு விளக்கம்.— Practical examples on the division of words.

1. பரிபாலிக்கிறார்கள். பகுதி — பரிபாலி.
இடைநிலை — கிறு.
பலர்பால் விகுதி — ஆர்கள்.

பரிபாலி + கிறு + ஆர்கள்.

பரிபாலி(க்) + கிறு + ஆர்கள்—க் தோன்றல் "இயல்பினும்" என்ற விதிப்படி. பரிபாலிக்கிறார்கள் என உகரங்கெட்டது "உயிர் வரின் உக்குறள் மெய்விட்டோடும்." என்றபடி.

பரி=சம்ஸ்கிருத உபசர்க்கம் (முழு), பாலி—சம்ஸ்கிருத பதம் (காப்பாற்று.)

2. "இது செயற்பாலதன்றே என்றார் என் தந்தை.

இவ்வாக்கியத்தில், இது என்பதில், இ அகச்சுட்டு, து ஒன்றன் பால் விகுதி.

செயற்பாலது }
செயல்+பாலது } =செய்+அல்+பால்+அ+து.

செயல்=செய் பகுதி, அல் தொழிற்பெயர் விகுதி.

"உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே." என்பதின்படி செயல் எனவாயிற்று.

செயல்+பாலது=செயற்பாலது என்றாயது, "லளவேற்றுமையிற் றடவு மல்வழி அவற்றோ டுறழ்வும் வலிவரினாம்" என்பதின்படி.

பாலது=பான்மை (தன்மை) யில் மைகெட பால் என ஆகி, அச் சாரியையும், து என்ற ஒன்றன்பால் விகுதியையும் பெற்று பாலது என "உடன்மே லுயிர்வந் தொன்றுவதியல்பே" என்ற விதிப்படியா யது. மை கெட்டது "ஈறு போதல் &c" என்ற விதிப்படி.

பாலது+அன்றோ=பாலதன்றோ என்றாயது, "உயிர்வரின் உக் குறள் மெய்விட்டோடும்" என்றபடி.

அன்றோ—"அன்மை" யில் "ஈறு போதல் &c." என்றபடி மை கெட்டு அல் என ஆகி, ஒன்றன்பால் விகுதியாகிய து சேர "லளமுன் றனவும் &c." என்றபடி அற்று என ஆகி "ஈறுபோதல் &c." என் பதில் "இனமிக வினையவும்" என்றபடி "அன்று" என ஆயது.

ஓ வினாப்பொருளைத் தந்த இடைச்சொல்.

அன்று+ஓ=அன்றோ என்றாயது, "உயிர்வரின் உக்குறள் மெய் விட்டோடும்" என்றபடி.

என்றார்—என் என்னும் இடைச்சொல் தெரிநிலைப் பகுதியி லாயது.

என்+த்+ஆர்—என் பகுதி, த் இறந்தகால விடைநிலை, ஆர் பலர் பால் விகுதி. "லனமுன்றனவும் &c." "உடல்மேல் உயிர்வந் &c." என்ற விதிகளின்படி புணர்ந்தது.

அனையர்—அத்தன்மை மருவி அன்மை ஆகி, "ஈறு போதல் &c." என்றபடி, அன் என்றாயிற்று. "ஈறுபோதல் &c." என்றதில் "இனை யவும் &c." என்றபடி அன் அனை ஆயது. அனை+அர் (பலர்பால் விகுதி)=அனையர் என்றாயது. "இ, ஈ ஐ வழியவ்வும் &c." என்றபடி.

பெற்றேன்—பெறு பகுதி, ஏன் தன்மையொருமை விகுதி; ஒற்றுஇரட்டித்து இறந்தகாலங் காட்டியது. பெறு, பெற்று என ஒற்று இரட்டித்து, "ஏன்" சேர பெற்றேன் என்றாயது, "உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும்." என்றபடி.

ஓடாதிருக்கிறாயோ—ஓடு பகுதி, ஆ எதிர்மறை வினையெச்ச விகுதி, து சாரியை, இரு துணைவினை. (ஓடு+ஆ+து+இரு) இவை நான்கும் "உயிர்வரின் உக்குறள் &c." என்றபடி ஓடாதிரு என அனைத்துமோர் பகுதியாயது.

ஓடாதிரு+கிறு+ஆய்+ஓ—கிறு நிகழ்கால இடைநிலை, ஆய் முன்னிலை ஒருமை விகுதி, ஓ வினாப்பொருளைத்தந்த இடைச்சொல்.

க் இரட்டியது, "இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதபமிகும் &c." என்றபடி.

கிறு+ஆய்—கிறாய் என்றாயது, "உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும்" என்றபடி.

ய்+ஓ=யோ ஆனது, "உடன்மே லுயிர்வந்தொன்றுவ தியல்பே." என்றபடி.

## CHAPTER XIII.

### IDIOMS.—மரபுமொழிகள்.

**400.** தமிழில் ஆதிகாலந்தொட்டு அமைதி பெற்றதும், பெரியோரியற்றிய நூல்களிலும் சாதாரண வழக்கத்திலும் வழுவல்லவென்று உபயோகிக்கப்பட்டு வரும் மொழிகளும், தொடர்களும் உண்டு. இவைகளில் சில இலக்கணவிதி கடந்தவைபோல் தோற்றினும், வழுவல்ல. இவை மரபு எனப்படும்.

இம்மரபு, தனிமொழி மரபு, தொடர்மொழி மரபு என இருவகைப்படும்.

**401. தனிமொழிமரபு.**

இளமை காட்டும் வார்த்தைகள்:—பார்ப்பு, பறழ், குட்டி, குருளை, குஞ்சு, கன்று, சேய், பிள்ளை, மகவு, குழவி, மறி, குட்டன், கயந்தலை, போதகம், களபம், துடியடி, கயமுனி முதலியன..

இவற்றில் கயந்தலை, போதகம், களபம், துடியடி, கயமுனி என்பவை யானைக்குட்டிக்குமாத்திரம் வருபவை. சேய், பிள்ளை, மகவு, குழவி என்பவை மனிதரில் சிறுவரைக் குறிக்கும்.

## இளமை மரபு.

| பொருள். | இளமை காட்டிய பெயர். | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | பிள்ளை. | குட்டி. | பறழ். | குஞ்சு. | கன்று. | பார்ப்பு. | மறி. | குருளை | போதகம். | குழவி. | போத்து. | மகவு. |
| சிங்கம். | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ஆம். | ... | ... | ... |
| புலி. | ஆம். | ஆம். | ஆம். | ... | ... | ... | ... | ஆம். | ஆம். | ... | ... | ... |
| நரி. | ஆம். | ஆம். | ஆம். | ... | ... | ... | ... | ஆம். | ... | ... | ... | ... |
| முயல். | ஆம். | ஆம். | ஆம். | ... | ... | ... | ... | ஆம். | ... | ... | ... | ... |
| முசு. | ... | ஆம். | ... | .. | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| வராகம் or பன்றி. | ஆம். | ஆம். | ஆம். | ... | ... | ... | ... | ஆம். | ... | ... | ... | ... |
| நாய். | ... | ஆம். | ஆம். | ... | ... | ... | ... | ஆம். | ... | ... | ... | ... |
| கடமை or கடம்பை. | ... | ஆம். | ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ... |
| கழுதை. | ... | ஆம். | ... | . | ஆம். | ... | ஆம். | ... | ... | ... | ... | ... |
| மான். | ... | ஆம். | ... | ... | ஆம். | ... | ஆம். | ... | ... | ... | ... | ... |
| எருமை. | ... | ... | ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ஆம்.[1] | ... |
| ஆ (பசு மாடு.) | } ... | ஆம் (rare) | } ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ... |
| ஒட்டகம். | ... | ஆம். | ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ... |
| நவ்வி. | ... | ஆம். | ... | ... | ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ... |
| யானை. | ... | ஆம். | ... | ... | ஆம். | ... | ... | ... | ஆம். | ... | ... | ... |
| உழை. | ... | ஆம். | ... | ... | ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ... |
| ஆடு. | ... | ஆம். | . | ... | ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ... |
| மூங்கா. | ... | ஆம். | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ஆம். |
| அழுங்கு. | ... | ஆம். | ... | .. | ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ... |
| எலி. | ஆம். | ஆம். | ஆம். | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |

[1] போத்து for males. கடாரி or இடாரி for females.

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| குதிரை. | ... | ஆம். | ... | ... | ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ... |
| நாவி. | ஆம். | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| குரங்கு. | ஆம். | ஆம். | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ஆம். | ... | ஆம். |
| வெருகு. | ஆம். | ஆம். | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| கவரி. | ... | ஆம். | ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ... |
| மரை. | ... | ஆம். | ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ... |
| கரா (முதலை). | ஆம். | ஆம். | ... | ... | ஆம். | ஆம். | ... | ... | ... | ... | ... | ... |
| சுறா. | ... | ஆம். | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| கிரி. | ஆம். | ஆம். | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| அணில். | ஆம். | ஆம். | ஆம். | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| பூனை. | ஆம். | ஆம். | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| பாம்பு. | ஆம். | ஆம். | ... | ஆம். | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ... |
| காக்கை. | ... | ... | ... | ஆம். | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ... |
| புல்வாய். | ... | ஆம். | ... | ... | ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ... |
| தேள். | ... | ... | ... | ஆம். | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ... |
| யாளி. | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ஆம். | ... | ஆம். | ... | ... |
| மைனு. | ஆம். | ... | ... | ஆம். | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ... |
| தென்னை. | ஆம். | ... | ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ... |
| பனை. | ... | ஆம். | ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ... |
| வாழை. | ... | ... | ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ... | ... |
| தாழை. | ... | ... | ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ஆம். | ஆம். | ... |
| வேம்பு. | ... | ... | ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ஆம். | ... |
| எலுமிச்சை. | ... | ... | ... | ... | ஆம். | ... | ... | ... | ... | ... | ஆம். | ... |

**402**. மரங்களில் சிறியது "கன்று" எனப் பொதுவாய் வரும். வழக்கத்தில் இது "கண்ணு" எனச் சொல்லப்படும்; இது கிராமியம். கன்று என்பதே சிறப்பு.

தவழ்கிற ஜெந்துக்களில் சிறியது "பார்ப்பு" எனப்படும்.

பறவைகளில் சிறியது "குஞ்சு" எனப்படும். பார்ப்பு எனப்படுவதுமுண்டு.

பலம் மிகுத்த காட்டுமிருகங்களில் சிறியது "போதகம்" எனப்படும்.

வீட்டில் வளர்ப்பதும், செல்லமாய்க் கொஞ்சுவதுமான பிராணிகளில் சிறியது "பிள்ளை" எனப்படும்.

உ-ம். கிளிப்பிள்ளை, மைனுப்பிள்ளை

நட்டுப் பிரயாசப்பட்டு வளர்க்கும், செடி கொடி மரங்களில் சிறியது "போத்து" எனப்படும். மீன்களிற் சிறியது "குட்டி" "குஞ்சு" எனப்படும்.

பார்ப்பும் பறழுங் குட்டியுங் குருளையுங்
கன்றும் பிள்ளையும் மகவும் மறியுங்
குழவியு மென்றிவை யிளமைப் பெயரே. (இல. விள.)

N.B.—சிறுமையையும், இளமையையும் காட்ட நாகு, இள எனும் உரிச்சொற்களைக் கூட்டி உபயோகப்படுத்துவது மியல்பே.

உ-ம். நாகிள வேங்கை.
மடநாகு, மனைநாகு.

**403**. விலங்கு புள்ளினங்களில் ஆண் பெண் வித்தியாசங்களைக் காட்டும் மரபு மொழிகள்:—

(*a*) பொதுவாய் ஆண்பால் காட்டுபவை:—ஏறு, களிறு, சேவல், ஒருத்தல், ஆண், கண்டி, கடுவன், இரலை, கலை, கராம், மோத்தை, தகர், உதள், உம்பல் என்பவை.

(*b*) பெண்பால் காட்டுபவை:—நாகு, பெண், பிடி, பிணை, மூடு, கடமை, பிணவு, பிணு, பெட்டை, பாட்டி, அளகு, மந்தி, என்பவை.

| | ஆண். | பெண். |
|---|---|---|
| யானை. | களிற்றியானை | யானைப்பிடி |
| | ஆண்யானை | பெண்யானை |
| | களிற்றேறு | களிற்றுப்பிடி |
| | யானையொருத்தல். | |

| | ஆண். | பெண். |
|---|---|---|
| பன்றி. | களிற்றுப்பன்றி | பன்றிப்பிடி |
| | பன்றியேறு | |
| | ஆண்பன்றி | பெண்பன்றி |
| | பன்றியொருத்தல் | பன்றிப்பிணை |
| | | பன்றிப்பாட்டி. |
| புல்வாய். | புல்வாயொருத்தல் | புல்வாய்ப்பிணை |
| | புல்வாயேறு | |
| | புல்வாயிரலை | புல்வாய்ப்பிணவு |
| | புல்வாய்க்கராம் | |
| | புல்வாய்க்கலை | |
| | புல்வாய்ப்போத்து | |
| | ஆண்புல்வாய் | பெண்புல்வாய். |
| புலி. | புலியேறு, புலியொருத்தல் | புலிப்பிடி |
| | புலிக்கராம், புலிப்போத்து | |
| | ஆண்புலி | பெண்புலி. |
| உழை. | உழையேறு, உழைக்கலை | உழைப்பிடி |
| | உழையொருத்தல், உழைக்கராம் | உழைப்பிணை |
| | ஆண்உழை. | பெண்உழை. |
| மரை. | மரையேறு, மரையொருத்தல் | மரைப்பிடி |
| | மரைக்கராம் | மரைப்பிணை |
| | ஆண்மரை | பெண்மரை. |
| சுறு. | சுறுவேறு | சுறுப்பிடி |
| | ஆண்சுறு | பெண்சுறு, &c. |

**404.** ஆண்குரங்கு கடுவன் எனப்படும்.
பெண்குரங்கு மந்தி எனப்படும்.
கூகை (ஆண்). கோட்டான் (பெண்).
கிளி (ஆண்). தத்தை (பெண்).

குரங்கு, வெருகு முதலியவற்றின் ஆண், குரங்குப்பூசை, வெருகுப்பூசை யெனவும்படும்.

ஆண் எருமை கண்டி எனப்படும்.

ஆட்டில் ஆண், மோத்தை, தகர், உதள், உம்பல், அப்பர் எனப்படுதலுமுண்டு.

N.B.—ஒரு பாட்டில் ஆண்குதிரையைச்சேவற்குதிரை யெனத் தேர்ந்த கவிஞர் ஒருவர் பாடியிருக்கிறார்.

"ஏறு மேற்றையு மொருத்தலுங் களிறுஞ்
சேவுஞ் சேவலு மிரலையுங் கலையு
மோத்தையுந் தகரு முதளு மும்பலும்
போத்துங் கண்டியுங் கடுவனும் பிறவும்
யாத்த வாண்பாற் பெயரென மொழிப."

(இல. விள.)

405. புல்வாய், நவ்வி, உழை, கவரி, பன்றி, நாய் இவற்றின் பெண் பிணை யெனப்படும்.

உ—ம். கவரிப்பிணை, நாய்ப்பிணை, நவ்விப்பிணை,

பன்றி, நாய், புல்வாய் இவற்றின் பெண் பிணவல் எனவும் படும்

உ—ம். பன்றிப் பிணவல், நாய்ப் பிணவல், &c.

பன்றி, நாய், நரி இவற்றின் பெண் பாட்டியெனவும்படும்.

உ—ம். பன்றிப்பாட்டி, நாய்ப்பாட்டி, நரிப்பாட்டி.

குரங்கு, முசு, மூகம் என்பவற்றின் பெண் மந்தி எனப்படும்.

நரி, முசு என்பவற்றின் பெண் ஓரி யெனவும்படும்.

கரும்பன்றியின் பெண் எனம் எனவும்படும்.

நீர்வாழுஞ் சாதியின் பெண் பொதுவாய் நாகு எனப்படும்.

கோழி, கூகை, மயில் என்பவற்றின் பெண் அளகு என்னப் படும்.

"பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணு
மூடு நாகுங் கடமையு மளகும்
மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவும்
அந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே." (இல. விள.)

N.B.—எருமை நாகு, மரை நாகு என்பவை பெண்பாலைக் குறித்தன.

406. செடி மரங்களுக்கடுத்த மரபுமொழிகள்.—தோடு, மடல், ஓலை, இலை, குலை, தளிர், முறி, எடு, இதழ், பாளை, ஈர்க்கு, பூ, அரும்பு, காய், பிஞ்சு, பழம், தோல், செதிள், வீழ், விழுது.

**407. தொகுதிப் பெயர்களின் மரபு.**

விலங்கின் தொகுதி.—சாலம், வியூகம், யூதம், குலம், விருந்தம், கணம், இனம், கூட்டம் என்பவை.

மலர்த்தொகுதி.—தாமம், தொடை, இலம்பகம், தார், கோதை, மஞ்சரி, கொத்து, தொத்து, மாலை, ஆரம், பிணையல், அலங்கல், தெரியல், சிகழிகை.

மரத்தொகுதி.—அடவி, கான், ஆரணியம், காந்தாரம், கடம், வனம், ககனம், கண்டகம், தாவம், முளரி, புறவம், பொச்சை, தில்லம், அத்தம்.

மக்கட்டொகுதி.—சபை, சமவாயம், சங்கம், சமூகம், சமுதாயம், கோட்டி, அவை, குழாம், குழூஉ, கூட்டம், திரள், சணம்.

பெண்கள் கூட்டம் = பண்ணை, ஓதை, ஆயம், பொய்தல்.
முத்துக்கள் கூட்டம் = தரளம்.
வரிசையாயிருக்கும் கூட்டம்= பந்தி, ஒளி, நிலா, நிரை.
உண்பவை யனைத்தும்=துற்றி, திற்றி, உண்டி, உணவு.
மிருகங்களின் உணவு=இரை.
பறவைக் கூட்டம் = தொழுதி.

**408**. விலங்கு, புள்ளினங்களிடும் சப்தத்தைக் காட்டிய மரபு மொழிகள்.

தொனித்தல், சப்தித்தல், சப்தமிடல், கூப்பிடல் என்பவை பொதுமொழி. ஒவ்வொரு ஜெந்துவின் தொனிக்கும் வெவ்வேறு வார்த்தை சிறப்பாய் வரும்.

| | |
|---|---|
| சிங்கம் | கெர்ச்சிக்கிறது. |
| யானை | குமுறுகிறது. |
| குதிரை | கனைக்கிறது. |
| கழுதை | கத்துகிறது, "கா"வென்கிறது. |
| பன்றி | உறுமுகிறது. |
| மாடு | முக்காரமிடுகிறது. |
| ஆடு | அலறுகிறது, "பிளா" வென்கிறது |
| பூனை | ஊளசலிடுகிறது, "மியா" வென்கிறது, உறுமுகிறது, அழுகிறது. |
| எலி | கருகருக்கிறது, நச்சுநச்சென்கிறது. |
| அணில் | கெச்சென்கிறது. |
| கோழி (சேவல்) | கூவுகிறது. |
| கோழி (பெட்டை) | கெக்கரிக்கிறது. |
| மான், கவரி | அலறுகிறது. |

| | |
|---|---|
| மயில் | அகவுகிறது, ஏங்கலிடுகிறது. |
| குயில் | கூவுகிறது. |
| ஆந்தை | கீச்சிடுகிறது, அலறுகிறது. |
| தேவாங்கு | அழுகிறது. |
| அன்றில் | கனைகிறது. |
| பசு | மாக்கென்கிறது, தேம்புகிறது. |
| கன்று | கனைகிறது |
| குரங்கு | அழுகிறது, தேம்புகிறது. |
| பாம்பு | இரைகிறது, உஸ் என்கிறது. |
| வண்டு | ரீங்காரஞ் செய்கிறது. |
| கிளி | கழறுகிறது, பேசுகிறது |
| பல்லி | கெச்சிடுகிறது. |
| கோட்டான், கூகை | கும்மென்கிறது. |
| புறா | மகிழ்கிறது, கூவுகிறது. |
| வானம்பாடி | பாடுகிறது. |
| பெருச்சாளி | உறுமுகிறது. |
| தவளை | தமுக்கடிக்கிறது, இரைகிறது, தத்து கிறது. |
| நாய் | குரைக்கிறது (குலைக்கிறது), உறுமு கிறது, ஊளை யிடுகிறது. |
| நரி | ஊளையிடுகிறது, அழுகிறது. |
| ஓநாய் (கோநாய்) | குரைக்கிறது, குமுறுகிறது. |
| புலி | காண்டீரவஞ்செய்கிறது. |

409. மற்றத் தொனிகள் வகை விவரம்.

| | |
|---|---|
| இலைகள் | சலசலக்கின்றன, கலகலக்கின்றன |
| இடி | இடிக்கிறது, உருமுகிறது. |
| மேகம் | கர்ச்சிக்கிறது. |
| காற்று | இரைகிறது. |
| மழை | சோ எனப் பெய்கிறது. |
| சாரல் | அடிக்கிறது, இறைக்கிறது. |
| கின்னரம் | வாசிக்கிறது. |
| வீணை | வாசிக்கிறது, மீட்டுகிறது. |
| தம்புரு | மீட்டுகிறது. |
| தாளம் | போடுகிறது. |
| பிடில் (Violin) | வாசிக்கிறது. |

| | |
|---|---|
| ஜாலர் | போடுகிறது. |
| துத்தி | ஊதுகிறது. |
| புல்லாங்குழல் | ஊதுகிறது, வாசிக்கிறது. |
| யாழ் | மீட்டுகிறது. |
| பறை | அடிக்கிறது. |
| மேளம் | வாசிக்கிறது, கொட்டுகிறது. |
| நகரா | அடிக்கிறது. |

## 410. தொடர்மொழி மரபுகள்.

(a) இரட்டைக் கிளவி.

பரபரப்பு. பளபளப்பு. மடமடவென இடிந்தது. திடுதிடுவென வந்தான். கலகலத்த பேச்சுக்காரன். முணுமுணுக்காதே. சளசள வென மழை பெய்தது. வெடுவெடுப்பாய்ப் பேசாதே, நான் கிடுகிடு வென்று நடுங்கினேன். படபடப்பானவர்கள் காரியசித்தி பெறார். முறுமுறுக்கிறான். இது வாய்க்கு கரகரப்பாயிருக்கிறது. சிலுசிலு வெனக் குளிராட்டுது. சுடுசுடுவென முகங்கோணுதேயும். புதுபுதுக் கையான விர்த்தாந்தம். கொளகொளவெனத் தண்ணீர்விட்டுப் பிசை யவேண்டும். வெதுவெதுப்பாயிருக்கையில் சாப்பிடு. மழமழவென இத்தோல் மின்னுகிறது. காலில் பாதசரமிட்டு கலீர்கலீரென நடந் தாள். மின்னல் பளீர்பளீரென வீசுகிறது. இவைபோல்வன பிற வும்.

## 411. (b) திசைச்சொற்கள் தொடர்ந்தடுக்கிவரும் மரபு.

1. மேல்கிழக்காய் எனப்படாது, கிழமேலாய் என வரவேண் டும்.

2. வடதெற்காய் என்பது தப்பு; தென்வடலாய் என்பது சரி.

3. கிழக்கு தெற்கு சரியன்று; தென்கிழக்கு சரி.

அப்படியே தென்மேற்கு, வடகிழக்கு, வடமேற்கு என்று வரு வது சரி.

## 412. (c) இரண்டு மூன்று எண்களை அடுக்கிப் பேசும்போது சிறிய எண் முதலில் வரப்பேசுவது மரபு.

உ—ம். இச்சேலை நாலைந்து ரூபாய் பெறும்.

நாலைந்து சரி; ஐந்து நான்கு தவறு.

மாதம் இருபது முப்பது ரூபாய் சம்பாதிக்கமாட்டேனா?

413. (d) மோனை எதுகையாய் வரும் வார்த்தைகள் தொடர்ந்து வருவதுமரபு, கங்குகரையில்லை. படாபஞ்சனமாக்குவேன். அடிப்பிடியாயிருக்கிறது. பட்டுப்பட்டாவளிகளோடு மாப்பிள்ளைவருகிறார். தட்டிக்கொட்டிப்பார்த்து வாங்கு. முள்ளும் முடையுமான பாதை. காடுஞ் செடியுமான விடம். பாரதூரமான யோசனையுடையவர். பட்டப்பகலில் இது நடந்தது. தட்டு முட்டுகள் வாங்கிவந்தேன். சட்டி பெட்டியெல்லாம் எடுத்து வெளியில் போடு. முற்றமுடியச் செய்துவிடு. கட்டுமெட்டாய்க் காலங்கடத்துபவர். ஆடிப்பாடி வருகிறான். தேடித்திரிந்தேன், ஓடித்திரிந்தேன் (திரி எனும் துணைவினை மரபுப்பாங்குடையது). கூடகோபுரம். மாடமாளிகை. ஊருந்தேரும். காடும்நாடும். கல்லும் கரம்பும். தில்லுமுல்லாடாதே. இதாகிதம். கஷ்டநஷ்டம். வீடுவாசல். நாடும்நகரும். கொஞ்சநஞ்சம் கொடுக்கமாட்டாயா? தடல்புடலாகுதே. அடுப்பும் துடுப்புமாயிருக்கும்வேளை வந்தீரே. காலும் கையுமாயிருக்கிறேன். நோயும் நொடியுமாய்க் கிடக்கிறேன். பாயும் படுக்கையுமாய்ப் போனேன். கேட்பாரும் மேய்ப்பாருமில்லை. நட்ட நடுச்சாமத்திலே. பொட்டும்பொடியுந்தான் கிடக்கிறது. செட்டும் மெட்டுமான பாவியன். லொட்டும் லொசுக்கும் ஏன் எடுத்துவருகிறாய். மட்டுமரியாதையில்லாது பேசாதே. வல்லடி வழக்கு. கொத்தும் குறையுமாய் விடாதே. திண்டு முண்டு செய்யாதே, [1]சண்டைசாடி செய்பவரோ டிணங்காதே. சூதும் வாதும் வேதனைசெய்யும். கங்குலும் பகலும். சீரும் சிறப்பும். வேரும் தூரும். மேலும் கீழும் (not கீழும் மேலும்). தன்னந்தனியே. விண்ணும் மண்ணும். இவைபோல்வன பிறவும் உண்டு.

N.B.—இவற்றுட் சில தத்தமக்கு நேர் எதிர் அர்த்தமுடையவைகளோடு இயைபு பற்றி வந்தது காண்க.

414. (e) நிறம் தெளிவாய் விளங்கும்பொருட்டு இரட்டித்து வரும் மரபுத் தொடர்மொழி.

கன்னங்கரேல் (ர்), வெள்ளைவெளேர் (ல்), செக்கச்சிவேர், செக்கச்செவேல், பச்சைப்பசேர், மஞ்சள்மசேர்.

N.B.—கடைசியில் ர் ஆவது, ல் ஆவது வரலாம்.

415. ஒவ்வொரு வஸ்துவுக்கும் ஆன்றோராகிய அறிவிற் சிறந்தோர் முன் அமைத்த தமிழ் மொழிகளையே உபயோகிக்கவேண்டு

கிண்டை, வண்டி கிண்டி, மரம் கிரம், வேர் கீர் என கிராமியமாய் வழக்கத்தில் ஒவ்வொரு பதத்துக்கும், தக்கபடி ககர வருக்கத்தில் ஓர் உயிர்மெய் வைத்து வேறுபதம் கற்பனைசெய்து உபயோகிப்பதுண்டு. இது சரியன்று.

மென்பது விதி. இக்காலத்தில் நூதன மொழிகள் வெகுவாய்க் கலந்திருப்பதாலும், அறிவு மிகுக்க, மனதின் புடை பெயர்ச்சியை விளக்கும் சொற்களும் அதிகமாதல் இயல்பாதலாலும், இப்பொதுவிதி கடந்துவருவது சாதாரணம்.

"பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே." (நன்.)

**416.** வாக்கிய மரபு.

தமிழை வசனரூபமாய் எழுதும் முறை:—

வாசகங்களை எழுதும்போது சிலர் புணரியல் விகாரம் யாவுமேற்றி எழுதுவார்கள். முன்னோர் பெருநூல்களுக்கு உரைகளை இத்தன்மையாக எழுதியிருக்கிறார்கள். பரிமேலழகர் குறள் உரை, தாண்டவராய முதலியார் எழுதிய பஞ்சதந்திரத்தின் ஐந்தாம் தந்திரம் முதலியவை இத்திறமானவை.

இக்காலத்தில் இவ்விதமாக முழுதும் விகாரமேற்றி யெழுதாமல் பொருள் விளங்கத்தக்கதாக (.) Period என்ற முற்றுப்புள்ளி, (,) Comma என்ற கால்புள்ளி, (;) Semicolon என்ற அரைப்புள்ளி, (:) Colon என்ற இரட்டைப்புள்ளிகளிட்டு இங்கிலீஷ் பாஷைக்கொப்ப எழுதுவது யுக்தமென்று அனுசரிக்கப்பட்டுவருகிறது ஆகையால் பொருள் விளங்கத்தக்கதாகப் பிரித்து, தொடர்பாய் இசைக்கக்கூடியவைகட்குமாத்திரம் புணரியல் விதியேற்றி எழுதுவது நலம்.

இவற்றிற்குத் தனித்தனி விதியேற்படுத்துவது கூடாத காரியம்.

**417.** சம்ஸ்கிருதத்தினின்றும், அந்நியபாஷைகளினின்றும் பிறந்துவந்து தமிழில் வழங்கிவரும் பதங்கள், தமிழிலுள்ள புணரியல் விதிகளைப் பெரும்பாலும் ஏற்கா.

உ–ம். பௌஷியகாலம், அநேககாரியங்கள்.
திராவிடபாஷை, &c.

**418.** பழமையோர் எழுதிய கொடும் புணர்ச்சிக் குதாரணம்:

(a) மகததேயத்திலோர் மலர்ப்பொய்கையி லறிவாயிரத்த னூறறிவனென்னு மிரண்டு மீனங்கட்கு மோரறிவனென்னுந் தவளைக்கு நட்புளதாயிருக்குங்காலையி லோர் வலையன் வந்து பிற்றை ஞான் றீண்டுள கொழுமீன்களை வலையெறிந்து கவர்வேனுகவென் றுரைகூறி யிறந்தமையை யறிவுற்ற வம்மண்டூகந் தன்னுற்றாருக் கறிவுறுத்துழி யறிவாயிரத்த னீர்நடை பலவுஞ் சற்றுவல்லேனென நூறறிவ னியாங்கிலை பெயரலாகா தியாதாகற்பாலதோ வஃதீண்டே யாகுக வென வதைக்

கேட்டுத் தவளை வாரீர் நட்டோரே நான் போகிறே னீவிரு நட மினென வவ்விரண்டு நீ யோ ரறிவனுகின்றனை யாதலாற் போவை யாளுற் போ யாம் வருவேமல்லே மென்ன பின் னத்தவளை தன் குழு வோடு வேறிடம் போயிற்று.

இக்காலத்தில் எழுதப்படவேண்டியது பின்வருமாறு:—

மகததேயத்தில், ஓர் மலர்ப்பொய்கையில் அறிவாயிரத்தன், நூறறி வன் என்னும் இரண்டு மீன்கட்கும், ஓாறிவன் என்னும் தவளைக் கும் நட்பு உளதாயிருக்குங்காலையில், ஓர் வலையன் வந்து: "பிற்றை ஞான்று ஈண்டுள்ள கொழுமீன்களை வலையெறிந்து கவர்வேனுக" என்று உரை கூறி, இறந்தமையை அறிவுற்ற மண்டூகம், தன் உற்ரு ருக்கு அறிவு உறுத்துழி, அறிவாயிரத்தன்: "நான் நீர் நடை பலவும் கற்றுவல்லேன்" என, நூறறிவன்: "யாம் நிலைபெயரலாகாது, யாது ஆகற்பாலதோ அது ஈண்டே ஆகுக" என, அதைக் கேட்டு, தவளை: "வாரீர் நட்டோரே! நான் போகிறேன், நீவிரும் நடமின்" என, அவ்விரண்டும்: "நீ ஓரறிவனுகின்றனை; ஆதலால், போவையாளுல் போ, யாம் வருவேம் அல்லேம்" என்ன பின் அத்தவளை தன் குழு வோடு வேறிடம் போயிற்று.

(b) அன்புடைமை யஃதாவ தவ்வாழ்க்கைத்துணையும் புதல்வரு முதலிய தொடர்புடையார்கட் காதலுடையனுத லதிகார முறைமையு மிதனுனே விளங்கு மில்லறமினிது நடத்தலும் பிறவுயிர்கண்மே லருள்பிறத்தலு மன்பின் பயனுதலி னிது வேண்டப்பட்டது. (பரி மேலழகர் குறளுரை.)

இப்போ தெழுதும் விதம்.

அன்புடைமை, அதாவது, அவ்வாழ்க்கைத்துணையும், புதல்வரும் முதலிய தொடர்பு உடையார்கண் காதல் உடையன் ஆகுதல். அதி காரமுறைமையும் இதனுனே விளங்கும். இல்லறம் இனிது நடத்த லும், பிற உயிர்கள்மேல் அருள் பிறத்தலும் அன்பின்பயன் ஆதலின், இது வேண்டப்பட்டது.

பொருள் விளங்கத்தக்கதாக அசையறுத்து புணர்ச்சியேற்ருமல் எழுதுவது நலம்.

**419.** சிற்சிலவேளை விகாரவிகுதிகள் பயில்வதற்காய் எல்லாப் புணர்ச்சியும் ஏற்றி எழுதச்சொல்லலாம். ஆனுல் "சொல்வதெழுது தல்" (Dictation) பாடம் தமிழில் நடத்தும்போது பொருள் விளங் கப் பிரித்தெழுதும்படி கற்பிக்கவேண்டும். பிரித்தெழுதவேண்டு மென்பதால் அசை அசையாய் எழுதவேண்டுமென்பது கருத்தன்று

அநேக இடங்களில் விகாரப்புணர்ச்சியாய் எழுதாவிடில் மகா அந்தக் கேடாகவிருக்கும்.

உ—ம். "அந்தக்கேடாகவிருக்கும்". என்பதை "அந்த, கேடு, ஆக, இருக்கும்" என்று பிரித்து எழுதக்கூடாது.

**420.** தமிழில் வாசகநடை எழுதுவதிலும் பல வகைகளுண்டு. முற்றிலும் தமிழ் மொழிகளையே உபயோகிப்பது சிறந்த தமிழ்நடை. இப்போது இது மகா அருமை. கூடியவரை சம்ஸ்கிருத பதங்களையும் அந்நிய பாஷையினின்று பிறந்த பதங்களையும் ஒழித்தெழுதுவது யுக்தம். பொருள் விளங்கத்தக்க சம்ஸ்கிருத பதங்களை உபயோகிப்பது கெடுதியன்று.

**421.** சிறுசிறு வாக்கியமா யெழுதுவது நல்லது. முன்னோர் வழக்கம் அப்படியன்று. ஓர் பக்கம், இரண்டு பக்கம், மூன்று பக்கம் வரைக்கும் நீண்ட வாக்கியங்கள் எழுதுவது சிறப்பாக எண்ணப்பட்டது. தமிழில் எச்சங்களைக்கொண்டும், உம், என, என்று, என்னும் இடைச்சொற்களைக்கொண்டும் வாக்கியத்தை நீட்டலாம்.

**422.** வாக்கியங்களில் உபயோகிக்கப்பட்ட வார்த்தைகள், அவைகள் கோக்கப்பட்ட மாதிரி, தொடுக்கப்பட்ட வகைமுதலியவற்றைப்பற்றி வெள்ளை அல்லது வெள்ளடி வாக்கியமென்றும், முடுகு வாக்கியமென்றும், அலங்கார வாக்கியமென்றும் பலவகையாம்.

உதாரணம்.

**வெள்ளை வாக்கியம்.**

நாளை ராஜா ஊர்சுற்றி வருகிறார் என்று சொல்லுகிறார்கள்; தெருக்களெல்லாம் அலங்காரமாயிருக்கும். யானை குதிரைகள் முன்னே வரும், நல்லநல்ல வண்டிகளுங்கூட வரலாம். ராஜாவுடைய போர்வீரர் அலங்காரமாய் உடுத்திக்கொண்டு கூட வருவார்கள். ராஜாவுக்கு வெண்சாமரை வீசுவார்கள். வழியில் ஜனங்கள் குறுக்கிடாதபடிக்கு போலீஸ்காரர் ஒழுங்கு செய்வார்கள். உத்தியோகஸ்தரெல்லாம் ராஜாவுடைய வண்டிக்குப் பின்னாக வண்டிகளில் ஏறி வருவார்கள். பிள்ளைகளே! நான் உங்களைக் கூட்டிக்கொண்டுபோய் அவ்வேடிக்கைகளைக் காட்டுகிறேன்.

**முடுகுவாக்கியம்.**

நாளை இப்பட்டணத்தரசன் ரத கஜ துரக பதாதி சேனைகளோடு உத்தியோகஸ்தர் கூட்டங்கள் திவ்யாபரணாலங்கிர்தர்களாய் வண்டிகளிலேறிப் பின்செல்ல இராஜனுக்கு வெற்றிக்குடைபிடிக்க வெண்சாமரை வீச வீதிகள்தோறும் போலீசார் நின்று ஜனக்கூட்டங்கள் வழிமறிக்காது பிரயத்தனம் செய்துகொண்டிருக்கப் பலவித தழை

குழை பூத்தோரணங்களால் அலங்கரிக்கப்பட்ட தெருக்களூடே பவனிபோகிறாரெனக் கேள்வியுற்றேனாதலால், பிள்ளைகளே! நீங்களும் அதைக் கண்டு களிகூர நான் உங்களைக் கூட்டிக்கொண்டு போக உத்தேசித்திருக்கிறேன்.

சாதாரண வாசகநடை பின்வருமாறு:—

தமிழ்நாட்டை ஆரியர்கள் ஜெயித்தபின்பு, கோயில், குளங்கள், ஸ்தலங்கள் முதலியன ஏற்பாடுசெய்து, 108 திருப்பதிகளுண்டென்றும், 1008 சிவஸ்தலங்கள் உண்டென்றும் நிர்மாணித்து, வளமுள்ள நாடுகளில் குடியேறி, அதிகாரம்செலுத்தி, இதரஜாதி அரசர்களுக்கும் அவர்களே மந்திரி பிரதானிமுதலிய உத்தியோகஸ்தர்களாக விருந்து, உலகியற்கை நடத்திப் பரிபாலித்து, சம்ஸ்கிருத சாஸ்திர இதிகாச புராணங்களைத் தமிழ் நாட்டாருக்குப் புகட்டிவந்தமையால், அவர்களுக்கு விசேஷித்ததான சம்ஸ்கிருதபாஷை தமிழோடு வெகுவாய்க் கலந்துபோய்விட்டது. ஆகையால் இப்பொழுது சாதாரணமாய்ப் பேசுவோரும் எழுதுவோரும் சம்ஸ்கிருதபதங்களை உபயோகித்துவருகிறார்கள். இதனால் தமிழ் குறைவுபடாமல் சிறப்படைந்திருக்கிறது. ஆயினும் பிராமணர்கள் தமிழைக் கவலையோடு ஆய்ந்து கற்று பிரபல்லியப்படுத்தாது கைநழுவவிட்டதாலும், மகம்மதிய அரசு ஓங்கியுயர்ந்தகாலத்து தமிழைக் கவனிப்பாரற்றுப்போனதினாலும், ஆதியில் வழங்கிவந்த செந்தமிழ் ஒருவாறு மறையத் தொடங்கிற்று. ஆரியர் வரவோடு மதுரைச்சங்கமும் ஒழிந்தது. அநேக தமிழ் நூல்களும் ஒழிந்துபோயின. அரசர்கள் பாண்டியர் சோழரைப்போல் தமிழ் வித்வான்களுக்கு திரவியசகாயம், சர்வமானியம் முதலிய சகாயஞ் செய்யாதுவிட்டதால் தமிழைக் கருத்துடன் கற்பவர் குறைந்தனர். அங்கிலேய அரசிலும் தமிழ் சிறப்படையவில்லை. வேளாள குலத்தவர்களும், ஜைன மதத்தவரும், கிறிஸ்து சமயத்துள் தமிழ்நாட்டுக் குருமாரும் வேதியரும், யாழ்ப்பாணவாசிகளும்மாத்திரம் இப்பாஷையை அபிவிர்த்தி செய்வதில் உற்சாகமுடையோர். இவர்கள் இதைக் கைவிடில் தமிழின் பெருமை குறையும். ஆயினும் நாட்டிலும், நகரத்திலும், பாடி, குறிச்சி, ஊர், கிராமங்களிலும் இப்பாஷை பேசப்படாது முற்றிலும் ஒழியவேமாட்டாது. காசி, பூனா, அயோத்தியா, கல்கத்தா, கன்னனூர், பல்லாரி, பம்பாய்முதலிய பிறபாஷைகள் வழங்குமிடங்களிலும் வியாபித்து, இலங்கைத்தீவின் சிம்மளபாஷையை ஒருக்கித் தள்ளிவருகிற இத்திவ்யபாஷை எங்ஙனமாயினும் அழிவுறாது. இப்பாஷையில் எழுதப்பட்ட மகா கிரந்தங்கள் ஆயிரமாயிரமாயினவே. இவைகள் மறையவே மறையா.

# CHAPTER XIV.
# PROSODY.

---

## யாப்பியல்—உறுப்பு.

**423. யாப்பியலாவது**—*செய்யுள் அல்லது பாட்டுக்களின் தன்மையை விவரிப்பது. இது உறுப்பும், செய்யுளும் என இருவகைத்தாம்.*

**424. செய்யுள்** (Verse).—*அறிவிற்சிறந்தோர் பல சொற்களாலும் அலங்காரமமைய ஒரு பொருளைப்பற்றிப் பாடுவதே செய்யுள்.*[1]

> *"பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல*
> *சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின்*
> *வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்."* (நன்.)

**425.** (*a*) **உறுப்புகள்** (Parts of a verse).—*எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்னு மிவ்வாறும் செய்யுளின் உறுப்புகளாம்.*

(*b*) *செய்யுள் உறுப்பாகிய எழுத்துமுதலிய ஆறும், பாவும், பாவினமும் காரணத்தால் வந்த பெயர்களேயாம்.*

> *"எழுதப் படுதலி னெழுத்தே அவ்வெழுத்*
> *தசைத்திசை கோடலின் அசையே அசையியைந்து*
> *சீர்கொள நிற்றலிற் சீரே சீரிரண்டு*
> *தட்டு நிற்றலிற் றளையே அத்தளை*
> *அடுத்து நடத்தலின் அடியே அடியிரண்டு*
> *தொடுத்துமன் சேறலிற் றொடையே அத்தொடை*
> *பாவி நடத்தலில் பாவே பாவொத்*
> *தினமாய் வழங்கலி னினமெனப் படுமே."* (இல. விள.)

[1] பொருள் நோக்கி, அகத்திணை, புறத்திணை என்றும், களவும் கற்பும் ஆகிய கைகோள் என்றும், கூற்று என்றும், கேட்பவரியாவரென்றும், குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்ற ஐவகை நிலத்துள் எதைச்சார்ந்தனவென்றும், இன்னும் பலவிதமாகவும் செய்யுளின் பாகுபாடுகளை உணர்த்துவது ஆதித் தமிழ் இலக்கண வித்துவான்களின் இயல்பு. இவைகள் பொருள் அதிகாரத்தை அடுத்தனவாதலால் அவ்விடத்தில் விளக்கப்படும்.

N.B.—எழுத்துக்களைப்பற்றி எழுத்தியலில் விவரிக்கப்பட்டது. அவற்றுள் செய்யுளுக்குரியன சில இங்கே எடுத்துக் காட்டப்படும்

**426. உயிரளபெடை** (Elongation of vowels).—செய்யுளில் ஓசை குறைந்தவிடத்து நெட்டெழுத்தேழும் தம்மாத்திரையில் அதிகப்பட்டு, இரண்டாயிருந்தது மூன்று மாத்திரையும், நான்குமாத்திரையுமாவது உயிரளபெடை. இப்படி அளபு எடுத்ததற்கு அடையாளமாக அந்நெட்டெழுத்துக்கினமான குற்றெழுத்து அதனோடு சேர்த்தெழுதப்படும்.

உ-ம். ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஐஇ, ஓஒ, ஔஉ.

மிக்கொலிக்கும் நெடில் உயிர்மெய்யாயினும், அதன் அறிகுறியாய் நிற்பது உயிர்மெய்யன்று, உயிரேயாம்.

இவ்வளபெடை வார்த்தையின் முதல் இடை கடையாகிய மூன்றிடங்களிலும் வரலாம்.

உதாரணம்.

(1) "ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்குஞ் செய்வினை
யாஅது மென்னு மவர்." } முதலில்.

(2) "உறூஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறூஅஅய் வாழிய நெஞ்சு." } இடையில்.

(3) "அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாணுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை." } கடையில்.

"இசைகெடின் மொழிமுத லிடைகடை நிலைநெடில்
அளபெழும் அவற்றவற் றினக்குறில் குறியே." (நன்.)

**427. [1] ஒற்றளபெடை** (Elongation of consonants).—ங, ஞ, ண, ந, ம, ன, வ, ய, ல, ள என்ற பத்து ஒற்றும், ஆய்தமும் செய்யுளில் ஓசை குறைந்தவிடத்து தம்மாத்திரையில் அதிகப்பட்டு, அரை ($\frac{1}{2}$) மாத்திரையாயிருந்தது ஒரு (1) மாத்திரையாவது ஒற்றளபெடை.

இப்படி அளபெடுத்ததற் கறிகுறியாக அவ்வொற்றே இரட்டித்தெழுதப்படும்.

உ-ம். பொன்ன், எம்ம், அஃஃது, ழ.

[1] ஒற்றளபெடை குறிற்கீழும், குறிலிணைக்கீழும் வருமெனப் பாகுபாடுசெய்து நுண்மையாய் விவரிப்பது நன்னூலார் கட்சி. அது அநாவசியகம். அதுவுமன்றி, உயிரளபெடை இருபத்தொன்று, ஒற்றளபெடை நாற்பத்திரண்டு எனத் தொகை கூறி, அது இங்ஙனமென்று விவரிப்பதும் ஆவசியகமானதன்று.

இவ்வளபெடை வார்த்தையின் இடையிலும் கடையிலும் மாத்திரம் வரும்.

உதாரணம்.

(1) "இலங்ங்கு வெண்பிறைசூ டீச னடியார்க்குக்
கலங்ங்கு நெஞ்சமிலை காண்." } இடையில்.

(2) "எங்ங் கிறைவனுள னென்பாய் மனனேயா
னெங்ங் கெனத்திரிவா ரின்." } இடையில்.

(3) "எஃஃ கிலங்கிய கையரா யின்னுயிர்
வெஃஃ குவார்க்கில்லை வீடு." } கடையில்.

"ங,ஞ,ண, ந,ம,ன, வ,ய,ல,ள, வாய்தம்
அளபாங் குறிலிணை குறிற்கீ ழிடைகடை
மிகலே யவற்றின் குறியாம் வேறே." (நன்.)

**428.** ஆய்தமும் மெய்யும் அளபெடுக்காது வரும்போது அலகிடப்படா.

அலகிடல்=அசை அசையாய்ப் பிரித்தல்.

"தனிநிலை ஒற்றிவை தாம்அல கிலவே
அளபெடை அல்லாக் காலை யான." (யாப்பரு.)

N.B.—அரை, கால் என ஒன்றிற்குக் குறைந்த மாத்திரையுள்ள எழுத்துக்கள், தமிழ்ச் செய்யுளில் தனித்தனி அசைகளாகப் பிரிக்கப்படுவனவல்ல.

**429.** அசை (Syllable).—எழுத்துக்கள் தனித்தும் சேர்ந்தும் வருவது அசை.

இது நேரசை, நிரையசை என இரண்டு வகைப்படும்.
அவற்றுள், **நேரசை** நான்காம்.

(a) நெடில் தனித்து நிற்பது. உ—ம். கோ.
(b) குறில் தனித்து நிற்பது. உ—ம். து.
(c) நெடில் ஒற்றடுத்து நிற்பது. உ—ம். கோன்.
(d) குறில் ஒற்றடுத்து நிற்பது. உ—ம். துன்.

N.B.—வார்த்தையின் முதலில் குற்றெழுத்து வரும்போது அதைத் தனியாய் நேரசை யென்பது எப்போதுஞ் சரியன்று. து போல எவற்பொருளையாவது, கு, சு என்பனபோலத் தம்மைச் சுட்டாவது வரும்போதுமாத்திரம் குறிலை நேரசையாய் அலகிடலாம்.

"நெடில்குறில் தனியாய் நின்றும் ஒற்றடுத்தும்
நடைபெறும் நேரசை நால்வகை யானே." (யாப்பரு.)

"குறிப்பே ஏவல் தற்சுட் டல்வழி
தனிக்குறில் மொழிமுதல் தனியசையிலவே." (யாப்பரு.)

"தனிக்குறில் முதலசை மொழிசிதைத் தாகா." (தொல்.)

**430.** **நிரையசை** நான்காம்.

(a) இரண்டு குறில் இணைந்து வருதல். உ–ம். விள.
(b) இரண்டு குறில் இணைந்து ஒற்றடுத்து வருதல். உ–ம். விளம்.
(c) குறிலும் நெடிலும் வருதல். உ–ம். படா.
(d) குறிலும் நெடிலும் ஒற்றடுத்து வருதல். உ–ம். படான்.

"குறிலிணை குறினெடில் தனித்தும் ஒற்றடுத்தும்
நெறிமையி னான்காய் வரும்நிரை யசையே." (யாப்பரு.)

**431.** **சீர்** (Feet).—அசைகள் சேர்ந்து வருவது சீர்.

(a) ஒரு அசை தனித்து நின்றால் அது **அசைச்சீர்** அல்லது **தனிச்சீர்** எனப்படும். இது **பொதுச்சீர்** எனவும்படும். இது நேரசைச் சீரும், நிரையசைச் சீருமென விரண்டாகும். இவற்றிற் குதாரண வாய்பாடுமுறையே நாள், மலர் என்பன.

N.B.—எல்லாவகையான பாட்டுகளுள்ளும் இது வருவதால் பொதுச்சீர் எனப் பேர்பெற்றது.

(b) இரண்டு அசைகள் சேர்ந்து வருவதாகிய ஈரசைச்சீர் **இயற்சீர்** எனப்படும். இது நான்காம்.—

மனநினைப்பு அல்லது உதாரணவாய்பாடு (Formula).

நேர் + நேர் .................. தேமா.
நிரை + நேர் .................. புளிமா.
நிரை + நிரை.................. கருவிளம்.
நேர் + நிரை ................ கூவிளம்.

(c) மூன்று அசைகள் சேர்ந்துவருவதாகிய மூவசைச்சீர் **உரிச்சீர்** எனப்படும். இது காயீற்றுச்சீர் நான்கும், கனியீற்றுச்சீர் நான்குமாக எட்டாம்.

காயீற்றுச்சீர்கள்.

நேர் + நேர் + நேர் ..................... தேமாங்காய்.
நிரை + நேர் + நேர் ..................... புளிமாங்காய்.
நிரை + நிரை + நேர் ..................... கருவிளங்காய்.
நேர் + நிரை + நேர் ..................... கூவிளங்காய்.

கனியீற்றுச்சீர்கள்.

நேர் + நேர் + நிரை ..................... தேமாங்கனி.
நிரை + நேர் + நிரை ..................... புளிமாங்கனி.
நிரை + நிரை + நிரை ..................... கருவிளங்கனி.
நேர் + நிரை + நிரை ..................... கூவிளங்கனி.

N.B.—அவற்றுள், நேர் அல்லது காய் இறுதிச்சீர் நான்கும் **வெண்பாவுரிச்சீர்** என்றும், நிரை அல்லது கனி இறுதிச்சீர் நான்கும் **வஞ்சியுரிச்சீர்** என்றும் பெயர்பெறும். காய் இறுதிச்சீர் வெண்பாவிலும், கனி இறுதிச்சீர் வஞ்சிப்பாவிலும் வரும்.

(d) நாலசை கூடிவருவதாகிய நாலசைச்சீர் **பொதுச்சீர்** எனப்படும். இது பதினாறுகும்.

மேல்வந்த உரிச்சீர் எட்டுக்கும் ஈற்றில் முறையே நேரசையையும் நிரையசையையும் கூட்டப் பதினாறுதல் காண்க.

N.B.—இவற்றுள் ஈற்றினின்ற சீர் இரண்டும் நேர்நேராயின் தண்பூவென்றும், நிரைநேராயின் நறும்பூவென்றும், நேர்நிரையாயின் தண்ணிழலென்றும், நிரைநிரையாயின் நறுநிழலென்றும் உதாரணவாய்பாடுகொள்ளப்படும்.

உதாரணவாய்பாடு.

| | |
|---|---|
| தேமாந்தண்பூ | தேமாந்தண்ணிழல். |
| புளிமாந்தண்பூ | புளிமாந்தண்ணிழல். |
| கருவிளந்தண்பூ | கருவிளந்தண்ணிழல். |
| கூவிளந்தண்பூ | கூவிளந்தண்ணிழல். |
| தேமாநறும்பூ | தேமாநறுநிழல். |
| புளிமாநறும்பூ | புளிமாநறுநிழல்; |
| கருவிளநறும்பூ | கருவிளநறுநிழல். |
| கூவிளநறும்பூ | கூவிளநறுநிழல். |

[1]"இயற்சீர் உரிச்சீர் பொதுச்சீர் என்றும்
மயக்கற வகுத்த சீர்மூன் றாகும்." (யாப்பரு.)

"ஈரசை கூடிய சீர்இயற் சீர்அவை
ஈரிரண் டென்ப இயல்புணர்ந் தோரே." (யாப்பரு.)

"மூவசைச் சீர்உரிச் சீர்இரு நான்கனுள்
நேரிறு நான்கும் வெள்ளை அல்லன
பாவினுள் வஞ்சியின் பாற்பட் டனவே." (யாப்பரு.)

வெள்ளை=வெண்பா.

"நாலசைச் சீர்பொதுச் சீர்பதி னாறே." (யாப்பரு.)

நாலசைச்சீரை ஈரசைச்சீராக அலகிடுதலும் இயல்பாம். நாலசைக்கு மேலுள்ள சீர்கள் இல்லவே இல்லை.

**432.** **தளை** (Combination of feet).—சீர் ஒன்றோடொன்று சேர்ந்து வருவது தளை. இது நேர் நேரோடும் நிரை நிரையோடும் பொருந்துதலும், மாறி, நேர் நிரையோடும் நிரை நேரோடும் பொருந்துதலும் ஆகிய இருவகையாம்.

"தன்சீர் தனதோ டொன்றலும் உறழ்தலும்
என்றிரண் டாகும் இயம்பிய தளையே." (இல. விள.)

N.B.—சீர்கள் பலவகையாதலால், இன்னின்ன சீர் இன்னின்னவற்றோடு பொருந்திவருமென்றும், அப்படிப் பொருந்திவருவது இன்னின்ன வகையான பாவுக்கு ஏற்றதென்றும் நிதானித்தறியவேண்டியது.

**433.** ஈரசையாலாகிய இயற்சீரில்,

(a) நேர் ஈற்றோடு நேர் முதலில் வந்த சீர் பொருந்துமாயின் அது **நேர் ஒன்றிய ஆசிரியத்தளை.**

---

1 "ஈரசை கூடிய சீர்இயற் சீரவை
ஈரிரண் டாம்அவை அகவற் கிசைதலும்
மூவசை கூடிய சீர்உரிச் சீர்அது
நாலிரண் டாகி நடைபெறும் அவற்றுள்
நேர்இறு நான்கும் வெள்ளை யல்லன
பாவினுள் வஞ்சியின் பாற்பட் டிடுதலும்
நாலசை யானும் ஓரசை யானும்
சீர்பெற நடப்பது பொதுச்சீ ராகுத
லென்னீரண் டிரண்டாய் இயறலும் நெறியே." (இல. விள.)

(b) நிரை ஈற்றோடு நிரை முதலில் வந்த சீர் பொருந்துமாயின் அது **நிரை ஒன்றிய ஆசிரியத்தளை.**

இவ்விரண்டும் ஆசிரியப்பாவில் வரும். ஆசிரியப்பா அகவற்பா எனவும் பெயர் பெறும்.

நேர் ஒன்றிய ஆசிரியத்தளைக்கு

உ-ம். "உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
யலங்குகுலை யீந்தின் சிலம்பிபொதி செங்காய்
துகில்பொதி பவள மேய்க்கும்
அகில்படு கள்ளியங் காடிறந் தோரே."

நிரை ஒன்றிய ஆசிரியத்தளைக்கு

உ-ம். "திருமழை தலைஇய விருணிற விசும்பின்
விண்ணதி ரிமிழிசை கடுப்பப்
பண்ணமைந் தவர்தேர் சென்ற வாறே."

434. (c) இயற்சீரில், நேர் ஈற்றோடு நிரை வந்து பொருந்துதலும், நிரை ஈற்றோடு நேர் வந்து பொருந்துதலும் **இயற்சீர் வெண்டளை.**

(d) மூன்று அசைகளாலாகிய உரிச்சீரில் காய் இறுதி வெண்பா உரிச்சீரோடு நேர்வந்து பொருந்துவது **வெண்சீர் வெண்டளை.**

இவை வெண்பாவிற்கு வரும்.

உ-ம். "சிலைவிலங்கு நீள்புருவம் சென்றொசிய நோக்கி
முலைவிலங்கிற் றென்று முனிவாள்—மலைவிலங்கு
தார்மாலை மார்ப தனிமை பொறுக்குமோ
கார்மாலை கண்கூடும் போழ்து."

இதில் இயற்சீர் வெண்டளை(c)யும், வெண்சீர் வெண்டளை (d)யும் வந்தன.

435. (e) உரிச்சீரில் காய் இறுதி வெண்பா உரிச்சீரோடு நிரை வந்து பொருந்துவது **கலித்தளை.** இது கலிப்பாவுக்காகும்.

உ-ம். "செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போய்
எல்லைநீர் வியன்கொண்மூ விடைநுழையு மதியம்போல்
மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே."

இதில் கலித்தளை வந்தவாறு காண்க.

**436.** (f) கனி இறுதி வஞ்சி உரிச்சீரோடு நிரை வந்து பொருந்துதல் **ஒன்றிய வஞ்சித்தளை.**

(g) கனி இறுதி வஞ்சி உரிச்சீரோடு நேர் வந்து பொருந்துதல் **ஒன்றாத வஞ்சித்தளை.** இவை வஞ்சிப்பாவில் வரும்.

உ-ம். "மந்தாநிலம் வந்தசைப்ப
வெண்சாமரை புடைபெயர்தரச்
செந்தாமரை நாண்மலர்மிசை—யெனவாங்
கினிதி ருந்துங்கிய விறைவனை
மனமொழி மெய்களின் வணங்குது மகிழ்ந்தே."

இதில் இருவகை வஞ்சித்தளையும் வந்தவாறு காண்க.

**437.** ஆகவே தளைகள் பொதுவகையால் ஒன்றியதும், ஒன்றாததும் என இருவகையாயினும், சிறப்புவகையால் ஏழாயின.

[1] "சீரொடு சீர்தலைப் பெய்வது தளைஅவை
ஏழென மொழிப இயல்புணர்ந் தோரே." (யாப்பரு.)

"வெண்சீர் ஒன்றலும் இயற்சீர் விகற்பமும்
என்றிரண் டென்ப வெண்டளைக் கியல்பே." (யாப்பரு.)

"ஈரசைச் சீர்நின் றினிவரும் சீரொடு
நேரசை ஒன்றல் நிரையசை ஒன்றலென்
றயிரு வகைத்தே ஆசிரி யத்தளை." (யாப்பரு.)

"நிரைஈ றில்லா உரிச்சீர் முன்னர்
நிரைவரு காலை கலித்தளை யாகும்." (யாப்பரு.)

"தன்சீர் இறுதி நிரையொடு நேர்வரின்
வஞ்சித் தளையின் வகைஇரண் டாகும்." (யாப்பரு.)

**438.** ஓரசைச்சீரில்,

(a) நேரோடு நேர் பொருந்தினால் நேர் ஒன்றிய ஆசிரியத்தளை.

---

1 "நேர்நேர் ஒன்றல் நிரைநிரை ஒன்றலென்
றய்இரு தளையும் அகவற் கிசைநலும்
வெண்சீ ரொன்றல் இயற்சீர் விகற்பமென்
றவ்விரு தளையும் வெள்ளைக் கமைதலும்
நிரையீற் றுரிச்சீர் ஒன்றலும் உறழ்தலும்
வகையாது வருதல் வஞ்சிக்கு வருதலும்
வெண்சீர் விகற்பம் கலித்தளை யாதலும்
பண்பினின் வழாஅப் பாவினை வென்ப." (இல. வி.)

(b) நிரையோடு நிரை பொருந்தினால் நிரை ஒன்றிய ஆசிரியத் தளை.

(c) நேரோடு நிரையும், நிரையோடு நேரும் பொருந்தினால் இயற் சீர் வெண்டளை.

பொதுச்சீராகிய நாலசைச்சீரில்,

(a) நேர் ஈற்றோடு நேர் வந்து பொருந்தினால் வெண்சீர் வெண் டளை.

(b) நேர் ஈற்றோடு நிரை வந்து பொருந்தினால் கலித்தளை.

(c) நிரை ஈற்றோடு நிரை வந்து பொருந்தினால் ஒன்றிய வஞ்சித் தளை.

(d) நிரை ஈற்றோடு நேர் வந்து பொருந்தினால் ஒன்றாத வஞ்சித் தளை.

N.B.—ஓரசைச்சீர் அருகி வெண்பாவில் மாத்திரம் வருதலாலும், நாலசைச் சீர்களும் சாதாரணத்தில் வருவது அருமையாதலாலும், அப்படி வந்த நாலசைச் சீர்களை ஈரசையாகப் பிரித்து அலகிடுதல் இயல்பாதலாலும், இவ்விருவித தனிச்சீர் பொதுச்சீர்கள் தட்ட தளைகட்குப் பிரத்தியேகமான பெயரில்லை.

**439.** அடி (Metrical Line).—மேற்கூறிய தளைகள் ஒன்றோ டொன்று அடுத்து வருவது அடியாகும்.

ஒரு சீரால் அடிகள் வருவதில்லை.
இருசீர்கள் அமைந்தது **குறளடி**. (Dimeter.)
முச்சீர்கள் அமைந்தது **சிந்தடி**. (Trimeter.)
நாற்சீர்கள் அமைந்தது **நேரடி** அல்லது **அளவடி**. (Tetrameter.)
ஐஞ்சீர்கள் அமைந்தது **நெடிலடி**. (Pentameter.)
ஐந்துக்குமேற்பட்டசீர்கள்அமைந்தது**கழிநெடிலடி**(Polimeter.)

"குறளிரு சீரடி சிந்துமுச் சீரடி நாலொருசீர்
அறைதரு காலை அளவொடு நேரடி யையொருசீர்
நிறைதரு பாதம் நெடிலடி யாநெடு மென்பணைத்தோட்
கறைகெழு வேற்கணல் லாய்மிக்க பாதங் கழிநெடிலே." (காரி.)

**440.** கழிநெடிலடியில் எவ்வளவு சீர்வரைக்கும் வரலாம் என்கிறதற்கு விதியில்லை. யாப்பருங்கலத்தார் பத்துச் சீர்வரை வரலாமென்கிறார்.

"கழிநெடி லடியே கசடறக் கிளப்பின்
அறுசீர் முதலா ஐயிரண் டீறா
வருவன பிறவும் வகுத்தனர் கொளலே." (யாப்பரு.)

ஆயினும், 12, 16 சீர்கள்வரை அடிகள் வந்திருக்கின்றன. இப்படி வந்த அடியை மூன்றடியாகவும் நான்கடியாகவும் பிரிக்கலாமாதலின், இவைகளில் எண்சீரின்மிக்க சீரான் வந்தவடிகளெல்லாம் சிறப்பில்லனவாம்.

"இரண்டு முதலா வெட்டீ றாகத்
திரண்ட சீரா னடிமுடி வுடைய
இறந்து வரினும் மடிமுடி வுடைய
சிறந்த வல்ல செய்யு ளுள்ளே." (காக்கைபா.)

**441.** இவ்வடிகளுள் குறளடியும் சிந்தடியும் வஞ்சிப்பாவில் வரும்; மற்றப் பாக்களில் வாரா.

கலிப்பா, வெண்பா, அகவற்பா என்னும் இம்மூன்றும் சாதாரணமாய் நேரடி அல்லது அளவடிகளுள்ளவைகளாகவேயிருக்கும்.

பாவினங்களில் எல்லாவித அடிகளும் வரும்.

"சிந்தடி குறளடி என்றிரண் டடியால்
வஞ்சி நடக்கு மென்மனார் புலவர்." (யாப்பரு.)

"கலியொடு வெண்பா அகவல் கூறின்
அளவடி தன்னால் நடக்கு மென்ப." (யாப்பரு.)

"பாவினம் எல்லா அடியினும் நடக்கும்." (யாப்பரு.)

**442.** ஆயினும் அகவற்பாவில் இயற்சீர்பெற்ற வெண்பா அடிகளும் வஞ்சிச்சீர்பெற்ற வஞ்சியடிகளும் கலந்து வருதலுமுண்டு.

[1]"இயற்சீர் வெள்ளடி வஞ்சி யடிஅவை
அகப்பட வருஉம் அகவலும் உளவே." (யாப்பரு.)

---

[1] "இயற்சீர் வெள்ளடி வஞ்சி யடிஇவை
மயக்கப் படுதலும் வெண்சீர் வெள்ளடி
கலியடி ஓரோவழி அகவலுட் கலத்தலும்
வெள்ளடி அகவல் கலியுளும் அகவலும்
கலியும் ஓரோவழி வெண்பா வடியும்
வஞ்சியுள் மயங்கி வருதலும் ஐஞ்சீர்
அடிகலி அகவலோ டருகிவக் தடுத்தலும்
கடிநிலை யின்றே கருதுங் காலே." (இல. விள.)

அப்படியே வெண்பா அடிகள் கலிப்பாவிலும் ஆசிரியப்பா அடிகள் வஞ்சிப்பாவிலும் கலந்து வருதலுமுண்டு.

"வெள்ளடி கலியினுள் விரவவும் பெறுமே
வஞ்சியுள் அகவல் மயங்கினும் வரையார்." (யாப்பரு.)

**443.** வெண்பாவிற்குச் சிறுமை ஈரடியும்,
வஞ்சிப்பாவிற்கும் } சிறுமை மூவடியும்,
அகவற்பாவிற்கும் }
கலிப்பாவிற்குச் சிறுமை நாலடியுமாம்.

இவற்றின் பெருமைக் களவில்லை.

"வெள்ளைக் கிரண்டடி வஞ்சிக்கு மூன்றடி மூன்றகவற்
கெள்ளப் படாக்கலிக் கீரிரண் டாகும் இழிபுரைப்போர்
உள்ளக் கருத்தி னளவே பெருமையொண் போதலைத்த
கள்ளக் கருநெடுங் கட்சுரி மென்குழற் காரிகையே."(காரி.)

உதாரணம்.

இரண்டடியான் வந்த வெண்பா.

"செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது."

மூன்றடியான் வந்த அகவற்பா.

"முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையய னொள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே."

மூன்றடியான் வந்த வஞ்சிப்பா.

"செங்கண்மேதி கரும்புழக்கி
யங்கணீலத் தலரருந்திப்
பொழிற்காஞ்சி நீழற்றுயிலுஞ்—செழுநீர்
நல்வயற் கழனி யூரன்
புகழ்த லாணுப் பெருவண் மையனே."

நான்கடியான் வந்த கலிப்பா.

"செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போ
யெல்லைநீர் வியன்கொண்மூ விடைநுழையு மதியம்போல்
மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே."

**444. தொடை** (Beauties of Metrical Composition).—பாட்டுகள் காதுக்கினிய சுவையுண்டாக்கத்தக்கதாக இரண்டடிகள் ஒன்றுக்கொன்றும், ஒரே அடியிலுள்ள சீர்கள் ஒன்றுக்கொன்றும் தொடுத்து, எழுத்திலும் ரூபத்திலும் தொனியிலும் சிற்சிலவேளை பொருளிலும் ஒத்தும் வேறாயும் நடப்பது **தொடை** ஆம்.

அடிகள் ஒன்றோடொன் றியைவதில் உள்ள தொடைகள் ஐந்து. அவை, அடி மோனை, அடி எதுகை, அடி முரண், அடி இயைபு, அடி அளபெடை எனப்படும்.

**445. அடி மோனை** (Alliteration in lines).—அடிகள்தோறும் முதலில் ஒரே எழுத்து ஒன்றிவருவது அடி மோனையாம்.

உ—ம். "மாவும் புள்ளும் வதுவையிற் படர
மாநீர் விரிந்த பூவுங் கூம்ப
மாலை தொடுத்த கோதையுங் கமழ
மாலை வந்த வாடை
மாயோ ளின்னுயிர்ப் புறத்திறுத் தற்றே."

இதில் அடிமோனை வந்தமை காண்க.

"ஆதி எழுத்தே அடிதொறும் வரின்அடி
மோனைத் தொடைஎன மொழிமனோர் புலவர்." (யாப்பரு.)

**446. அடி எதுகை** (Rhyme in second letter).—அடிகள் தோறும் இரண்டாமெழுத் தொன்றிவருவது அடி எதுகையாம்.

உ—ம். "வடியேர்கண் ணீர்மல்க வான்பொருட்கட் சென்றார்
கடியார் கனங்குழாய் காணார்கொல் காட்டுள்
இடியின் முழக்கஞ்சி ஈர்ங்கவுள் வேழம்
பிடியின் புறத்தசைத்த கை."

இதில் அடி எதுகை வந்தமை காண்க.

"இரண்டாம் எழுத்தொன் றியைவதே எதுகை." (யாப்பரு.)

இப்படிவரும் எதுகை அடிதோறும் ஒரேவிதமான எழுத்தாயிருப்பது சிறப்பு. ஆயினும் ஒரேவர்க்க எழுத்துக்களாவது, இனவெழுத்துக்களாவது, நெட்டெழுத்துக்களாவது வரினும் இழுக்காது. இவை முறையே **வர்க்கவெதுகை, இனவெதுகை, நெடிலெதுகை** எனப் பெயர்பெறும்.

இவற்றுள் இனவெதுகைமாத்திரம் வல்லினவெதுகை, மெல்லின வெதுகை, இடையினவெதுகை யென மூவகைப்படும்.

உதாரணம்.

"நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு." (இதில் வர்க்கவெதுகை வந்தது.)

"தக்கார் தகவில ரென்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும்." (இதில் வல்லினவெதுகை வந்தது.)

"அன்பீனு மார்வ முடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு."(இதில் மெல்லினவெதுகை வந்தது.)

"எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு."(இதில் இடையினவெதுகை வந்தது.)

"ஆவா வென்றே யஞ்சின ராழ்ந்தா—ரொருசாரார்
கூகூ வென்றே கூவிளி கொண்டா—ரொருசாரார்
மாமா வென்றே மாய்ந்தனர் நீந்தா—ரொருசாரார்
ஏகீர் நாகீ ரென்செய்து மென்றா—ரொருசாரார்."

இதில் நெடிலெதுகை வந்தது.

"ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்."

இதில், "ஆய்ந்தாய்ந்து," "தான்சாந்துயரம்" என்பவற்றில், தா, சா என்னும் நெடில்கள் கிரமப்படி நான்காம், மூன்றாம் எழுத்துக்களாயினும், ய், ந் என்னும் ஒற்றுக்களேயும், ன் ஒற்றையுந் தள்ள, இரண்டாம் எழுத்துப்போல் பாவிக்கப்பட்டு தம்முள் ஒன்றுவதனுல் எதுகையாயின. இப்படித்தள்ளப்படும் ஒற்றுக்களுக்கு ஆசு என்று பெயர். ஆகையால் இது **ஆசிட்ட நெடில் எதுகை** யெனப்படும்.

இப்படிப் பலவிதமாய் வலிந்து எதுகை என்றும், மோனை என்றும் தொடை காண்பிப்பது இவ்விரு தொடைக்குஞ் சிறந்தது.

தமிழில் சிறப்பான தொடைகள் மோனையும் எதுகையுமாதலால் பாடகர்கள் கட்டுப்படாமல் சுவையோடு பாட இப்புறனடை விதிகள் இவை இரண்டிற்கும் விசேஷித்துக் கூறவேண்டியதாயிற்று.

"வருக்கம் நெடில்இனம் வரையா **ராண்டே**." (யாப்பரு.)

**447.** மோனையும் **வர்க்கமோனை, இனமோனை, நெடில் மோனை** என மூவகைப்படும்.

உ—ம். பகலேபல் பூங்கானற் கிள்ளை யோப்பியும்
பாசிலைக் குளவியொடு கூதாளம் விரைஇப்
பின்னுப்பிணி யவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்
பீர்ங்கப் பெய்து தேம்படத் திருகி, ஆ."

இதில் வர்க்கமோனை வந்தது.

"வெள்ளி வெள்ளி விளங்கிழைப் பணைத்தோள்
மெத்தென் சாயல் முத்துறழ் முறுவல்."

இதில் இனமோனை வந்தது.

"தேடும் திரவியம் கைக்காச்சோ தம்பி
பாடும் பயனிலை காண்."

இதில் நெடில்மோனை வந்தது.

**448.** அடி இயைபு (Rhyme in the last letter).—அடிகள் தோறும் கடைசி எழுத்துக்கள் ஒத்திருப்பது அடி இயைபாம்.

உ—ம். "இன்னகைத் துவர்வாய்க் கிளவியு மணங்கே
நன்மா மேனிச் சுணங்கும்ஆர் அணங்கே
ஆடமைத் தோளி கூடலும் அணங்கே
அரிமதர் மழைக்கணும் அணங்கே
திருநுதற் பொறித்த திலதமும் அணங்கே."

இதில் அடி இயைபு வந்தமை காண்க.

"இறுவா யொப்பினஃ தியைபெனப் படுமே." (யாப்பரு.)

**449.** அடி முரண் (Antithesis).— அடிகள்தோறும் முதல் வார்த்தைகள் பொருளிலாவது சொல்லிலாவது ஒன்றுக்கொன்று மாறுபட்டிருப்பது அடிமுரணும்.

உ—ம். "இருள்பரந் தன்ன மாநீர் மருங்கில்
நிலவு குவித்தன்ன வெண்மணல் ஒருசிறை
இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை
பொன்னி னன்ன நுண்டா திறைக்கும் } பொருள் முரண்.
சிறுகுடிப் பரதவர் மடமகள்
பெருமதர் மழைக்கணும் உடையவா லணங்கே." } சொல் முரண்

இதில் அடிமுரண் வந்தமை காண்க.

"மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே." (யாப்ப.)

**450.** அடி அளபெடை (Prolongation of sounds of letters). அடிகள்தோறும் முதலில் அளபெடுத் தொன்றிவருவது அடி அளபெடையாம்.

உ—ம். "ஆஅ அளிய வலவன்றன் பார்ப்பினோ
டீஇர் இணையுங்கொண் டீர்அளைப் பள்ளியுட்
டூஉந் திரையலைப்பத் துஞ்சா திறைவன்றோள்
மேஎ வலைப்பட்ட நம்போ னறுநுதால்
ஓஒ உழக்குந் துயர்."

இதில் அடி அளபெடை வந்தமை காண்க.

"அளபெடை ஒன்றுவ தளபெடைத் தொடையே." (யாப்ப.)

**451**. அளவடியாகிய ஓர் அடியிலுள்ள சீர்களிலும் மோனை எதுகை, இயைபு, முரண், அளபெடைகள் வரத்தொடுக்கும்.

1-ம், 2-ம் சீர்களில் மேற்சொன்ன மோனைமுதலிய தொடைகள் வருமாயின், **இணைமோனை, இணை எதுகை, இணை இயைபு, இணை முரண், இணை அளபெடை** எனப்படும்.

உதாரணம்.

"வேண்டுதல் வேண்டாமை இல்லானடி சேர்ந்தார்க்
கியாண்டும் இடும்பை யில." (இணைமோனை.)

"பொன்னின் அன்ன பொறிசுணங் கேந்தி." (—— எதுகை.)

"மொய்த்துடன் தவழும் முகிலே பொழிலே." (—— இயைபு.)

"சீறடிப் பேரக லல்கு லொல்குபு." (—— முரண்.)

"தாஅட் டாஅ மரைமல ருழக்கி." (—— அளபு.)

"இருசீர் மிசைவரத் தொடுப்ப திணையே." (யாப்பரு.)

**452**. 1—ம், 3—ம் சீர்களில் மோனைமுதலிய தொடைகள் வருமாயின், **பொழிப்புமோனை**, ௸ எனப்படும்.

உதாரணம்.

"வானின் றுலகம் வழங்கி வருதலால்
தானமிழ்தம் என்றுணரற் பாற்று." (பொழிப்புமோனை.)

"பன்னருங் கோங்கி னன்னலங் கவற்றி." (—— எதுகை.)

"மற்றத னயலே முத்துறழ் மணலே." (—— இயைபு )

"சுருங்கிய நுசுப்பில் பெருவடந் தாங்கி." (—— முரண்.)

"பூஉக் குவளைப் போஒ தருந்தி." (—— அளபு.)

"முதலொடு மூன்றுஞ் சீர்த்தொடை பொழிப்பே." (யாப்ப.)

**453**. 1—ம், 4—ம் சீர்களில் மோனைமுதலிய தொடைகள் வருமாயின், **ஒரூஉமோனை**, ௸ எனப்படும்.

உதாரணம்.

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு." (ஒரூஉமோனை.)
"அன்னம் பயிலிய தாமரை அன்ன." (——எதுகை.)
"நிழலே யினியத னயலது கடலே." (——இயைபு.)
"குவிந்துசுணங் கரும்பிய கொங்கை விரிந்து." (——முரண்.)
"காஅய்ச் செந்நெல் கறித்துப் போஒய்." (——அளபு.)

"சீரிரண் டிடைவிடத் தொடுப்ப தொரூஉத்தொடை."
[(யாப்ப.)

**454.** 1-ம், 2-ம், 3-ம் சீர்களில் மோனைமுதலிய தொடைகள் வருமாயின் **கூழைமோனை,** ௸ எனப்படும்.

உதாரணம்.

"தானம் தவம்இரண்டும் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்." (கூழை மோனை.)
"நன்னிற மென்முலை மின்னிடை வருந்தி." (——— எதுகை.)
"மாதர் நகிலே வல்லே யியலே." (——— இயைபு.)
"சிறிய பெரிய நிகர்மலர்க் கோதைதன்." (——— முரண்.)
"மாஅத் தாஅண் மோஒட் டெருமை." (——— அளபு.)

"மூவொரு சீரும் முதல்வரத் தொடுப்பது
கூழை என்மனார் குறிப்புணர்ந் தோரே." (யாப்பரு.)

**455.** 1-ம், 3-ம், 4-ம் சீர்களில் மோனைமுதலிய தொடைகள் வருமாயின், **மேற்கதுவாய்மோனை,** ௸ எனப்படும்.

உதாரணம்.

"விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி." (மேற்கதுவாய்மோனை.)
"என்னையு மிடுக்கண் துன்னுவித் தின்னடை." (——— எதுகை.)
"வில்லே நுதலே வேற்கண் கயலே." (——— இயைபு.)
"வெள்வளைத் தோளும் சேயரிக் கருங்கணும்." (——— முரண்.)
"தேஎம் புனலிடைச் சேஎர் பாஅல்." (——— அளபு.)

"முதலயற் சீரொழித் தல்லன மூன்றின்
மிசைவரத் தொடுப்பது மேற்கது வாயே." (யாப்பரு.)

**456.** 1–ம், 2–ம், 4–ம் சீர்களில் மோனைமுதலிய தொடைகள் வருமாயின், **கீழ்க்கதுவாய்மோனை**, ஃ எனப்படும்.

உதாரணம்.

"சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்." (கீழ்க்கதுவாய் மோனை.)
"அன்ன மென்பெடை போலப் பன்மலர்." (——— எதுகை.)
"பல்லே தவளம் பாலே சொல்லே." (——— இயைபு.)
"இருக்கையும் நிலையு மேந்தெழி லியக்கமும்." (——— முரண்.)
"மீஇ ஞஅர்ந் துகளும் சீஇர்." (——— அளபு.)

"ஈற்றயற் சீர்ஒழித் தெல்லாந் தொடுப்பது
கீழ்க்கது வாயின் கிழமைய தாகும்." (யாப்பரு.)

**457.** எல்லாச் சீர்களிலும் மோனைமுதலிய தொடைகள் வருமாயின், **முற்றுமோனை**, ஃ எனப்படும்.

உதாரணம்.

"துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை." (முற்றுமோனை.)
"கன்னியம் புன்னை யின்னிழ றுன்னிய." (———எதுகை.)
"புயலே குழலே மயிலே யியலே." (———இயைபு.)
"துவர்வாய்த் தீஞ்சொலும் உவந்தெனை முனியா." (———முரண்.)
"ஏஎ ராஅ ஙீஇ ரூஉரன்." (———அளபு.)

"சீர்தொறுந் தொடுப்பது முற்றெனப்படுமே." (யாப்பரு.)

**458.** இப்படியாக, அடிகள்தோறும் வந்த ஐந்து தொடைகளைச் சீர்களில் வந்த எழொடும் உறழத் தொடைகள் முப்பத்தைந்தாதல் காண்க.

"மோனை எதுகை முரணியை பளபெடை
யான வல்லைவந்தும் அவற்றோ டொத்துறாஉம்
பாத விணையே பொழிப்போ டொரூஉத்தொடை
கூழை கதுவாய் மேலதூஉங் கீழதூஉம்
சீரிய முற்றொடு சிவணுமை யேழுந்
தொடையு மத்தொடையின் விகற்பமு மாகும்." (இல. விள.)

**459.** இவையுமன்றிச் செந்தொடை, இரட்டைத்தொடை, அந்தாதித்தொடை என வேறு மூன்று உண்டு.

"செந்தொடை யிரட்டையோ டந்தாதி எனவும்
வந்த வகையால் வழங்கு மன்பெயரே." (யாப்பரு.)

**செந்தொடை** (Blank verse), முன் சொன்ன மோனை எதுகை முதலியன ஒன்றுமில்லாது வருவது.

உ—ம். "பூத்த வேங்கை வியன்சினை ஏறி
மயிலினம் அகவும் நாடன்
நன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே."

இதில் செந்தொடை வந்தமை காண்க.

"செந்தொடை ஒவ்வாத் திறத்தன வாகும்." (யாப்பரு.)

**இரட்டைத்தொடை**, ஓர் அடியிலுள்ள சீர்களிலெல்லாம் ஒரே வார்த்தையே திரும்பத்திரும்ப வருவது.

உ—ம். "ஒக்குமே ஒக்குமே ஒக்குமே ஒக்கும்
விளக்கினுட் சீறெரி ஒக்குமே ஒக்கும்
குளக்கொட்டிப் பூவி னிறம்."

இதில் இரட்டைத்தொடை வந்தமை காண்க.

"இரட்டை அடிமுழு தொருசீ ரியற்றே." (யாப்பரு.)

**அந்தாதித்தொடை**, ஓர் அடியின் இறுதியில் வந்த சொல் அடுத்த அடியின் முதலில் வருவது.

உ—ம். "உலகுடன் விளக்கும் ஒளிதிகழ் அவிர்மதி
மதிநல னழிக்கும் வளங்கெழு முக்குடை
முக்குடை நீழற் பொற்புடை யாசனம்
ஆசனத் திருந்த திருந்தொளி அறிவனை
அறிவுசேர் உள்ளமோ டருந்தவம் புரிந்து
துன்னிய மாந்தரக் தென்ப
பன்னருஞ் சிறப்பின் விண்மிசை உலகே."

இதில் அந்தாதித்தொடை வந்தமை காண்க.

"ஈறு முதலாத் தொடுப்ப தந்தாதி என்
றோதினர் மாதோ உணர்ந்திசி னோரே." (யாப்பரு.)

**460.** ஒரே பாட்டில் பலதொடைகள் வரலாம். இத்தொடைகளால் பாட்டுகள் சுவைபெறும்.

# CHAPTER XV.

## DIFFERENT KINDS OF VERSES.

## யாப்பியல்—செய்யுள்.

**461.** **செய்யுள்கள்** *அல்லது* **பாட்டுகள்,** *பா, பாவினம் என இருவகையாம்.*

**பா** (Metre) *வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா, நூற்பா என ஆறுவகையாம். இவற்றில் முதல் நான்குமே சிறப்புடையவை.*

**பாவினம்** (Allied metres) *தாழிசை, துறை, விருத்தம் என மூன்றாம்.*

*"செய்யுட் டாமே மெய்பெற விரிப்பிற்*
*பாவே பாவினம் எனஇரண் டாகும்."* (யாப்பரு.)

*"வெண்பா ஆசிரியங் கலியே வஞ்சி*
*பண்பாய்ந் துரைத்த பாநான் கும்மே."* (யாப்பரு.)

*"தாழிசை துறையே விருத்த மென்றிவை*
*பாவினம் பாவொடு பாற்பட் டியலும்."* (யாப்பரு.)

**462.** *பா என்பது இரண்டு முதலிய அடிகளால் ஆக்கப்பட்டு, தன் இலட்சணங்கள் அமையப்பெற்ற செய்யுள்.*

*பாவினம் என்பது பாக்களுக்கு இனமாய் அதன் இலட்சணங்களுள் சில குறைந்தும் மிகுந்தும் மாறியும் வருவதாம்.*

### I. வெண்பா.—VENBA.

#### GENERAL CHARACTERISTICS.—பொதுவிதி.

**463.** **வெண்பாவில்,**

**அடி.**—*இரண்டுக்குக் குறையாது பல அடிகள் வரும். இவற்றுள் ஈற்றடி மூன்று சீராயும் மற்ற அடிகள் நான்கு சீராயுமிருக்கும்.*

**தளை.**—*இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை இரண்டும் வரும். மற்றத் தளைகள் வாரா.*

**சீர்.**—*மூன்றசையாலாகிய சீர்களுள் காய் இறுதிச்சீரும், ஈரசைச்சீராகிய இயற்சீரும் வரும். மற்றச் சீர்கள் வாரா.*

ஈற்றடியின் முடிபு காசு, பிறப்பு, நாள், மலர் என்ற வாய்பாட்டில் ஒன்றாயிருக்கும். நேரானால் நாள்; நிரையானால் மலர்; நேர்நேர் அல்லது தேமாவானால் காசு; நிரைநேர் அல்லது புளிமாவானால் பிறப்பு. இக்காசு பிறப்புகள் பெரும்பான்மை குற்றுகரவீறாயும் சிறுபான்மை முற்றுகரவீறாயும் இருக்கும்.

ஒவ்வொரு பாவின் ஓசை அல்லது தொனிக்கு ஒவ்வோர் பேருண்டு. வெண்பாவோசை **செப்பலோசை** யெனப்படும்.

செப்பலோசை (the tone for recital or reading.) சங்கராபரணராகத்தொனியை யநுசரித்துச் செவிக்கினிமை யூட்டுவது.

இச்செப்பலோசை, ஏந்திசைச்செப்பல், தூங்கிசைச்செப்பல், ஒழுகிசைச்செப்பல் என மூவகையாம்.

**ஏந்திசைச்செப்பல்** (Sharp) வெண்சீர் வெண்டளையால்மாத்திரம் வருவது.

உ—ம். "யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு."

இதில் ஏந்திசைச் செப்பலோசை வந்தமை காண்க

**தூங்கிசைச்செப்பல்** (Flat) இயற்சீர் வெண்டளையால்மாத்திரம் வருவது.

உ—ம். "பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்."

இதில் தூங்கிசைச் செப்பலோசை வந்தமை காண்.

**ஒழுகிசைச்செப்பல்** (Proper Euphonical) இயற்சீர் வெண்டளையும் வெண்சீர் வெண்டளையும் கலந்து நடப்பது.

உ—ம். "கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிருந் தொழும்."

இதில் ஒழுகிசைச் செப்பலோசை வந்தமை காண்

"செப்ப லிசையன வெண்பா மற்றவை
யந்தடி சிந்தடி யாகலும் அவ்வடி
யந்தம் அசைச்சீ ராகவும் பெறுமே." (யாப்ப(

"வெண்சீர் வெண்டளை யான்வரும் யாப்பை
ஏந்திசைச் செப்ப லென்மனார் புலவர்."

"இயற்சீர் வெண்டளை யான்வரும் யாப்பைத்
தூங்கிசைச் செப்ப லென்மனார் புலவர்."

"வெண்சீர் இயற்சீர் விரவி ஒழுகுவ
தொழுகிசை யென்மனார் உணர்ந்திசி னோரே." (முத். வீரி.)

வெண்பா வகை.—DIFFERENT KINDS OF VENBA.

**464.** வெண்பா, அடியின் கணக்குப்பற்றியும், அடிகள்தோறும் வரும் முதல்வார்த்தையில் உள்ள எதுகை பற்றியும் பலவகைத்தாய், குறள், நேரிசை, இன்னிசை, சிந்தியல், சவலை, பஃறொடை என ஆறுவகையாம்.

"குறள்நே ரின்னிசை பஃறொடை சவலை
சிந்தியல் எனவா றும்வெண் பாவே." (சுயம்.)

**465. குறள் வெண்பா.**—இது இரண்டடியால் வரும்; இவ்வடிகள் ஒரு விகற்பமாயும் பல விகற்பமாயுமிருக்கும். ஒரு விகற்பமாவது அடிகடோறும் முதலில் எதுகைத்தொடை வருவது; பல விகற்பமாவது அங்ஙனம் வராது மாறுபட்டிருப்பது.

உ—ம். "கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்." (ஒரு விகற்பு.)

"யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு." (பலவிகற்பு.)

இவற்றில், முதலடியில் நாற்சீரும் ஈற்றடியில் முச்சீரும் வந்து ஈற்றசைகள் முறையே மலர், காசு என்னும் வாய்பாட்டிக் கிசைந்தமையும் காண்க.

"உரத்தெழு செப்ப லோசையைத் தழுவி
யிரண்டடி யாயீற் றடிமுச் சீராய்
ஒருவிகற் பானும் இருவிகற் பானும்
வருவது குறள்வெண் பாவெனப் படுமே."(முத். வீரி.)

**466. நேரிசை வெண்பா.**—இது, இரண்டு குறள் வெண்பாக்கள் நடுவில் தனிச்சீர் பெற்று, ஒரு விகற்பாயாவது, இரு விகற்பாயாவது பொருந்த ஒரு பாட்டாய் வருவதாம்.

N.B.—நாற்சீர் முச்சீர் நடுவே தனிச்சீர் நாற்சீர் முச்சீர் எனச் சுருக்கமாயும் ஞாபகத்தி லமைக்கலாம்.

உ-ம். "நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கும் ஆங்கே புசியுமாம்—தொல்லுலகில்
நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யும் மழை." (ஒருவிகற்பு.)

"நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவும் நன்றே நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோ
டிணங்கி யிருப்பதுவும் நன்று." (இருவிகற்பு.)

"இடையிற் றனிச்சொற் பெற்றிரு குறளாய்
ஒருவிகற் பானும் இருவிகற் பானும்
வருவது நேரிசை வெண்பா வாகும்." (மூத். வீரி.)

467. இன்னிசை வெண்பா.—இது பலவகையாம்.

(a) நாலடியாய்த் தனிச்சொல் பெறாது ஒரு விகற்பாயாவது, இரு விகற்பாயாவது, பலவிகற்பாயாவது வரும்.

உ-ம். "வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகற்றம் வாழ்நாண்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்." (ஒருவிகற்பு.)

"இன்றுகொ லன்றுகொ லென்றுகொ லென்னாது
பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி
ஒருவுமின் றீயவை ஒல்லும் வகையால்
மருவுமின் மாண்டார் அறம்." (இருவிகற்பு.)

"களர்நிலத் துப்பிறந்த உப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்
கடைநிலத்தோ ராயினுங் கற்றுணர்ந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும்." (பலவிகற்பு.)

(b) நேரிசை வெண்பாவைப்போல் இரண்டாம் அடி ஈற்றில் தனிச்சொல்பெற்று, ஒரு விகற்பாய், இரு விகற்பாய் வராமல், மூன்று விகற்பாய் வருவதும் இன்னிசை வெண்பாவாகும்.

உ-ம். "அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்கும்
திங்களுஞ் சான்றோரும் ஒப்பர்மற்—றிங்கள்
மறுவாற்றுஞ் சான்றோர்அஃ தாற்றார் தெருமந்து
தேய்வர் ஒருமா சுறின்."

(c) அது மூன்றும் அடி இறுதியில் தனிச்சொல் பெற்று இருவிகற்பாய் வருதலுமுண்டு.

உ—ம். "வளம்பட வேண்டாதார் யார்யாரு மில்லை
அளந்தன போக மவரவ ராற்றால்
விளங்காய் திரட்டினார் இல்லைக்—களங்கனியைக்
காரெனச் செய்தாரு மில்."

(d) அடிதோறும் தனிச்சொற் பெற்றுப் பல விகற்பமாயும், ஒரு விகற்பமாயும், இரண்டு மூன்று விகற்பமாயும் வருவதும் அது.

உ—ம். "மழையின்றி மாநிலத்தார்க் கில்லை—மழையும்
தவமிலா னில்வழி யில்லை—தவமும்
அரசிலா னில்வழி யில்லை—அரசனும்
இல்வாழ்வா னில்வழி யில்." (பல விகற்பு.)

"இன்னாமை வேண்டி னிரவெழுக—இந்நிலத்து
மன்னுதல் வேண்டி னிசைநடுக—தன்னொடு
செல்வது வேண்டின் அறஞ்செய்க—வெல்வது
வேண்டின் வெகுளி விடல்." (மூன்று விகற்பு.) ஓ.

"தனிச்சொ லின்றி ஒருவிகற் பானும்
தனிச்சொ லின்றி இருவிகற் பானும்
தனிச்சொ லின்றிப் பலவிகற் பானும்
தனிச்சொற் பெற்றுப் பலவிகற் பானும்
தனிச்சொல் மூன்று மடியில் தழுவி
இருவிகற் பானும் வருவதின் னிசையே."(முத். வீரி.)

"அடியடி தோறுந் தனிச்சொற் பெற்றும்
வருவதும் அதனியல் பாமென மொழிப."(முத். வீரி.)

468. **சிந்தியல் வெண்பா.**—இது மூன்றடியாய் வரும். இரண்டாம் அடி இறுதியில் நேரிசை வெண்பாவைப்போல் தனிச்சொல் பெற்று வருவது **நேரிசைச் சிந்தியல் வெண்பா** வெனப்படும். இது ஒரு விகற்பாயும் இரு விகற்பாயுமிருக்கும். இப்படி தனிச்சொல் பெறாமல் வருவது **இன்னிசைச் சிந்தியல் வெண்பா** வெனப்படும். இது ஒரு விகற்பாயும் பல விகற்பாயுமிருக்கும்.

நேரிசைச் சிந்தியல் வெண்பா.

உ—ம். (1) "அறிந்தானை ஏத்தி யறிவாங் கறிந்து
செறிந்தார்க்குச் செவ்வ னுரைப்ப—சிறந்தார்
சிறந்தமை யாராய்ந்து கொண்டு." (ஒரு விகற்பு.)

(2) "நற்கொற்ற வாயி னறுங்குவளைத் தார்கொண்டு [ன்
சுற்றும்வண் டார்ப்பப் புடைத்தாளே-பொற்றேரா
பாலைநல் வாயில் மகள்." (இரு விகற்பு.)

இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

உ—ம். (1) "நறுநீல நெய்தலும் கொட்டியுந் தீண்டிப்
பிறநாட்டுப் பெண்டிர் முடிநாறும் பாரி
அறநாட்டுப் பெண்டி ரடி." (ஒரு விகற்பு.)

(2) "சுனையாழ அம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை." (பல விகற்பு.)

"நேரிசை போல விரண்டா மடியிற்
றனிச்சொற் பெற்றொரு விகற்பத் தானும்
தனிச்சொற் பெற்றிரு விகற்பத் தானும்
மூன்றடி யாக முடிவது நேரிசைச்
சிந்திய லென்மனார் தெளிந்திசி னோரே." (முத். வீரி.)

இன்னிசை போலத் தனிச்சொல் லின்றி
ஒருவிகற் பானும் பலவிகற் பானும்
மூவடி முடிவ தின்னிசைச் சிந்தியல். (சுயம்.)

469. **சவலை வெண்பா.**—இருகுறள் தனிச்சொல்லின்றி ஒன்றித்து ஓர் பாட்டாய் நிற்குமாயின் சவலை வெண்பா வெனப்படும். இது ஒரு விகற்பாய் வரும்.

உ—ம். "திருமுடியிற் கண்ணிய மாலையும் பாம்பு
திருமார்பி லாரமும் பாம்பு
திருவரையிற் கட்டிய கச்சையும் பாம்பு
பொருபுயத்திற் கங்கணமும் பாம்பு."

"இருகுறள் சவலை ஒருவிகற் பாகும்." (முத். வீரி.)

470. **பஃறொடை வெண்பா.**—இது நாலடிக்கு மேற்பட்டு ஒரு விகற்பாயும் பல விகற்பாயும் தனிச்சொல் பெற்றும் பெறாதும் வரும்.

உ—ம். "வையக மெல்லாங் கழனியா வையகத்துச்
செய்யகமே நாற்றிசையிற் றேயங்கள்—செய்யகத்து
வான்கரும்பே தொண்டை வளநாடு வான்கரும்பின்
சாறேயந் நாட்டுத் தலையூர்கள் சாறட்ட

கட்டியே கச்சிப் புறமெல்லாங் கட்டியுட்
டானேற்ற மாய சருக்கரை மாமணியே
யானேற்ருன் கச்சி யகம்."

இது ஏழடியான் வந்த பல விகற்பப் பஃருெடை வெண்பா.

"பாதம் பலவரிற் பஃறொடை யாகும்." (யாப்பரு.)

N.B.—இப்படி வரும் பஃருெடை வெண்பாவைச் சிலர் கலி வெண்பா வென்றுஞ் சொல்லுவர். அது பொருந்தாது.

## வெண்பாவினம்—DIFFERENT KINDS OF VERSES ALLIED TO VENBA.

### 1. குறட்பாவினம்.

**471.** (1) **வெண்செந்துறை** அல்லது **குறள்வெண்செந்துறை**.—இது நான்கு அல்லது அதிகமான சீர்கள் பெற்றுத் தம்மில் அளவொத்த இரண்டு அடிகளாலாயதாய் ஒழுகிசைச் செப்பலோசையும் சிறந்த பொருளும் அமைந்திருப்பது.

உ—ம். "கொன்றை வேந்தன் செல்வ னடியிணை
என்று மேத்தித் தொழுவோ மியாமே."

"ஒழுகிய ஓசையின் ஒத்தடி இரண்டாய்
விழுமிய பொருளது வெண்செந் துறையே." (யாப்பரு.)

**472.** (2) **குறட்டாழிசை** அல்லது **தாழிசைக்குறள்**.—இது இரண்டடியே பெறும். ஒவ்வோர் அடியிலும் நாலு சீருக்குமேல் அதிக சீர்கள் வரும். இது மூன்றுவகையாம்.

(a) இரண்டடியில் ஈற்றடி முதலடியினும் குறைந்துவருவது.

உ—ம். "நண்ணுவார் வினைநைய நாடொறு நற்றவர்க் கரசாய [ஞானநற்
கண்ணினு னடியே யடைவார்கள் கற்றவரே."

(b) வெண்செந்துறை விதியில் சிதைந்து வருவது.

உ—ம். "பிண்டியி னீழற் பெருமான் பிடர்த்தலை
மண்டிலந் தோன்று மால்வாழி யன்னாய்."

(c) வேற்றுத்தளை விரவலால் சந்தம் அல்லது ஓசை குறைந்த குறள் வெண்பா.

உ—ம். "வண்டார்பூங் கோதை வரிவளைக்கைத் திருநுதலாள்
பண்டைய ளல்லள் படி."

"அந்தடி குறைநவும் செந்துறைச் சிதைவும்
சந்தழி குறளும் தாழிசைக் குறளே."
"உரைத்த இரண்டும் குறட்பா வினமே." (யாப்பரு.)

## 2. வெண்பாவினம்.

**473.** (1) **வெள்ளைத்தாழிசை** அல்லது **வெண்டாழிசை.**—

(a) இது மூன்றடியாலாகி ஈற்றடி சிந்தடியாயிருப்பதும்,

உ—ம். "நண்பி தென்று தீய சொல்லார்
முன்பு நின்று முனிவு செய்யார்
அன்பு வேண்டு பவர்."

(b) ஒரு பொருள்மேல் மூன்று சிந்தியல் வெண்பா அடுக்கி வருவதுமாம்.

உ—ம். "அம்பேருண் கண்ணார்க் கழிந்த மடநெஞ்சே
கொம்பே ருடையான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வம்பே பிறந்து விடல்."

"வாணேருண் கண்ணார்க் கழிந்த மடநெஞ்சே
நீணாகம் பூண்டான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வீணே பிறந்து விடல்."

"கோளாருண் கண்ணார்க் கழிந்த மடநெஞ்சே
ஆளாக ஆண்டான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வாளா பிறந்து விடல்."

[1] "மூன்றடி யாயீற் றடிமுச் சீராய்
வருநவு மொருபொருள் மேன்மூன் றடுக்கி
வருநவும் வெள்ளொத் தாழிசை யாகும்." (முத். வீரி.)

---

[1] "அடியொரு மூன்றுவந் தந்தடி சிந்தாய்
விடினது வெள்ளொத் தாழிசை யாதலும்
மூன்றடி முதலா யேழடி காறும்வந்
தீற்றடி சிலசில சீர்குன் றினுமவை
வேற்றொலி விரவினும் வெண்டுறை யாதலும்
ஒருமூன் றொருநான் கடியடி தோறும்
தனிச்சொற் றழுவி நடப்பது வெள்ளை
விருத்த மெனப்பெயர் வேண்டலும் விதியே." (இல. வி.)

☞ இச்சூத்திரம் எல்லா வெண்பாவினங்களையு முணர்த்திற்று.

474. (2) **வெண்டுறை.**— இது மூன்றடியிற் குறையாது ஏழடியின் மிகாது வரும். அங்ஙனம் வரும்போது ஈற்றடி சில சீர்கள் குறைந்தும் வெண்பாவுக்கேற்காத தளைகள் விரவியும் வரும்.

உதாரணம்.

"குழலிசைய வண்டினங்கள் கோழிலைய செங்காந்தட் குலைமேற்பாய
வழலெரியின் மூழ்கினவா லந்தோ வளியவென் றயல்வாழ் மந்தி
கலுழ்வனபோ னெஞ்சயர்ந்து கல்லருவி தூஉ
நிழல்வரை நன்னாட நீப்பனோ வல்லன்."

இது நான்கடியால் வந்த ஓரொலி வெண்டுறை.

"கூற்றிருக்கு மடலாழிக் குரிசின்முத லோரிறைஞ்சக்
கொழுந்தேன் பில்கி
ஊற்றிருக்கும் தில்லைவனத் தசும்பிருக்கும் பசும்பொன்மன்றத்
தொருதா ளூன்றி
வண்டு பாடச் சுடர்மகுட மாடப் பிறைத்
துண்ட மாடப் புலித்தோலு மாடப் பகி
ரண்ட மாடக் குலைந்தகில மாடக் கருங்
கொண்ட லோடுங் குழற்கோதை யோடுங் கறைக்
கண்டனா டும்திறம் காண்மினோ காண்மினோ."

இது ஏழடி வேற்றொலி வெண்டுறை.

"மூன்றடி முதலா வேழடி காறும்வந்
தீற்றடி சிலசில சீர்தப நிற்பினும்
வேற்றொலி விரவினும் வெண்டுறை யாகும்." (யாப்பரு.)

475. (3) **வெளிவிருத்தம்.**—இது மூன்றடியாலாவது நாலடியாலாவது வரும். இவ்வடிகள் ஒவ்வொன்றும் அளவடியா யிருத்தலோடு அடிகடோறு மீற்றில் தனிச்சொல்லு முடன்பெற்று வரும்.

உதாரணம்.

"கொண்டல் முழங்கினவால் கோபம் பரந்தனவா—
லென்செய்கோயான்
வண்டுவரி பாட வார்தவளம் பூத்தனவா—
லென்செய்கோயான்
எண்டிசையுந் தோகை யிருந்தகவி யேங்கினவா—
லென்செய்கோயான்."

இது மூன்றடி வெளிவிருத்தம்.

"ஆவா வென்றே யஞ்சின ராழ்ந்தார்—ஒருசாரார்
கூகூ வென்றே கூவிளி கொண்டார்—ஒருசாரார்
மாமா வென்றே மாய்ந்தனர் நீந்தார்—ஒருசாரார்
ஏகிர் நாகிர் என்செய்து மென்றார்—ஒருசாரார்."

இது நாலடி வெளிவிருத்தம்.

"அளவடி யாய்நான் கடிமூன் றடியாய்
அடியடி தோறும் தனிச்சொற் பெற்று
**வருவது வெளிவிருத் தம்மா கும்மே.**" (முத். வீரி.)

## II. ஆசிரியப்பா அல்லது அகவற்பா.—ASIRIAPPA OR AGAVALPA.

### GENERAL CHARACTERISTICS—பொதுவிதி.

**476.** **ஆசிரியப்பா**—கருவிளங்கனி, கூவிளங்கனியல்லாத எல்லாச் சீரானும், எல்லாத் தளையானும், கழிநெடிலடியொழிந்த எல்லா வடியானும் வரும்.

அது **அகவலோசையால்** நடக்கும்.

அவ்வகவலோசை ஏந்திசையகவல், தூங்கிசையகவல், ஒழுகிசை யகவல் என மூவகையாம்.

அவற்றுள், **ஏந்திசையகவல்** நேரொன்றிய ஆசிரியத்தளையாலும், **தூங்கிசையகவல்** நிரையொன்றிய ஆசிரியத்தளையாலும், **ஒழுகிசை யகவல்** இவ்விரண்டும் விரவியதளையாலும், பிறதளையாலும் வரப் பெறும்.

உ—ம். "போது சாந்தம் பொற்ப வேந்தி
ஆதி நாதற் சேர்வோர்
சோதி வானந் துன்னுவோரே."

இதில் ஏந்திசையகவலோசை வந்தது.

"அணிநிழல் அசோகமர்ந் தருணெறி நடாத்திய
மணிதிக ழவிரொளி வரதனைப்
பணிபவர் பவநனி பரிசறுப்பவரே."

இதில் தூங்கிசையகவலோசைவந்தது.

"குன்றக் குறவன் காதன் மடமகள்
வரையர மகளிர் புரையுஞ் சாயலள்
ஐயள் அரும்பிய முலையள்
செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே."

இதில் ஒழுகிசை யகவலோசை வந்தது.

அகவற்பா ஏ, ஓ, ஈ, ஆய், என, ஐ என்னும் முடிவை ஈற்றடியி லேற்கும்.

"அகவ லிசையன அகவல் மற்றவை
ஏ,ஓ, ஈ,ஆய், என, ஐயென் றிறுமே." (யாப்பரு.)

"நேரொன் றாசிரி யத்தளை யான்வரல்
ஏந்திசை யகவ லெனப்படு மெனலே."
"நிரையொன் றாசிரி யத்தளை யான்வரல்
தூங்கிசை யகவ லெனப்படு மெனலே."
"இவ்விரு தளையும் பிறவும் மயங்கி
வருவ தொழுகிசை யாம்வழுத் திடினே." } (முத். வீரி.)

## ஆசிரியப்பா வகை.—DIFFERENT KINDS OF ASIRIAPPA.

**477.** ஆசிரியப்பா நேரிசையாசிரியப்பா, இணைக்குறளாசிரியப்பா, நிலைமண்டிலவாசிரியப்பா, அடிமறிமண்டிலவாசிரியப்பா என நான்குவகைப்படும்.

**நேரிசையாசிரியப்பா.**— இது மூன்றடியிற் குறையாத பலவடியான் வந்து ஈற்றயலடிமாத்திரம் சிந்தடியாயும், மற்றவை அளவடியாயு மிருக்கப் பெறும்.

உ—ம். "நிலத்தினும் பெரிதே வானினு முயர்ந்தன்று
நீரினு மாரள வின்றே சாரற்
கருங்கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு
பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே."

இதில் ஈற்றயலடி சிந்தடியாயும், ஏனையவடிகள் அளவடிகளாயும் வந்தன.

[1]"ஈற்றய லடிமுச் சீராய் வருவது
நேரிசை யகவற் பாவா கும்மே."

---

1 "அந்த வடியி னயலடி சிந்தடி
வந்திடி னேரிசை ஆசிரிய மாதலும்
அளவடி யந்தமும் ஆதியு மாகிக்
குறளடி சிந்தடி யென்று மிரண்டும்
இடைவர நிற்பின் இணைக்குற ளாதலும்
ஒத்த வடித்தா யுலையா மரபொடு
நிறபி னிலைமண் டிலமா குதலும்
மனப்படு மடிமுத லிடையீ றாயின்
அடிமறி மண்டில வாசிரிய மாதலும்
சடைதெரி புலவர் நாடினர் கொளலே." (இல. வி.)

**478. இணைக்குறளாசிரியப்பா.**—இது முதலடியும் ஈற்றடியும் அளவடியாய் நிற்க, குறளடியும் சிந்தடியும் இடையிடையே கலந்து வரப்பெறும். இதில் ஒரோவிடத்துக் குறளடியின்றிச் சிந்தடிமாத்திரம் வருதலுண்டு.

உ—ம். "நீரின் றண்மையும் தீயின் வெம்மையும்
சாரச் சார்ந்து தீரத் தீரும்.
சார ருடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல் லாதே."

இதில் ஈற்றயலடி இரண்டும் சிந்தடியாய் வந்தன.

"சிறியகட் பெறினே எமக்கீயு மன்னே
பெரிய கட்பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே
சிறுசோற் றானும் நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானும் நனிபல கலத்தன் மன்னே
யென்பொடு தடிபடு
வழியெல் லாமெமக் கீயு மன்னே
யம்பொடு வேனுழை
வழியெல் லாந்தா னிற்கு மன்னே
நரந்த நாறுந் தன்கையால்
புலவு நாறு மென்றலை தைவரு மன்னே
யருங்கலை யிரும்பாண ரகன்மண்டைத் துளையுரீஇ
யிரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பார்வை சோர
வஞ்சொனுண் டேர்ச்சிப் புலவர் நாவிற்
சென்றுவீழ்ந் தன்றவன் திருநிறத் திலங்கிய வேலே
யரசா வெந்தை யாண்டுளன் கொல்லோ
வினிப் பாடுநரு மில்லைப்
பாடுநர்க் கொன்றீ குநரு மில்லைப்
பனித்துறைப் பகன்றை நறைக்கொண் மாமலர்
சூடாது வைகி யாங்குப் பிறர்க்கொன்
றீயாது வீயு முயிர்தவப் பலவே."

இதில் குறளடியும் சிந்தடியும் இடையிடை விரவி வந்தன.

"ஆதியு மந்தமும் அளவடி யாகி
குறளடி சிந்தடி யென்றாங் கிரண்டும்
இடைவர லிணைக்குற ளாசிரி யம்மே." (முத். வீரி.)

**479. நிலைமண்டிலவாசிரியப்பா.** — இது எல்லாவடிகளும் அளவடியாய் வருவது. இது ஓரடியாலும் ஈரடியாலும் வருதலும், சூத்திரப்பாவெனப் பெயர் பெறுதலுமுண்டு.

உ—ம். (1) "அன் ஆன் இறுமொழி ஆண்பாற் படர்க்கை.
இது ஓரடியால் வந்தது.

(2) "மென்றொடர் மொழியுட் சிலவேற் றுமையிற்
றம்மின வன்றொட ராகா மன்னே."
இது இரண்டடியால் வந்தது.

(3) "வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சார லுட செவ்வியை யாகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே."
இது மூன்றின்மிக்க பலவடியால் வந்தது.

"எல்லா வடியுமொத் திறினிலை மண்டில
வகவ லென்மனா ரறிந்திசி னோரே." (முத். வீரி.)

**480. அடிமறிமண்டிலவாசிரியப்பா.** — இது மூன்றடி முதலாகப் பலவடிகளாலாகும். இவ்வடிகளை மாற்றி முதல் கடை இடையாகவும், கடை முதல் இடையாகவும் வாசித்தாலும் பொருள் சிதைவுபடாது; ஓசையும் குன்றாது.

உ—ம். "தீர்த்த மென்பது சிவகங் கையே
மூர்த்தி யம்பலக் கூத்தன துருவே
யேத்த ருந்தல மெழிற்புலி யூரே."
இதில் அடிகளையெவ்வாறு மாற்றினும் பொருளோ டோசை சிதையாமை காண்க.

"மூன்றடி முதலா முடிந்தெலா வடியு
மிடைக டைமுத லாயெடுத் தாலு
மோசையும் பொருளு முலவாது வருவன
வடிமறி மண்டில அகவலா கும்மே." (முத். வீரி.)

## ஆசிரியப்பாவினம்.—DIFFERENT KINDS OF VERSES ALLIED TO AGAVALPA.

**481. 1. ஆசிரியத்தாழிசை.** — இது மூன்றடியாகவே வரும். மூன்றடியிலும் சீர்கள் ஒரே கணக்காயிருக்கும். ஒரே பொருள்மேல் மூன்று பாட்டு இத்தன்மையான யாப்போடு அடுக்கிவருவது சிறப்பு; தனித்து வருவது அத்தனை சிறப்பின்று.

உதாரணம்.

"வானுற நிமிர்ந்தனை வையக மளந்தனை
பான்மதி விடுத்தனை பல்லுயி ரோம்பினை
நீனிற வண்ணநின் னிறைகழ றொழுதனம்."

இது தனியாய் வந்த ஆசிரியத்தாழிசை.

1. "கன்று குணிலாக் கனியுகுத்த மாயவன்
இன்றுநம் மானுள் வருமே லவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழி."

2. "பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் மானுள் வருமே லவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழி."

3. "கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்
எல்லிநம் மானுள் வருமே லவன்வாயின்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழி."

இவை ஒருபொருள்மேல் மூன்றடுக்கி வந்த ஆசிரியத்தாழிசை.

482. 2. **ஆசிரியந்துறை.**—இது நான்கடியாகவே வரும். ஈற்றயலடி அல்லது எருத்தடி சீர்குறைந்தும், இடையிடை அடிகள் சீர்குறைந்தும் வரலாம்.

குறைந்த சீருள்ள ஈற்றயலடியும், இடையிடையடியும் மடக்காகவும் இருக்கும்.

மடக்காவது ஓரடியில் வந்த வார்த்தைகள் மற்ற அடியிலும் திரும்பச் சொல்லப்படுவது.

உதாரணம்.

"கரைபொரு கான்யாற்றங் கல்லதரெம் முள்ளி வருவீராயின்
அரையிருள் யாமத் தடுபுலியேறு நும்மஞ்சி யகன்றுபோக
நரையுரு மேறுநுங் கைவேலஞ்சு நும்மை
வரையர மங்கையர் வெளவுத லஞ்சுதும் வாரலையோ."

இது எருத்தடி குறைந்து வந்த ஆசிரியத்துறை.

"இரங்கு குயின்முழவா யின்னிசையாழ் தேனா
வரங்க மணிபொழிலா வாடும்போலு மிளவேனில்
அரங்க மணிபொழிலா வாடுமாயின்
மரங்கொன் மணந்தகன்றார் நெஞ்சமென் செய்த திளவேனில்."

இது இடையிடை குறைந் திடைமடக்காய் வந்த ஆசிரியத்

**483.** 3. **ஆசிரியவிருத்தம்.**—இது நான்கு கழிநெடிலடியாகவே வரும். ஒவ்வொரு அடியிலும் சீர்கள் ஒரே தொகையாக இருக்கும்.

உ–ம். "பையர வணிந்த வேணிப் பகவனே அனைய தங்கள்
ஐயனும் வியாழப் புத்தே ளாயிடை யடைந்தா னுகச்
செய்யதாள் வழிபா டின்றித் தேவர்கோ னிருந்தா னந்தோ
தையலார் மயலிற் பட்டார் தமக்கொரு மதிதா னுண்டோ."

இது அறுசீர்க்கழி நெடிலடியான்வந்த ஆசிரிய விருத்தம்.

"மூன்றடி யொத்து முடிவன வாய்விடின்
ஆன்ற அகவற் றுழிசை யாதலும்
எருத்தடி குன்றியும் இடைஇடை குன்றியும்
இவற்றோ டிடைமடக் காகியும் நான்கடி
யவற்று னடப்பி னதன்றுறை யாதலும்
கழிநெடி லடிநான் கொத்திறி னகவல்
விருத்த மாதலும் விதியெனப் படுமே." (இல. விள.)

## III. கலிப்பா.—KALIPPA.

### GENERAL CHARACTERISTICS.—**பொது விதி.**

**484.** **கலிப்பா.**—இது தேமா, புளிமா, கருவிளங்கனி, கூவிளங்கனி என்னும் சீர்களொழிந்த சீர்களெல்லாவற்றானும் அளவடியானும் வரும். அடிக்கணக்குக்கு வரையறை இல்லை.

வெண்டளையும் கலித்தளையும் வரும்; பிறதளைகள் வருவதும் உண்டு.

ஓசை **துள்ளல் ஓசை**யெனப்படும்; இது ஏந்திசைத் துள்ளலும், அகவற் றுள்ளலும், பிரிந்திசைத் துள்ளலுமென மூவகையாம்.

அவற்றுள், முழுதும் கலித்தளையாயின் **ஏந்திசைத் துள்ளலும்,** வெண்டளையும் கலித்தளையும் விரவி வரின் **அகவற் றுள்ளலும்,** கலித்தளையும் பிறதளையும் விரவி வரின் **பிரிந்திசைத் துள்ளலும்** ஆம்.

உ–ம். (1) "திருவனைய கருநெடுங்கட் சிலைநுதலார் மயல்வலையி
லிருநிலக்கண் விழுந்துழலு மெளியவனை யெடுத்தன்பிற்
பொருவரிய நினதடியார் புகழுரைத்துத் தினமகக்கண்
பரவவருள் புரிவாய்நற் பசுபதியெம் பெருமானே."

இதில் ஏந்திசைத் துள்ளலோசை வந்தது.

(2) "வாளார்ந்த மழைத்தடங்கண் வனமுலைமேல் வம்பனுங்கக்
கோளார்ந்த பூணுகங் குழைபுரளக் கோட்டெருத்தின்,ஓ."
இதில் அகவற் றுள்ளலோசை வந்தது.

(3) "நேரலார் போரேறே நிடதத்தார் கோமானே
யார வணைமார்பா வடியே னுயிர்க்குயிரே
காரிருளில் யான்புலம்பக் கானகத்தில் விட்டகன்று
சாரலையா லின்னு மிதுவேநின் தண்ணளியே."
இதில் பிரிந்திசைத் துள்ளலோசை வந்தது.

"துள்ள லிசையன கலியே மற்றவை
வெள்ளையு மகவலு மாய்விளைந் திறுமே." (யாப்பரு.)

"ஏந்திசைத் துள்ளல் கலித்தளை யியையின்
வெண்டளை தன்றளை யென்றிரண் டியையின்
ஒன்றிய அகவற் றுள்ளலென் றோதுப
தன்றளை பிறதளை யென்றிவை யனைத்தும்
பொருந்தி வரினே பிரிந்திசைத் துள்ளல்."(இல. விள.)

485. கலிப்பாவின் உறுப்புகள். — Several parts of Kalippa.

கலிப்பாவில் ஆறு உறுப்புகளுண்டு. அவை தரவு, தாழிசை, தனிச்சொல், அராகம், அம்போதரங்கம், சுரிதகம் எனப்படும்.

**தரவு.**—கலிப்பாவின் முதலில் வருகிறது தரவு அல்லது எருத்தம் எனப்படும். இது கலித்தளை வெண்டளை விரவிவந்த அளவடி மூன்றிற்குறையாது பலவடியான் நடக்கும்.

**தாழிசை.**—இது இரண்டடியிற் குறையாது நான்கடியின் மிகாது தரவுக்கடுத்துக் கலிப்பாவில் வருவது; ஒரு பொருளைக்குறித்து இரண்டாயினும் மூன்றாயினும் அடுக்கிவரும்; ஈற்றடிதவிர மற்றவை நாற்சீரடியாகவிருக்கும்; இடைநிலைப்பாட்டு என்றும் பெயர்பெறும்.

**தனிச்சொல்.**—இது அடியோடு கூடிவராது தனித்து நிற்கும் சீர்; தரவு, தாழிசை, அம்போதரங்கம், அராகம் இவற்றின் பின்தான் வரும்; கூன், தனிநிலை, விட்டிசை என்றும் பெயர்பெறும்.

**அராகம்.**—இது அளவடிமுதலாக எல்லாவடியானும் வந்து, நான்கடியிற் குறையாது எட்டடியின்மிகாது வரப் பெறும்; வண்ணகம், முடுகியல் எனவும் பெயர்பெறும்.

**அம்போதரங்கம்** (நீரின் அலை.) அல்லது **அசையடி.** — இது கடல் அலைகள்போல அடிகள் அளவடியாய்ப் பெருத்தும், சிந்தடியாய்ச் சிறுத்தும், குறளடியாயதனினும் சிறுத்தும் தாழிசைக்குப் பின் வருவது; நாற்சீராலாகிய ஈரடியால் இரண்டும், ஓரடியால் நான்கும், முச்சீரடியால் எட்டும், இருசீரடியால் பதினாறுமாக வருவது சாதாரணம். சிறுபான்மை முச்சீரடி நான்கும், இருசீரடி எட்டுமாகச் சுருங்கி வருவதுமுண்டு. இந்நான்குறுப்புகளும் முறையே பேரெண், அளவெண், இடையெண், சிற்றெண்ணெனப் பெயர் பெறும்.

**சுரிதகம்.**—இது கடைசியில் தனிச்சொற்குப்பின் மூன்றடியிற் குறையாது பலவடியாலாகிய ஆசிரியப்பா அல்லது வெண்பாவாகும்; இதனாலே கலிப்பாவெல்லாம் முடிவு பெறும்.

**486. கலிப்பாவின் வகை.**—Different kinds of Kalipa. கலிப்பா, நேரிசையொத்தாழிசைக் கலிப்பா, அம்போதரங்கவொத்தாழிசைக் கலிப்பா, வண்ணகவொத்தாழிசைக் கலிப்பா, வெண்கலிப்பா, கலிவெண்பா, கொச்சகக் கலிப்பா என ஆறுவகையாம்.

**487. நேரிசையொத்தாழிசைக்கலிப்பா**வாவது.—ஒரு தரவு, மூன்று தாழிசை, தனிச்சொல், சுரிதகமாகிய நான்குறுப்புகளும் முறையே வரப் பெறுவது. இதில் தரவு மூன்றடிக்குக் குறையாதிருக்கும்.

**488. அம்போதரங்கவொத்தாழிசைக் கலிப்பா**வாவது.—ஒரு தரவு, மூன்று தாழிசை, ஒரு அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகமாகிய ஐந்துறுப்புகளும் முறையே அடுக்கிவரப் பெறுவது. இதில் தரவு ஆறடியாகவேயிருக்கும்.

**489. வண்ணகவொத்தாழிசைக் கலிப்பா**வாவது.—முறையே ஒரு தரவு, மூன்று தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்ற ஆறுருப்புகளையும் பெற்று வருவது. இதிலும் தரவு ஆறடியாகவே வரும்.

**490. வெண்கலிப்பா**வாவது.—கலித்தளையையும் பிறதளையையும் பெற்று ஈற்றடி சிந்தடியாயும், ஏனையவடி அளவடியாயும் அடிவரையறையின்றி வருவது.

**491. கலிவெண்பா**வாவது.—வெண்டளையைப் பெற்று மற்றைய வடிகள் நாற்சீராக ஈற்றடி முச்சீராய்ப் பன்னிரண்டடியின் மிகுந்து வருவது.

**492.** கொச்சகக் கலிப்பாவானது ஐந்துவகையாம். அவையாவன:

*a*. **தாவு கோச்சகக் கலிப்பா.**—இதில் ஒரு தரவு, மூன்றடிக்குக் குறையாமல் வரும்; தாழிசை, அராகம், அம்போதரங்கம் ஆகியவை ஒருபோதும் வாரா; சுரிதகமும் தனிச்சொல்லுங்கூடச் சாதரணமாய் வாரா; அருமையாய் ஒரோ விடத்து வருதலுமுண்டு.

*b*. **தாவிணைக் கோச்சகக் கலிப்பா.**—இதில் இரண்டு தரவு வந்து மற்ற விஷயங்களில் தரவு கொச்சகக் கலிப்பாப்போல் முடிவு பெறும்.

*c*. **சிலறாழிசைக் கோச்சகக் கலிப்பா.**—இது சில தாழிசைகளோடு வரும்; பிற உறுப்புகளையும் சிறுபான்மை தழுவும்.

*d*. **பலறாழிசைக் கோச்சகக் கலிப்பா.**—இது பல தாழிசைகளைப் பெற்று, சிறுபான்மை பிற உறுப்புகளையும் தழுவும்.

*e*. **மயங்கிசைக் கோச்சகக் கலிப்பா.**—இது மேற்கண்ட கலிப்பாக்களின் விதிகள் மயங்கப் பிறதளைதட்டி வரும். இது சிறந்ததன்று.

"தரவொன் றாகித் தாழிசை மூன்றாய்த்
தனிச்சொ லிடைநடந்து சுரிதகந் தழுவி
நிகழ்வது நேரிசை யொத்தா ழிசையும்
ஆங்கத னிடையே அளவடி சிந்தடி
பாங்கமை குறளடி படுசீர்த் திரைபோல்
ஓய்ந்தோய்ந் துற்றிடு மாயி னன்ன
தம்போ தரங்க வொத்தா ழிசையும்
அசையடி மிசைத்தா யாராக மவற்றொடும்
இசைவுறின் வண்ணக ஒத்தா ழிசையும்
வேற்றுத்தளை தட்டும் வெண்பா வியைந்தும்
ஈற்றடி முச்சீ ராயிறின் முறையே
வெண்கலிப் பாவும் கலிவெண் பாவும்
தரவே தரவிணை தாழிசை சிலபல
மாபா னியன்றவும் மயங்கிவந் தனவும்
அவ்வப் பெயரா னமைந்த கொச்சகமும்
ஆகு மென்ப அறிந்திசி னோரே:" (இல. விள.)

உதாரணங்கள்.

வெள்ளைச் சுரிதகத்தால் முடிந்த
நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா.

"முத்தொடு மணிதயங்கு முக்குடைக்கீழ் முனைவனே
எத்திசையும் பல்லுயிர்க ளின்புற வினிதிருந்து

பத்துறு திசையனைத்தும் பகைபசி பிணிநீங்க
உத்தமர்க டொழுதேத்த ஒளிர்வனைபோற் செலவினாய்."
இது தரவு.

(a) "எள்ளனைத்தும் இடறின்றி எழில்மாண்ட பொன்னெயில்
உள்ளிருந்த உன்னையே யுறுதுணையென் றடைந்தோரை
வெள்ளில்சேர் வியன்காட்டு ளுறைகென்றல் விழுமிதோ."

(b) "குணங்களின் வரம்பிகந்து கூடிய பன்னிரண்டு
கணங்களும்வந் தடியேத்தக் காதலித்துன் னடைந்தோரைப்
பிணம்பிறங்கு பெருங்காட்டு ளுறைகென்றல் பெருமை [யோ."

(c) "விடத்தகைய வினைநீக்கி வெள்வளைக்கைச் செந்துவர்வாய்
மடத்தகைய மயிலனையார் வணங்கிநின் னடைந்தோரைத்
தடத்தகைய காடுறைக வென்பதுநின் றகுதியோ"
இவை மூன்றும் தாழிசை.

"எனவாங்கு." (இது தனிச்சொல்.)

"அனைத்துணையை யாயினு மாகமற் றுன்கட்
டினைத்துணையும் தீயவை யின்மையிற் சேர்ந்து
வினைத்துணையை வீட்டுக வென்று."

இது சுரிதகம்.

ஆசிரியச் சுரிதகத்தால் முடிந்த நேரிசையொத்தாழிசைக் கலிப்பா.

"வாணெடுங்கண் பனிகூர வண்ணம்வே றுய்த்திரிந்து
தோணெடுந் தகைதுறந்து துன்பங்கூர் பசப்பினவாய்ப்
பூணெடுங்கும் முலைகண்டும் பொருட்பிரிதல் வலிப்பவோ."
இது தரவு.

(a) "சூருடைய கடுங்கடங்கள் சொலற்கரிய வென்பவாற்
பீருடைய நலந்தொலையப் பிரிவாரோ பெரியவரே."

(b) "சேணுடைய கடுங்கடங்கள் சொலற்கரிய வென்பவால்
நாணுடைய நலந்தொலைய நடப்பாரோ நலமிலரே."

(c) "சிலம்படைந்த வெங்கானஞ் சீரிலவே யென்பவாற்
புலம்படைந்த நலந்தொலையப் போவாரோ பொருளிலரே."
இவை மூன்றும் தாழிசை.
"எனவாங்கு." (இது தனிச்சொல்.)

"அருளொனு மிலராய்ப் பொருள்வயிற் பிரிவோர்
பன்னெடுங் காலமும் வாழியர்
பொன்னெடுந் தேரொடுந் தானையிற் பொலிந்தே." (இது சுரிதகம்.)

எட்டும் பதினாறுமாய் வருவன
நான்கு மெட்டுமாய்ச் சுருங்கிவந்து ஆசிரியச் சுரிதகத்தால் முடிந்த
அம்போதரங்கவொத்தாழிசைக் கலிப்பா.

"கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் றொழுதேத்தக்
கடல்கெழு கனைசுடரிற் கலந்தொளிரும் வாலுளைய
வழலவிர் சுழல்செங்க ணரிமாவாய் மலைந்தானைத்
தாரொடு முடிபிதிரத் தமனியப் பொடிபொங்க
வார்புன விழிகுருதி யகலிட முடனனைப்பக்
கூருகிரால் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்." (இது தரவு.)

(a) "முரசதிர் வியன்மதுரை முழுவதூஉந் தலைபனிப்பப்
புரைதொடித் திரடிண்டோட் போர்மலைந்த மறமல்லர்
அடியொடு முடியிறுப்புண் டயர்ந்தவர் நிலஞ்சேரப்
பொடியெழ வெங்களத்துப் புடைத்தது நின்புகழாமோ."

(b) "கலியொலி வியனுலகங் கலந்துட னனிநடுங்க
வலியிய லவிராழி மாறெதிர்ந்த மருட்சோர்வு
மாணாதா ருடம்பொடு மறம்பிதிர வெதிர்கலங்கிச்
சேணுய ரிருவிசும்பிற் செகுத்ததுநின் சினமாமோ."

(c) "படுமணி யினநிரைகள் பரந்துட னிரிந்தோடக்
கடுமுர ணெதிர்மலைந்த காரொலி யெழிலேறு
வெரிநொடு மருப்பொசிய வீழ்ந்துநிறம் வேறாக
வெருமலி பெருந்தொழுவி னிறுத்ததுநின் னிகலாமோ."
இவை மூன்றும் தாழிசை.

1. "இலங்கொளி மரகத வெழின்மிகு வியன்கடல்
வலம்புரித் தடக்கை மாஅல் நின்னிறம்."

2. "விரியிணர்க் கோங்கமும் வெந்தெரி பசும்பொனும்
பொருகளி றட்டோய் புரையு நின்னுடை."
இவை நாற்சீர் ஈரடி இரண்டு அம்போதரங்கம் அல்லது பேரெண்.

1. "கண்கவர் கதிர்முடி கனலுஞ் சென்னியை
2. தண்சுட ருறுபகை தவிர்த்த வாழியை
3. ஒலியிய லுவண மோங்கிய கொடியினை
4. வலிமிகு சகட மாற்றிய அடியினை."

இவை நாற்சீர் ஓரடி நான்கு அம்போதரங்கம் அல்லது வெண்.

"போரவுணர்க் கடைந்தோய் நீஇ
புணர்மருதம் பிளந்தோய் நீஇ
நீரகல மளந்தோய் நீஇ
நிழறிகழும் படையோய் நீஇ."

இவை முச்சீர் ஓரடி நான்கம்போதரங்கம் அல்லது இடையெண்.

"ஊழி நீஇ, உலகு நீஇ, உருவு நீஇ, அருவு நீஇ,
யாழி நீஇ, யருளு நீஇ, அறமு நீஇ, மறமுநீஇ."

இவை இருசீர் ஓரடி எட்டு அம்போதரங்கம் அல்லது சிற்றெண்.

"எனவாங்கு." (இது தனிச்சொல்.)

"அடுதிற லொருவநிற் பரவுது மெங்கோன்
றொடுகழற் கொடும்பூட் பகட்டெழின் மார்பிற்
கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப்
புயலுறழ் தடக்கைச் செவ்வே லச்சுதன்
றொன்றுபுரிகட லுலக முழுதுட
னொன்றுபுரி திகிரி யுருட்டுவோ னெனவே." (இது சுரிதகம்.)

ஆசிரியச் சுரிதகத்தால் முடிந்த
வண்ணகவொத்தாழிசைக் கலிப்பா.

"விளங்குமணிப் பசும்பொன்னின் விசித்தமைத்துக் கதிர்கான்று
துளங்குமணிக் கனைகழற்காற் றுறுமலர் நறும்பைந்தார்ப்
பரூஉத்தடக்கை மதயானைப் பகட்டெழி லெரிகுஞ்சிக்
குரூஉக்கொண்ட மணிப்பூணோய் குறையிரந்து முன்னாட்கண்
மாயாத வனப்பினையாய் மகிழ்வார்க்கு மல்லார்க்குந்
தாயாகித் தலையளிக்குந் தண்டுறை யூரகேள்." (இது தரவு.)

"காட்சியாற் கலப்பெய்தி எத்திறத்துங் கதிர்ப்பாகி
மாட்சியாற் பிரியாத மரபொத்தாய் கரவினாற்
பிணிநலம் பிரிவெய்திப் பெருந்தடந்தோள் வனப்பழிய
வணிநலந் தனியேவந் தருளுவது மருளாமோ."

"அன்பினா லமிர்தளைஇ யறிவினாற் பிறிதின்றிப்
பொன்புனை பூணாகம் பசப்பெய்தப் பொழிலிடத்துப்
பெருவரைத்தோ ளருளுதற் கிருளிடைத் தமியையாய்க்
கதிர்வளைத்தோள் கதிர்ப்பிக்குங் காதலுங் காதலோ."

"பாங்கனையே வாயிலாப் பல்காலும் வந்தொழுகும்
தேங்காத கரவினையுந் தெளியாத இருளிடைக்கட்
குடவரைவேய்த் தோளிணைகள் குளிர்ப்பிப்பான் றமியையாய்த்
தடமலர்த்தா ரருளுநின் றகுதியுந் தகுதியோ."

இவை மூன்றும் தாழிசை.

"தாதுறு முறிசெறி தடமல ரிடையிடை தழலென விரிவன பொழில்"
"போதுறு நறுவிரை புதுமலர் தெரிதரு கருநெய்தல் விரிவன கழி"
"தீதுறு திறமறு கெனநனி முனிவன துணையொடு பிணைவன துறை"
"மூதுறு தொழிலொடு குழிகெழு மொலிகவி கடிதொடர் புடையது கடல்."

இவை நான்கும் அராகம்.

"கொடுந்திற லுடையன சுறவேறு கோட்பதனு
விடுங்கழி யிராவருதல் வேண்டாமென் றுரைத்திலமோ."

"கருநிறத் துறுதொழிற் கராய்பெரி துடைமையால்
இருணிறத் தொருகானி விராவார லென்றிலமோ."

இவை நாற்சீர் இரண்டடி இரண்டு அம்போதரங்கம் அல்லது பேரெண்.

"நாணொடு கழிந்தன்றாற் பெண்ணரசி நலத்தகையே
துஞ்சலு மொழிந்தன்றாற் றொடித்தோளி தடங்கண்ணே
யரற்றொடு கழிந்தன்று லாரிருளு மாயிழைக்கே
நயப்பொடு கழிந்தன்று னனவினு நன்னுதற்கே."

இவை நாற்சீர் ஓரடி நான்கு அம்போதரங்கம் அல்லது அளவெண்.

"அத்திறத்தா லசைந்தன தோ
ளலர்தற்கு மெலிந்தன கண்
பொய்த்துரையாற் புலர்ந்தது முகம்
பொன்னிறத்தாற் போர்த்தன முலை
அழலினு லசைந்தது நகை
அணியினு லொசிந்த திடை
குழலினு னிமிர்ந்தது முடி
குறையினுற் கோடிற்று நிறை."

இவை மூச்சீர் ஓரடி எட்டு அம்போதரங்கம் அல்லது இடையெண்.

"உட்கொண்ட தகைத்தொருபால்
உலகறிந்த வலத்தொருபால்

கட்கொண்ட றுளித்தொருபால்
கழிவெய்தும் படிற்றொருபால்
பரிவுறாஉந் தகைத்தொருபால்
படர்வுறாஉம் பசப்பொருபால்
இரவுறாஉந் துயரொருபால்
இளிவந்த வெளிற்றொருபால்
மெலிவுவந் தலைத்தொருபால்
விளர்ப்புவந் தடர்த்தொருபால்
பொலிவுசென் றகன்றொருபால்
பொறைவந்து கூர்ந்தொருபால்
காதலிற் கதிர்ப்பொருபால்
கட்படாத் துயரொருபால்
எதில்சென் றணைந்தொருபால்
இயனணிற் செறிவொருபால்."

இவை இருசீர் ஓரடிப் பதினாறு அம்போதரங்கம் அல்லது சிற்றெண்.

"எனவாங்கு." (இது தனிச்சொல்.)

"இன்ன திவ்வழக்க மித்திற மிவணலம்
என்னவு முன்னாட் பின்னா யாகிக்
கலந்தவ ணிலைமை யாயினு நலந்தகக்
கிளையொடு கெழீஇய தளையவிழ் கோதையைக்
கற்பொடு காணிய யாமே
பொற்பொடு பொலிகநும் புணர்ச்சி தானே." (இது சுரிதகம்.)

வெண்கலிப்பா.

"ஏர்மலர் நறுங்கோதை யெருத்தலைப்ப விறைஞ்சித்தன்
வார்மலர்த் தடங்கண்ணார் வலைப்பட்டு வருந்தியவென்
றார்வளை யகன்மார்பன் றனிமையை யறியுங்கொல்
சீர்மலி கொடியிடை சிறந்து."

இது வேற்றுத்தளை தட்டுவந்தது.

கலிவெண்பா.

(a) "வாளார்ந்த மழைத்தடங்கண் வனமுலைமேல் வம்பனுங்கக்
கோளார்ந்த பூணகங் குழைபுரளக் கோட்டெருத்தின்
மாலைதாழ் கூந்தலார் வரன்முறையால் வந்தேத்தச்
சோலைதாழ் பிண்டிக்கீழ்ச் சூழ்ந்தவர்தஞ் சொன்முறையால்

மனையறமுந் துறவறமும் மண்ணவர்க்கும் விண்ணவர்க்கும்
வினையறுக்கும் வகைதெரிந்து வீடொடுகட் டிவையுரைத்த
தொன்மைசான் மிகுகுணத்துத் துறவரைசைத் தொழுதேத்த
நன்மைசால் வீடெய்து மாறு."

இது கலித்தளை தட்டு வந்தது.

(b) "சுடர்த்தொடீஇ கேளாய் தெருவினு மாடு
மணற்சிற்றில் காலிற் சிதையா வடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யுஞ் சிறுபட்டி மேலோர்நா
ளன்னையும் யானு மிருந்தேமா வில்லிலே
யுண்ணுநீர் வேட்டே னெனவந்தாற் கன்னை
யடர்பொற் சிரகத்தால் வாக்கிச் சுடரிழா
யுண்ணுநீர் ஊட்டிவா வென்றா ளெனயானும்
தன்னை யறியாது சென்றேன்மற் றென்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்
டன்னா யிவனொருவன் செய்ததுகா ணென்றேனா
வன்னை யலறிப் படர்தரத் தன்னையா
னுண்ணுநீர் விக்கினா னென்றேனா வன்னையுந்
தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்
கடைக்கணாற் கொல்வான்போ னோக்கி நகைக்கூட்டஞ்
செய்தானக் கள்வன் மகன்."

இது வெண்டளை தட்டு வந்தது.

தரவு கொச்சகக்கலிப்பா.

"செல்வப்போர்க் கதக்கண்ணன், ஷ."

இது தனிச்சொல், சுரிதகமின்றிக் கலியடியாலிற்று வந்தது.
[உரிச்சீர் உதாரணம் காண்க.]

இடையிடை தனிச்சொற்பெற்று
ஆசிரியச் சுரிதகத்தால் முடிந்த தரவிணைக் கொச்சகக் கலிப்பா.

"வடிவுடை நெடுமுடி வானவர்க்கும் வெலற்கரிய
கடிபடு நறும்பைந்தார்க் காவலர்க்குங் காவலனாங்
கொடிபடு வரைமாடக் கூடலார் கோமானே." (இது தரவு.)
"எனவாங்கு." (இது தனிச்சொல்.)

"துணைவளைத்தோ ளிவண்மெலியத் தொன்னலந் தொலைப்புண்
கிணைமலர்த்தா ரருளுமே லிதுவிதற்கோர் மாறென்று [டாங்
துணைமலர்த் தடங்கண்ணார் துணையாகக் கருதாரே." (இது தரவு.)

"அதனால்." (இது தனிச்சொல்.)

"செவ்வாய்ப் பேதை யிவடிறத்
தெவ்வா றுங்கொலிஃ தெண்ணிய வாறே." (இது சுரிதகம்.)

இடையிடை தனிச்சொற் பெற்று
ஆசிரியச் சுரிதகத்தான்முடிந்த சிஃறாழிசைக் கொச்சகக்கலிப்பா.

"பரூஉத்தடக்கை மதயானைப் பணையெருத்தின் மிசைதோன்றிக்
குரூஉக்கொண்ட வெண்குடைக்கீழ்க் குடைமன்னர் புடைசூழப்
படைப்பரிமான் றேரினொடும் பரந்துலவு மறுகினிடைக்
கொடித்தானை யிடைப்பொலிந்தான் கூடலார் கோமானே." (தரவு.)

"ஆங்கொருசார்." (இது தனிச்சொல்.)

1. "அக்கால மணிநிரைகாத் தருவரையாற் பனிதவிர்த்து
வக்கிரனை வடிவழித்த மாயவனைப் பாவித்தார்
சக்கரங்கைக் காணாத காரணத்தாற் சமழ்த்தனரே."

"ஆங்கொருசார்." (இது தனிச்சொல்.)

2. "உச்சியார்க் கிறைவனா யுலகெலாங் காத்தளிக்கும்
பச்சையார் மணிப்பைம்பூட் புரந்தரனைப் பாவித்தார்
வச்சிரங்கைக் காணாத காரணத்தான் மயங்கினரே."

"ஆங்கொருசார்." (இது தனிச்சொல்.)

3. "மால்கொண்ட பகைதணிப்பான் மாத்தடிந்து மயங்காச்செங்
கோல்கொண்ட சேவலங் கொடியவனைப் பாவித்தார்
வேல்கண்ட தின்மையால் விம்மிதராய் நின்றனரே."

இவை மூன்றும் தாழிசை.

"அதாஅன்று." (இது தனிச்சொல்.)

"கொடித்தே ரண்ணல் கொற்கைக் கோமா
னின்புக ழொருவன் செம்பூட் சேஎ
யென்றுநனி யறிந்தனர் பலரே தானும்
ஐவருள் ஒருவனென் றறியலாகா

மைவரை யானை மடங்கா வென்றி
மன்னவன் வாழியென் றேத்தத்
தென்னவன் வாழி திருவொடும் பொலிந்தே." (இது சுரிதகம்.)

இடையே தனிச்சொற்பெற்று
ஆசிரியச் சுரிதகத்தான் முடிந்த பஃறாழிசைக் கொச்சகக்கலிப்பா.

"தண்மதியோர் முகத்தானைத் தனியிடத்து நனிகண்டாங்
குண்மதியு முடனிறையு முடன்றளர முன்னாட்கட்
கண்மதியோர்ப் பிவையின்றிக் காரிகையி னிறைகவர்ந்து
பெண்மதியின் மகிழ்ந்தநின் பேரருளும் பிறிதாமோ." (இது தரவு.)

1. "இளநல மிவள்வாட விரும்பொருட்குப் பிரிவாயேற்
றளநல முகைவெண்பற் றாழ்குழ றளர்வாளோ."

2. "தகைநல மிவள்வாடத் தரும்பொருட்குப் பிரிவாயேல்
வகைநல மிவள்வாடி வருந்தியில் விருப்பாளோ."

3. "அணிநல மிவள்வாட வரும்பொருட்குப் பிரிவாயேல்
மணிநல மிவள்மேனி மாசொடு மடிவாளோ."

4. "நாம்பிரியே மினியென்று நன்னுதலைப் பிரிவாயே
லோம்பிரியே மெனவுரைத்த வுயர்மொழியும் பழுதாமோ."

5. "குன்றளித்த திரடோளாய் கொய்புனத்துக் கூடியஞான்
றன்றளித்த வருண்மொழியா லருளுவது மருளாமோ."

6. "சில்பகலு மூடியக்காற் சிலம்பொலிச்சீ றடிப்பரவிப்
பல்பகலுந் தலையளித்த பனிமொழியும் பழுதாமோ."
இவை ஆறும் தாழிசை.

"எனவாங்கு." (இது தனிச்சொல்.)

"அரும்பெற லிவளினுந் தரும்பொரு ளதனினும்
பெரும்பெற லரியன வெறுக்கையு மற்றே
அதனால் விழுமிய தறிமதி வாழி
கெழுமிய காதலிற் றரும்பொருள் சிறிதே." (இது சுரிதகம்.)

தரவு முதலிய ஆறுறுப்பும் மிக்குங் குறைந்தும்
பிறழ்ந்தும் வந்து மயங்கி ஆசிரியச் சுரிதகத்தால் முடிந்த
மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.

1. "மணிகிளர் நெடுமுடி மாயவனுந் தம்முனும்போன்
றணிகிளர் நெடுங்கடலுங் கானலுந் தோன்றுமால்
நுரைநிவந் தவையன்ன நொய்ப்பறைய சிறையன்னம்
இரையுயந் திறைகூரு மேமஞ்சா றுறைவகேள்."

2. "மலையென மழையென மஞ்செனத் திரைபொங்கிக்
கனலெனக் காற்றெனக் கடிதுவந் திசைப்பினும்
விழுமியோர் வெகுளிபோல் வேலாழி யிறக்கலா
தெழுமுந்நீர் பெயர்ந்தோடு மேமஞ்சா றுறைவகேள்."

இவை இரண்டும் தரவு.

1. "கொடிபுரையு நுழைநுசுப்பிற் குழைக்கமர்ந்த திருமுகத்தோ
டொடிநெகிழ்ந்த தோள்கண்டுந் துறவலனே என்றியால்."

2. "கண்கவரு மணிப்பைம்பூட் கயில்கவைய சிறுபுறத்தோ
டெண்பனிநீ ருகக்கண்டுந் திரியலனே யென்றியால்."

3. "நீர்பூத்த நிரையிதழ்க்க ணின்றொசிந்த புருவத்தோள்
பீர்பூத்த நுதல்கண்டும் பிரியலனே யென்றியால்"

4. "கனைகுரல்யாற் றிருகரைபோற் கைநில்லா துண்ணெகிழ்ந்து
நினையுமென் னிலைகண்டு நீங்கலனே யென்றியால்."

5. "வீழ்சுடரின் நெய்யேபோல் விழுமநோய் பொறுக்கல்லாத்
தாழுமென் நிலைகண்டுந் தாங்கலனே யென்றியால்."

6. "கலங்கவிழ்த்த நாய்கன்போற் களைதுணை பிறிதின்றிப்
புலம்புமென் னிலைகண்டும் போகலனே யென்றியால்."

இவை ஆறும் தாழிசை.

"அதனால்" (இது தனிச்சொல்.)

1 "அடும்பம லிறும்பி னெடும்பணை மிசைதொறுங்
கொடும்புற மடலிடை யொடுங்கின குருகு."

2. "செறிதரு செருவிடை யெறிதொழி லிளையவர்
நெறிதரு புரவியின் மறிதருந் திமில்."

3. "அரசுடை நிரைபடை விரைசெறி முரசென
நுரைதரு திரையொடு கரைபொருங் கடல்."

4. "அலங்கொளிர் அவிர்சுடர் இலங்கொளி மறைதொறும்
கலந்தெறி காலொடு புலம்பின பொழில்."

இவை நான்கும் அராகம்.

1. "விடாஅது கழலுமென் வெள்வளையுந் தவிர்ப்பாய்மன்
கெடாஅது பெருகுமென் கேண்மையு நிறுப்பாயோ."

2. "ஒல்லாது கழலுமென் னொளிவளையுஞ் செறிப்பாய்மன்
னில்லாது பெருகுமென் னெஞ்சமு நிறுப்பாயோ."

3. "தாங்காது கழலுமென் றகைவளையுந் தவிர்ப்பாய்மன்
னீங்காது பெருகுமென் னெஞ்சமு நிறுப்பாயோ."

4. "மறவாத அன்பினேன் மனநிற்கு மாறுரையாய்
துறவாத தமருடையேன் றுயர்தீரு மாறுரையாய்."

5. "காதலார் மார்பின்றிக் காமக்கு மருந்துரையாய்
ஏதிலார் தலைசாய யானுய்யு மாறுரையாய்."

6. "இணைபிரிந்தார் மார்பின்றி யின்பக்கு மருந்துரையாய்
துணைபிரிந்த தமருடையேன் றுயர்தீரு மாறுரையாய்."

இவை ஆறும் தாழிசை.

"எனவாங்கு." (இது தனிச்சொல்.)

"பகைபோன் றதுதுறை—பரிவா யினகுறி
நகையிகழ்ந் ததுமுக—நனிநா ணிற்றுளந்
தகையிழந் ததுதோ—டலைசிறந் ததுதுயர்
புகைபறந் ததுமெய்—பொறையாயிற் றென்னுயிர்."

இவை இருசீர் ஓரடி எட்டம்போதரங்கம்.

"அதனால்." (இது தனிச்சொல்.)

"இனையது நினையா லனையது பொழுதா
னினையல் வாழி தோழி தொலையாப்
பனியொடு கழிக வுண்கண்
ணென்னொடு கழிகவித் துன்னிய நோயே." (இது சுரிதகம்.)

## கலிப்பாவினம்.—VERSES ALLIED TO KALIPA.

**493.** கலிப்பாவினம், கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம் என மூவகைப்படும்.

அவற்றுள், 1. **கலித்தாழிசை.** — இது இரண்டுமுதல் பல அடிகளால்வரும்; ஈற்றடிதவிர மற்றவையெல்லாம் தம்முள் அளவொத்தும் ஒவ்வாது மிருக்கும்; ஈற்றடியோ மற்றைய வடியிலும் மிகுத்த சீருடையதாகும்; ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வந்து சிறப்பாகியும், தனித்துவந்து அத்துணைச் சிறப்பின்றியும் நிற்கும்.

உ—ம். 1. "கொய்தினை காத்துங் குளவி யடுக்கத்தெம்
பொய்தற் சிறுகுடில் வாரனீ யைய நலம்வேண்டின்."

2. "ஆய்தினை காத்து மருவி யடுக்கத்தெம்
மாசில் சிறுகுடில் வாரனீ யைய நலம்வேண்டின்."

3. மென்றினை காத்து மிகுபூங் கமழ்கானல்
குன்றச் சிறுகுடில் வாரனீ யைய நலம்வேண்டின்."

இவை இரண்டடியாய் ஈற்றடி மிகுந்து ஒருபொருள்மேல் மூன்றடுக்கிவந்த கலித்தாழிசை.

"இருகூற் றுருவத் திருந்தண் பொழிற்றில்லை
ஒருகூற்றின் கூத்தை யுணராய் மடநெஞ்சே
ஒருகூற்றின் கூத்தை யுணரா யெனின்மற்றப்
பொருகூற்றந் தோற்றப் புலம்பேல் வாழி மடநெஞ்சே"

இது ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வராது ஈற்றடி மிகுந்து தனித்து வந்த நாலடிக் கலித்தாழிசை.

494. 2. **கலித்துறை.**—இது ஐஞ்சீரடியாலாகிய நெடிலடி நான்கால் வரும்; காப்பியக்கலித்துறை, விருத்தக்கலித்துறை, கலிநிலைத்துறை யெனவும் வழங்கும்.

உ—ம். "யானுந் தோழியு மாயமு மாடுந் துறைநண்ணித்
தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்
தேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேல்
கானும் புள்ளும் கைதையு மெல்லாங் கரியன்றே."

495. 3. **கலிவிருத்தம்.**—இது அளவடி நான்கால் வரும்.

உ-ம். "வேய்தலை நீடிய வெள்ளி விலங்கலின்
ஆய்தலி னொண்சுட ராழியி னன்றமர்
வாய்தலி னின்றனர் வந்தென மன்னன்முன்
நீதலை சென்றுனை நீள்கடை காப்போய்."

"அடியெனைத் தாகியு மொத்துவர் தளவினிற்
கடையடி மிகுவது கலித்தா ழிசையும்
நெடிலடி நான்காய் நெறிப்பட நிகழ்வது
கலித்துறை யாதலுங் கலிப்பா விருத்தம்
அளவடி நான்கின தாகலும் விதியே." (இல. விள.)

496. 4. **கட்டளைக்கலிப்பா.**—இது நாலடியான் நடக்கும். இவற்றில் ஒவ்வோரடியும் இரண்டு அளவடி சேர்ந்தது; நேரசையில் அடிதுவக்கினுல், ஒவ்வோர் அரைஅடிக்கு எழுத்துப் பதினொன்றும்,

நிரையசையில் துவக்கினுல் எழுத்துப் பன்னிரண்டுமாகும்; இப்படி எழுத்துக்களின் தொகை கணக்காக்கப்பட்டிருப்பதால் **கட்டளைக் கலிப்பா** எனப் பெயர் பெற்றது.

உ-ம். "சொல்லி னீரிவ ராசைப்பட் டாரென்று
சொன்ன சொற்பொருள் வேறுகொண் டையையோ,
புல்லு வாரெவ் விதத்தினு மென்றுளம்
பூரித் தேயிருந் தேன்மட மங்கைமீர்
செல்லு லாம்பொழிற் கூவ நகருறை
திருவிற் கோல ரினுமரு ளாமையால்
அல்ல தேது திகம்பர ரென்பொரு
ளறையின் வன்கண்ண ராவரென் மட்டுமே."

"இட்ட சீர்வகை யாறொரு மாவின்கீ
ழிமையுக் கூவிள மோரடிப் பாதியாய்
நெட்ட டிக்கெழுத் தெண்ணின தன்மைபா
னிரைபன் னீரெழுத் தாய்ப்பதி னொன்றுநேர்
நட்டி ரட்டினஃ தோரடி யாகவிந்
நடைய நான்கடி யொப்ப நடந்தபாக்
கட்ட ளைக்கலிப் பாவென வின்றுநற்
கலைவல் லோருணர்ந் தோதின ரென்பவே."

**497**. 5. **கட்டளைக் கலித்துறை**.—இது ஐஞ்சீராலாகிய நெடிலடி நான்கு கொண்டுவரும்; அடியின்முதல் நான்கு சீரும் வெண்டளைதட்டு கடைச்சீரொன்றுமாத்திரம் விளங்காயாகவாவது வேறு சீராகவாவ திருக்கும்; ஓரடியின் முதல் நேரசை வரின், ஒற்றொழித்து எழுத்துப் (16) பதினாறும், நிரையசை வரின் எழுத்துப் (17) பதினேழும் ஆகும்; கடைச்சீரில் மோனை வருதலுமன்றிச் சாதாரணமாய்க் கலித்துறை எனவும் வழங்கும்.

1 2 3 4 5 6 7 8 9 10 11 12 13 14 15 16
உ—ம். "தேனார் கமழ்தொங்கல் மீனவன் கேட்பத் தெண்ணீரருவிக்
கானார் மலயத் தருந்தவன் சொன்ன கன்னித்தமிழ்நூல்
யானு நடாத்துகின் றேனென் றெனக்கே நகைதருமா
லானு வறிவி னவர்கட்கென் னுங்கொலென் னுதரவே."

இதில் முதல் நேரசை வந்தமையால் அடி 1-க்கு ஒற்றொழித்து 16 எழுத்து வந்தமை காண்க.

1 2 3 4 5 6 7 8 9 10 11 12 13 14 15 16 17
"அடிவனா யின்றி யளவொத்து மந்தடி நீண்'டிசைப்பிற்
கடிதலில் லாக்கலித் தாழிசை யாகுங் கலித்துறையே
நெடிலடி நான்காய் நிகழ்வது நேரடி யீரிரண்டாய்
விடினது வாகும் விருத்தந் திருத்தகு மெல்லியலே." (காரி.)

இதில் முதல் நிரையசை வந்தமையால் அடி 1-க்கு ஒற்றொழித்து 17 எழுத்து வந்தது காண்க.

"அடியடி தோறு மைஞ்சீ ராகி
முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாக்
கடையொரு சீரும் விளங்கா யாகி
நேர்பதி னாறே நிரைபதி னேழென்
றோதினர் கலித்துறை யோரடிக் கெழுத்தே."

## IV. வஞ்சிப்பா.—VANCHIPA.

### GENERAL CHARACTERISTICS.—பொதுவிதி.

**498. வஞ்சிப்பா.**—இது தனக்குரிய சீராகிய கனியீற்றுச் சீரையும் பிறசீரையுங்கொண்டு, தன்றளையையும் வேற்றுத்தளையையும் தழுவிநடக்கும்.

*a.* இதன் ஓசை தூங்கலோசை எனப்படும். இது ஏந்திசைத் தூங்கல், அகவற்றூங்கல், பிரிந்திசைத்தூங்கல் என மூவகைப்படும். அவற்றுள், 1. ஒன்றிய வஞ்சித்தளையான் வருவது **ஏந்திசைத்தூங்கலும்,**

2. ஒன்றாத வஞ்சித்தளையான் வருவது **அகவற்றூங்கலும்,**

3. இவ்விரண்டாலும் பிறதளையாலும் வருவது **பிரிந்திசைத்தூங்கலும்** ஆம்.

"ஒன்றிய வஞ்சித் தளையே வரினும்
ஒன்றாத வஞ்சித் தளையே வரினும்
என்றிவை யிரண்டும் பிறவும் மயங்கினும்
ஏந்தல் அகவல் பிரிந்திசைத் தூங்கலென்
றுய்ந்த நிரனிறை யாகு மென்ப."

*b.* முச்சீரடியாலாவது இருசீரடியாலாவது வரும்.

*c.* மூன்றுமுதல் பல அடிகள் பெறும்.

*d.* தனிச்சொல் பெற்று அகவற் சுரிதகத்தால் முடியும்.

"தூங்க லிசையன வஞ்சி மற்றவை
யாய்ந்த தனிச்சொலோ டகவலி னிறுமே." (யாப்பரு.)

உ-ம். 1. "வினைத்திண்பகை விழச்செற்றவன்
வனப்பங்கய மலர்த்தாளிணை
நினைத்தன்பொடு தொழுதேத்தினர்-நாளும்
மயலா நாற்கதி மருவார்
பெயரா மேற்கதி பெறுகுவர் விரைந்தே."
இதில் ஏந்திசைத் தூங்கலோசை வந்தது.

2. "வானோர்தொழ வண்டாமரைத்
தேனார்மலர் மேல்வந்தருள்
ஆனாவருள் கூறறிவனைக்-காணார்
மலர்கொண் டேத்தி வணங்குநர்
பலர்புகழ் முத்தி பெறுகுவர் விரைந்தே."
இதில் அகவற் றூங்கலோசை வந்தது.

3. "மந்தாநிலம் வந்தசைப்ப
வெண்சாமரை புடைபெயர்தரச்
செந்தாமரை நாண்மலர்மிசை-யெனவாங்,
கினிதி னொதுங்கிய விறைவனை
மனமொழி மெய்களின் வணங்குது மகிழ்ந்தே."
இதில் பிரிந்திசைத் தூங்கலோசை வந்தது.

## வஞ்சிப்பா வகை.—DIFFERENT KINDS OF VANCHIPA.

**499.** இவ்வஞ்சிப்பா **குறளடி வஞ்சிப்பா, சிந்தடி வஞ்சிப்பா** என இருவகைப்படும்.

இவை முறையே குறளடியானும் சிந்தடியானும் நடந்து, மூன்றடியாயும் மூன்றின்மிக்க பலவடியாயும் வந்து, தனிச்சொற்பெற்று ஆசிரியச் சுரிதகத்தான் முடியும்.

குறளடி வஞ்சிப்பாவிற்கு உ-ம். "வினைத்திண்பகை....." "வானோர் தொழ...." "மந்தாநிலம்...." முதலியனவாம்.

சிந்தடி வஞ்சிப்பாவிற்கு

உ-ம். "கொடியவாலன குருநிறத்தன குறுந்தாளன
வடிவாலெயிற் றழலுளையன வள்ளுகிரன
பணையெருத்தி னிணையரிமா னணையேறித்
துணையிலாத் துறவுநெறிக் கிறைவனாகி

*யெயினடுவெ ணினிதிருந் தெல்லோர்க்கும்*
*பயில்படுவினை பத்திமையிற் சொன்னேன்—புணையெனத்*
*திருவுறு திருந்தடி திசைதொழ*
*விரிவுறு நாற்கதி வீடுநெனி யெளிதே."*

## வஞ்சிப்பாவினம்.—DIFFERENT KINDS OF VERSES ALLIED TO VANCHIPA.

**500.** வஞ்சிப்பாவினம், *வஞ்சித்தாழிசை, வஞ்சித்துறை, வஞ்சிவிருத்தம் என மூவகைப்படும்.*

*அவற்றுள்,* **1. வஞ்சித்தாழிசை.** — *இது இருசீரடி நான்கு கொண்டு ஒருபொருள்மேல் மூன்றடுக்கி வரும்.*

உ-ம். 1. *"மடப்பிடியை மதவேழந்*
*தடக்கையால் வெயில்மறைக்கும்*
*இடைச்சுர மிறந்தார்க்கே*
*நடக்குமென் மனனேகாண்."*

2. *"பேடையை யிரும்போத்துத்*
*தோகையால் வெயில்மறைக்கும்*
*காடக மிறந்தார்க்கே*
*ஓடுமென் மனனேகாண்."*

3. *"இரும்பிடியை யிகல்வேழம்*
*பெருங்கையால் வெயில்மறைக்கும்*
*அருஞ்சுர மிறந்தார்க்கே*
*விரும்புமென் மனனேகாண்."*

**501.** 2. **வஞ்சித்துறை.**—*இது ஒருபொருள்மேல் மூன்றடுக்காது, இருசீரடி நான்காய்த் தனித்து வரும்.*

உ-ம். *"மைசிறந்தன மணிவரைக்*
*கைசிறந்தன காந்தளும்*
*பொய்சிறந்தனர் காதலர்*
*மெய்சிறந்தலர் விளங்கிழாய்."*

**502.** 3. **வஞ்சிவிருத்தம்.**—*இது முச்சீரடியாகிய சிந்தடி நான்கு கொண்டு வரும்.*

உ-ம். *சாந்த ஞெதிய தாழ்மொழி*
*காய்ந்த வேலிரு காதிலும்*
*போந்த போன்று புகுந்திட*
*மாந்த ராகுல மன்னினர்.*

"குறளடி நான்மையிற் கோவை மூன்றாய்
வருவன வஞ்சித் தாழிசை யாதலும்
ஆங்கவை தனிவரின் தன்றுறை யாதலும்
பாங்கமை சிந்தடி நான்காய் நடப்பது
வஞ்சி விருத்த மாதலும் மரபே." (இல. விள.)

## V. மருட்பா.—MARULPA.

**503. மருட்பாவானது** முன் சில வெண்பா அடிகளும், பின் சில அகவலடிகளும்கொண்டு, முன்சொன்ன பா, பாவினங்களில் வேறுபட்டுவருவதாம். இது ஓர்வகைப் போலிப்பாவே யல்லாது வேறன்று.

**504.** இம்மருட்பா புறநிலைவாழ்த்து, கைக்கிளை, வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ என்ற பொருள்கள்மேல் வரும்.

**புறநிலை வாழ்த்தாவது**—வழிபடு கடவுளைக் காப்பாக வைத்துச் சிறந்து வாழக்கடவதென்று வாழ்த்துதல்.

**கைக்கிளையாவது**—ஒருதலைக் காமத்தைப்பற்றி யுணர்த்தல்.

**வாயுறை வாழ்த்தாவது**—உறுதிபயக்குஞ் சொற்களால் மெய்ப்பொருளை வற்புறுத்திக் கூறல்.

**செவியறிவுறூஉவாவது** — பெரியோருக்கு அடங்கியிருத்தல் கடமையென ஒருவனுக்கோதி அறிவூட்டல்.

உ—ம். "திருநுதல் வேர்வரும்பத் தேங்கோதை வாடும்
இருநிலஞ் சேவடியுந் தோயும் — அரிபரந்த
சேயித ழுண்கணு மிமைக்கும்
ஆகு மற்றிவ ளகலிடத் தணங்கே."

இது கைக்கிளைப் பொருண்மேல் வந்தமையால்கைக்கிளை மருட்பா. ஏனையவற்றிற்கும் உதாரணம் வந்துழிக்காண்க.

N.B.—கைக்கிளை மருட்பாவின் ஈற்றில் வரும் ஆசிரியப்பா இரண்டடியாயும் அவற்றுள்ளும் ஈற்றயலடி சிந்தடியாயு மிருக்கப்பெறும்.

"பண்பார் புறநிலை பாங்குடைக் கைக்கிளை வாயுறைவாழ்த்
தொண்பாச் செவியறி வென்றிப் பொருண்மிசை ஊனமில்லா
வெண்பா முதல்வந் தகவல் பின்னாக விளையுமென்றால்
வண்பால் மொழிமட வாய்மருட் பாவெனும் வையகமே."
(காரி.)

## VI. நூற்பா.—NOORPA.

**505.** இது ஓரடியாலும், பலவடியாலும், தளை, சீர், தொடைகள் நியதியின்றி வர நடப்பது. இதை நூற்பா எனப் பொதுவாய்ச் சொல்வது ஆன்றோர் மரபு.

இது, அர்த்தம் நோக்கி, பாட்டு, உரை, நூல், மந்திரம், பிசி (lie-பொய்), முதுசொல் (Proverb), அங்கதம், வசை (Smarting, Sarcasm), வாழ்த்து எனவும் பேர்பெறும்.

உ-ம். "எழுத்தெனப்படுப,
அகரமுத னகரவிறுவாய் முப்பஃ தென்ப
சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே." &c.

N.B.—செய்யு ளிலக்கணஞ் சிதைந்தும் சற்றொருத்தும் வருமாயின், அது **கத்தியம்** எனப்படும். இது ஆத்திசூடி, கொன்றைவேந்தன் முதலாயின.

"ஓரடி யானும் பலவடி யானு
மொரோவழி யியலு முறைத்தவச் செய்யுள்
அவைதாம், பாட்டுரை நூலே மந்திரம் பிசியே
முதுசொல் அங்கதம் வாழ்த்தொடுபிறவும்
ஆகு மென்ப வறிந்திசி னோரே." (இல. விள.)

**506.** **கூன்** = தனிச்சொல்.

இது வெண்பாமுதலிய பாக்களிலும் பாவினங்களிலும் ஓரடியின் முதலில் அவ்வடியோடு சேராமல், பொருள்படத் தனித்து நிற்கும்; வஞ்சிப்பாவில்மாத்திரம் அடிமுதற்கணன்றியும் இடையிலும் கடையிலும் வரப்பெறும்.

உ-ம். "அவற்றுள், அ, இ, உ, எ, ஒக்குறி லைந்தே." &c.
இதில் 'அவற்றுள்' என்பது கூன்.

"அடிமுதற் கட்பாப் பொருளைத் தழுவித்
தனியே நிற்பது கூனு மக்கூன்
வஞ்சியு ளிடைகடை முதலினும் வருமே." (முத். வீரி.)

## பாட்டின் புறனடை.—POETICAL LICENSE.

**507.** புறனடை.—சிலவேளை பாட்டுக்களில் தளை, சீர், ஓசை முதலியன கிரமம் தப்பிவரும்படியாகச் சொற்கள் அமைந்திருக்கும். ஆயினும் சொற்சுவையும் பொருட்சுவையுமுணர்ந்த பெரியோர்க

ளால், பாட்டுகளில் இப்படி வருவது குற்றமாகாமல் அமையுமென எழுத்து, அசை, சீர், தளை, அடிமுதலியவற்றைப்பற்றிச் சில விதிகள் புறனடையாகக் கூறப்பட்டிருக்கின்றன.

அவை பின்வருமாறு:—

**ஒருவகை எழுத்துகட்கான புறனடை.**—License in letters.

(a) குற்றியல் இ, குற்றியல் உ ஆகிய இரண்டும் அலகு பெறாது நிற்க, அவற்றை அசைகளின் அம்சங்களல்லவென்று நீக்கலாம்.

உ-ம். "குழலினி தியாழினி தென்பர் தம்மக்கண்
மழலைச்சொற் கேளா தவர்."
"அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்."

கிரமப்படி அசை பிரிக்கின், இக்குறள் வெண்பாக்களின் முதலடிகளில் ஆசிரியத்தளையும், கலித்தளையும் முறையே வரும். இவ்வாறுவருதல் வெண்பாவின் லட்சணத்துக்கு மாறுதலின், "தியா" விலுள்ள குற்றியலிகரத்தை மெய்யெழுத்தோ டொப்பக்கொண்டு அலகு பெறுதென்று நீக்க வேண்டலை பிழையாமை காண்க.

உ—ம். "கொன்றுகோடுநீடு குருதிபாயவுஞ்
சென்றுகோடுநீடு செழுமலைபொருவன
வென்றுகோடுநீடு விறல்வேழ
மென்றுழூடுநீடு பிடியுளபோலு—மதனு
லிண்டிடை யிரவிவ ணெறிவரின்
வண்டுண் கோதை யுயிர்வா ழலளே."

கிரமப்படி அசை பிரிக்க, இக்குறளடி வஞ்சிப்பாவினுள் குற்றியலுகரம் வந்து ஆறசைச் சீரும், ஐயசைச்சீரு மாகின்றன. இங்ஙனமாதல் இலக்கண மன்மையின், இதில் குற்றியல் உகரத்தை அலகு பெறுவென்று நீக்கச் சீரும் தளையும் சிதையாதிருத்தல் காண்க.

(b) ஐகாரக்குறுக்கம் குற்றெழுத்துப்போலக் கொண்டு அலகிடப்படும்

உ—ம். "கெண்டையை வென்ற கிளரொளி யுண்கணுள்
பண்டைய ளல்லள் படி."

இதில் ஐகாரக் குறுக்கம் குறில்போல் தனித்து நின்று நேரசையாயும், கூடி நின்று நிரையசையாயும் வந்தவாறு காண்க.

(c) உயிரளபெடையை, அறிகுறியாய் வந்த குறிலுக்கு அலகில்லாது களைந்து நெட்டெழுத்துப்போலக் கொள்வதுமுண்டு.

உ—ம். "களிச்சாத்தாஅ வென்றியான் கண்காண நின்று
விளித்தாலும் வாரான் விரைந்து."

இதில், உயிரளபெடையை அலகு பெறுதெனநெட்டெழுத்துப் போலக் கொள்ள வேண்டாதவிடத்தும், அலகுபெற்றதாகக் கொள்ள வேண்டா சிதைந்தும் வந்தவாறு காண்க.

(d) ஆய்த அளபெடையும், ஒற்றளபெடையும் ஓர் அலகே பெற்று வரும்.

உ-ம். (1) "எஃஃகி லங்கிய கையரா யின்னுயிர்
வெஃஃகு வார்க்கில்லை வீடு."

(2) "கண்ண் கருவிளை கார்முல்லை கூடெயிறு
பொன்ன் பொறிசுணங்கு போழ்வா யிலவம்பூ
மின்ன் னுழைமருங்குல் மேதகு சாயலா
ளென்ன் பிறமகளா மாறு."

இவற்றுள், ஆய்தமும் மெய்யும் அளபெடுத்து ஓரலகே பெற்றவாறு காண்க.

(e) இரண்டுமூன்று ஒற்றுக்கள் ஒன்றித்து வரும்போது, ஒரொற்றுப்போலவே நின்று அலகு காரியம் பெறு.

உதாரணம்.

"உணர்ந்தார்க் குணர்வரி யோன்றில்லைச் சிற்றம் பலத்தொருத்தன்
குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ் வாயிக் கொடியிடை [தோள்
புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய்
மணந்தாழ் புரிகுழ லாளல்குல் போல வளர்கின்றதே."

இதில் இரண்டு மெய்கள் இணைந்துவந்தும் அளபெடுக்காமையால் குற்றெழுத்தைப்போ லலகுபெறுமை காண்க.

"தனிசீர் வண்ணந் தாங்கெட வரினே
குறுகிய விகரமுங் குற்றிய லுகரமும்
அளபெடை யாவியு மலகியல் பிலாமையும்
ஐகான் குறுகிற் குறிலியல் பெய்தலும்
ஆய்தமு மொற்று மளபெழூஉ நிற்புழி
வேறல கெய்தும் விதியின வாதலும்
ஒற்றள பெழாவழிப் பெற்றவல கின்மையும்
பெற்றியென் றுரைப்பர் கற்றுணர்ந் தோரே." (இல. விள.)

"ஈரொற் றுயினும் மூவொற் றுயினும்
ஓரொற் றியல வென்மனார் புலவர்." (பேர். அகத்.)

**508. ஒருவகை அசைகட்கான புறனடை. — License in Syllables.**

(*a*) தனிக்குறில் வார்த்தையின் முதலில், அதாவது, அடியின் முதல் வார்த்தையின் முதலிலும், சீர்களின் முதல்வார்த்தையின் முதலிலும் நேரசையாகாது. விட்டிசைக்கப்பட்டால் மாத்திரம் நேரசையாகலாம்.

உ-ம். "உண்ணு ளொளிநிரு ளேங்குபுகழ் செய்யான்
துன்னரும் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ
விழந்தானென் றெண்ணப் படும்."

இதில் அருளின்கட் குறிப்பாய் விட்டிசைத்தமையால் 'அஆ' வென மொழிமுதலில் குறில் தனி நின்று நேரசையாயினது.

(*b*) நெட்டெழுத் தளபெடுக்கின் நேர்நேராம்.

(*c*) தனிக்குறிலிணைந்த நெடில் அளபெடுக்கின் நிரைநேராம்.

உ-ம். "ஏஎர் சிதைய வழாஅ லெழாஅநின்
சேயரி சிந்திய கண்."

இதில் 'ஏஎர்' எனத் தனிநெடில் அளபெடுத்து நேர்நேராயினமையும்; 'வழாஅல்' 'எழாஅ' எனக் குறிலிணைநெடில்க ளளபெடுத்து நிரைநேர்களாயினமையும் காண்க.

"விட்டிசைத் தன்றி முதற்கட் டனிக்குறி
னேரா காமையும் நெட்டெழுத் தளபெறி
னேர்நே ராதலுங் குறினெடி லளபெறி
னிரைநே ராதலு நெறியெனப் படுமே." (இல. விள.)

"தனிநிலை யளபெடை நேர்நே ரியற்றே."

"இறுதிநிலை யளபெடை நிரைநே ரியற்றே."

**509. ஒருவகைச் சீர் தளைகட்கான புறனடை.—License in Combination of feet.**

(*a*) நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீர் இரண்டும் கலிப்பாவிலும், ஆசிரியப்பாவிலும் வாரா.

(b) நேர்நேர், நிரைநேர் என்ற 'நேர்' ஈற்றியற்சீர் இரண்டும் கலிப்பாவில் வாரா.

(c) வெண்பாவில் வஞ்சியுரிச்சீர் வராது. அன்றியும் தனக்குரிய சீர்களும் தளைகளுமேதவிர மற்றவை ஒருபோதும் வாரா. இது மிகவும் கவனிக்கப்படத்தக்கது.

(d) மேற்கண்டவை தவிர மற்ற எல்லாச் சீரும் தளையும் ஒன்றுடன் மற்றொன்று விரவி எல்லாப் பாக்களிலும், பாவினங்களிலும் வருதலுண்டு.

N.B —நேரீற்றியற்சீர் வெண்கலியுள்ளும், கொச்சகக்கலியுள்ளும் அருகி வரும். அப்படியே நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீர் கொச்சகத்துள் அருகி வரும். இங்ஙனம் வருவது முதுமைச் செய்யுள்களிடத்தாகலின், நவமாய்க் கவியியற்றுவோர் இப்போங்குப்படி பாடுவது தக்கதன்றாயினும் ஒருவா றுடன்பாடுடையதேயாம்.

இவற்றிற்கெல்லாம் உதாரணம் முன் காட்டியவற்றுள்ளும் ஏனையவற்றுள்ளும் வந்துழிக் காண்க.

"நிரைநடு வாகிய வஞ்சி யுரிச்சீர்
கலியினோ டகவலிற் கடிதலுங் கலிவயி
னேரீற் றியற்சீர் நிலவுத லின்மையும்
ஏனைய வெல்லா மெவ்வகைச் சீரொடுந்
தாமயங் குதலும் தளையொடு மயங்கலும்
வெள்ளையு ணிரையீற் றுரிச்சீர் விரவா
சொல்லிய வெள்ளையுட் பிறதளை தொடரா
வென்றனு மொன்றிய இலக்கண மென்ப." (இல. விள.)

"குலாவணங்கு வில்லெயினர் கோன்கண்டன் கோழி
நிலாவணங்கு வெண்மணன்மே னின்று—புலாலுணங்கல்
கொள்ளும்புட் காக்கின்ற கோவின்மையோ நீபிற
ருள்ளம்புக் காப்ப துனை."

இவ்வெண்பாவினுள் 'கோவின்மையோ' என வஞ்சியுரிச்சீர் வந்திருப்பது, பல சான்றோர் இலக்கியங்கட்கும் இலக்கணங்கட்கும் மாறுபட்டிருத்தலின் குற்றமென்று நீக்கத்தக்கதேயாம்.

**510.** ஒருவகை அடிகட்கான புறனடை.—License in Metrical lines.

*(a)* ஆசிரியப்பாவில், (1) இயற்சீர் வெண்டளையான் வந்த வெண்பா அடியும், வஞ்சி அடியும்,

(2) வெண்சீர் வெண்டளையான் வந்த வெண்பா அடியும், கலியடியும் மயங்கி வருவதுண்டு.

(3) ஓரோவிடத்து ஐஞ்சீரடியும் அருகி வரும்.

*(b)* கலிப்பாவில், (1) வெண்பாவடியும்,

(2) அகவலடியும் வந்து மயங்குதலுண்டு.

(3) ஓரோவிடத்து ஐஞ்சீரடியும் அருகி வரும்.

*(c)* வஞ்சிப்பாவில், (1) அகவலடியும்,

(2) கலியடியும்,

(3) சிறுபான்மை வெண்பாவடியும் வந்து மயங்குதலுண்டு.

உதாரணம் வந்தவிடங்களில் காண்க.

"இயற்சீர் வெள்ளடி வஞ்சி யடியிவை
மயக்கப் படுதலும் வெண்சீர் வெள்ளடி
கலியடி யொரோவழி யகவலுட் கலத்தலும்
வெள்ளடி யகவல் கலியுளு மகவலுங்
கலியு மொரோவழி வெண்பா வடியும்
வஞ்சியுண் மயங்கி வருதலு மைஞ்சீ
ரடிகலி யகவலோ டருகிவந் தடுத்தலுங்
கடிநிலை யின்றே கருதுங் காலை." (இல. விள.)

**511.** Number of lines in different verses.—நான்கு பாக்களின் அடிக்குச் சிறுமை பெருமை அவ்வப் பாக்களைப்பற்றிக் கூறியபோது ஒருவாறு விளக்கப்பட்டதாயினும் அவை யீங்கு தொகுத்துக் கூறப்படும். அவைவருமாறு:—

| பாக்கள். | அடிச்சிறுமை. | அடிப்பெருமை. |
| --- | --- | --- |
| வெண்பா. | இரண்டு. | பன்னிரண்டு. |
| ஆசிரியப்பா. | மூன்று. | ஆயிரம். |
| கலிப்பா. | நான்கு. | வரையறையில்லை. |
| வஞ்சிப்பா. | மூன்று. | ஆயிரம். |

"ஈரடி வெண்பாச் சிறுமை மூவடி
யாசிரி யத்தொடும் வஞ்சி யெஞ்சிய
தொருநான் காகு மிழிபே பெருமை
முந்நான் காயிர மாயிர முடிவில
தென்று வரூஉ மியல்பின தென்ப." (இல. விள.)

**512**. Number of lines and feet in the parts of Kalipa.—தரவுமுதலிய கலியுறுப்புகளின் அடி சீர்களின் சிறுமை பெருமை பின்வருமாறு:—

(a) தரவு. (1) வண்ணக வொத்தாழிசைக்கலி,
(2) அம்போதரங்க வொத்தாழிசைக்கலி ஆகிய இரண்டிலும், எப்போதும் ஆறடியாகவேவரும்; இதில் சுருங்கியும், பெருகியும் வருதலில்லை.
(3) மற்றக் கலிப்பாக்களில் மூன்று அடியாகச் சுருங்கியும், பொருண்முடிவுக்கேற்ப வரையறையின்றிப் பெருகியும் வரும்.

(b) தாழிசைச் சிறுமை இரண்டு அடியும், பெருமை நான்கு அடியுமாம்.

N.B.—தரவடியை விடத் தாழிசையடிகள் குறைந்திருப்பது இயல்பும் சிறப்புமாகும்.

(c) வண்ணக வுறுப்பு (1) அளவடியாலும்,
(2) நெடிலடியாலும்,
(3) கழிநெடிலடியாலும் வரும்.

இதற்கு அடிச்சிறுமை நான்கும், பெருமை எட்டுமாம்.

(d) தனிச்சொல் எவ்வகைச் சீராலும் வரும். மற்ற வுறுப்புகள் முன் கூறப்பட்டவிலக்கணப்படியேயாம்.

"வண்ணக மம்போ தரங்கவொத் தாழிசை
நண்ணிய தாவி னடியிரு மூன்று
மேனைய தரவடி யிழிபொரு மூன்றும்
பேணிய பெருமை பெரும்பொருண் முடிபு
மிரண்டடி யிழிபு மிரட்டி மூன் றுக்கமு
மொன்றிய தாழிசை யுறுதலு முறுங்காற்
றரவிற் சுருங்க றகுதியென் றுரைத்தலு
மளவடி முதலா வனைத்தடி யானும்
வருவது வண்ணகம் வருங்காற் சிறுமை
நாலடி பெருமை நாலிரண் டாகி
நடத்தலு நெறியென நாட்டினர் புலவர்." (இல. விள.)

## வகையுளி.—METHOD OF SCANNING.

**513.** வகையுளியாவது—செய்யுளில் பொருள் நோக்காது ஓசையேநோக்கி, அசை, சீர், தளை முதலியன பிசகின்றி நிற்குமாறு முன்னும் பின்னும் குற்றப்படாமல்தளை பிரித்தல் அல்லது அலகிடுதலாம்.

உ-ம். "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்."

இதில், 'நிலமிசைநீடுவாழ்வார்' என்பதைப் பொருள்நோக்கி 'நிலமிசை நீடு வாழ்வார்' என அலகிடின், செப்பலோசை சிதைந்து, வெண்டளை பிசகி, ஈற்றுச்சீ ரியற்சீராகி வருதல் வெண்பாவிற் கியல் பன்மையின், ஓசை நோக்கி 'நிலமிசை நீடுவாழ் வார்' என அலகிடல் வேண்டும்.

"அசையுஞ் சீரு மடியு மெல்லா
மிசைய வருபொரு ளியைபு நோக்கா
தோசையே குறிக்கொண் டொடுங்கவும் விரியவு
மலகிடல் வகையுளி யாகு மென்ப." (இல. விள.)

பாட்டுக்களை இராகம் பிசகாமல் வாசித்துப் பழகவேண்டும். அப்போது அலகிடல் இலகுவாகும்.

# CHAPTER XVI.

## THE METHODS OF CONSTRUCTING VERSE.

## யாப்பியல்—பொருள்கோள்.

**516. பொருள்கோளாவது**—பதங்களை ஒரு பாட்டில் பொருள் நன்கு விளங்குமாறு அமைத்துக் காட்டுவதாம்.

இது ஆற்றுநீர், மொழிமாற்று, நிரனிறை, பூட்டுவில், தாப்பிசை, அளைமறிபாப்பு, கொண்டுகூட்டு, அடிமறிமாற்று என எண் வகைப் படும்.

"யாற்றுநீர் மொழிமாற்று நிரனிறை விற்பூண்
தாப்பிசை அளைமறி பாப்புக் கொண்டுகூட்,
டடிமறி மாற்றெனப் பொருள்கோ ளெட்டே." (நன்.)

**517. ஆற்றுநீர்ப் பொருள்கோளாவது**—வார்த்தைகள் முன்னும் பின்னுமாக மாறிவராமல் வாசகநடைபோலப் பொருளொழுக்கத்திற்குத் தக்கபடி ஒன்றின்பின் னொன்றாகக் கிரமப்பட வந்து இடையறாது ஆற்றுஜலம் புரண்டோடுவதுபோல்வது.

உ-ம். "சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே."

[இதில், சொல்லென்னும் எழுவாய் முதலிலும், அதன்றொழிலாகிய வினையெச்சங்கள் முறையே யொன்றனையொன்று தொண்டு முடிய இடையிலும், காய்த்தவென்னும் பயனிலை கடையிலும் வந்து, ஆற்றுஜலம் செல்வதுபோல் பொருளொழுக்கமைந்திருத்தல் காண்க.]

"மற்றைய நோக்கா தடிதொறும் வான்பொருள்
அற்றற் றொழுகும்அஃ தியாற்றுப் புனலே." (நன்.)

**518. மொழிமாற்றுப் பொருள்கோளாவது** — ஓரடியில் இரண்டு அல்லது பலமொழிகளும் அவற்றின் பயனிலைகளும் ஒன்றற்கொன்று பொருந்தாதபடி மாறிவர முடிப்பதாம். இப்படி வருவனவற்றிற்குப் பொருள்கொள்ளும்போது எழுவாயையும் பயனிலையையும் பொருந்தும்படி மாற்றிக் கூட்டவேண்டும்.

உ-ம். "களையாடக் கெண்டை கயத்தாட மஞ்ஞை
சுனையாழ அம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை."

[இதில், எழுவாயும் பயனிலையும் நின்றபடி பொருள்கொள்ளின் பொருளமைதி யில்லாமையால், மஞ்ஞை களையாட, கெண்டை கயத்தாட, சுனை மிதப்ப, அம்மி ஆழ, வரையனைய யானைக்கு நிலை, முயலுக்கு நீத்து எனப் பொருந்தும்படி மாற்றிக் கூட்டவேண்டும்.]

"ஏற்ற பொருளுக் கியையு மொழிகளை
மாற்றியோ ரடியுள் வழங்கன் மொழிமாற்றே." (நன்.)

**519. நிரனிறைப் பொருள்கோளாவது** — பல பெயர்ச் சொற்களையும் பல வினைச்சொற்களையும், அவைகள் கொண்டு முடியும் அவ்வகைச் சொற்களையும் தனித்தனி வரிசையாக நிறுத்தி முறையாயாவது எதிராயாவது இதற்கிது பயனிலையென்பது தோன்றக் கூறுவது.

உ-ம். "கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவளம் முத்தம் முகம்வாய் முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்."

இது பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் வந்த முறை நிரனிறை.

[இதில், கொடி-நுசுப்பு, குவளை-உண்கண், கொட்டை-மேனி, மதி-முகம், பவளம்-வாய், முத்து-முறுவல், பிடி-நடை, பிணை-நோக்கு, மஞ்ஞை-சாயல் என முறைமுறையாய் எடுத்துக்கூட்டிப் பொருள் கொள்ளல்வேண்டும்.]

"காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய—நீதியால்
மண்ணமிர்த மங்கையர்தோள் மாற்றாரை யேற்றார்க்கு
நுண்ணிய வாய பொருள்."

இது வினைப்பயனிலைகளும் பெயர்ச்சொற்களுமாய் வந்த முறை நிரனிறை.

[இதில், கா-மண், து-அமிர்தம், சேர்-மங்கையர் தோள், தாழ்-மாற்றாரை, குழை-ஏற்றார்க்கு, ஆய்-நுண்ணிய வாயபொருள் என முறைமுறையாய் எடுத்துக்கூட்டிப் பொருள்கொள்ளல்வேண்டும்.]

"களிறுங் கந்தும் போல நளிகடல்
கூம்புங் கலனுந் தோன்றும்
தோன்றல் மறந்தோர் துறைகெழு நாட்டே."

இது பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் வந்த எதிர் நிரனிறை.

கந்து=யானைகட்டுந் தறி; கூம்பு=பாய்மரம்; கலன்=கப்பல்.

[இதில், களிறு கலன் எனவும், கந்து கூம்பு எனவும் எதிரெதிராக எடுத்துக்கூட்டிப் பொருள்கொள்ளல்வேண்டும்.]

"ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்
பாடகமு மூரகமும் பஞ்சரமா—நீடியமா
னின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ
மன்றார் மதிற்கச்சி மாண்பு."

இது பெயர்ச்சொற்களும் வினைப்பயனிலைகளுமாய் வந்த எதிர் நிரனிறை.

[இதில், வெஃகா கிடந்தான், பாடகம் இருந்தான், ஊரகம் நின்றான் என எதிரெதிராக எடுத்துக்கூட்டிப் பொருள்கொள்ளல் வேண்டும்.]

"பெயரும் வினையுமாஞ் சொல்லையும் பொருளையும்
வேறு நிரனிறீஇ முறையினு மெதிரினும்
நேரும் பொருள்கோள் நிரனிறை நெறியே." (நன்.)

520. பூட்டுவிற் பொருள்கோளாவது—பாட்டின் முதலடியின் முதல் வார்த்தையும், ஈற்றடியின் கடைசி வார்த்தையும் பொருள் பொருத்த முடையதாகி முடிவது.

உ—ம். "திறந்திடுமின் தீயவை பிற்காண்டு மாதர்
இறந்து படிற்பெரிதா மேதம்—உறந்தையர்கோன்
தண்ணார மார்பிற் றமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு."

[இதில் 'திறந்திடுமின் கதவு' என முதல் வார்த்தை கடைசி வார்த்தையோடு முடிந்தது.]

"எழுவா யிறுதி நிலைமொழி தம்முட்
பொருணோக் குடையது பூட்டுவில் லாகும்." (நன்.)

**521. தாப்பிசைப் பொருள்கோளாவது** — பாட்டுள் நடு நின்ற வார்த்தை ஊஞ்சற் கயிறுபோல முன்னின்றவற்றோடும் பின்னின்றவற்றோடும் சேர்ந்து பொருள் முடிவுறச் செய்வது.

உ-ம். "உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு."

[இதில், 'ஊன் உண்ணாமையுள்ளது உயிர்நிலை' 'ஊன் உண்ண அளறு அண்ணாத்தல் செய்யாது' என "ஊன்" என்பதை முன்னும் பின்னும் கூட்டிப் பொருள் முடிக்கவேண்டும்.]

"இடைநிலை மொழியே யேனையீ ரிடத்தும்
நடந்து பொருளை நண்ணுதல் தாப்பிசை." (நன்.)

**522. அளைமறி பாப்புப் பொருள்கோளாவது** — புற்றிலே புகுந்து மடங்கும் பாம்புபோல், செய்யுளின் ஈற்றில் நின்ற சொல் இடையிலும் முதலிலும் சென்று பொருள் முடிப்பதாம்.

உதாரணம்.

"தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டேன்றித் தளர்வார்தாமும்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற் சுழல்வார்தாமும்
மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையென்றே முனிவார்தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலாதாரே."

[இதில், கடையடிச்சொற்கள் முழுவதும் தலைகீழாய் இடையிலும் முதலிலும் சென்று கூடிப் பொருளமையச்செய்தல் காண்க.]

"செய்யு ளிறுதி மொழியிடை முதலினு
மெய்திய பொருள்கோள் அளைமறி பாப்பே." (நன்.)

**523. கொண்டுகூட்டுப் பொருள்கோளாவது**—செய்யுளடிகள் பலவற்றினும் பொருளமைதிக்குப் பொருந்தாதபடி நின்ற மொழிகளை யாற்றுநீர்ப்பொருள்கோளுக் கிசையும்படி வரிசையாக எடுத்துச்சேர்ப்பது.

உ-ம். "தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி
யஞ்சனத் தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்."

[இதில், வங்கத்து (கப்பலில்)ச் சென்றார் (புருஷன்) வரின் அஞ்சனத் (black pigment) தன்ன பைங்கூந்தலை (யுடைய மாது) தெங்கங்காய்போலத் திரண்டுருண்ட கோழி வெண்முட்டை

யுடைத்தன்ன பசலை (காமத்தால் தேகத்தில் படர்ந்த தேமல்) தணிவாமே எனக் கொண்டு கூட்டுக.]

"யாப்படி பலவினும் கோப்புடை மொழிகளை
யேற்புழி யிசைப்பது கொண்டு கூட்டே." (நன்.)

**524.** அடிமறிமாற்றுப் பொருள்கோளாவது—பாட்டில் யாதாமொரு அடியைத் தான் இருந்த இடத்தினின்றும் நீக்கி, கடை இடை முதல் ஆகிய எவ்விடத்தில் கூட்டினும் பொருளும் ஓசையும் சிதையாமலிருப்பது.

உ-ம். "மாறாக் காதலர் மலைமறந் தனரே
ஆறாக் கட்பனி வரலா னாவே
வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே."

[இதில் எவ்வடியை எங்கே கூட்டினும் பொருளும் ஓசையும் சிதையாதிருத்தல் காண்க.]

"ஏற்புழி யெடுத்துடன் கூட்டுறு மடியவும்
யாப்பீ றிடைமுத லாக்கினும் பொருளிசை
மாட்சியும் மாறா வடியவு மடிமறி." (நன்.)

## CHAPTER XVII.

### DIFFERENT NAMES OF TAMIL POETRY.

### யாப்பியல்—செய்யுட் பெயர்வகை.

**525.** தமிழ்ச் செய்யுட்கள் பலவகையான பேர்பெறும். இவற்றில், சில சொல்லிலக்கணம் நோக்கி வந்தவை; சில பாவிலக்கணம் நோக்கி வந்தவை; சில பொருள்நோக்கி வந்தவை; சில இடுகுறிப் பெயராய் முன்னோரால் விதிக்கப்பட்டவை; சில பொருளும் பாவிலக்கணமுமாகிய இரண்டின் விசேஷமும் கலந்துவந்தவை; சில கிரந்த கர்த்தாவின் பெயரால் வந்தவை.

இச்செய்யுள்கள் ஒற்றைப் பாட்டாகித் தனிநிலையாயும், பல செய்யுட்கள் அடுக்கித் தொடர்நிலையாயும் வருதலுண்டு.

"அவற்றுட், பாட்டெனப் படுவது பைந்தமிழ் நாட்டகத்
தியாப்புறச் செய்பா வுறுப்பெழுந் திசைக்கும்." (இல. விள.)

**526.** இப்பாட்டுகளை முன்னோர்கள் ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, அகலக்கவி என நால்வகையாகப் பிரித்திருக்கிறார்கள்.

"ஆசு மதுரஞ் சித்திர மகலமென்
றோசை யெழும்பாட் டொருநால் வகைத்தே." (இல. விள.)

**527. ஆசுகவி** (verse improptu.)—ஒருபுலவன் மற்றொரு புலவனைநோக்கி, எழுத்து, சொல், பொருள், அணி, யாப்பு ஆகிய இவை இன்ன இன்ன விதமாயிருக்கும்படி பாடவேண்டும் என்று கேட்கும்போது உடனே அவை யாவும் அமைய முட்டின்றிப் பாடுவது.

உதாரணம் தனிப்பாடற்றிரட்டு முதலியவற்றில் காண்க.

"எழுத்துச் சொற்பொரு ளணியாப் பிவையின்
விழுத்தக வொருவன் விளம்பிய வுள்ளுறை
யப்பொழு தரைப்ப தாசு கவியே." (இல. விள.)

**528. மதுரகவி** (*Sweet verse.*)—சுவையான சொற்களாலும், பொருள்களாலும் யாப்பிலக்கணத்துக் கிசையத் தொடையும் தொடை விகற்பமும் இணக்கமாய்ப் பொருந்தப் பலவகை அணிகளமைத்துக் கேட்போருக்கு அமுதம்போலிருக்கப் பாடுவது.

உதாரணம், புகழேந்தி, ஒளவை முதலியோர் தனிப்பாட்டிலும், தொடர்நிலைச் செய்யுளிலும், கம்பர் இராமாயணத்திலும் காண்க.

"சொல்லும் பொருளும் சுவைபட நிறீஇச்
செல்வழித் தொடையும் விகற்பமும் செறீஇ
யுள்ளத் துள்ளே கொள்ளு மமுதெனத்
தன்மை யுவமை பின்வரு டம் பெற்றியின்
உருவக முதலுற் றோசை பொலியப்
பாடுதன் மதுர கவியெனப் படுமே." (இல. விள.)

**529. சித்திரகவி** (Verse in fantastic shape.)—அணியியலில் மாலைமாற்று முதலியவாகக் கூறிய மிறைக்கவியாம்.

உதாரணம் ஆண்டுக் காண்க.

**530. அகலக்கவி** (A poem.)—தனிப்பாட்டாயிருப்பது மன்றி அநேகம் பாட்டுகள் தொடர்ந்து ஒரு நூலாயுமிருக்கும். இது தனிநிலைச் செய்யுள், தொடர்நிலைச் செய்யுளென இருவகைப்படும். இவற்றுள் தொடர்நிலைச் செய்யுள்கள் வரையறையின்றி வரும்.

இது வித்தாரகவி எனவும் பெயர் பெறும்.

உ-ம். நல்வழி, நன்னெறி, மூதுரை முதலியனவாம்.

"வித்தார கவியை விளம்புங் காலை
யத்திறந் தொடர்நிலை யடிபல நடக்கும்
தனிப்பா வென்னத் தானிரண் டாகும்."(இல. விள.)

"அவற்றுள், தொடர்நிலை விகற்பங் கடையில வெண்ப."
(இல. விள.)

தனிப்பாட்டு அல்லது தனிநிலைச்செய்யுள் (Sonnet) பலவகைப்படும்.

**531.** Sonnet on conjugal love.

வளமடல்—அறம் பொருள் வீடு என்ற மூன்றின் பயனையுமிகழ்ந்து மங்கையரைச் சேர்தலாலாகிய காமவின்பமொன்றுதானே பயனுவதெனக்கொண்டு தலைமகனியற்பெயர்க்குத் தக்க எதுகை வரத் தனிச்சொல்லின்றி இன்னிசைத்தாகிய கலிவெண்பாவாற் பாடுதல்.

"அறம்பொருள் வீடெனு மம்முக் கூற்றின்
றிறங்கடிந் தரிவையர் திறத்தினு மின்பம்
பயனெனக் கலிவெண் பாவாற் றலைவன்
பெயரெது கையினிற் பேசுதல் வளமடல்." (இல. விள.)

**532.** Sonnet on the love of a lady seen in a dream.

உலாமடல்—சொப்பனத்தில் ஓர் பெண்ணைக் கண்டு கலவியின்பம் நுகர்ந்தோன் சாக்கிரத்தில் அவள் பொருட்டாக மடலூர்வேன் என்று கலிவெண்பாவால் பாடுதல்.

**533.** Sonnet on the charms of a young man on whom the hearts of the fair sex of different ages are equally set.

உலா—பாலியனை தலைவனைக் குலம், குடிப்பிறப்பு, பரம்பரை முதலியவற்றான் இன்னனென்பது தோன்றக் கூறி, அவன் வீதியில் பவனிவர, அவ்விடத்து நெருங்கியுள்ள பேதைமுதலாகிய எழு பருவத்துப்பெண்களும் கண்டு மோகித்ததாக நேரிசைக் கலிவெண்பாவாற் பாடுதல்.

"குழமக னைக்கலி வெண்பாக் கொண்டு
விழைதொல் குடிமுதல் விளங்க வுரைத்தாங்
கிழைபுனை நல்லா ரிவர்மணி மறுகின்
மற்றவன் பவனி வரவேழ் பருவ
முற்றமா தர்தொழப் போந்த துலாவாம்." (இல. விள.)

மாதரின் ஏழு பருவங்களாவன:—

| | | | |
|---|---|---|---|
| 5th year | to | 7th year | பேதை. |
| 8th ,, | ,, | 11th ,, | பெதும்பை. |
| 12th ,, | ,, | 13th ,, | மங்கை. |
| 14th ,, | ,, | 19th ,, | மடந்தை. |
| 20th ,, | ,, | 25th ,, | அரிவை. |
| 26th ,, | ,, | 31st ,, | தெரிவை. |
| 32nd ,, | ,, | 40th ,, | பேரிளம்பெண். |

"ஐந்து முதலே மூாண்டும் பேதை." (இல. விள.)
"எட்டு முதனான் காண்டும் பெதும்பை." (இல. விள.)
"ஆறிரண் டொன்றே யாகு மங்கை." (இல. விள.)
"பதினான் காதிபத் தொன்பான் காறு
மெதிர்தரு மடந்தைமே லாறு மரிவை." (இல. விள.)
"ஆறு தலையிட்ட விருபதின் மேலோ
ராறுந் தெரிவையெண் ணைர்துபே ரிளம்பெணென்
றேழும் பருவத் தோர்க்குரைத் தனரே." (இல. விள.)

**534.** Sonnet expressing a hero's love on a lady to his friend.

அநுராகமாலை—கனவில் ஓர் ஸ்திரீயைக் கண்டுகேட்டுண்டுயிர்த்துப் புணர்ந் தின்புற்றதை நனவில் தன் தோழனுக்குச் சொல்லுதலாக நேரிசைக் கலிவெண்பாவாற் பாடுவது.

"கனவி னொருத்தியைக் கண்டுகேட் டுண்டுயிர்த்
தினிதிற் புணர்ந்ததை யின்னுயிர்ப் பாங்கற்கு
நனவி னுரைத்த லநுராக மாலை." (இல. விள.)

**535.** Sonnet of fame.

**மெய்க்கீர்த்திமாலை**—குலபரம்பரையிற் கீர்த்தியாக நடப்பித்ததைச் சொற்சீரடியென்னுங் கட்டுரைச் செய்யுளாற் சொல்லுதல்.

"சொற்சீ ரடியாற் குலமுறை கிளத்தல்
பொற்புற மொழிதல்மெய்க்கீர்த்தி மாலை." (இல. விள.)

**536.** Sonnet on the fame of the good.

**புகழ்ச்சிமாலை**—மாதர்களின் சிறப்பை அகவலடியும் கலியடியும் மயங்கிவந்த வஞ்சிப்பாவால் கூறுதல்.

**537.** Sonnet on the name of a person.

**நாமமாலை**—அகவலடியும் கலியடியும் விரவிவந்த வஞ்சிப்பாவால் ஆண்மகனைச் சிறப்பித்துப் பாடுதல்.

"மயக்க வடிபெறு வஞ்சிப் பாவால்
வியத்தகு நல்லார் விழுச்சீ ருரைத்தல்
புகழ்ச்சி மாலை புருடர்க் குரைப்பின்
நாம மாலை யாமென நவில்வர்." (இல. விள.)

**538.** Sonnet on chastity of women.

**தாரகைமாலை**—அருந்ததிக் கற்பின் மகளிர்க்குள்ள இயற்கைக் குணங்களை வகுப்பாற் கூறுதல்.

"வகுப்பாற் கற்புடை மகளிர்க் குள்ள
தகைத்திறங் கூறுதல் தாரகை மாலை." (இல. விள.)

**539.** Sonnet on the incarnations of Vishnu.

**உற்பவமாலை**—விஷ்ணுவின் தசாவதாரத்தை ஆசிரியவிருத்தத்தாற் கூறுதல்.

"அரிபிறப் பொருபது மகவல் விருத்தத்
துரியிற் புகற லுற்பவ மாலை." (இல. விள.)

**540.** Sonnet on flag and army.

**தானைமாலை**—அகவலோசையிற் பிறழாத ஆசிரியப்பாவால் இராஜன்முன் எடுத்துச்செல்லும் கொடிப்படையைக் கூறுவது.

**541.** Sonnet on the assembling of an army.

**வரலாற்று வஞ்சிமாலை**—படையெடுத்துச் செல்வதைப் பாடுவது.

**542.** Sonnet on fight and battle-field.

**செருக்கள வஞ்சிமாலை**—யுத்தகளத்தில் நடந்த சண்டையைப் பாடுதல்.

N.B.—இன்னமும் புறத்திணைத் துறைப்பொருளுக்கிசையப் பாடப்படு மாலைகளெல்லாம் அவ்வத்துறைப்பெயராற் கூறப்படும்.

உ—ம். நொச்சிமாலை, காஞ்சிமாலை, உழிஞைமாலை, வாகைமாலை, தும்பைமாலை, &c.

"ஆசற வுணர்ந்த வரசர் பாவாற்
றூசிப் படையைச் சொல்வது தானே
மாலை யாகும் வரலாற்று வஞ்சி
ஞாலமேற் றானை நடப்பது சொல்லின்
செருக்களங் கூறிற் செருக்கள வஞ்சி
விரித்தொரு பொருளை விளம்பினப் பெயராம்." (இல. விள.)

**543.** Sonnet on the babe in arms.

**குழமகன்** — கலிவெண்பாவால் மங்கையர் தம் கையிற்கண்ட பாலகனைப் புகழ்ந்து பாடல்.

"கலிவெண் பாவாற் கையினிற் கண்ட
குழமக னைச்சொலிற் குழமக னாகும்." (இல. விள.)

**544.** Sonnet on the beauty of a person from head to foot.

**கேசாதி பாதமாலை** —தலைமுதல் காலீறாகவும்
**பாதாதி கேசமாலை**—கால்முதல் தலையீறாகவும் } கலிவெண் பாவால் வர்ணித்துப் பாடுவன.

"அடிமுதன் முடியள வாக வின்சொற்
படர்வுறு கலிவெண் பாவாற் கூறல்
பாதாதி கேசங் கேசாதி பாத
மோதினப் பெயரா னுரைக்கப்படுமே." (இல. விள.)

**545.** Sonnet on an elephant.

**யானைத்தொழின்மாலை**—யானையிருந்த மலை காடு நதிகள், அவயவங்களின் அழகு, வயது, குலநன்மை, உயரம் நீளம் சுற்றளவு ஆகிய விவை இவ்வளவினவா யிருத்தல்வேண்டுமென்னும் இலட்சணம், மும்மதம் கொள்ளுதல், அடுத்தாரைக் கொல்லுதல், அரசனைக் காணின் அறிந்து வணங்குதல் முதலியவற்றை வஞ்சிப்பாவாற் பாடுதல்.

"நிலமெழி லுயர நேர்ந்த வயது
குலமள விலக்கண மும்மதங் கோட
லடுத்திடிற் கோறல்கண் டரசனை யறிதல்
தொடுத்தல் வஞ்சி யானைத் தொழிலாம்." (இல. விள.)

**546.** Sonnet on a victor over an elephant.

**வாதோரணமஞ்சரி**—யானையை மயக்கி வசப்படுத்தினவர், எதிர்த்த யானையை வெட்டிப் பிளந்தவர், அதனைப் பிடித்துக்கொண்டு

வந்து சேர்த்தவர் ஆகிய இவர்களது வீரச்செய்கையின் சிறப்பை வஞ்சிப்பாவாற் பாடுவது.

"யானைவயப் படுத்தி யடக்கின வருக்கு
மெதிர்பொரு மியானையை யீர வெட்டி
யடக்கின வருக்கு மதட்டிப் பிடித்துச்
சேர்த்த வர்க்கும் வீரச் சிறப்பை
வஞ்சியாற் பாடுவ ததுவா தோரண
மஞ்சரி யெனப்பெயர் வைக்கப் படுமே." (முத். வீரி.)

**547.** Sonnet on personal beauty.

**அங்கமாலை**—ஆண் பெண்ணுள் ஒருவரின் அவயவ அழகை வெண்பாவினுலாவது, வெளிவிருத்தத்தினுலாவது பாடுவது. இது பாதாதிகேசம், கேசாதிபாதம் போல்வது.

**548.** Sonnet on a donor.

**ஆற்றுப்படை**—விறலி, பாணர், கூத்தர், பொருநர் ஆகிய இந் நால்வருள் ஒருவர் பரிசுபெறப் போகும்போது, பரிசுபெற்றுத் திரும்புபவர் அவரை ஆற்றிடைக் கண்டு, அக்கொடையாளன் கீர்த்தி முதலியவற்றை ஆசிரியப்பாவாற் கூறுதல்.

"அகவற் பாவால் விறலி பாணர்
கூத்தர் பொருநர் நால்வரு ளொருவர்
பரிசிற் குப்போ வாரைப் பரிசு
பெற்று வருவா ராற்றிடைக் கண்டு
தலைவன் கீர்த்தியுங் கொடையுங் கொற்றமு
மறைவ தாற்றுப் படையா குமே." (முத். வீரி.)

**549.** Sonnet on envoys or spies.

**தூது**—பாணன் முதலாகிய உயர்திணைப் பொருளையும், அன்ன முதலாகிய அஃறிணைப் பொருளையும் தூது விடுத்தலைக் கலிவெண்பாவால் பாடல்.

"பயிறருங் கலிவெண் பாவி னுலே
யுயர்திணைப் பொருளையு மஃறிணைப் பொருளையுஞ்
சந்தியின் விடுத்தல் முந்துறு தூதெனப்
பாட்டியற் புலவர் நாட்டினர் தெளிந்தே." (இல. விள.).

**550.** தனிநிலைச் செய்யுட்கள் வளமடல் முதல் மஞ்சரியீறாகச் சொல்லப்பட்ட இருபத்திரண்டுமாம்.

"வளமட லுலாமட லுலா வனுராக
மாலைமெய்க் கீர்த்தி புகழ்ச்சி மாலை
நாம மாலை தாரகை மாலை
யுற்பவ மாலை தானை மாலை
வரலாற்று வஞ்சி செருக்கள வஞ்சி
பல்பொருள் வஞ்சி நிலைபெறு குழமகன்
பாதாதி கேசங் கேசாதி பாதம்
உவாத்தொழில் கூத்தர் முதலோர் தம்மை
யாற்றுப் படுத்தறா தாகு மிருதிணை
போற்றுமஞ் சரியெனப் புலவர் நிலைபெறச்
சாற்றப் படுமத் தனிநிலைச் செய்யுள்." (இல. விள.)

இவைகளில் சில, பல பாட்டுக்களாலாகி அகலக்கவியினுள் வந்து அமைதலு மியல்பாம்.

உ-ம். அன்னத்தைத் தூதுவிட்ட படலம் நைடதத்தின் ஓர் பாக மாயிருப்பது காண்க.

## அகலக்கவியின் விபரம்.

**551.** பெருங்காப்பியம் (The Epic.)—இக்கீழ்க்கண்ட சூத்திரப்படி இலக்கண மமைந்தது.

"பெருங்காப் பியநிலை பேசுங் காலை
வாழ்த்து வணக்கம் வருபொரு ளிவற்றினொன்
றேற்புடைத் தாக முன்வர வியன்று
நாற்பொருள் பயக்கு நடைநெறித் தாகித்
தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்
மலைகடல் நாடு வளநகர் பருவம்
இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து
நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்
பூம்பொழில் நுகர்தல் புனல்விளை யாடல்
தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்

புலவியிற் புலத்தல் கலவியிற் களித்தலென்
றின்னன புனைந்த நன்னடைத் தாகி
மந்திரந் தூது செலவிகல் வென்றி
சந்தியிற் றொடர்ந்து சருக்க மிலம்பகம்
பரிச்சேத மென்னும் பான்மையின் விளங்கி
நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்
கற்றோர் புனையும் பெற்றிய தென்ப." (இல. விள.)

உ-ம். கம்பர் இராமாயணம், &c.

552. காப்பியம் (The poem.)—அறம் பொருள் இன்பம் வீடென்னும் நான்கும் பயவாது சில குறைபாடுள்ளது.

காப்பியம் எனினும் காவியம் எனினும் ஒக்கும். இது சிறு காப்பியமெனவும்படும்.

உ-ம். அரிச்சந்திரபுராணம், &c.

"அறமுதல் நான்கிற் குறைபா டுடையது
காப்பிய மென்று கருதப் படுமே." (இல. விள.)

N.B.—பஞ்சகாவியம் என்பது (1) ஜீவகனின் சரித்திரமடங்கிய சிந்தாமணி, (2) கோவலன் என்ற செட்டியின் சரிதையடங்கிய சிலப்பதிகாரம், (3) வளையாபதி, (4) மணிமேகலை, (5) குண்டலகேசி என்ற ஐந்து நூல்களுக்கும் சிறப்புப்பெயர்.

தொடர்நிலைச் செய்யுள் பலவகைப்படும்.

553. பிள்ளைத்தமிழ் அல்லது பிள்ளைக்கவி (The childhood of a hero or heroine described in a poem.)—ஓர் தலைவன் சிறு குழந்தைப் பருவத்தைப்பற்றிக் காப்புமுதல் சிறு தேரீறாகிய பத்துப் பருவங்களும் முறையே பொருந்தும்படி ஒவ்வொன்றிற்குப் பத்துச் செய்யுள்வீதம் ஆசிரிய விருத்தத்தாலாயினும் வகுப்பாலாயினும் சிறப்பித்துப் பாடுவது.

இது ஆண்பாற் பிள்ளைக்கவியெனப்படும்.

உ-ம். மயூரகிரிநாதர் பிள்ளைத்தமிழ், &c.

N.B.-அரசர், தேவர்களைப் புகழ்ந்தே இது விசேஷம் பாடப்படும்.

இதின் பருவங்கள் பத்தும் பின் வருமாறாகும்.

(1) காப்பு = காக்கவென்று கடவுளைப் போற்றல்.
(2) செங்கீரை = தலையெடுத்து முகமசைத்தல்.
(3) தால் = தாராட்டல் (Lullaby).
(4) சப்பாணி = இருகரம் சேர்த்துக்கொட்டல் (Clapping of hands).
(5) முத்தம் = முத்தமிடுதல் (Kissing).
(6) வாரானை. = கைநீட்டல்.
[N.B.—Stanzas in this part end in "வாரானை"-இப்பருவத்தின் பாட்டுக்கள் "வாரானை" என முடியும்.]
(7) அம்புலி = (The moon) சந்திரனைக் காட்டல்.
(8) சிறுபறை முழக்கல்= Playing a small drum.
(9) சிற்றில் சிதைத்தல்= சிறுவீடுகளை யழித்தல்.
(10) சிறுதேர் உருட்டல்= Playing with a small car.

"கடுங்கொலை நீக்கிக் கடவுட் காப்புச்
செங்கீரை தால்சப் பாணி முத்தம்
வாரானை முதல வகுத்திடு மம்புலி
சிறுபறை சிற்றில் சிறுதே ரென்னப்
பெறுமுறை யாண்பாற் பிள்ளைப் பாட்டே." (இல. விள.)

இங்ஙனம் ஓர் தலைவியைக்குறித்தும் இப்பிள்ளைக்கவி பாடப் படும். அப்போது ஆண்பாற் பிள்ளைக்கவிக்குரிய பருவம் பத்தினுள் ஈற்றிலமைந்த சிறுபறை முழக்கல்முதலிய மூன்றனையும் நீக்கி அவற் றிற்குப் பதில், கழங்கு, அம்மானை, ஊசல் என்பவற்றைக் கூட்ட வேண்டும். இது பெண்பாற் பிள்ளைக்கவி யெனப்படும்.

உ-ம். ஸ்ரீமீனாக்ஷியம்மன் பிள்ளைத்தமிழ், &c.

கழங்கு = பாண்டியாடல்.
அம்மானை } = பாட்டுப்பாடுவது.
ஊசல் }

"அவற்றுட், பின்னைய மூன்றும் பேதையர்க் காகா
வாடுங் கழங்கம் மானை யூசல்
பாடுங் கவியால் பகுத்து வகுப்புட
னகவல் விருத்தத் தாற்கிளை யளவாம்." (இல. விள.)

இப்பிள்ளைக்கவியைப் பிறந்த மூன்றும் மாதம்முதல் இருபத்தோராம் மாதம்வரை ஒற்றித்த மாதம் வளர்பிறையில் பாடவேண்டும். இது தவறில், மூன்றும், ஐந்தாம், ஏழாம் வயதில் நல்ல சுபதினத்தில் ஆரம்பித்தலுமாகும்.

இதன் காப்புமாத்திரம் ஒன்பது அல்லது பதினொரு பாட்டாயிருக்கவேண்டும்.

"மூன்று முதல்மூ வேழு திங்களி
னொற்றை பெற்ற முற்றுறு மதியின்
கொள்ளுக பிள்ளைக் கவியைக் கூர்ந்தே." (இல. விள.)

"மூன்றைந் தேழா மாண்டினு மாகும்." (இல. விள.)

"ஒன்பது பதினொன் றென்பது காப்பே." (இல. விள.)

N.B.—காப்புப் பருவத்தில் பிள்ளையைக் காப்பதின்பொருட்டு எல்லாத் தேவர்களையும் துதித்துப் பாடுதலியல்பாகும்.

554. கலம்பகம்—ஒருபோகு அல்லது மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா, வெண்பா, கலித்துறையாகிய மூன்றும் முன்னும், புயவகுப்புமுதல் ஊசலீருகிய பதினெண்பொருட் கூறுபாடுகளும் பின்னுமாக, மடக்கு, மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், கலித்தாழிசை, வஞ்சிவிருத்தம், வஞ்சித்துறை, வெண்டுறையாகிய பாவும் பாவினமுமமைய இடையிடை வெண்பாக் கலித்துறை விரவ அந்தாதித் தொடையாற் பாடுவது.

உ-ம். திருவருணைக் கலம்பகம், இரங்கநாத முதலியாரியற்றிய கச்சிக்கலம்பகம், &c.

இதன் அங்கங்களும் போங்குகளும் பின்வரும் சூத்திரத்தி லமைந்தபடியாகும்.

"ஒருபோகு வெண்பாக் கலித்துறை யுறமுன்
வருபுய மதங்கம் மானை காலஞ்
சம்பிர தங்கார் தவங்குற மறம்பாண்
களிசித் திரங்கல் கைக்கிளை தூது
வண்டு தழைமேற் கொண்டெழு மூசன்
மடக்கு மருட்பா வஞ்சி விருத்தம்

அகவல் கலியின மகவல் விருத்தம்
வஞ்சி வஞ்சித்துறை வெண்டுறை மருவி
யிடையிடை வெண்பாக் கலித்துறை நடைபெற்
றந்தாதி மண்டலித் தாங்கலம் பகமே." (இல. விள.)

| | | |
|---|---|---|
| இது தேவனைப்பற்றியாயின் ——— | 100 | பாடலாம். |
| பிராமணனைப்பற்றியாயின் ——— | 100 or 95 | ,, |
| அரசனைப்பற்றியாயின் ——— | 90 | ,, |
| குறுநில மன்னனைப்பற்றியாயின் — | 90 | ,, |
| மந்திரிகளைப்பற்றியாயின் ——— | 70 | ,, |
| வணிகனைப்பற்றியாயின் ——— | 50 | ,, |
| வேளாளனைப்பற்றியாயின் ——— | 30 | ,, |

"அதுவே,
இமையவர்க் கொருநூ றிழிபைந் தையர்க்
கமைதரு மரசர்க் காகுந் தொண்ணூ
றமைச்சருக் கெழுபான் வணிகருக் கைம்பா
னமைத்தனர் பின்னவர் தமக்கா றைந்தே." (இல. விள.)

**555.** **பன்மணிமாலை**—மேற்சொல்லிய கலம்பக உறுப்புகளுள் ஒருபோகு, அம்மானை, ஊசல் ஆகிய இவை இல்லாது மற்ற எல்லா உறுப்புகளுமமையப் பாடுவது.

"அவற்றுள்,
ஒருபோ கம்மானை யூச லின்றி
வருவது பன்மணி மாலை யாகும்." (இல. விள.)

**556.** **மும்மணிக்கோவை**—அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறை ஆகிய மூன்றும் வகைக்கு முப்பதாக அந்தாதித்தொடை யாற் கூறுதல்.

"அகவல் வெண்பா அசையெண் கலித்துறை
தொகை முப்பதுபெறச் சொற்றொடர் நிலையிற்
கூறுதல் மும்மணிக் கோவை யாகும்." (இல. விள.)

**557.** **அகப்பொருட் கோவை** அல்லது **கோவை**—காமவின் பத்தைப்பற்றி அகப்பொருளிலக்கணம் அமைய நானூறு கட்டளைக் கலித்துறையாற் பாடுவது.

"முதற்பொருள் கருப்பொரு ளுரிப்பொருண் முகந்து
களவு கற்பெனும் வரைவுடைத் தாகி
நலனுறு கலித்துறை நானூ றாக
ஆறிரண் டுறுப்பு மூறின்றி விளங்கக்
கூறுவ தகப்பொருட் கோவை யாகும்." (இல. விள.)

ஆறிரண்டுறுப்பாவது, அகப்பொரு ளிலக்கணத்தில் சொல்லப்பட்ட திணை முதலாக உள்ள பன்னிரண்டு பாகுபாடுகள்.

உ-ம். வாணன் கோவை, &c.

N.B.—இக்கோவைகளைப் பாலியர் வாசித்தல் நல்லதன்று.

558. Poems named by feet, metre, length, &c.

**தொகைநிலைச்செய்யுள்**—அடி பா முதலியவற்றாலும், செய்யுள் அளவாலும் பேர்பெறுவது. இது பலவகையாகும்.

உ-ம். குறுந்தொகை, நெடுந்தொகை, கலித்தொகை, நறுந்தொகை, நாலடியார், திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஏலாதி, நான்மணிக்கடிகை, வள்ளுவர் முப்பால் முதலியன.

"நெடுந்தொகை குறுந்தொகை கலித்தொகை யென்னப்
படுந்தொகைச் செய்யுள் பற்பல வாகும்." (இல. விள.)

"நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தோ ரேத்துங் கலியே யகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை."

"நெடிலடிப் பாவாற் றொகுத்தது நெடுந்தொகை
குறளடிப் பாவாற் றொகுத்தது குறுந்தொகை
கலியிற் றொகுத்தது கலித்தொகை போல்வன
தொகைநிலைச் செய்யு ளெனச்சொலப் படுமே." (முத். வீரி.)

559. **இணைமணிமாலை**.—வெண்பாவும் அகவலும், அல்லது வெண்பாவும் கலித்துறையுமாக இணைந்துவர நூறுநூறாக அந்தாதித் தொடையாற் பாடுவது. இது பாட்டின் போங்குபோல வெண்பா வகவ லிணைமணிமாலை, வெண்பா கலித்துறை யிணைமணிமாலை யென வகுத்துக் கூறப்படும்.

"வெண்பா வகவல் வெண்பாக் கலித்துறை
பண்பா னீரைம் பஃதந் தாதி
யியலின் வகுப்ப திணைமணி மாலை." (இல. விள.)

**560.** இரட்டைமணிமாலை.—(a) அந்தாதித் தொடையில் இருபது பாட்டு வெண்பாவும், கலித்துறையுமாக விரைந்துவருவதும், (b) வெண்பாப் பத்தும் விருத்தம் பத்துமாக அந்தாதித்தொடையி லியைந்து வருவதுமாகும்.

"இருபது வெண்பாக் கலித்துறை யியையின்
வருவ திரட்டை மணிமாலை யாகும்." (இல. விள.)

"வெண்பா விருத்தம் வியப்புற விருபஃ
தெண்பட வுரைப்பது மிரட்டை மணிமாலை." (இல. விள.)

**561.** மும்மணிமாலை—வெண்பாவும், கலித்துறையும், அகவலும் அந்தாதித்தொடையாக முப்பது பாட்டு வருவது.

"வெண்பாக் கலித்துறை யகவலந் தாதிப்
பண்பால் முப்பது பகரின் மும்மணி
மாலை யென்று வகுத்தனர் புலவர்." (இல. விள.)

**562.** நான்மணிமாலை —வெண்பாவும், கலித்துறையும், அகவலும், விருத்தமும் அந்தாதித்தொடையாய் நாற்பது வருவது.

"வெண்பாக் கலித்துறை விருத்த மகவல்
பின்பேசு மந்தா தியினாற் பதுபெறின்
நான்மணி மாலை யாமென நவில்வர்." (இல. விள.)

**563.** இருபாவிருபஃது—பத்து வெண்பாவும், பத்து அகவலும் அந்தாதித்தொடையால் இருபது இணைந்து வருவது.

"ஒருபது வெண்பா ஒருபஃ தகவ
லிருபது வரினிரு பாவிரு பஃதே." (இல. விள.)

**564.** ஒருபாவொருபஃது—அகவலாவது, வெண்பாவாவது, கலித்துறையாவது அந்தாதித்தொடையில் பத்து வருவது.

"அகவல் வெண்பாக் கலித்துறை யதுகொண்
டொருபா ஒருபஃ தறினப் பெயராம்." (இல. விள.)

565. ஒலியந்தாதி—பல சந்தங்கள் கூடிப் பதினாறு கலை வகுப்பாகிய முப்பதுபாட்டு, வண்ணமாயும் அந்தாதித்தொடையாயும் வருவது.

"ஈண்டிய வண்ணமீ ரெண்கலை முப்பா
னூண்ட தொலியந் தாதி யாகும்." (இல. விள.)

566. பெயரின்னிசை வெண்பா—தொண்ணூறு, எழுபது, அல்லது ஐம்பது இன்னிசை வெண்பாக்களால் தலைவன் (Hero) பெயரைச் சிறப்பித்துப்பாடல்.

ஊரின்னிசை வெண்பா—மேற்சொன்னபடி தலைவன் ஊரைப் பாடல்.

பெயர் நேரிசை வெண்பா—மேற்சொன்னபடி தலைவன் பெயரை நேரிசை வெண்பாவால் பாடுவது.

ஊர் நேரிசை வெண்பா—மேற்சொன்னபடி நேரிசை வெண்பாவால் தலைவன் ஊரைப் பாடுதல்.

"இறைவன் பெயரூ ரிணையின் னிசையால்
முறையிற் றொண்ணூ றெழுபா னைம்பா
னறையி னப்பெய ராகு மென்ப." (இல. விள.)

"இன்னிசை போல விறைவன் பெயரூர்
தன்னி னியல்வது தானே ரிசையே." (இல. விள.)

567. வருக்கமாலை—மொழிக்கு முதலாகாநின்ற வருக்க வெழுத்துகள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு கவியாக அவ்வெழுத்தை முதலாகக்கொண்டு பாடுதல்.

அன்றியும் மொழிக்கு முதலாகாநின்ற பன்னிரண்டு உயிரெழுத்தாலும் இவ்வுயிரேறிய கசதநபமவ என்னும் எழு மெய்யெழுத்தாலும் ஆசிரியப்பா எட்டு வருவதும் அவ்வருக்க மாலையாம்.

"வருக்கத் தினைச்சொலல் வருக்க மாலை." (இல. விள.)

568. கைக்கிளை—ஒருதலைக் காமத்தை (Love) ஐந்து விருத்தத்தாற் கூறல்.

"ஒருதலைக் காமமோ ரைந்து விருத்தங்
கருத வுரைத்தல் கைக்கிளை யாகும்." (இல. விள.)

**569.** **மங்கலவள்ளை**—உயர்குல மங்கையை ஒன்பது வெண்பாவாலும், வகுப்பாலும் வர்ணித்துக் கூறல்.

"ஒன்பது வெண்பா வகுப்பா னுயர்குல
மங்கையைப் பாடுதல் மங்கல வள்ளை." (இல. விள.)

**570.** **மெய்க்கீர்த்திமாலை**—இராஜனிடத்து இராஜ காரியத்தைப்பற்றிச் சொற்சீரடியாற் புகழ்ந்து கூறல்.

N.B.—இது முன் சொன்ன தனிநிலைச் செய்யுள்போலாகாது அநேகம் பாட்டுக்கள் தொடர்ந்து வரும்.

"சொற்சீ ரடியாற் ருெழிற்படு புகழை
வேந்தர்பாற் கூறின் மெய்க்கீர்த்தி யாகும்." (இல. விள.)

**571.** **காப்புமாலை**—காக்கக்கடவது என்று மூன்று, ஐந்து, அல்லது ஏழு பாட்டுக்களாற் பாடல்.

"காப்புமூன் றைந்தேழ் காப்பு மாலையாம்." (இல. விள.)

**572.** **வேனில்மாலை**—இளவேனிலையும் முதிர்வேனிலையும் வர்ணித்துப்பாடுதல்.

"வேனிலைப் பாடுதல் வேனில் மாலை." (இல. விள.)

**573.** **பல்சந்தமாலை**-ஒவ்வொரு சந்தத்துக்கும் பத்துப் பத்துச் செய்யுளாக நூறு வரப் பாடுவது.

"பத்து முதலாகப் பப்பத் தீருய்
வைத்த வண்ண வகை பத்தாகப்
பல்சந்த மாலை பகரப் படுமே." (இல. விள.)

**574.** **அங்கமாலை** — ஆண் பெண்களின் அவயவங்களை வெண்பாவாலும், வெளிவிருத்தத்தாலும் பாதாதிகேசம் கேசாதிபாத முறை தவருதிருக்கும்படி அந்தாதித்தொடையாகப் பாடுதல்.

"மிக்க வுறுப்பை வெண்பா விருத்தந்
தொக்கவொடு முறையாற் ருெடர்வுறப் பாடுத
லங்கமாலை யாமெனப் பகர்வர்." (இல. விள.)

**575.** **வசந்தமாலை** (Spring.)—தென்றலைக்குறித்து அந்தாதித் தொடையால் வர்ணித்துப் பாடுதல்.

"வசந்த வருணனை வசந்த மாலை." (இல. விள.)

**576.** **நவமணிமாலை**—வெண்பா முதலாக வெவ்வேறு பாவாலும், பாவினத்தாலும் ஒன்பது பாட்டு அந்தாதியாய்ப் பாடல்.

"வெண்பா முதலா வேறே ரொன்பது
நண்பாக் கூற னவமணி மாலை." (இல. விள.)

**577.** **பரணி**—போரில் ஆயிரம் யானையைக் கொன்று வெற்றி கொண்ட வீரனைப் புகழ்ந்து பாடல்.

"ஆனை யாயிர மமரிடை வென்ற
மானவ னுக்கு வகுப்பது பரணி." (இல. விள.)

N.B.—இது அளவடி முதலாக எல்லா வடியானும் இரண்டடிப் பஃறொழிசையாற் கீழ்க்கண்ட சூத்திரப்படி கடவுள் வாழ்த்துமுதல் களம் விரும்பல் ஈறாகச் சொல்லப்பட்ட பொருளமையப் பாடுவது.

"(1) கடவுள் வாழ்த்துக் (2) கடைதிறப் புரைத்தல்
(3) கடும்பாலை கூறல் (4) கொடுங்காளி கோட்டங்
கடிகனை முரைத்தல் (5) காளிக் கதிசொலல்
(6) அடுபேய்க் கவள்சொல (7) தைனுற் றலைவன்
வண்புக ழுரைத்த லெண்புறத் திணையுற
(8) வீட்ட லடுகளம் வேட்ட லிவைமேல்
அளவடி முதலா வடியிரண் டாக
உளமகிழ் பரணி யுரைக்கப் படுமே." (இல. விள.)

**578.** **தசாங்கப்பத்து** — இராஜனுக்குரிய மலை, நதி, நாடு, ஊர், மாலை, யானை, குதிரை, கொடி, முரசு, ஆக்கினை ஆகிய தசாங்கத்தை (பத்து அங்கத்தை)ப் பத்துநேரிசைவெண்பாவாற் பாடுதல்.

N.B.—இது ஆசிரியவிருத்தம் பத்தாலமைந்து தசாங்கத்தயலெனப் பெயர்பெறுதலுமுண்டு.

"நேரிசை வெண்பா வானிரு பன்பெறு
தசாங்கத் தினைச்சொலல் தசாங்கப் பத்தாம்." (இல. விள.)

"அரசன் றசாங்க மாசிரிய விருத்தம்
ஐயிரண் டுறைவது தசாங்கத் தயலே." (முத். வீரி.)

"மலைநதி நாடூர் வனைதா ரிவுளி
கொலைமத களிறு கொடிமுர சானை
யிவையே தசாங்க மென்மனார் புலவர்." (இல. விள.)

579. பதிற்றந்தாதி—வெண்பா பத்தாயினும், கலித்துறை பத்தாயினும் அந்தாதித்தொடையில் பொருட்டன்மை விளங்கப்பாடுவது.

"வெண்பாப் பத்துக் கலித்துறை பத்துப்
பண்புற மொழிதல் பதிற்றந் தாதி." (இல. விள.)

580. நூற்றந்தாதி—நூறு வெண்பாவாவது, நூறு கலித்துறையாவது அந்தாதித்தொடையாய்ப் பாடுவது.

"நூறு வெண்பா நூறு கலித்துறை
கூறுத னூற்றந் தாதிக் கோளே." (இல. விள.)

581. அட்டமங்கலம்—அந்தாதித் தொடையாலாய ஆசிரிய விருத்த மெட்டால் கடவுளைத் துதித்து அவர் காக்கக்கடவரெனப் பாடல்.

"கடவுள் காக்க வெனக்கழி யிருநான்
கடைவுற வகவல் விருத்த மதனை
வகுப்ப தட்ட மங்கல மாகும்." (இல. விள.)

582. அலங்கார பஞ்சகம்—வெண்பா, கலித்துறை, அகவல், விருத்தம், சந்தவிருத்தம் ஆகிய இவைகள் மாறிமாறி வர நூறு செய்யுள் அந்தாதித்தொடையாகப் பாடுதல்.

"வெள்ளை கலித்துறை யகவல் விருத்தம்
எள்ளலில் வண்ண மிவையோ ரைந்தும்
அலங்கார பஞ்சக மாகு மென்ப." (இல. விள.)

583. ஊசல்—சுற்றத்தாரோடுங்கூடி வாழ்வதாக என்று கலித்தாழிசையினாலாவது, ஆசிரிய விருத்தத்தினாலாவது பாடல்.

"அகவல் விருத்தங் கலித்தா ழிசையாற்
பொலிதரு கிளையொடும்புகலுவ தூசல்." (இல. விள.)

584. சின்னப்பூ—நேரிசை வெண்பாவால் அரசர்க்குரிய தசாங்கத்தைப்பற்றி 100, 90, 70, 50 அல்லது 30 பாட்டுகள் பாடல்.

"மிக்க நேரிசை வெண்பா வதனாற்
தக்க தசாங்கந் தன்னை நூறு
தொண்ணூ றெழுப தைம்பது முப்பஃ
தெண்ணப் பாடிற் சின்னப் பூவே." (இல. விள.)

**585. சதகம்**—அகப்பொருளைப்பற்றியாயினும் புறப்பொருளைப்பற்றியாயினும் நூறு கவி பாடுதல்.

> "விளையு மொருபொருள் மேலொரு நூறு
> தழைய வுரைத்தல் சதக மென்ப." (இல. விள.)

**586. எண் செய்யுள்**—தலைவன் பெயர் ஊர்களைப் பத்துமுதல் ஆயிரமளவும் பொருள் சிறக்க அவ்வவ்வெண்ணாற் பெயர்பெறப் பாடுவது.

உ-ம். முத்தொள்ளாயிரம், அரும்பைத் தொள்ளாயிரம் முதலியன.

N.B.—செய்தோன் பெயரால் வழங்கும் பாரியது பாட்டும், கபிலரது பாட்டும் இதனு ளடங்கும்.

> "ஊரையும் பெயரையு முவந்தெண் ணாலே
> சீரிதிற் பாடலெண் செய்யு ளாகும்." (இல. விள.)

**587. ஐந்திணைச் செய்யுள்**—பொருளதிகாரத்தில் கூறியபடி, புணர்தல் முதலிய ஐவகை யொழுக்கமும் விளங்கக் குறிஞ்சி முதலிய ஐந்திணையையும் பற்றிப் பாடல்.

> "உரிப்பொரு டோன்ற ஓரைந் திணையுந்
> தெரிப்ப தைந்திணைச் செய்யு ளாகும்." (இல. விள.)

**588. நாழிகை வெண்பா** — தேவரிடத்தும் அரசரிடத்தும் நிகழும் காரியங்கள் கடிகையளவிற்றோன்றி நடப்பதாக முப்பத்திரண்டு நேரிசை வெண்பாவாற் பாடுதல்.

> "தேவ ரரசர் திறனே ரிசையான்
> மேவுங் கடிகையின் மேற்சென் றதனை
> நாலெட் டுறச்சொலல் நாழிகை வெண்பா." (இல. விள.)

**589. நானுற்பது** — காலம், இடம், பொருள் என்னு மிவற்று ளொன்றைப்பற்றி நாற்பது வெண்பாப் பாடல்.

உ-ம். கார்நாற்பது, களவழிநாற்பது, இன்னாநாற்பது, இனியா நாற்பது.

> "கால மிடம்பொருள் கருதி நாற்பான்
> சால வுரைத்த னாற்பதுவே." (இல. விள.)

**590. பயோதரப்பத்து** — முலையைப்பற்றிப் பத்துக்கவி பாடல்.

**நயனப்பத்து**—கண்ணைப்பற்றிப் பத்துக்கவி பாடல்.

அன்றியும், வில், வாள், வேல், செங்கோல், யானை, குதிரை, நாடு, ஊர், கொடை ஆகிய விவ்வொன்பதையும் பப்பத்து விருத்தத்தாற் கூறின், அவை அவ்வப்பெயரான் வழங்கும்.

உ-ம். வில்விருத்தம், வாள்விருத்தம், &c.

"பணைமுலை நயனத் தினைப்பப் பத்தா
வணைவுறப் புகற லிப்பத் தாகும்." (இல. விள.)

"வில்வாள் வேல்செங் கோல்பத மாபரி
நாடூர் கொடையை நயந்த பப்பத்து
விருத்த மொன்பதும் விளங்குமப் பெயரான்."(இல. விள.)

**591.** அகலக்கவி மேற்கூறியபடி பெயர் பெறுவதன்றி வேறு வகைபற்றியும் பெயர்பெறும். அவை வருமாறு:—

(a) பொருள்பற்றி வந்தவை—ஆசாரக்கோவை, &c.
(b) இடம்பற்றிவந்தவை—மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை, &c.
(c) காலம்பற்றி வந்தவை—வேனில் விருத்தம், வசந்தமாலை, &c.
(d) தொழில்பற்றி வந்தவை—யானைத்தொழில், ஊசல், &c.
(e) உறுப்புப்பற்றி வந்தவை—பயோதரப்பத்து, நயனப்பத்து, &c.
(f) எல்லைபற்றி வந்தவை—கேசாதிபாதம், பாதாதிகேசம், &c.
(g) செய்தோன் பெயர்பற்றி வந்தவை—அகத்தியம், தொல்காப்பியம், &c.
(h) செய்வித்தோன் பெயர்பற்றி வந்தவை.—பாண்டிக்கோவை, &c.

"பொருளிடங் காலந் தொழிலுறுப் பெல்லை
செய்தோன் செய்வித் தோன்பெய ராலே
யெய்து மகலக் கவிக்கிடும் பெயரே." (இல. விள.)

**592. தொடர்நிலைச் செய்யுள்கள்** பிள்ளைக்கவிமுதல் காப்பியம் ஈறாகச் சொல்லப்பட்ட ஐம்பத்தைந்தும் பிறவுமாம்.

"**பிள்ளைக் கவிமேற் கொள்ளுங் கலம்பகம்
பன்மணி மாலை மும்மணிக் கோவை
அகப்பொருட் கோவை தொகைப்படு செய்யுள்
இணைமணி மாலை யிரட்டை மணிமாலை**

மும்மணி மாலை நான்மணி மாலை
யிருபா விருபஃ தொருபா ஒருபஃ
தொலியந் தாதி மலிபுக ழின்னிசை
வருக்க மாலை திருத்தகு கைக்கிளை
மங்கல வள்ளை மற்றை யிரட்டை
நற்கீர்த்தி நேரிசை மெய்க்கீர்த்தி மாலை
காப்பு மாலை வேனில் மாலை
பல்சந்த மாலை யங்க மாலை
வசந்த மாலை நவமணி மாலை
பரணி தசாங்கப் பத்திரு பருதிய
பதிற்றந் தாதி நூற்றந் தாதி
அட்ட மங்கல மலங்கார பஞ்சகம்
ஊசல் சின்னப் பூவொரு பொருண்மேற்
பேசுஞ் சதகம் பிறவென் றைந்துங்
கூறு நலந்திணைக் கோவை யுற்ற
நாழிகை வெண்பா நாற்பதந் தோ
டியாழின் மொழிவிழி இணைமுலைப் பத்து
வில்வாள் வேல்கோல் வேழங் குதிரை
நாடூர் தொடையை நயந்த விருத்தம்
மாப்பெரும் புலவர்சொல் காப்பிய மென்னப்
பெயர்பெறுந் தொடர்நிலை பிறவு மன்ன." (இல. விள.)

**593.** இதுதவிர பின் வருவனவும் விசேஷம் என்பது சில திறத்தார் கட்சி.

**கண்படைநிலை**—அரசரும் அரசரைப்போன்ற பெரியோரும் ஓர் சபையில் வெகுநேரம் இருக்குமிடத்து வைத்தியர், மந்திரிகள் முதலியோர் தமக்குக் கண் துயில்கொள்வதைப்பற்றிக் கூறுதல்.

"அரசரு மரசர் தமைப்போல் வாரும்
அவைக்க ணெடிதுநா ளாக வைகிய
வழிமருத் துவரு மந்திரி மாரு
முதலியோர் தமக்குக் கண்டுயில் கோடலைக்
கருதி யுரைப்பது கண்படை நிலையே." (முத். வீரி.)

**594.** **புறநிலை**—உன் தெய்வம் உன்னைக் காக்க, நின் வழி வழி மிகுவதாகவெனப் பாடல்.

"நீவணங் கொருவ னினைப்பாது காப்ப
நின்னுடைய வழிவழிநீளுவ தாக
வெனவியம் புவது புறநிலை யென்ப." (முத். வீரி.)

**595.** **கையறுநிலை**—தலைவனும் தலைவியும் மரித்துப்போனவுடனே அவர்கள் கையால் பிழைத்தவர்கள், அவர்கள் செய்த நன்மைகளையெல்லாம் பிறருக்குத் தெரிய வழுத்தி, நாம் இறவா துயிர்பெற்றிருக்கிறோமேயெனப் பிரலாபித்தல்.

"கணவனொடு மனைவி கழிந்துழி யவர்கட்
பட்ட வழிவுப் பாக்கிய மெல்லாம்
பிறருக் கெடுத்தறி வுறுத்தித் தாமும்
இறந்துபடா தொழிந்த வாயத் தாரும்
வேண்டு வனபெறும் விறலியர் குழாமுந்
தனிப்பட ருழந்த செயலறு நிலையை
நிகழ்த்துவது கையறு நிலையா கும்மே." (முத். வீரி.)

**596.** **பதிகம்**—ஒரு பொருளின்மேல் பத்துக்கவி பாடல்.

"கோதிலோர் பொருளைக் குறித்தை யிரண்டு
பாவெடுத் துரைப்பது பதிக மாகும்." (முத். வீரி.)

**597.** **புறநிலை வாழ்த்து**—வழிபடுதெய்வம் உன்னைக் காக்க, நீ நாள்தோறும் குற்றமில்லாத செல்வத்தோடு சிறந்து வாழக்கடவதென மருட்பாவால் பாடல்.

"வழிபடு தெய்வ நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமோ டொருகாற் கொருகாற்
சிறந்து பொலிவா யெனமருட் பாவாற்
புகல்வது புறநிலை வாழ்த்தெனப் படுமே." (முத். வீரி.)

**598.** **முதுகாஞ்சி** — வயதில் முதிர்ந்தோர், இளைஞருக்குச் சொல்லும் புத்திமதிகளாகப் பாடுதல்.

"இளமை கழிந்தறிவு மிக்கோ ரிளமை
கழியாத வறிஞின் மாக்க டமக்கு
மொழியப் படுவது முதுகாஞ்சி யாகும்." (முத். வீரி.)

599. [1]**செவியறிவுறூஉ**—பெரியோரிடத்து அடக்கமுடையாராய் ஒன்றைச் சொல்லவேண்டுமென அவையடக்கமுற மருட்பாவாற் பாடுவது.

"பொங்குத லின்றிப் புரையோர் நாப்பண்
நவிறல் கடனெனவவை யடக்கியற் பொருளும்
மருட்பாவா லுரைப்பது செவியறி வுறூஉவே." (முத். வீரி.)

600. **எழுகூற்றிருக்கை**—ஏழறைகள் கீறி, சிறுபிள்ளைகள் முன்னே நின்றும், புகுந்தும், வெளிப்பட்டும் விளையாடுவதுபோலத் தப்பாமல் ஒன்று முதல் ஏழுவரையும் முறையாகப் பாடுவது.

"கோதி லேழறை யாக்கிக் குறுமக்கள்
முன்னின்றும் புக்கும் போந்தும் விளையாடும்
பெற்றி யால்வழு வாமை யொன்று
முதலாக வேழீ றாய்முறை யானே
யியம்புவ தெழுகூற் றிருக்கை யாகும்." (முத். வீரி.)

601. இனிச் சொல்லிலக்கண விதிப்படி பாட்டுகள் முத்தகச் செய்யுள், குளகச்செய்யுள் என இருவகைப்படும்.

**முத்தகச்செய்யுள்**—ஒரு பாட்டுத் தனி நின்று பிறபாட்டோடு சேராமல் பொருள் முடிபு பெறுவது.

உ—ம். அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு."

602. **குளகச்செய்யுள்**—இரண்டு மூன்று முதலிய பல பாட்டுகள் தொடர்ந்து ஒரு வினையைக்கொண்டு முடிவது.

உதாரணம்.

(1) "தணந்த வெந்திறற் கலியனைச் சபிக்குவ னென்னாக்
கணங்கொள் வண்டிமிர் தாரின னுளத்திடைக் கருத
லுணர்ந்த வெங்கலி தமயந்தி யுரைத்தசா பத்தால்
அணங்க ராவுமிழ் விடத்தினு லின்றள வயர்ந்தேன்."

(2) "இழைத்த தீவினை தணந்தன னின்றுதொட் டுன்பேர்
வழுத்தி னோரையும் மருவலன் மன்னவென் றேத்த
அழற்கொ டுஞ்சினந் தணிந்தன னுடல்வே லரசன்
குழைத்த தான்றியி லேறினன் கொடியவெங் கலியே."

[1] முன்னோர் மாணாக்கருக்குச் சாஸ்திரங்களைப் போதித்து ஓதும்போதும், பாட்டாகவே யிருப்பது சிரேஷ்டமென்று இங்ஙனம் நியமித்திருக்கிறார்கள். மருட்பாவில் அடி, தொடை, தளை, சீர் முதலியன தவறாய் வரினும் பிழையன்று. இக்காலத்தில பாட்டாய்ச் சாஸ்திரங்களைச் சிறுவருக்குப் பயிற்றுவிப்பது மகா தப்பிதமாக எண்ணப்படும்.

மூன்று பாட்டு குளகமாய் வந்ததற்கு உதாரணம் நைடதம் வீமன் தேடவிட்ட படலத்தில் கடைசி மூன்று பாட்டுமாம்.

"முத்தகச் செய்யுள் தனிநின்று முடியும்." (தண்டி.)

"குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்." (தண்டி.)

# CHAPTER XVIII.

## ASTROLOGY OF VERSE.

## யாப்பியல்—செய்யுட் பொருத்தம்.

**603.** தமிழிலக்கணிகள் வெண்பாமுதலிய நான்கு பாவிற்கும் அவற்றினியல்புக்குத் தக்கபடி சாஸ்திரோக்தமாய் சில வுரிமைகள் விதிப்பதுண்டு. அவை, ஜாதி, நிலம், நிறம், நாள், இராசி, கிரகம் முதலியவற்றைப் பற்றியனவாம்.

**ஜாதியுரிமை** (Caste of verse).—வெண்பா அந்தணர்க்கும், அகவல் அரசர்க்கும், கலிப்பா வணிகருக்கும், வஞ்சிப்பா சூத்திரர்க்கும் உரியனவாம்.

"மறையோர் மன்னர் வணிகர் சூத்திரர்க்கு
முறையான் வெள்ளை முதனான் கெய்தும்." (இல. விள.)

**604.** **நிலவுரிமை** (Place of verse).—வெண்பா முல்லை நிலத்துக்கும், அகவற்பா குறிஞ்சி நிலத்துக்கும், கலிப்பா மருத நிலத்துக்கும், வஞ்சிப்பா நெய்தல் நிலத்துக்கும், மருட்பா பாலை நிலத்துக்கும் உரியனவாம்.

"முல்லை குறிஞ்சி மருத நெய்தல்
வெள்ளை முதற்பா வினுக்குரி யனவே." (இல. விள.)

**605.** **நிறவுரிமை** (Color of verse).—வெண்பாவிற்கு வெண்மையும், அகவலுக்குச் சிவப்பும், கலிப்பாவுக்குக் கறுப்பும், வஞ்சிப்பாவுக்குப் பொன்னிறமும் உரியனவாம்.

"வெண்மை செம்மை கருமை பொன்மை
யுண்மை நிறம்பா வொருநான் கினுக்கே." (இல. விள.)

**606.** **நாளுரிமை** (Auspicious day of verse). — வெண்பாவிற்குக் கார்த்திகைமுதல் ஆயிலியம்வரை எழும், அகவலுக்கு மகம்முதல் விசாகம் வரை எழும், கலிப்பாவுக்கு அனுடம்முதல்

அவிட்டம்வரை ஏழும், வஞ்சிப்பாவுக்குச் சதயம்முதல் பரணிவரை ஆறும் ஆகிய நாட்களுரியனவாம்.

"கார்த்திகை முதலாக் கட்செவி காறும்
சீர்த்தகு வெண்பாச் சிறந்த நாளே." (இல. விள.)

கட்செவி = ஆயிலியம்.

"மகமுதல் விசாக வரையக வற்கும்
பனைமுதல் புள்வரை பகர்ந்திடு கலிக்கும்
சதய முதல்சோ றளவும் வஞ்சிக்கும்
உரிய வென்ப வுணர்ந்திசி னோரே." (இல. விள.)

பனை=அனுடம், புள்=அவிட்டம், சோறு=பரணி.

607. இராசியுரிமை (Fixed stars for verse).–வெண்பாவுக்குக் கற்கடகம், விருச்சிகம், மீனம் ஆகிய மூன்றும், அகவலுக்கு மேடம், சிங்கம், தனுசு ஆகிய மூன்றும், கலிப்பாவுக்கு மிதுனம், கும்பம், துலாம் ஆகிய மூன்றும், வஞ்சிப்பாவுக்கு ரிஷபம், கன்னி, மகரம் ஆகிய மூன்றும் உரியனவாம்.

"கற்கட கர்தேண் மீன மூன்று
முற்படு பாவி னிற்படு மிராசி
மேடமுஞ் சிங்கமும் வேணுவு மகவற்
பாடுறு மிதுனமுந் துலையுங் கும்பமுங்
கலிக்குரித் தாகு மிடபமுங் கன்னியும்
ஒலிப்படு மகரமும் வஞ்சிக் குரிய." (இல. விள.)

608. கிரகவுரிமை (Planets for verse).—வெண்பாவுக்குச் சந்திரனும், பிரகஸ்பதியும்; அகவலுக்குச் சூரியனும், செவ்வாயும்; கலிப்பாவுக்குப் புதனும், சனியும்; வஞ்சிப்பாவுக்குச் சுக்கிரனும், இராகுவும், கேதுவும் உரியவராவர்.

"திங்கள் வியாழஞ் செங்கதிர் செவ்வாய்
புந்திகன் மந்தன் புகர்பெறும் பாந்தள்
வெள்ளை முதனான் கினுக்கு மிரண்டிரண்
டெள்ளா வகையாற் கொள்ளுங் கோளே." (இல. விள.)

609. பூ, சாந்து, வஸ்திரம், ஆபரணம் ஆகிய இவைகள், அவ்வப்பாவின் நிறத்திற்கிசைய இருக்கவேண்டும்.

"பூவுஞ் சாந்துங் கலையு மணியும்
பாவுறு நிறமெனப் பாத்தனர் கொளலே." (இல. விள.)

**610.** இந்துக்கள் சாஸ்திரப்பொருத்தம் பார்ப்பவர்களாகையால், ஒரு தலைவனைப்பற்றியாகிலும், தலைவியைப்பற்றியாகிலும் அகலக்கவியாவது, தனிக்கவியாவது பாடும்போது, சிற்சில பொருத்தங்கள் அமையவேண்டும். அவை மங்கலம், சொல், எழுத்து, தானம், பால், வருணம், உண்டி, நாள், கதி, கணம் எனப் பத்துவகையாம். (Ten auspicious elements.)

"விரித்தபா மகட்கும் வேட்கு மிறைக்கும்
பொருத்தமீ ரைந்தும் போற்றல் வேண்டும்." (இல. விள.)

"மங்கலஞ் சொற்பால் வருண முண்டி
தான மக்கரம்நா டப்பாக் கதிகண
மானவீ ரைந்து மம்முதற் சீர்க்குப்
பொருத்த மென்னத் தெரித்தனர் புலவர்." (இல. விள.)

**611. மங்கலப்பொருத்தம்.**—வாழி, மாலை, சங்கு, தார், விசும்பு, கவி, கயல், சுடர், முரசு, கவரி, தோகை, நன்று, தாமரை, விளக்கு, மலர், பழனம், இடபம், செல்வம், சீர்த்தி, கீர்த்தி, ஞாயிறு, புயல், புனல், வேழம், களிறு, பரி, மதியம், தீபம் முதலியவையும், இக்கீழ்க்கண்ட சூத்திரத்துள்ளவையும், பிறவும் அகலக்கவிக்கும் மற்றவைக்கும் முதலில் மங்கலப்பொருத்தமாக அமையும் சொற்களாகும்.

"சீர்பொன் பூமணி திங்கள் பரிதி
கார்திரு வெழுத்துக் கங்கை யானை
கடனிலை மாவுல கம்சொல் நீர்தேர்
அமுதம் புகழ்நிலம் ஆரணம் கடவுள்
திகிரி பிறவும் செப்புமங் கலமே." (இல. விள.)

**612. சொற்பொருத்தம்.**—முதலில் மங்கலப் பொருத்தமாக வெடுத்துக்கொண்ட சொல்லமைந்த சீர் சிதையாமலும், திரிபின்றியும், பொருளமைந்தும், ஒரேபொருள் கொடுத்தும், சிறந்து மிருத்தல் சொற்பொருத்தமாகும்.

"சீர்நனி சிதைதல் சிறப்பின்றாய் நிற்ற
லீறு திரித லிரும்பொரு ளின்மை
பல்பொருள் பயத்தன் முதலிய பிறவும்
முதற்சீர் மொழிக்கா காவென மொழிப." (முத். வீரி.)

**613. எழுத்துப்பொருத்தம்.**—முதற்சீர், சமநிலையான இரண்டு, நான்கு, ஆறு, அல்லது எட்டு எழுத்துக்களாலாகாமல், வியனிலையாகிய மூன்று, ஐந்து, ஏழு அல்லது ஒன்பதெழுத்தாலாகி வருவது எழுத்துப் பொருத்தமாகும்.

N.B.—உலகம், அமுதம், ஆரணம், எழுத்து என்பனபோலச் சமநிலையாகி வரினும் மங்கலச்சொல்லாயிருப்பின் தவறாகாது.

"ஐந்தொடு மூன்றே மூஒறு மூன்றும்
ஆகும்நா லாறெட் டெழுத்தா காவே." (முத். வீரி.)

**தானப்பொருத்தம்.**—குற்றெழுத்தைந்துடன் அவற்றிற் கினமாகிய நெட்டெழுத்தைந்தையும் தனித்தனி சேர்ப்பதோடு, ஐகார ஔகாரங்களையும் இகர உகரங்களோடு சேர்த்து, அ, ஆ பாலன், இ, ஈ, ஐ குமாரன், உ, ஊ, ஔ இராஜன், எ, ஏ மூப்பு, ஒ, ஓ மரணம் என்னுந் தானங்களாக வகுத்து, தலைவன் பெயரின் முதலெழுத்தைப் பாலதானமாகக் கொண்டு மங்கலச்சொல்லின் முதலெழுத்தோ டெண்ணிப் பார்க்கும்போது, அது பின்னிரண்டு தானங்களாகிய மூப்பு, மரணமென்பவற்றி லொன்றாய் வரின் தீமையெனத் தள்ளலும், முன் மூன்று தானங்களாகிய பாலன், குமாரன், இராஜன் என்பவற்றுளொன்றாய் வரின் நன்மையெனக் கொள்ளலுந் தானப்பொருத்தமாகும்.

உயிர்மெய்யாயினும் இவ்வாறே கொள்ளப்படும்.

"அஆ இஈ ஐயும் உஊ
ஔவும் எஏ ஒஓ என்றிவை
பாலன் குமார னிராசன் மூப்பு
மரண முறையே யைந்து மெண்ணுக
மூப்பு மரணமும் முதற்சீர்க் காகா." (முத். வீரி.)

N.B.—பட்சிசாஸ்திரம் பார்த்தவருக்கு இதன் வகை விளங்கும்.

**614. பாற்பொருத்தம்.**—குற்றெழுத்து ஐந்தும் ஆண்பாலும், நெட்டெழுத்து ஏழும் பெண்பாலும், ஆய்தம் மெய் இரண்டும் அலியுமாகும். இவற்றுள் ஆண்பாலைப் புகழ்ந்து கூறுமிடத்து ஆண்பாலெழுத்தும், பெண்பாலைப் புகழ்ந்துகூறுமிடத்துப் பெண்பாலெழுத்தும் முதற்சீர்க்கண் வருவது சிறப்பாம். இங்ஙனம் வராது மயங்கி வரினும் தவறல்ல. இது பாற்பொருத்தமாகும்.

"ஆடூஉக் குறினெடி லாகு மகடூஉப்
பேடொற் றுய்தம் பெண்ணாண் புகழ்ச்சிக்
கவ்வெழுத்து மயங்கினும் அமையு மென்ப." (இல. விள.)

N.B.—ஆண்பாலுக்குப் பெண்பாலெழுத்தும் பெண்பாலுக்கு ஆண்பாலெழுத்தும் மாறிவரின் வழுவாமென்பது சிலருடைய துணிபு.

"குறிலா ணெடில்பெண் ணுந்தனி நிலைமெய்
அலியாம் பெண்ணிரே டாண்பாற் புணர்ச்சிக்
கவ்வவ் வெழுத்தாம் மயங்கினும் வழுவே." (முத். வீரி.)

**615. வருணப்பொருத்தம்.**—உயிரெழுத்துப் பன்னிரண்டும், க, ங, ச, ஞ, ட, ண என்னு மாறு மெய்யும் அந்தணர்க்கும், த, ந, ப, ம, ய, ர என்னுமாறு மெய்யும் அரசர்க்கும், ல, வ, ற, ன என்னும்நான்குமெய்யும் வணிகர்க்கும், ழ, ள என்னு மிரண்டு மெய்யும் சூத்திரர்க்கும் உரியனவாதலின் முதற்சீர்க்கண் அவ்வவ்வருணத்திற்குத் தக்கபடி அவ்வவ்வெழுத்துவரின் வருணப்பொருத்தமாகும்.

N.B.—விலக்கப்பட்ட நச்செழுத்துகள் வருணத்துக்குப் பொருத்தமாகவரின் இழுக்காகாது.

"பன்னீ ருயிரும் முன்னொற் றாறு
மன்னிய வந்தணர் வருண மாகும்." (இல. விள.)

"த,ந,ப,ம, ய,ரவெனச் சாற்றிய வாறும்
மனமகி ழரசர் வருண மாகும்." (இல. விள.)

"வ,ல,ற,ன வென்னு நான்கு புள்ளியு
மிவர்தரு வணிகர்க் கெய்து மென்ப." (இல. விள.)

"ழ,ளவெனு மிரண்டும் வளமையர்க் காகும்." (இல. விள.)

**616. உண்டிப்பொருத்தம்.**—அமுதவெழுத்து அ, இ, உ, எ; க, ச, த, ந, ப, ம, வ என்பனவாம்.

நச்செழுத்து யா, யோ, ரா, ரோ, லா, லோ, ளா, ளோ, ய், ர், ல், ள், ஃ, அளபெடை, மகரக்குறுக்கம் என்பனவாம். இவற்றுள் முதற்சீர்க்கண் சுபமுண்டாக நச்செழுத்தை நீக்கிப் பாடவேண்டும்; இது உண்டிப்பொருத்தமாம்.

N.B.—நச்செழுத்து வைத்துச் சபித்துப் பாடல் அறக்கவி யெனப்படும். காளமேகப்புலவர், கயிற்றுறு, ஆற்றூர், ஆறுமுகமங்கலம் என்ற கிராமங்களைச் சபித்துப் பாடியகவிகளைத் தனிப்பாடற்றிரட்டிற் பார்க்க. அன்றியும் நச்செழுத்து வரினும் மங்கல மொழியாயின் குற்றமாகாது.

"க,சு,த,ப, ந,ம,வ வேமொடு மகர
மிகர முகர மெகர நான்கும்
அமுத வெழுத்தென் றறைந்தனர் புலவர்." (இல. விள.)

"ய,ர,ல,ள வென்னு மெழுத்திணை யூர்ந்த
வாவு மோவு மந்நாற் புள்ளியு
மாய்தமு மஃகான் குறுக்கமு மளபு
மெய்தா நஞ்சென் றிகழ்ந்தனர் புலவர்." (இல. விள.)

## 617. நாட்பொருத்தம்.—

அ, ஆ, இ, ஈ ............கார்த்திகை எழுத்து.
உ, ஊ, எ, ஏ, ஐ ............பூராட ,,
ஒ, ஓ, ஔ ............உத்திராட ,,
க, கா, கி, கீ ............திருவோண ,,
கு, கூ............திருவாதிரை ,,
கெ, கே, கை ............புனர்பூச ,,
கொ, கோ, கௌ ............பூச ,,
ச, சா, சி, சீ............ரேவதி ,,
சு, சூ, செ, சே, சை............அசுவினி ,,
சொ, சோ, சௌ............பரணி ,,
ஞ, ஞா, ஞெ, ஞே, ஞொ............அவிட்ட ,,
த, தா ............சோதி ,,
தி, தீ, து, தூ, தெ, தே, தை............விசாக ,,
தொ, தோ, தௌ............சதைய ,,
ந, நா, நி, நீ, நு, நூ ............அனுட ,,
நெ, நே, நை ............கேட்டை ,,
நொ, நோ, நௌ............பூரட்டாதி ,,
ப, பா, பி, பீ............உத்திர ,,
பு, பூ ............அத்த ,,
பெ, பே, பை, பொ, போ, பௌ............சித்திரை ,,
ம, மா, மி, மீ, மு, மூ............மக ,,
மெ, மே, மை............ஆயிலிய ,,
மொ, மோ, மௌ ............பூர ,,
ய, யா............உத்திரட்டாதி ,,
யூ, யோ ............மூல ,,
வ, வா, வி, வீ............உரோகணி ,,
வெ, வே, வை, வௌ ............மிருகசீரிட ,,

"ஆவி முதனுன் கார லப்பான்
மேவிய வைந்தும் வியன் பூராடம்." (இல. விள.)

"மற்றைய மூன்று முத்திரா டம்மே." (இல. விள.)

"ககர வருக்கத் தொருநான்கு மிரண்டுந்
திகழ்திரு வோணந் திருவா திரையாம்
பிற்பான் மூன்று மூன்றும் பேசிற்
பொற்புறு புனர்தம் பூச மாகும்." (இல. விள.)

"சகர வருக்கந் தனிமுத னன்கும்
புகலுங் காலைப் புருட நான்மே
லைந்து மூன்று அச்சுவினி பரணி." (இல. விள.)

"உற்ற ஞகரத் தொருமூன் றினையு
மற்றை யவிட்ட மாமெனப் பகர்வர்." (இல. விள.)

"மன்னிய தகரத் திரண்டேழ் மூன்று
தன்னியற் சோதி விசாகஞ் சதையம்." (இல. விள.)

"ஆங்குறு நகரத் தாறு மூன்றுமூன்
ரோங்கும் பனைதுளங் கொளிபுரட் டாதி."(இல. விள.)

பனை=அனுடம், துளங்கொளி=கேட்டை.

"நற்பக ரத்தி னன்கிரண் டாறு
முற்படு முத்திரந் தொட்டு மூன்றே." (இல. விள.)

"ஆறு மூன்றுமூன் றுமக ரத்திற்
றேறு மகங்கட் செவியொண் பூரம்." (இல. விள.)

கட்செவி=ஆயிலியம்.

"உற்றயா விரண்டு முத்திரட் டாதி
யூயோ விரண்டு மேயும் மூலம்." (இல. விள.)

"எடுத்த வகரத் திருநான் கிற்கு
மடுத்த ரோகணி மான்றலை யாகும்." (இல. விள.)

மான்றலை=மிருகசீரிடம்.

618. தலைவன் அல்லது தலைவியின் பெயரின் முதலெழுத்தைப் பார்க்கின் அதற்குரிய நட்சத்திரம் இன்னதென விளங்கும். அதுமுதல் 27 நட்சத்திரத்தையும் எண்ணி, ஒன்பது ஒன்பதாய்ப் பிரிக்க, முதற்

பிரிவு ஜென்மமும், 2–ம் பிரிவு அனுஜென்மமும், 3–ம் பிரிவு உப ஜென்மமுமாம்.

இவற்றில், 1, 3, 5, 7 என்ற எண்ணில் வந்த நாட்களை பொருத்தமில்லனவாகத் தள்ளி, 2, 4, 6, 8, 9 என்ற எண்ணில் வந்த நாட்களைப் பொருத்தமுடையனவாகக்கொண்டு முதற்சீரை யெடுத்துச் சொல்லவேண்டும். இது நாட்பொருத்தமாம்.

ஆயினும் முதற்சீரோடு பொருத்த முடையனவாகக்கொள்ளும் நாட்களிலும், தலைவன் அல்லது தலைவி பெயரின் ஆதியெழுத்தினிராசி தொடங்கி எட்டாமிராசியினின்ற இரண்டேகால் நாளும், எண்பத்தெட்டாங்கால் நின்ற வைநாசிகநாளும் தள்ளத்தக்கனவேயாம்.

"இறைவன் பெயர்முத லெழுத்தை நோக்கி
யுறுநா ளிணைமூ வொன்ப தாக்கி
யொன்றுமூன் றைந்தே ழொருமூந் நிறத்தினு
மொன்று வண்ண முணைமுதற் சீர்க்கே." (இல. விள.)

"எட்டா மிராசியும் வைநா சிகமும்
விட்டு முதற்சீர் விளம்புதன் மரபே." (இல. விள.)

619. கதிப்பொருத்தம்.—தீயனவாகிய விலங்கின் கதிக்குரிய ஓ, ஒ, ய, ர, ல, ழ, ற என்னும் ஏழெழுத்தும், நரகர் கதிக்குரிய ஐ, ஔ, வ, ள, ன என்னு மைந்தெழுத்துமாகிய பன்னிரண்டையும் நீக்கி, நல்லனவாகிய தேவர்கதிக்குரிய அ, இ, உ, எ, க, ச, ட, த, ப என்னும் ஒன்பதெழுத்தும், மக்கட்கதிக்குரிய ஆ, ஈ, ஊ, ஏ, ங, ஞ, ண, ந, ம என்னும் ஒன்பதெழுத்துமாகிய பதினெட்டனுள் ஏற்பன முதற்சீர்க்கண் முதலில் பொருந்திவருவது கதிப்பொருத்தமாகும்.

N.B.—ஆகாவென்று விலக்கப்பட்ட கதிக்குரிய வெழுத்தும் எடுத்துக்கொண்ட மங்கலச்சொல்லின் முதலெழுத்தாய் வரின் குற்றமாகாது.

"அ, இ, உ, எவொடு க, ச, ட, த, பவாம்
ஒன்பதுந் தேவர் கதியாம் ஆ, ஈ,
ஊ, ஏ, ங, ஞ, ண, ந, ம, வா மொன்பதும்
மாந்தர் கதிஒ. ஓ, ய, ர, ல, ழ, ற
விலங்கின் கதிஐ, ஔவொடு, வ, ள, ன
ஐந்தும் நரகர் கதியா மிவற்றுள்
முன்னவை நல்லன பின்னவை தீயன." (முத். வீ. ரி.)

**620. கணப்பொருத்தம்.**—தீயனவாகும் கருவிளங்காயாகிய அந்தரகணமும், கூவிளங்காயாகிய சூரியகணமும், தேமாங்கனியாகிய வாயுக்கணமும், புளிமாங்கனியாகிய தீக்கணமுமாகிய நான்கும் ஒழிய, நல்லனவாகும் தேமாங்காயாகிய இந்திரகணமும், புளிமாங்காயாகிய சந்திரகணமும், கருவிளங்கனியாகிய நிலக்கணமும், கூவிளங்கனியாகிய நீர்க்கணமும் ஆகிய நான்கனு ளொன்று முதற்சீராய்ப் பொருந்துவது கணப்பொருத்தமாகும்.

"தேமாங் காயிந் திரகணம் புளிமாங்
காய்சந் திரகணங் கருவிள மென்கனி
நிலக்கணங் கூவிளங் கனிநீர்க் கணமிவை
யாகுங் கருவிளங் காயந் தரகணங்
கூவிளங் காயிர விக்கணந் தேமாங்
கனிகாற் கணம்புளி மாங்கனி தீக்கணம். (முத். வீரி.)

காற்கணம்=வாயுக்கணம்; கால்=காற்று, வாயு.

**621. குற்றவானந்தங்கள்.**—எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய இவ்வைந்தின் குற்றமும், இவற்றின் ஆனந்தமும் வராமல் செய்யுள் அமைக்கவேண்டியது.

இவற்றுள், எழுத்துமுதலாகிய வைந்தின் குற்றமும், ஆனந்தமுமாவன, முறையே அவ்வவற்றிற்கு விதிக்கப்பட்ட இலக்கணமுறை பிறழ்ந்து வருவனவும், அவ்வவற்றிற்குரிய நிலை பிறழ்ந்து வருவனவுமாம்.

"யாப்பினு ளெழுத்துச் சொற்பொருள் யாப்பணிக்
குற்றமு மைவகை குறிக்குமா னந்தமும்
வாரா தமைப்பது வழுவில வாகும்." (முத். வீரி.)

"எழுத்துக் குற்ற மெழுத்திலக் கணத்தில்
வழுத்திய முறையின் மாறு பட்டு
வருவ தாமென வழுத்தப் படுமே." (முத். வீரி.)

"ஏனைய குற்றமு மிவற்றோ ரற்றே." (முத். வீரி.)

"ஆனந்த மைவகை யறையுங் காலை
எழுத்துநிலை பிறழ்ந்தன வெழுத்தா னந்தம்." (முத். வீரி.)

"சொல்லா னந்தஞ் சொன்னிலை பிறழ்ந்தன." (முத். வீரி.)

"பொருணிலை பிறழ்வன பொருளா னந்தம்." (முத். வீரி.)
"யாப்பி னிலைபிறழ்வன யாப்பா னந்தம்." (முத். வீரி.)
"அணிநிலை பிறழ்ந்து வருவன வணியா
னந்த மாமென நவிலப் படுமே." (முத். வீரி.)

## CHAPTER XIX.

## யாப்பியல்—செய்யுட் குணம் குற்றங்கள்.

### செய்யுட் குணம்—POETICAL STYLE.

**622.** **சம்ஸ்கிருதபாஷை** முன் வடஇந்தியாவிலும், மத்திய மேல்இந்தியாவிலும் வழங்கிவந்தது. இந்துக்கள் சரித்திரப்படி, இந்தியாவில் (56) ஐம்பத்தாறு தேசங்களிருந்தன. இவைகளில் அநேக தேசங்களில் இவ்வாரியபாஷைவழங்கிவந்தகாலத்து ஒன்றில் ஒருவிதமாயும் மற்றொன்றில் வேறுவிதமாயும் பேதப்பட்டிருந்தது.

**623.** நருமதைநதிதீரத்திலுள்ள **விதர்ப்பநாட்டில்** வழங்கிவந்த சம்ஸ்கிருதபாஷை சிறந்ததாகவும், இதற்கடுத்ததும் மேல்கடற்புறமுள்ளதுமான கொங்கணதேசம் என்னும் **கௌட நாட்டில்** வழங்கிவந்தது சற்றுத் தாழ்ந்ததாகவும் எண்ணப்பட்டது. ஆகவே சம்ஸ்கிருத சுலோகங்கள் **வைதருப்பநெறி** பற்றியதென்றும், **கௌட நெறி** பற்றியதென்றும் இருவிதமாயின. ஆரியர் தமிழ்நாட்டை ஜெயித்துக் குடியேறித் தமிழைக் கற்றபோது, தமிழ்ப்பாட்டுகளும் இவ்விருவகைநெறிகளை யநுசரித்திருத்தலின், அவற்றையும் அவ்வாறே வகுத்தனர். ஆகவே தமிழ்ப்பாட்டுகளும் **வைதருப்பநெறி** பற்றியதென்றும், **கௌடநெறி** பற்றியதென்றும் இருவகைப்பட்டன.

"வைதருப் பம்மே கௌட மென்றாங்
கெய்திய குணமோ ரிருவகைப் படுமே." (இல. விள.)

**624.** அவற்றுள், **வைதருப்பநெறியாவது**—செறிவு, தெளிவு, சமநிலை, இன்பம், ஒழுகிசை, உதாரம், உய்த்தலில் பொருண்மை, காந்தம், வலி, சமாதியென்னும் பத்துக்குணங்களையும் ஏற்றுவருவது.

**கௌடநெறியாவது** — இவற்றை ஏற்காது வருவது; இவை எல்லாவற்றையும் ஏலாவிடினும் சிலவற்றையேனும் ஏற்று வரும்.

**625.** (1.) *அப்பத்துக்குணங்களில்,* **செறிவு** *அல்லது* **சிலீட்டம்** (Close construction.)—*மூவின மெய்களுள் வல்லினமெய் மிகுந்து நெகிழிசையில்லாது தொடுப்பதும், சொல்லும் பொருளும் நெருங்கித் தொடுப்பதுமாம். வல்லினமல்லாத ஏனையவெழுத்து விரவிநெகிழிசையாய் வரவேண்டுமென்பது கௌடர் துணிவு.*

உ-ம். "*கற்க கசடறக் கற்பவை கற்றபின்*
*நிற்க அதற்குத் தக.*" (*வைதருப்பம்.*)

"*இல்லானை அஞ்சுவான் அஞ்சுமற் றெஞ்ஞான்றும்*
*நல்லார்க்கு நல்ல செயல்.*" (*கௌடம்.*)

**626.** (2.) **தெளிவு** (Conspicuity.)—*கருதப்பட்ட பொருள் வாசிப்போருக்கும் கேட்போருக்கும் விளங்கத் தோன்றுவதாம். பொருட்டெளிவில்லையாயினும் சொல்வளம் பொருந்தியிருந்தால் போதுமென்பது கௌடர் துணிவு.*

உ-ம். "*பிறர்க்கின்னா முற்பகல் செய்யில் தமக்கின்னா*
*பிற்பகல் தாமே வரும்.*" (*வைதருப்பம்.*)

"*பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற*
*செய்யாமை செய்யாமை நன்று.*" (*கௌடம்.*)

**627.** (3.) **சமநிலை** (Proportionate use of all kinds of letters.)—*பாட்டின் அடிகள் ஒவ்வொன்றிலும் வன்மை மென்மை இடைமை முதலியவையும், நெடில் குறில்களும் கலந்து வருதலாம். இங்ஙனம் வராது பொருள் சிறந்து பிராசமுதலிய அலங்காரம் அமைந்துவருவதே சிறந்ததென்பது கௌடர் துணிவு.*

*உதாரணம்.*

"*சோக மெவன்கொல் இதழிபொன் றூக்கின சோர்குழலாய்*
*மேக முழங்க விரைசூழ் தளவங் கொடியெடுக்க*
*மாக நெருங்க வண்டானங் களிவண்டு பாடவெங்குந்*
*தோகை நடஞ்செய வன்பர்திண் டேரினித் தோன்றியதே.*"
(*வைதருப்பம்.*)

"*இடர்த்திறத் தைத்துறப் பொற்றொடி நீயிடித் துத்தடித்துச்*
*சுடர்க்கொடித் திக்கனைத் திற்றடு மாறத் துளிக்குமைக்கார்*
*மடக்குயிற் கொத்தொளிக் கக்களிக் கப்புக்க தோகைவெற்றிக்*
*கடற்படைக் கொற்றவன் பொற்கொடித் தேரினிக் கண்ணுற்றதே.*"
(*கௌடம்.*)

628. (4.) இன்பம் (Sweetness.)—வழிமோனை, வழி எதுகை முதலிய தொடைகளால் சுவைபொருந்திய சொற்களும் சுவை பொருந்திய பொருளும் அமைய வருவதாம். இவற்றுள் சொற்சுவை நீக்கிப் பொருட்சுவைமாத்திரம் ஒப்புக்கொள்வது கௌடர் துணிவு.

உதாரணம்.

"தோண்மிடைந்தன தூண்மிடைந்தென
வாண்மிடைந்தன வான்மின்மிடைந்தென
தாண்மிடைந்தன தம்மின்மிடைந்தென
ஆண்மிடைந்தன ஆழிமிடைந்தென." (சொற்சுவை.)

"இழைத்தநாள் எல்லை இகவா பிழைத்தொரீஇக்
கூற்றங் குதித்துய்ந்தா ரீங்கில்லை ஆற்றப்
பெரும்பொருள் வைத்தீர் வழங்குமி னாளைத்
தழீஇந்தழீஇந் தண்ணம் படும்." (பொருட்சுவை.)

(வைதருப்பம்.)

"மாதெறிந் திட்ட மாலை மன்னவன் கழுத்தில் ஆழச்
சூதில்லா மதித யன்செய் தோத்திரத் தாலே யந்தக்
கோதில்கல் யாண சாங்கங் குறித்தமண் டபத்தை நாடி
மாதவ மிகு வதிஷ்டர் மகிழ்வுடன் வருகின் றாரே." (கௌடம்.)

629. (5.) ஒழுகிசை (Easy agreeability.)—வெறுப்பை யுண்டாக்காது கேட்கக் கேட்கச் செவிக்கின்பந்தரத்தக்க சொற்கள் வரத் தொடுப்பதாம். இது வேண்டாமை கௌடர் துணிவு.

உ—ம். "அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்." (வைதருப்பம்.)

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு." (கௌடம்.)

630. (6.) உதாரம் (Not bluntly plain.)—பதங்கள் இயல்பாகக்கொள்ளுங் கருத்தைவிட்டுக் குறிப்பினால் வேறு கருத்துப்பட வருவதாம். இது இருதிறத்தாராலும் விரும்பப்பட்டது.

உ—ம். "ஒற்றை யாழியந் தேரவன் உயர்மதில் கடக்கப்
பெற்றி லாமையிற் பிறங்குபொற் கதவங்கள் திறக்கும்
அற்றம் நோக்குவன் அங்கலா ரியல்புற வணியக்
கற்றை வெண்மதி சாளரத் தாடியிற் காட்டும்."

[இதில் மதிலினுயர்வு குறிப்பாற் றோன்றினமைகாண்க.]

631. (7.) புலன் அல்லது உய்த்தலில் பொருண்மை (Explicit clearness.)—கருதிய பொருளைத் தெளிவுற விளக்குஞ்

சொற்களை யமைத்துப் பாடுதலாம். கருகலான சொற்களையமைப் பது கௌடர் துணிவு.

உ-ம். "நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று." (வைதருப்பம்.)
"ஒல்லேங் குவளைப் புலாஅன் மகன்மார்பிற்
புல்லெருக்கங் கண்ணி நறிது." (கௌடம்.)

**632.** (8.) **காந்தம்** (Being true to nature.) — உலக இயற் கைக்கிசைய ஒருபொருளைப் புகழ்ந்து பாடுதலாம். கௌட நெறி யார் இதை யனுசரியார்.

உ-ம். "சொன்ன நான்முகன் றன்வழி தோன்றினர்
முன்னை யோருள் உயர்தவ முற்றினோர்
உன்னில் யாருளர் உன்னரு ளெய்திய
என்னில் யாருள ரிற்பிறந்தா ரென்றான்." (வைதருப்பம்.)

"வார்த்தை யன்னதாகவா னியங்குதேரி னான்மகன்
நீர்த்தரங்க வேலையஞ்ச நீலமேக நாணநேர்
வேர்த்துமண்ணு ளோரிரிந்து விண்ணுளோர்கள் விம்மமேல்
ஆர்த்தவோசை யீசனுண்ட வண்டமுற்று முண்டதே."
(கௌடம்.)

**633.** (9.) வலி (Rhythmatic euphony.)—தொகைநிலைத்தொ டர்கள் மிகுந்துவரப் பாடுவதாம். இத்தொடர்கள் மிகவும் மிகுந்து வரவேண்டுமென்பது கௌடர் துணிவு.

உ-ம். "கானிமிர்த்தாற் காண்பரிய வல்லியோ புல்லாதார்
மானனையார் மங்கலநா ணல்லவோ—தான
மழைத்தடக்கை வார்கழற்கான் மானவேற் கிள்ளி
புழைத்தடக்கை நால்வாய்ப் பொருப்பு." (வைதருப்பம்.)

"செங்கலசக் கொங்கைச் செறிகுறங்கிற் சீறடிப்பேர்ப்
பொங்கரவ வல்குற் பொருகயற்கட்—செங்கனிவாய்க்
காருருவக் கூந்தற் கதிர்வளைக்கைக் காரிகைத்தா
மோருருவென் னுள்ளத்தே யுண்டு." (கௌடம்.)

**634.** (10.) **சமாதி**—முக்கியப்பொருளின் வினையை அல்லது பெயரை அதன் ஒப்புப்பொருளில் ஆரோபித்து வர்ணிப்பது. இது உவமானம், உருவகம் என்னும் அலங்காரமுமாகலாம். இது இருதி றத்தாரும் அநுசரித்துவருவது.

உ-ம். "அகலிரு விசும்பிற் பாயிருள் பருகி
பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பரிதி."

"காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்."

635. இப்பத்துக் குணங்களும் இன்றியமையாச் சிறப்பினவாகிய விசேஷமுடையனவாகலின் செய்யுள்களில் இப்பத்தும் அமையவாராவிடத்து உவமானமுதலிய அலங்காரங்களிருந்தும் சிறப்பின்றாய் முடியும். அன்றியும், இதுகாறுங் கூறியவாற்றால், சொல்வன்மையின்றிப் பொருள் எளிதில் விளங்கத்தக்கதாய் வருவது வைதருப்பமெனவும், சொல்வன்மையும், பொருளாழமுமுடைத்தாய் வருவது கௌடமெனவும் ஆணியப்படும். இவ்விரண்டு நெறியுங்கலந்துவருவது பாஞ்சாலமெனப்படும்.

தேசங்கள்தோறும் பாஷைகள் வேறாகலின் கவிஞர்கள் அவ்வத்தேசரீதிகளை யநுசரித்துக் கவிகள் அமைக்கிறார்கள். அவற்றை இவ்வித குணவிதியாகிய உரைகல்லில் உரைத்து, அவற்றின் சிறப்பை அல்லது இழிவைக் காண்பது ஆன்றோர் கடனாகும்.

These laws are classical tests of criticism for Poetry.

"நெகிழிசை யின்றிய செறிவி னானும்
பொருள்புலப் படவருந் தெளிவி னானும்
விரவத் தொடுக்குஞ் சமநிலை யானும்
சொலினும் பொருளினுஞ் சுவைபடு நெறியா
னல்லன தொகுக்கு மின்பத் தானும்
வெறுத்திசை யில்லா வொழுகிசை யானும்
குறிப்பி னொருபொரு ளுறிப்படத் தோன்றுஞ்
சிறப்புடை யாபி னுதாரத் தானும்
கருதிய பொருளைத் தெரிவுற விரித்தற்
குரியசொல் லுடைய வய்த்தலிற் பொருண்மையும்
உலகொழுக் கிறவா உயர்புகழ் காந்தமுந்
தொகைமிக வருஉந் தகைமிகு வலியும்
உரிய பொருளன்றி ஒப்புடைப் பொருள்மேல்
தருவினை புணர்க்குஞ் சமாதியு மெனமுறை
யாய்ந்தவை தருப்ப மையிரு வகைத்தே." (இல. விள.)

"கௌட மென்பது கருதிய பத்தொடுங்
கூடா தியலுங் கொள்கைத் தென்ப." (தண்டி.)

## செய்யுட் குற்றம்.—FAULTS IN POETICAL COMPOSITION.

**636.** செய்யுள் அமைப்பதில் சில குற்றங்கள் நேரிட்டு அதின் சிறப்பைக் கெடுக்கும். அவைகள் இன்னவையென்று கண்டு அவற்றை நீக்கிக் குற்றமறச் செய்யுள் பாடுவது உத்தமம். இப்படிப்பட்ட குற்றங்கள் பின்வந்த சூத்திரத்திற் கண்டபடி பதினைந்தாம்.

"பிரிபொருட் சொற்றொடர், மாறுபடு பொருண்மொழி,
மொழிந்தது மொழிவே, கவர்படு பொருண்மொழி,
நிரனிறை வழுவே, சொல்வழு, யதிவழுச்,
செய்யுள் வழுவே, சந்தி வழுவென
எய்திய வொன்பதோ டடனே, காலங்,
கலையே, உலக, நியாய, மா கமமென
மலைவிரு மூன்றும் வரைந்தனர் புலவர்." (இல. விள.)

**637.** (1.) அவற்றுள், **பிரிபோருட் சோற்றேடர்**—ஒரு பாட்டில் வந்த வாக்கியங்கள் தனித்தனி பொருள் முடிவுடையதாயிருந்தும் அவ்வாக்கியங்களைக் கூட்டிப்பார்த்தால் ஒரேபொருளைக் குறிக்காதிருப்பதாம்.

உ—ம். "கொண்டன் மிசைமுழங்கக் கோபம் பரந்தனவால்
தெண்டிரைநீ ரெல்லாந் திருமுனியே—உண்டுமிழ்ந்தான்
வஞ்சியர் கோமான் வரவொழிக மற்றிவளோர்
பஞ்சியார் செஞ்சீ றடி."

(இதன் பொருள்.) ஆகாயத்தில் மேகமுழங்க இந்திரகோபப் பூச்சிகள் நிலத்தில் பரந்தன. தெளிவாகிய அலைகளைப்பொருந்தியகடலினீர் முழுமையும் அகஸ்தியரே குடித்து உமிழ்ந்தார். கருவூரார்க்கரசனாகிய சோழனே வராதே. இவள் செம்பஞ்சை யூட்டியதால் சிவந்த சிற்றடியாள். எ—று.

[இதில், வாக்கியங்களைத் தனித்தனி நோக்கப் பொருளமைந்தும், ஒருங்குசேர்க்கப் பொளளமையாது மிருத்தல் காண்க.]

"அவற்றுள், பிரிபொருட் சொற்றொடர் செய்யுண் முழுவதும்
ஒருபொருள் பயவா தொரீஇத் தோன்றும்." (தண்டி.)

N.B.—வெறி, குடி முதலியவற்றால் ஒருவன் பிதற்றுகிறான் எனக் கவி சொல்லும்போது, இவ்வாறு வருவ தியல்பாகலாமே யல்லாது சாதாரணமாய் ஒரு காப்பியத்தில் இங்ஙனம் வருவது பிழையாகும்.

"களியினும் பித்தினும் கடிவரை யின்றே." (தண்டி.)

**638.** (2.) **மாறுபடு பொருள்மொழி** (Contradictory statement.)—முன்சொன்ன பொருளோடு பின்சொல்லுகிற பொருள் மாறுபடும்படி மொழிகளை யமைப்பது.

உ-ம். "மின்னார் மணிப்பைம்பூண் வேந்தே நினக்குலகில்
இன்னா தவர்யாரும் இல்லையால்—ஒன்னார்
குலமுழுதுங் கூற்றங் கொளவெகுண்டு நீயே
தலமுழுதுந் தாங்கல் தகும்."

[இதில், முன்பு "இன்னாதவர் (பகைவர்) இல்லை" எனவும, பின்பு "ஒன்னார் குலமுழுதுங் கூற்றங் கொள வெகுண்டு" எனவுங் கூறினமையின் ஒன்றினொன்று பொருள் மாறுபடுதல் காண்க.]

"மாறுபடு பொருண்மொழி முன்மொழிந் ததற்கு
மாறுபடத் தோன்றி வருமொழித் தாகும்." (தண்டி.)

N.B.—இது, அச்சம், காமம் அதிகப்பட்டார் கூறியதாகவரின், வழுவன்று.

"காமமும் அச்சமும் நைந்மிகி னுரித்தே." (தண்டி.)

**639.** (3.) **மொழிந்தது மொழிவு** (Repetition.)—முன்னே கூறியதைத் திரும்பவும் சொல்வது.

உ-ம். "அங்க மிலாத அனங்கன் றலம்புரியும்
வெங்கணையுங் காக்குங்கொல் வேல்வேந்தர்—தங்கோன்
நிலையார்த் தொடையலது நேரிழைக்காய் முன்னோர்
மலையால் கடல்கடைந்தான் மால்."

[இதில் முன்பு "அங்கமிலாதவன்" என்று கூறிப், பின்னும் "அனங்கன்" என்றது, கூறியது கூறலாதல் காண்க.]

"மொழிந்தது மொழிவே கூறியது கூறி
வேறுபட வொருபொருள் விளங்கா தாகும்." (தண்டி.)

N.B.—வினைவுபற்றியும் சிறப்புப்பற்றியும் இங்ஙனம் வருங்கால் வழுவன்று.

"விரைவினுஞ் சிறப்பினும் வரைவின் றதுவே." (தண்டி.)

**640.** (4.) **கவர்படு பொருள்மொழி** (Use of dubious or equivocal expressions.)—ஒரு பொருளைக் கருதி யுரைத்தசொல் பல பொருளைக் குறிப்பித்துப் பொதுத்தன்மையால் சந்தேகங்கொள நிற்பது.

உ-ம். "புயலே புறம்பொதிந்து பூந்தா தொழுக்கி
மயலே கடவுளர்க்கு வாய்த்துச்—செயலே
எரிமருவு பூந்துணர்த்தாய் யாவருமூ டாடார்
அரிமருவு சோலே யகத்து."

[இதில், "அரிமருவு சோலேயகத்து" என்பதில் 'அரி' என்பது வண்டு, சிங்கம், நெருப்பு முதலியவற்றிற்குப் பொதுமையி னிற்றலின் பொருட்டுணி வுண்டாகாது சமுசயத்துக்கு ஏதுவாயினமை காண்க.]

"ஒருபொருள் துணிய வுரைக்க லுற்றசொல்
இருபொருட் கியைவது கவர்படு பொருள்மொழி." (தண்டி.)

N.B.—இது சிலேடையாயின் குற்றமன்று.

"ஏழுஉப்பட வில்வழி வகைாவின் றதுவே." (தண்டி.)

641. (5.) நிரனிறைவழு (Irregularity in order and arrangement of terms.)—ஒரு நிரல் முன் எண்ணி அடுக்கி, பின் அது கொண்டு முடியும் சொற்களை அவ்வரிசைக்கிரமம் தப்ப அடுக்குவது.

உ-ம். "தெற்குக் குடக்கு வடக்குக் குணக்குமேல்
நிற்குந் திறத்துலகை நீடளிக்கும்—பொற்பினார்
ஈரெண் கலேயோன் வருண னிரவியமன்
யாரும் புகழியல்பி னுர்."

[இதில், திசைகள் தெற்கு (south), குடக்கு (மேற்கு, west), வடக்கு (north), குணக்கு (east) என அடுக்கப்பட்டவாறே, அத்திசைகளில் நின்று பூமியைக் காக்கும் தேவர்களை (இந்துசாஸ்திரப்படி) முறையே, யமன், வருணன், சந்திரன், சூரியன் என வையாமல், சந்திரன், வருணன், சூரியன், யமன் என முறைமாற்றி வைத்தமையின் நிரனிறை வழுவாயினமை காண்க.]

"ஒருநிரன் முன்வைத் ததன்பின் வைக்கு
நிரனிறை பிறழ்வது நிரனிறை வழுவே." (தண்டி.)

N.B.—இது உய்த்துணர்ந்து கொள்ளும்பொருட்டுப் பிறழ்ந்து வருவதாயின் வழுவாகாது.

"உய்த்துணர வரும்வழி யவ்வாறு புரித்தே." (தண்டி.)

642. (6.) சொல்வழு (Ungrammatical usage, Barbarism and Solecism.)—சொல்லிலக்கணத்துக்கு விரோதமாகச் சொற்களைப் பிரயோகிப்பது.

உ-ம். "யாவகைய தாயர்க்கு மெங்களுக்கு மெந்தையர்க்கும்
ஆவி யிவளே அனையவர்க்கும்—கோவே
நுனக்கபய மிந்த நுண்மருங்குல் மாது
தனக்கிடரொன் றில்லாமற் றுங்கு."

[இதில், நினக்கு என்றது நுனக்கு என்றமையின் சொல்வழுவா யிற்று.]

"சொல்வழு வென்பது சொல்லிலக் கணத்தொடு
புல்லா தாகிப் புகர்படு மொழியே." (தண்டி.)

N.B.—இங்ஙனம் வருவதும் சான்றோர்க் குடம்பாடாகிய உலக வழக்காயின் வழுவாகாது.

"வழக்கா றாயின் வழுவின் றதுவே." (தண்டி.)

**643.** (7.) **யதிவழு** (Wrong syllabification.)—ஓசைக் கிசையச் சீரறுப்புழி சீர்கள் தப்பாய்ப் பிரிவுபடும்படி அமைப்பது.

உ-ம். "மாடு பயிலும் வரையாளி மால்யானைக்
கோடுபுயத் தாங்கிழலுங் கொள்கைத்தாம்—காடு
அரிதா மியல்பிற் றரையிருட்கண் வாரல்
பெரிதாகு மைய பிழை."

[இதில் "காடரிதாம்" என்றாகவேண்டுவது "காடுவரிதாம்" என்று கூடாவண்ணம் அறுத்திசைக்கப்பட்டு யதிவழுவாயினமை காண்க.]

"யதிவழு வென்ப தோசை யறுவழி
நெறிப்பட வாரா நிலைமைய தென்ப." (தண்டி.)

N.B.—இது வகையுளியாய்க் கொள்ளுமிடத்துங் குற்றமாகாது.

"வகையுளி யுறைப்புழி வழுவின் றதுவே." (தண்டி.)

**644.** (8.) **செய்யுள்வழு** (Wrong versification.)—யாப்பிலக்கணத்துக்கு விரோதமாக வருவது.

உ-ம். "ஆதரந் துயர்தர வயர்தருங் கொடிக்குப்
பூதலம் புனைபுகழ் வளவன் தாதருத்
தாங்கரும்பா லன்றித் தணியுமோ தாரனங்கன்
பூங்கரும்பால் வந்தடுத்த போர்."

[இதில், முன்னிரண்டடி ஆசிரியமும், பின்னிரண்டடி வெண்பாவுமாய் வந்தமையால் யாப்பு வழுவாயிற்று.]

"செய்யுள் வழுவே யாப்பிலக் கணத்தோ
டெய்த லில்லா வியல்பிற் றாகும்." (தண்டி.)

N.B.—இது சிறுபான்மை ஆரிடத்துள்ளும் ஆரிடப் போலியுள்ளும் வழுவாகா தமையும்.

"ஆரிடத் துள்ளு மவைபோல் பவற்று
ளேரு மென்ப நெறியுணர்ந் தோரே." (தண்டி.)

**645.** (9.) **சந்திவழு** (Wrong combination.)—எழுத்ததிகாரத்துச் சொல்லப்பட்ட புணரியல் விதிக்கு மாறாக வருவது.

உ—ம். "என்பூ டுருக வினைவேன் மனங்கலக்கும்
பொன்பூண் சுமந்த புணர்முலையீர்—மின்போல்
நுடங்கிடைக்குங் காவலாய் நோக்கக் கவரும்
படங்கிடைக்கு மல்குற் பரப்பு."

[இதில், "பொற்பூண்" என வரவேண்டுவது "பொன் பூண்" என வந்தமையின் சந்தி வழுவாயிற்று.]

"சந்தி வழுவே யெழுத்திலக் கணத்துச்
சந்தியொடு முடியாத் தன்மைத் தாகும்." (தண்டி.)

N.B.—இது இரண்டாம் வேற்றுமைத் தொகையாமிடத்து வழுவாகாது.

"இரண்டாம் வேற்றுமைக் கெதிர்மறுத்து மருமே."(தண்டி.)

**646.** (10.) **இடமலைவு** (Mistake in place or locality.)—மலையும், நாடும், யாறுமாகிய இம்மூன்றனுள் ஒன்றின் பொருள் மற்றொன்றனிடத்துள்ளதாகக் கூறுவது.

உ—ம். "தென்மலையில் மான்மதமுஞ் சாமரையுந் தேமருசீர்ப்
பொன்மலையின் சந்தனமு மாரமும்—பன்முறையும்
பொன்னி வளநாடன் முன்றிற் பொதுளுமே
மன்னர் திறைகொணர வந்து."

மான்மதம் = கஸ்தூரி; தென்மலை = பொதியமாமலை; பொன் மலை=இமயபர்வதம்.

[இதில், இமயத்துள்ளன பொதியத்திற் குரியனவாகவும், பொதியத்துள்ளன இமயத்திற் குரியனவாகவும் சொல்லியதால் மலையிடமலைவாயிற்று. ஏனை நாடிடமலைவும், யாறிடமலைவும் இவ்வாறேயாம்.]

"இடமெனப் படுவது மலைநா டியாறே." (தண்டி.)

**647.** (11.) **காலமலைவு** (Mistake in time Anachronism.)—பொழுதும் பருவமுமாகிய இவ்விரண்டன் கூறுபாட்டுள் ஒன்றற்குரியனவாகிய பூவும், புள்ளும், தொழிலும் மற்றொன்றற் குரியனவாகக் கூறுதல்.

உ—ம். "செங்கமலம் வாய்குவியத் தேங்குமுதங் கண்மலர
எங்கு நெடுவானின் மீனிமைப்ப—பொங்குதயத்
தேராழி வெய்யோ னுகந்தான் மலர்ந்ததே
நீராழி சூழ்ந்த நிலம்."

[இதில், சூரியன் உதிக்கக் கமலங் குவிந்தது; குமுதம் (ஆம்பல்) மலர்ந்தது; நட்சத்திரங்கள் ஆகாயத்தில் ஜொலித்து விளங்கியது என மாலையின் தோற்றத்தைக் காலையில் நடந்ததாகச் சொல்வதால் பொழுது மலைவாயிற்று; இவ்வாறே பருவமலைவும் வரப் பெறும்.]

"காலம் பொழுதொடு பருவமென் றிரண்டே." (தண்டி.)

**648.** (12.) **கலைமலைவு** (Mistake in the laws of sixty four sciences.)—இன்பமும் பொருளுமாகிய இவ்விரண்டனையும்பற்றிக் கூறும் அறுபத்துநான்கு கலைஞானங்களுள் அவ்வவ்விலட்சணத்துக் கிசையாதபடி ஒன்றனைக் கூறுவது.

உ—ம். "ஐந்தாம் நரம்பாம் பகைவிரவா தாறுக
வந்த கிளைகொள்ள நான்காய—முந்தை
இணைகொண்ட யாழியற்று மேந்திழைதன் னாவித்
துணைவன் புகழே தொடுத்து."

[இதில், ஐந்தாம் நரம்பைக் கிளையென்னாது பகையென்றும், ஆறாம் நரம்பைப் பகையென்னாது கிளையென்றும், நான்காம் நரம்பை நட்பென்னாது எட்டாம் நரம்பின் பெயராகிய இணையென்றும் கூறினமையால் சங்கீதநூன் மலைவாயிற்று. இவ்வாறே ஏனைக் கலைஞானங்களின் மலைவுகளும் கொள்ளப்படும்.]

கலையெனப் படுபவை காண்டக விரிப்பிற்
காமமும் பொருளு மேமுறத் தழுவி
மறுவறக் கிளந்த வறுபத்து நான்கே." (தண்டி.)

**649.** (13.) **உலகமலைவு** (Mistake in the order of Nature.)—சாதாரணமான உலக ஒழுக்கத்துக்கு விரோதமாகக்கூறுவது.

உ—ம். "அலைகடலேழுந்தூர்த் தந்தரத்தி னூடே
மலையனைய மால்யானை யோட்டிக்—கலவாரை
நீறாக்கி வைய நெடுங்குடையின் கீழ்வைத்தான்
மாறாச்சீர் மானிலத்தார் மன்"

[இதில், ஓர் அரசன் சத்தசாகரங்களையுந் தூர்த்தனனெனவும், ஆகாயத்தில் தனது யானையை நடத்திச் சத்துருக்களை வென்றனனெனவும் கூறியது அசம்பாவிதமாய் உலகத்தோ டொவ்வாமையின் உலக மலைவாயினமை காண்க.]

"உலகெனப் படுவதீண் டொழுக்கின் மேற்றே." (தண்டி.)

650. (14.) நியாயமலைவு (Unreasonable combinations.)—நியாயசாஸ்திர விதிப்படி ஒரு சமயத்தான் தனது கொள்கைக்கேற்றபடி கொண்ட சித்தாந்தத்தை, வேறொரு சமயத்தான் கூறியதாகக் கூறுவது.

உ—ம். "ஆய பொருள்கள் கணந்தோ றழியுமெனத்
தூய வசோகின் முனியுரைத்த—தாயவன்றோ
காதலர் நீங்க வெழுங்காம வெங்கனல்வாய்
மாத ருயிர்தாங்கு மாறு."

[இதிற்போந்த பௌத்த சித்தாந்தத்தை யுரைத்தவன் புத்தனாயிருக்க, அருகனெனக் கூறினமையின் நியாய மலைவாயினமை காண்க.]

"நியாய மென்பது நெறியுறக் கிளக்கின்
அளவையிற் றெளிக்கும் விளைபொருட் டிறமே." (தண்டி.)

651. (15.) ஆகமமலைவு (Mistakes against the sanction of Authorities.)—மனுதர்ம சாஸ்திரம் முதலிய பதினெண் ஸ்மிருதிகளில் கூறியவண்ணம் அறநெறிகளைக் கூறாது மாறுகொளக் கூறுவது.

உ—ம். "தெய்வம் விருந்தொக்கல் தென்புலத்தார் தாமென்னும்
ஐவகையுந் தம்பொருள்கொண் டாற்றுவார்—மையிலா
முக்கோலுங் கற்றோய் முழுமடியுந் தாங்கியே
தக்கோ ரெனப்படுவார் தாம்."

[இதில், தெய்வம் முதலிய ஐம்புலத்தாரையும் உபசரித்தல் இல்லறத்தாரது கடனாயிருக்க, அதைத் துறவறத்தாரதாகக் கூறினமையின், ஆகமமலைவாயினமை காண்க.]

"ஆகம மென்பன மநுமுத லாகிய
அறனெறி புணர்ந்த திறனறி நூலே." (தண்டி.)

N.B.—இடமலைவுமுதல் ஆகமமலைவீறாகிய அறுவகை மலைவும் நாடகத்தமிழில் குற்றமாகாது.

"கூறிய நெறியி னறுவகை மலைவு
நாடக வழக்கி னுட்படுதற் குரிய." (தண்டி.)

ஒரு காப்பியத்தில் மேற்கண்ட குற்றங்களின்றிப் பாடவேண்டியது.—These are faults to be avoided and form the touchstone of Criticism in Tamil versification.

# CHAPTER XX.

## அணியியல் FIGURES OF SPEECH.

**652.** **அணி** அல்லது **அலங்காரமாவது** (Figure.)—பாஷையை அழகுபெறச்செய்வது. அதாவது, எழுத்துக்களையாவது சொற்களையாவது விநோத வகைபெற விசித்திரமாய் அடுக்குவதாலும், கேட்போர் உவக்கத்தக்க அற்புதாநந்தகரமாகும் நுட்பமாகிய பொருளமையச் செய்வதாலும் வசனமும் பாட்டும் அலங்காரப்படுவதேயாம்.

N.B.—பூர்வம் செய்யுள்நடை விசேஷப்பட்டிருந்தமையின் இலக்கணிகள் பலரும் அலங்காரம் அதற்கே உரியதென விதித்திருக்கின்றனர். ஆயினும் அச்செய்யுள்நடை இக்காலத்தருகி வாசக நடை விசேஷப்பட்டிருத்தலின், இதற்கும் அவ்வலங்கார முரித்தாகலாம்.

"அணியெனப் படுவது துணிபுறக் கிளப்பிற்
[1]குணமலங் கார மெனவிரு திறத்தாற்
பொருள்புலப் படுப்ப தென்மனார் புலவர்." (இல. விள.)

**653.** அவ்வணி, **சொல்லணி**, **பொருளணி** என இருவகைப்படும்.

"பொருளணி சொல்லணி யெனவலங் கார
மிருவகை நெறியா னியலு மென்பர்." (இல. விள.)

[1] குணம் (Style of poetry) என்றது நெறி எனவும் படும். செய்யுட் குணம் காண்க. (Vide Sections 622 to 651.)

**சொல்லணி.—FIGURES OF ORTHOGRAPHY AND ETYMOLOGY.**

**654.** **சொல்லணியாவது**—எழுத்தும், சொல்லும், அடியுமாகிய மூன்றும் பலவாறு தொடர்ந்துநின்று செய்யுளை அழகுபெறச்செய்வது.

அச்சொல்லணி, முன்னோர் கொள்கைப்படி **மடக்கு, சித்திரம்** என இருவகைப்படும்.

N.B.—இச்சொல்லணி செய்யுள் நடையிற் சிறந்து வருவதன்றி வாசகநடையில் வருவது மிகவு மருமையாகும்.

"சொல்லணி யென்பது சொல்லுங் காலை
மடக்கு முதன்வழிப் பலவுஞ் சித்தி ரமுமென
நடக்கு மென்மனார் நயனுணர்ந் தோரே." (இல. விள.)

N.B.—இவைதவிர, தீவகம், பின்வருநிலை, சிலேடை, நிரனிறை முதலியவும் சொல்லணியிற் சேர்ந்தவையேயாம்.

**655.** (1.) **மடக்காவது**—எழுத்தின் கூட்டம், இடைவிட்டாயினும், இடைவிடாது தொடர்ந்தாயினும் பொருள் வேறுபடும்படி திரும்பத் திரும்ப வருதல்.

இது செய்யுள் அடிகளின் முதல் இடை கடைகளிலாயினும், அடிமுழுவதுமாயினும் வரப்பெறும். இவற்றுள் அடிமுழுவதும் வருவதே சிறப்பு.

உதாரணம்.

(a) "வரைய வரைய சுரஞ்சென்றார் மாற்றம்
புரைய புரையவெனப் பொன்னே—உரையல்
நனைய நனைய தொடைநம்மை வேய்வர்
வினையர் வினையர் விரைந்து."

[இது நான்கடிக்கண்ணும் முதலில் மடங்கிவந்தது.]

(b) "பாலையாழ் தன்னிற் பதிற்றிரட்டி வெய்தன்றே
மாலைவாய் மாலைவா யின்னிசை—மேலுரை
மேவலர் மேவலர் மெல்லாவி வாட்டாதோ
காவலர் காவலராங் கால்."

[இது முதலடியொழிந்த வேனைய மூன்றடிக்கண்ணும் முதலில் மடங்கிவந்தது.]

(c) "வரைவாய் நிவர்ந்த வடுமா வடுமா
விரைவாய் நிவர்ந்து விரியா விரியா
புரைவா யசும்பு புலரா புலரா
விரைவா யிருபா யிடமே யிடமே."

[இது நான்கடிக்கண்ணும் இறுதியில் மடங்கிவந்தது.]

(d) "அளியாடு மரவங்கண் மரவங்கண் மகிழ்ந்தாறு
விளையாடு மாலந்த மாலந்தந் தாம்பிரிதும்
வளையார்த மகிழ்மான மகிழ்மான மலர்சோர
விளையாரை வெயினன்னை வெயினன்னை யிடமேவா."

[இது நான்கடிக்கண்ணும் இடையில் மடங்கிவந்தது.]

(e) "விரைமேவு மதமாய விடர்கூடு கடுநாக
விரைமேவு மதமாய விடர்கூடு கடுநாக
விரைமேவு நெறியூடு தனிவாரன் மலைநாட
நிரைமேவு வளைசோர விவளாவி நிலைசோரும்."

[இது முதலிரண்டடியும் மடங்கிவந்தது.]

(f) "வரிய வாங்குழன் மாத ரிளங்கொடி
யரிய வாங்கய தான வனங்களே
யரிய வாங்கய தான வனங்களே
யரிய வாங்கய தான வனங்களே."

[இது முதலடியொழிந்த வேனைய மூன்றடியும் மடங்கிவந்தது.]

(g) "கழுநீர் கண்ணுறும்
கழுநீர் கண்ணுறும்
கழுநீர் கண்ணுறும்
கழுநீர் கண்ணுறும்."

(h) "வான கந்தரு மிசைய வாயின
வான கந்தரு மிசைய வாயின
வான கந்தரு மிசைய வாயின
வான கந்தரு மிசைய வாயின."

[இவ்விரண்டும் நான்கடியும் மடங்கிவந்தன; ஏகபாதமென்றுஞ் சால்லப்படும்.]

N.B.—மடக்கென்று சொல்லப்படுவனவெல்லாம், ஓரடி மடக்கு ான்கும், ஈரடிமடக்காறும், மூவடிமடக்கு நான்கும், முற்றுமடக்கு ன்றும் ஆகிய பதினைந்தனையும், ஆதிமடக்கு, இடைமடக்கு, கடை

மடக்கு, ஆதியோடிடைமடக்கு, ஆதியோடு கடைமடக்கு, இடையோடு கடைமடக்கு, முழுவது மடக்கு என்னும் எழனோடுங் கூட்டியுறழ (15×7=) நூற்றைந்து வகைப்படும்; இந்நூற்றைந்தனையும், இடையிட்டு வருவனவும், இடையிடாது வருவனவும், இடையிட்டு மிடையிடாதும்வருவனவுமாகிய மூன்றனோடுங்கூட்டியுறழ (105×3=) முந்நூற்றுப்பதினைந்து வகைப்படும். இவற்றையெல்லாந் தனித்தனிச் சொல்லப்புகின் மிகவும் விரியுமாகலின், அவற்றுட் சில இங்கு காட்டப்பட்டன.

"எழுத்தின் கூட்ட மிடைபிறி தின்றியும்
பெயர்த்தும்வே றுபொருடரின் மடக்கெனும் பெயர்த்தே."
(தண்டி.)

"அதுதான், ஓரடி முதலா நான்கடி காறுஞ்
சேரு மென்ப தெளிந்திசி னோரே." (தண்டி.)

"ஆதி இடைகடை யாதியோ டிடைகடை
இடையொடு கடைமுழு தெனவெழு வகைத்தே."(தண்டி.)

"ஓரடி யொழிந்தன சேறுங் காலை
இணைமுதல் விகற்ப மேழு நான்கும்
அடையும் பெற்றியி னறியத் தோன்றும்." (தண்டி.)

"அடிமுழுது மடக்கலு மாங்கதன் சிறப்பே." (தண்டி.)

**656.** ஒரே எழுத்து மறுத்தும் மறுத்தும் அடிகளில் வருவதும் மடக்கெனப்படும். இது வடநூலிலக்கணப்படி பிராசமெனப் பெயர் பெற்று, சேகானுப்பிராசம், விருத்தியனுப்பிராசமென இருவகைப்படும்.

**N.B.**—இது யாப்பியலில் சொல்லிய மோனை, எதுகை முதலிய தொடைகள்போல் வருவதாகலின், அதனையே இவ்வணியியலிலுங் கூறவேண்டிய தென்னையெனின், இது யாப்பியலில் செய்யுட்குரிய சந்தம் ஓசை முதலியவற்றை நோக்கிக் கூறியதாயிற்று. இவ்வணியியலில் அது தொனியலங்காரமாக விருப்பதோடு பொருளையும் வேறுபடுத்திச் சிறப்பித்தலால் ஈண்டும் அதனைக் கூறவேண்டிய தவசியமாயிற்று.

**657.** அவற்றுள், **சேகாநுப்பிராசமாவது**—இரண்டிரண்டு மெய்கள் உயிரேறப்பெற்று இடைவிடாது மறுத்து வருவது.

உ—ம். "பண்டு பண்டவழ் நாவினொர் பாவைநெம்
மண்டு மண்டலத் தோரவை மாழ்கிமின்
கொண்ட கொண்டலன் னைய்நின் றிருப்பெயர்
கொண்டு கண்டனள் கோழைப் புறத்தையே."

[இதில், ண், ட் என்பவற்றின்மேல் உயிரேறி வந்தமை காண்க.]

**658. விருத்தியனுப்பிராசமாவது** — ஒரெழுத்தாவது, பல எழுத்தாவது இடையிட்டுப் பலகால் வருவது.

உதாரணம்.

"துனிவருநீர் துடைப்பவராய்த் துவள்கின்றேன்
துணைவிழிசேர் துயிலைநீக்கி
இனவளைபோ லின்னலஞ் சோர்ந் திடருழப்ப
இறந்தவர்நாட் டில்லைபோலும்
தனியவர்கள் தளர்வெய்தத் தடங்கமலத்
தளையவிழ்க்கும் தருணவேனில்
பனிமதுவின் பசுந்தாது பைம்பொழிலிற்
பரப்பிவரும் பருவத்தென்றல்."

[இதில், முதலடியில் துவ்வும், இரண்டாம் அடியில் இய்யும், மூன்றாம் அடியில் தவ்வும், நான்காம் அடியில் பவ்வும் இடையிட்டுப் பலதரந் திரும்பிவந்தமை காண்க.]

**659.** இவ்விதமாய் வந்த மடக்குகளில் சில வெவ்வேறு பேர் பெற்று விசேஷப்படும்.

அவற்றுள், **இயமாவியமகமாவது**—ஒரே சொல்லாலே நான்கடியும் மடக்கிவருவது.

உ—ம். [1] "உமாதர னுமாதர, னுமாதர னுமாதர,
னுமாதர னுமாதர, னுமாதர னுமாதரன்."

**660. பாடகமடக்காவது** — இரண்டடிகள் ஒரேவிதமாயிருக்க மடக்குவது.

உ—ம். [2] "பணிபவ நந்தன தாக மன்னுவார்
பணிபவ நந்தன தாக மன்னுவார்
அணியென மேயது மன்ப ராகமே
அணியென மேயது மன்ப ராகமே."

[1] உமையாளைத் தரித்தவனும், ஆதரிக்கிறவனும், மானைத் தரித்தவனும், திருவைத் தரித்தவனும், ஆனிரையைக் காத்தவனும், யானைத்தோலைத் தரித்தவனும், இடபத்தை நடத்துபவனும், பெருமையைத் தரித்தவனுமாகிய மூன்று கண்ணையுடைய சிவபிரான்.

[2] பாம்புகளுக்கு இடம் தனது மார்பாக நிற்பார்; பிறப்பிறப்பிலாத நிலைபெறுவார்; அழகென்று சொல்ல உறைவதும் அன்பர்கள் உள்ளமே; அலங்காரமென்று சொல்ல விரும்புவதும் என்றுமுள்ள திருவெண்ணீறே.

**661. அந்தாதி மடக்காவது**—பாட்டின் ஓர் அடியின் ஈற்றில் வந்த எழுத்துத்தொடர், அடுத்த அடியின் முதலில்வர மடக்குவது.

உ—ம். "கயலேர் தரவருங் கடிபுனற் காவிரி
காவிரி மலருகக் கனைபொரு மரவம்
மரவம் பூஞ்சினை வண்டொடு சிலம்பும்
சிலம்புசூழ் தளிரடித் திருமனைக் கயலே."

**662. சந்தட்டயமடக்கு** அல்லது **முற்றுமடக்காவது**—இடையிட்டு முதலும் இறுதியும் மடக்குவது.

உ—ம். "மாலை யாகவெய் யனங்கவேள் பயிறரு மாலை
மாலை வேட்டவர் மனங்கொலோ வவன்றுழாய் மாலை
மாலை யோவுடைத் ததுநினைந் தெழுதரு மாலை
மாலை யாவுடை யவளைவந் திடர்செயு மாலை."

**663.** ஒரு செய்யுள் முழுவதும் அல்லது ஓரடிமுழுவதும், ஓரெழுத்தும், ஈரெழுத்தும், மூவெழுத்தும், நான்கெழுத்தும் உயிராயும், மெய்வருக்கமாயும், இனவருக்கமாயும் வருவனவும் மடக்கிலேயே யடங்கும். இவை யவ்வாறு வருங்கால் உயிராயும் உயிர்மெய்யாயும் வரும்.

உதாரணம்.

(a) "அமல லகல மகல லபய
கமல பவன மவள
வமல மடர வளக வதன மடர மதன."

[இது குற்றுயிரால் வந்தது.]

(b) "தாயாயா ளாராயா டாமாறா தாராயா
யாமாரா வாளுடா மாதாமா தாவாவா
யாவாகா லாறுகா வாகாகா ணாமா
மாலாறா மாநாதா வா."

[இது நெட்டுயிரால் வந்தது.]

(c) "காக்கைக்கா காகூகை கூகைக்கா காகாக்கை
கோக்குக்கூ காக்கைக்குக் கொக்கொக்கக் கைக்கைக்குக்
காக்கைக்குக் கைக்கைக்கா கா."

[இது ககர வருக்கத்தால் வந்தது.]

(d) "வேதாவே வேதத்து வித்தே விதிதுதி
தாதாவே தாதவாத் தீத்தாவா—தோதுவித்
தோவா துதவிவா வேதுவே தூத்தவத்துத்
தேவாதி தேவா திதி."

[இது ஈரெழுத்தால் வந்தது.]

(e) "கமலைக்குக் காமுகா கால முகிலே
கமலைக்கு மாலிலைமே லாமாலே காமக்
கலக்க மகலக் கலிகொல்லீ காமோ
மலக்கு மெமக மகம்."

[இது மூன்றெழுத்தால் வந்தது.]

(f) "துடித்துத் தடித்துத் துடுப்பெடுத்த கோட
ரெடுத்த தொடைக்குக்கை பொற்போற்—பொடித்துத்
தொடிபடைத்த தோடிடித்த தோகைகூத் தாடக்
கடிபடைத்துக் காட்டிற்றுக் காடு."

[இது வல்லினத்தால் வந்தது.]

(g) "மானமே நண்ணா மனமென் மனமென்னு
மானமான் மன்னா நனிநாணு—மீனமா
மானா மினன்மின்னி முன்முன்னே நண்ணினு
மானா மணிமேனி மான்."

[இது மெல்லினத்தால் வந்தது.]

(h) "விரவலராய் வாழ்வாரை வெல்வா யொழிவா
யிரவுலவா வேலை யொலியே—வரவொழிவா
யாயர்வா யேயரிவை யாருயிரா யீராவோ
வாயர்வாய் வேயோ வழல்."

[இது இடையினத்தால் வந்தது.]

N.B.—இப்படி விசித்திரமாய் எழுத்துக்களை அடுக்கிப் பாடிய தற்கு உதாரணங்கள் தனிப்பாடற்றிரட்டு, தண்டியலங்காரம், முத்து வீரியம் என்ற நூல்களில் இன்னும் அநேகம் அகப்படும்.

"ஓரெழுத்து மடக்கலு முரித்தென மொழிப." (தண்டி.)

**664.** [1] **நிரோஷ்டகம் அல்லது நிரோட்டியமாவது** — மேலுதடும் கீழுதடும் ஒன்றையொன்று ஒட்டாமலும் அசையாமலுமிருக்கத்தக்கதாக எழுத்துக்களை அமைத்துப் பாடுவது.

N.B.—இதில், முற்றுமடக்குயமகம் விழுமிய பொருளுடன் அமைப்பது கஷ்டமாகும்.

உ—ம். "சீலத்தான் ஞானத்தாற் றேற்றத்தாற் சென்றகன்ற
காலத்தா ரறியாத காதலான்—ஞாலத்தார்
இச்சிக்கச் சாலச் சிறந்தடி யேற்கினிதாங்
கச்சிக்கச் சாலைக் கனி."

"இதழ்குவி யாமெழுத் தெடுத்துப் பாடுவ
ததுநிரோட் டகமென் றறையப் படுமே" (முத். வீரி.)

**665.** (2) **சித்திரக்கவி அல்லது மிறைக்கவி**—பின்காட்டிய சூத்திரப்படி கோமூத்திரி முதலியனவாகப் பலவகைப்படும்.

"கோமூத் திரியே கூட சதுக்கம்
மாலை மாற்றே மாத்திரைச் சுருக்க
மாத்திரை வருத்தன மெழுத்து வருத்தனம்
ஒற்றுப் பெயர்த்தல் விஞாவுத் தரமே
நாக பந்த முரச பந்தம்
திரிபாகி திரிபங்கி பிறிதுபடு பாட்டுக்
காதை கரப்பே கரந்துறைச் செய்யுள்
சக்கரஞ் சுழிகுளஞ் சருப்பதோ பத்திரம்
அக்கரச் சுதகம் நிரோட்ட மென்ன
முறைபெற வகுத்த மிறைக்கவி யிருபதும்
அறிவுறக் கிளந்த வகுற்றின் பால."

N.B.—இவை விசேஷம் சம்ஸ்கிருதத்திலிருந்து எடுக்கப்பட்டவை. இவைதவிர இன்னம் அநேக விசித்திரங்களாய் மனதுபோனபடி அலங்காரஞ்செய்து பாடுதலுமுண்டு.

**666.** (1) **கோமூத்திரியாவது**—பசு நடந்துபோகையில் மூத்திரம் பெய்தால் எவ்வாறு தரையிற் காணப்படுமோ அவ்வாறாகிய ரூபத்தில் எழுத்துகள் அமைய ஒரு செய்யுளைப் பாடுவது. அதாவது, நான்க

[1] "உ.ஊ ஒ.ஓ ஔவிதழ் குவிவே," "பீகீ மிதழுறப் பம்மப் பிறக்கும்," "மேற்பல் லிதழுற மேவிடும் வவ்வே" என்ற சூத்திரங்களினபடி உதடுகளின உதவியால் உச்சரிக்கப்படுபவையாகிய மெய்யும், உயிரும, உயிர்மெய்யும் ஒழியப்பாடுவது நிரோஷ்டகமாகும்.

டிச் செய்யுளை இரண்டிரண்டு வரியாக எழுதி, மேலும் கீழும் ஒன்றிடையிட்டு வாசிக்க அப்பாட்டே யாகத்தக்கதாய் எழுத்துச்சேர்த்து, பொருள் வழுவாதிருக்கப் பாடுவது.

உதாரணம்.

(1) "பராவரம் படித்தனை—தராதரந் தரித்தனை
சராசரம் படைத்தனை—மராமரந் தடித்தனை."

ப ரா வ ர ம் ப டி த் த னை த ரா த ர ந் த ரி த் த னை

ச ரா ச ர ம் ப டை த் த னை ம ரா ம ர ந் த டி த் த னை.

(2) "பருவ மாக விதோகன மாலையே
பொருவி லாவுழை மேவன கானமே
மருவு மாசை விடாகன மாலையே
வெருவ லாயிழை பூவணி காலமே."

ப ரு வ மா க வி தோ க ன மா லை யே பொ ரு வி லா வு ழை மே வ ன கா ன மே

ம ரு வு மா சை வி டா க ன மா லை யே வெ ரு வ லா யி ழை பூ வ ணி கா ல மே.

**667.** (2) **கூடசதுக்கமாவது** (Court yard of a palace)—நாலடியாலான பாட்டில், கடைசி அடியில் வருமெழுத்தெல்லாம் முதல் மூன்றடியில் மறைந்து நிற்கத்தக்க சொற்களை அமைத்துப் பாடுவது.

உ—ம். [1] "புகைத்தகைச் சொற்படைக் கைக்கதக்
கட்பிறைப் பற்கறுத்த
பகைத்திறச் சொற்கெடச் செற்றகச்
சிப்பதித் தூர்க்கைபொற்புத்
தகைத்ததித் தித்ததுத் தத்தசொற்
றத்தைபத் தித்திறத்தே
திகைத்தசித் தத்தைத் துடைத்தபிற்
பற்றுக்கெ டக்கற்பதே."

[இதில் நான்காம் அடியிலுள்ள எழுத்துக்கள் முதல் மூன்றடியிலும் மறைந்து நின்றமை காண்க.]

**668.** (3) **மாலைமாற்றுவது**—ஒரு செய்யுளைத் தலைகீழாக வாசிக்க அச்செய்யுளேயாவது.

உ—ம். "நீவாத மாதவா தாமோக ராகமோ
தாவாத மாதவா நீ."

"இறுதி முதலாக வெடுத்து வாசிப்பினு
மதுவே யாவது மாலைமாற் றாகும்." (முத். வீரி.)

**669.** (4) **மாத்திரைச் சுருக்கமாவது**—ஒரு சொல் ஒரு மாத்திரைகுறைய, அதாவது நெடில் குறிலாக, வேறு சொல்லாகி வேறு பொருள்தரப் பாடுவது.

உ—ம். "நேரிழையார் கூந்தலினோர் [2]புள்ளிபெற நீள்மரமாம்
நீர்நிலையோர் புள்ளி பெறநெருப்பாம்—சீரணவு
காட்டொன் றொழிப்ப இசையா மதனளவில்
மீட்டொன் றொழிப்ப மிடறு."

---

[1] புகைத்தகை=நெருப்பின் றன்மையவான, சொல்=சொற்களையும், படைக்கை=ஆயுதமணிந்த கைகளையும், கதக்கண்=கோபமுள்ள கண்களையும், பிறைப்பல்=பிறையையொத்த கோரப்பற்களையும், கறுத்த பகைத்திறச்சொல்=கறுப்புநிறமுமுடைய பகைஞராகிய இராட்சதர் என்னும் வார்த்தை, கெட=மாள, செற்றகச்சிப்பதி=(அவர்களை) அழித்த காஞ்சிபுரத்திலுள்ள, தூர்க்கை=விமலையாகிய, பொற்புத்தகைத்த=அழகு தங்கிய, தித்தித்த=இனிய, தத்தத்த=யாழின் ஓசையையொத்த, சொல்=சொற்களையுடைய, தத்தை=கிளி போன்றவளிடத்து, பத்தித்திறத்தே=அன்புசெய்யும் விஷயத்தினின்று நீங்கி, திகைத்த=(மலைந்து) அறிவழிந்த, சித்தத்தை=உள்ளத்தை, துடைத்தபின்=நீக்கிய பிற்பாடு, பற்றுக்கெட=(நல்வினை, தீவினை யென்ற இருவினைப்) பாசபந்தங்களாகிய பிறவி நீங்க, கற்பதே=(ஞானமார்க்கத்தை) அறிவதாகுமோ.

[2] "தொல்லை வடிவின வெல்லா வெழுத்துமாண்
டெய்தும் எகரம் ஒகரமெய் புள்ளி"

என்றபடி ஏ, ஓ என்னும் நெடில்களுக்குப் புள்ளியேற்ற எ, ஒ எனக் குறில்களாம்.

[இச்செய்யுளில் நேரிழையார் கூந்தல் என்றது ஓதி, இதில் ஒரு மாத்திரையைச் சுருக்க ஒதி (Saint Mary's tree.) என்னு மரமும்; நீர்நிலை என்றது ஏரி (lake), இதில் ஒரு மாத்திரையைச் சுருக்க எரி யாகிய நெருப்பும்; காடு என்றது காந்தாரம், இதில் ஒரு மாத்திரை யைச் சுருக்கக் கந்தாரம் (tune) என்னும் பண்ணும்; இதிலேயே மீட்டும் ஒரு மாத்திரையைச் சுருக்கக் கந்தரம் என்னுங் கழுத்து மாத லின், மாத்திரை சுருங்காதவழி யொருபொருளும், சுருங்கியவழி மற் றொரு பொருளுமாதல் காண்க.]

"ஒருபொரு டருஞ்சொலோர் மாத்திரை குறைய
மற்றொரு பொருடரல் மாத்திரைச் சுருக்கம்." (முத். வீரி.)

670. (5) மாத்திரை வர்த்தனமாவது—ஒருசொல் ஒரு மாத்திரை ஏற, அதாவது குறில் நெடிலாக, வேறு சொல்லாகி வேறு பொருள்தரப் பாடுவது.

உ—ம். "நீண்மரத்தி லொன்றேற நேரிழையார் கூந்தலாம்
பூநெருப்பி லொன்றேறப் பூங்குளமாம்—பேணுங்
கழுத்திலொன் றேற இசையா மிசையின்
எழுத்திலொன் றேறவாங் காடு."

[இதில், ஒதி=ஓதி; எரி—ஏரி; கந்தரம்—கந்தாரம், காந்தாரம் என முந்தின உதாரணத்துக்கு மறுதலையாய் ஒரு மாத்திரை மிகுந்து, ஒரு மாத்திரை சுருங்கியவற்றினின்றும் வேறுபொருள் பட்டமைகாண்க.]

"மாத்திரைச் சுருக்கம் மறுதலைப் படவொரு
மாத்திரை யேற்றிடின் மாத்திரை வருத்தனம்."(முத்.வீரி.)

671. (6) எழுத்து வர்த்தனமாவது—ஒரு மொழியாய் ஒருபொ ருள்தந்து நிற்பதோடு பின்னுேரெழுத்தைக் கூட்ட வேறொரு மொழி யாய் வேறொரு பொருள் தந்தும், இப்படியே மேலும் மேலும் கூட்ட வெவ்வேறு மொழிகளாய் வெவ்வேறு பொருள்கள் தந்தும் வரப் பாடுவது.

உ–ம். "ஏந்திய சங்கமு முன்று ளெடுத்ததுவும்
பூந்துகிலு மாலுந்தி பூத்ததுவும்—வாய்ந்த
உலைவி லெழுத்தடைவே யோரொன்ருய்ச் சேர்க்கத்
தலைமலைபொன் ருமரையென் ரும்."

[இதில், திருமால்தாங்கிய சங்கமாகிய 'கம்பு' என்பதில் 'பு' என்னு மெழுத்தைப் பிரிக்கக் 'கம்' எனவும், 'நகம்' என்பதில் 'ந' என்கிற எழுத்தைப் பிரித்து, முன் 'கம்' என்பதன்முன் கூட்ட 'நகம்' எனவும், 'கநகம்' என்பதில் 'க' என்கிற எழுத்தைப் பிரித்து, முன் 'நகம்' என்ப தின்முன் கூட்ட 'கநகம்' எனவும், 'கோகநகம்' என்பதில் 'கோ' என்கிற எழுத்தைப் பிரித்து, முன் 'கநகம்' என்பதன்முன் கூட்ட 'கோகநகம்' எனவும் ஆகி, முறையே தலை, மலை, பொன், தாமரை யென நூதனப்பொருள் பட்டமை காண்க.]

[இவற்றுள், **மலை** யென்பது கிருஷ்ணன் எடுத்துக் குடையாகப் பிடித்த கோவர்த்தனகிரியையும், பொன்னென்பது ஆகுபெயராய் அவனுடுத்தும் பீதாம்பரத்தையும், தாமரையென்பது ஆகுபெயராய் அவன துந்தியையும் உணர்த்தின.]

"பதங்களி னக்கரங் களைப்பகுத் தொன்றற்
குரியவக் கரங்களை மற்ருெரு பதத்தொடு
புணர்த்திநூ தனப்பொருள் புதுக்குவ தெழுத்து
வருத்தன மாமென வழுத்தப் படுமே." (முத். வீரி.)

**672.** (7) **ஒற்றுப் பெயர்த்தலாவது**—ஒருமொழியுந் தொடர் மொழியுமாய்ப் பொருள்படுபவற்றை அப்பொருளொழிய வேறுபொ ருள்பட வைத்துப் பாடுவது.

உ–ம். "வண்புயலைக் கீழ்ப்படுத்து வானத் தருமலைந்து
மண்குளிரச் சாயல் வளர்க்குமாந்-தண்கவிகைக்
கொங்கா ரலங்க லனபாயன் கொய்பொழில்சூழ்
**கங்கா புரமாளி கை.**"

[இதனுள், "**கங்காபுர மாளிகை**" நிழலைப் பெருக்கும் என்றும், "கங்காபுரமாளும் அனபாயன் கை" காவல்புரியும் என்றும் பொருள் கிடந்தமை காண்க.]

"ஒருமொழி தொடர்மொழி யாகவொண் பொருள்படு
மவற்றை யப்பொரு டவிர மறுபொருள்
பெறச்சொல லொற்றுப் பெயர்த்த லாகும்." (முத். வீரி.)

**673**. (8) **வினாவுத்தரமாவது** (Anagram by Questions.)—பல வினாக்களுக்கு உத்தரங்களாகப் பொருந்திய பல சொற்களையும் ஒருங்கு சேர்க்க ஒரு சொற்றொடராகவும், இச்சொற்றொடரே கடைசிவினாவிற்கும் உத்தரமாகக் கடையடியில் வரவும் ஒரு செய்யுள் பாடுவது.

உ—ம். "பூமகள்யார் போவானை யேவுவா னென்னுரைக்கும்
நாமம் பொருசரத்திற் சென்னென்பர்—தாமழகின்
பேரென் பிறைசூடும் பெம்மா னுவந்துறையும்
சேர்வென் திருவேகம் பம்."

[இதனுள், 'பூமகள் யார்?' என வினாவியதற்கு உத்தரமாகப் பொருந்திய 'திரு' என்பதையும், 'போவானை யேவுவானென்னுரைக்கும்?' என வினாவியதற்கு உத்தரமாகப் பொருந்திய 'ஏகு' என்பதையும், 'நாமம் பொருசரத்திற் சென்னென்பர்?' என வினாவியதற்கு உத்தரமாகப் பொருந்திய 'அம்பு' என்பதையும், 'அழகின் பேரென்?' என வினாவியதற்கு உத்தரமாகப் பொருந்திய 'அம்' என்பதையும் (திரு+ஏகு+அம்பு+அம்) ஒன்றாய்ச் சேர்க்க 'திருவேகம்பம்' என்னும் தொடர்மொழியாயினமையும், இதுவே 'பெம்மா னுவந்துறையும் சேர்வென்?' எனக் கடைசியாய் வினாவியதற்கு உத்தரமாகக் கடையடியிற் பொருந்தினமையுங் காண்க.]

"வினாவொடு விடையும் விரிந்து வருவது
வினாவுத் தரமென விளம்பப் படுமே." (முத். வீரி.)

**674**. (9) **இரட்டை நாகபந்தமாவது**—இரண்டு பாம்பு இணைந்து மறிந்து தலையெடுத்து நிற்பதாய்ச் சொரூபம் வரைந்து, இவற்றின் சந்தி யறைகள்தோறும் முன் வந்த எழுத்தே பின்னும் அமைந்துவரத்தக்க தாய்ப் பாடுவது.

உ—ம். "யானறி வதுவோ வுனையிடை மகளு
கனமழை யாணினை படாது மலையே
குடையா வளித்துத் தேவ ரனைவரு
மாமத மழிய வுரைத்து மாமலர்
நேர்ந்து யாடைய வோடிவ ராடை

மருவி யாவி யளிக்கக்
கொடாய துணையே யோது னினரே."

இரட்டை நாகபந்தம்.



[இப்பாட்டின் எழுத்துக்களெல்லாம் இத்துவயநாகபந்தத்தின் உறுப்புகளில் விதிப்படி அமைந்திருத்தல் காண்க.]

அன்றியும், அஷ்ட நாகபந்தமாவது—எட்டு நாகம் இணைந்திருப்பதாய்ச் சொரூபம் அமைத்துப் பாடுவது.

N.B.—பாம்பின் வணக்கமுள்ள இந்துக்களுக்கு இப்படி பாம்பின் ரூபத்தில் பாட்டமைப்பது மகா சிரேஷ்டமாகும்.

"வாலு மிருமூன்றும் தலையி லிரண்டெழுத்தும்
மூலைக ணான்கும் வயிறிரண்டு மைமைந்தாய்
நாலெட்டு நாலைந்தே மாகி நடைபெறுமே
சேவிட்ட கண்ணரவின் சீர்."

675. (10) முரசபந்தமாவது—நான்கடிகளையும் நான்கு வரிகளாக எழுதி, அவற்றுள் மேலிரண்டுவரிகளும் ஒன்றற்கொன்று கோமூத்திரியாகவும், கீழிரண்டுவரிகளும் ஒன்றற்கொன்று கோமூத்திரியாகவும் சிறுவார் போக்கி, முதல்வரி இரண்டாம், மூன்றாம், நான்காம் வரிகளிலும், நான்காம்வரி மூன்றாம், இரண்டாம், முதலாம் வரிகளிலும் முறையே கீழுற்றுப் பின்பு மேல்நோக்கவும், மேலுற்றுப் பின்பு கீழ்நோக்கவும் பெருவார் போக்கி, இவ்வார் நான்கும் நான்கு வரியாக வரப் பாடுவது.

உ-ம். "கான வாரண மரியவா யினனே
தான வாரண மரியவா யினனே
மான வாரண மரியவா யினனே
கான வாரண மரியவா யினனே."

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கா | ன | வா | ர | ண | ம | ரி | ய | வா | யி | ன | னே |
| தா | ன | வா | ர | ண | ம | ரி | ய | வா | யி | ன | னே |
| மா | ன | வா | ர | ண | ம | ரி | ய | வா | யி | ன | னே |
| கா | ன | வா | ர | ண | ம | ரி | ய | வா | யி | ன | னே |

இதன் விவரம்.

(a) இதில் முதல் இரண்டடியும் கடை இரண்டடியும் தம்முள் கோமூத்திரிபந்தம் போலாம்.

(b) முதலாம் வரி முதலெழுத்து 'கா'விலிருந்து இரண்டாம் வரி இரண்டாம் எழுத்துக்குக் கீழ்நோக்கிக் கீழ் வந்தபின், இப்படியே மேனோக்கி வாசிக்க முதலடி வந்தது.

(c) இரண்டாம் வரி முதலெழுத்து 'தா'விலிருந்து மேல்நோக்கி 'கா'வுக்கிசைத்ததுபோலச் செய்ய, அல்லது கீழ்நோக்கி அப்படிச் செய்ய இரண்டாம் அடி வந்தது. இப்படியே மூன்றும், நான்காம் அடிகளும் வரும்.

N.B.—முரசுக்கு வார் வரிந்து கட்டியதுபோ லிருத்தலின், இஃது இப்பெயர் பெற்றது.

676. (11) **திரிபாகியாவது**—மூன்றெழுத்துக் கூட ஒரு மொழியாயும், அதன் நடு எழுத்து நீங்கி முதலெழுத்தும் கடையெழுத்தும் கூட வேறோர் மொழியாயும், முதலெழுத்து நீங்கி இடையெழுத்தும் கடையெழுத்தும் கூட மற்றோர் மொழியாயும் ஒன்றற்கொன்று பொருள் வித்தியாசப்பட வருவது.

உ–ம். "மூன்றெழுத்து மெங்கோ முதலீ ரொருவள்ளல்
என்றுலகங் காப்ப திடைகடை—யான்றுணைப்பிற்
பூமாரி பெய்துலகம் போற்றிப் புகழ்ந்தேத்துங்
**காமாரி காரிமா ரி.**"

[இதில் மூன்றெழுத்துக்கூடிய மொழியாகிய 'காமாரி' என்பதில் நடுவெழுத்தாகிய 'மா' என்பது நீங்க 'காரி' எனவும், முதலெழுத்தாகிய 'கா' என்பது நீங்க 'மாரி' எனவும், வெவ்வேறு மொழியாகி, முறையே 'காமனை யெரித்தவனாகிய சிவன்' எனவும், 'ஓர் வள்ளல்' எனவும், 'உலகங் காக்கும் மழை' எனவும் பொருளும் வித்தியாசப் பட்டு வந்தமை காண்க.]

"மூன்றெழுத் தொருபெயர் முதலிடை முறிக்கின்
முப்பெய ரெதிர்முனைப் பதுதிரி பாகி." (முத். வீரி.)

677. (12) **திரிபங்கியாவது**—வெவ்வேறு தொடையானும், பொருளானும், பயனிலையானும் மூன்று செய்யுள் பிரிந்துண்டாகத்தக்க

உறுப்பும் பொருளமைதியு முள்ளதாக ஒரு செய்யுள் பாடுவது. அதாவது, உறுப்பானமைந்து ஒரு பொருள் பயந்துநின்ற ஒரு செய்யுளையே பிரிக்க வெவ்வேறு தொடையும் பொருளுமுடைய மூன்று செய்யுளாக வருவது.

1 1 1
உ-ம். ஆதரந்தீர் அன்னைபோலினியாய் அம்பிகாபதியே
2 2 2
மாதுபங்கா வன்னிசேர்சடையாய் வம்புநீண்முடியாய்
3 3 3
ஏதமுய்ந்தார் இன்னல்சூழ்வினைதீர் எம்பிரானினியார்
4 4 4
ஓதுமொன்றே உன்னுவாரமுதே உம்பர்நாயகனே.

[இதில் 1, 2, 3, 4 என்னு மிலக்கத்தாற் குறிப்பிட்டவைகளைத் தனித்தனி கூட்டி வாசிக்க மூன்று பாட்டாகி, பொருளமைதியும் கெடாதுநிற்றல் காண்க.] அவை வருமாறு:—

1. "ஆத ரந்தீர், மாது பங்கா
ஏத முய்ந்தார், ஓது மொன்றே."

2. "அன்னைபோ லினியாய், வன்னிசேர் சடையாய்
இன்னல்சூழ் வினைதீர், உன்னுவா ரமுதே."

3. "அம்பிகா பதியே, வம்புநீண் முடியாய்
எம்பிரா னினியார், உம்பர்நா யகனே."

[இவை மூன்றும் வஞ்சித்துறை.]

"ஒருகவிக் குட்கவி மூன்றெழு குவது
திரிபங்கி யென்மனார் தெளிந்திசி னோரே." (முத். வீரி.)

**678.** (13) **பிறிதுபடு பாட்டாவது**—அடி, தொடை முதலியவற்றை வேறுபடுத்தச் சொல்லும் பொருளும் வேறுபடாமல் பிறிதொருசெய்யுளாம்படி ஒரு செய்யுள் பாடுவது.

உதாரணம்.

"தெரிவருங் காதலிற் சேர்ந்தோர் விழையும் பரிசுகொண்டு
வரியளி பாட மருவரு வல்லி யிடையுடைத்தாய்த்
திரிதருங் காமர் மயிலிய லாயநண் ணுத்தேமொழி
யரிவைதன் னேரென லாகுமெம் மையயா மாடிடமே."

[இது ஐஞ்சீர் நான்கடிக் கொச்சகக் கலித்துறை.]

இதனையே சொல்லும் பொருளும் வேறுபடாதிருக்க அடியையும் தொடையையும் வேறுபடுத்தி, ஈற்றயலடி முச்சீராய், ஏனையவடி நாற்சீராய்வரும் ஆறடி நேரிசை யாசிரியப்பாவாக்கலாம்.

உ-ம். "தெரிவருங் காதலிற் சேர்ந்தோர் விழையும்
பரிசு கொண்டு வரியளி பாட
மருவரு வல்லியிடை யுடைத்தாய்த் திரிதரும்
காமர் மயிலிய லாய நண்ணுத்
தேமொழி யரிவைதன் னேரென
லாகு மைய யாமா டிடமே."

"பாவடி தொடைகளும் படுப்ப வேறு
மேவருஞ் சொற்பொருள் வேறு படாமல்
மற்றொரு பாவாய் வருவது பிறிது
படுபாட் டெனப்பெயர் பகரப் படுமே." (முத். வீரி.)

679. (14) **காதைகரப்பாவது**—ஒரு செய்யுள் முடிய எழுதி அதன் ஈற்றுமொழிக்கு முதலெழுத்துத் தொடங்கி ஓரோரெழுத்து இடையிட்டு வாசிக்க வேறொரு செய்யுள் அமையத்தக்கதாய்ப் பாடுவது.

26 25 24 23 22 21
உ-ம். [1] "தாயேயா நோவவா வீ ரு வெ ம துநீ
20 19 18 17 16 15 14
பின்னை வெருவாவருவதொ ரத் தப

[1] தாயே யாம் நோ=தாயாயுள்ளவனே நாங்கள் துன்பப்படும்படியான, அவா=ஆசையை, ஈரு=நீக்கு, எமது நீ=எங்களுக்காதாவான நீ, பின்னை=பிறகு, வெருவு ஆ வருவது=பயமாக வருவதை, ஓர் (ஓர்)=அறி, அ தப=அவை நீங்க, எம்புகல்=எங்கள் புகலிடத்தை, வேறிருத்தி வைத்தி=வேறாக நிர்ணயஞ்செய்தவையும், இச்சை கவர்=(எங்கள்) ஆசையைக் கிரகியும், தாவா=(எங்களுக்கு)கெடாத, அருங்கல நீயே=அருமையான ஆபரணம் நீயே. (சின்—அசை.)

13 12 11 10 9 8 7 6 5 4
வெம்புகல் வேறிருத்தி வைத்திசி னிச்சைகவர்
3 2 1
தாவா வருங் கல நீயே."

[இது பல விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா.]

இதினின்றும் புதிதாய்ப் போந்த வேறொரு செய்யுள்,

[1] "கருவார் கச்சித், திருவே கம்பத்,
தொருவா வென்னீ, மருவா நோயே."
[இது வஞ்சித்துறை.]

"யாப்பிறு மொழிமுத லக்கரந் தொடங்கி
ஒவ்வோ ரெழுத்திடை யொழித்து வாசிக்க
வேறொரு செய்யுள் விளைப்பது காதை
கரப்பா மென்மனார் கற்றுணர்ந் தோரே." (முத். வீரி.)

680. (15) **காந்துறைச் செய்யுளாவது**—ஒரு செய்யுள், யாப்பிலக்கணப்படி பாடி முடித்து, அதனின்று சில வெழுத்துகளைப் பொறுக்கியெடுக்க வேறொரு செய்யுளாய் அமைவது.

உ-ம். "அகலல்குற் றேரே யதர மமுதம்
பகர்தற் கரிதிடையும் பார்க்கின்—முகமதிய
முத்தென்ன லாமுறுவன் மாதர் முழுநீல
மைத்தடங்கண் வெவ்வேறு வாள்."

இதில் கரந்துகிடந்த செய்யுள்,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு."

681. (16) **சக்கரமாவது**—நான்கு ஆரை(Spoke), ஆறு ஆரை, அல்லது எட்டு ஆரையுள்ளதாக ஒரு சக்கரம் எழுதி, அதில் எழுத்துக்கள் அமையத்தக்கதாய்ப் பாடுவது.

நான்கிதழ்ப்பதுமபந்தம், எட்டிதழ்ப்பதுமபந்தம் முதலியனவும் இவைபோல்வனவாம்.

[1] கருவார்=பெருமை நிறைந்த. கச்சி=காஞ்சிபுரத்தினகண்ணதாகிய, திருவேகம்பதொருவா=திருவேகம்பமென்னும் இடத்திலுள்ள ஒப்புயர்வில்லாதவனே, நீ மருவா=நீ (எங்களை) அணுகிச்சேராத, நோய்=துன்பம், என=ஏனோ?

**நான்காரைச் சக்கரம்.**

உ-ம். "தாவீது யோசெபு தாதா
தாதாபு தானமெ மாதா
தாமாமெ மாதுவி தாதா
தாதாவி யாவெது வீதா."



[இச்செய்யுள், இந்நான்காரைச் சக்கரத்தில் நடுவில் தாவென்னு மெழுத்தும், நான்கார்மேல் நான்கெழுத்தும், சூட்டின்மேற் பன்னிரண்டெழுத்துமாக நின்று முற்றுப்பெற்றது. அன்றியும், நான்கார் மேல்நின்ற நான்கெழுத்தும், சூட்டின்மேனின்ற பன்னிரண்டெழுத்

தும் "தாவீதா மா யோசெபு தான மெமாது வி(வீ)யா வெ(வே)து" என்னுந்தொடர்மொழியாகி இச்செய்யுளின் கருத்தை விளக்கினமையுங் காண்க. "தாதாபு" என்பதிலுள்ள 'பு,' 'வியாவெது' என்பதிலுள்ள 'வி,' 'வெ்' என்பன குறுகிவந்தன; தாம்—அசை.]

### நான்கிதழ்ப் பதுமபந்தம்.

உ—ம். "மேரு சாபமு மேவுமே
மேவு மேயுண வாலமே
மேல வாமவ னுயமே
மேய ணுடி சாருமே."



[இச்செய்யுள் இந்நான்கிதழ்ப்பதுமபந்தத்துள் அமைந்து வந்தமை காண்க.]

### ஆறாரைச் சக்கரம்.

உ—ம். "தண்மலர் வில்லிதன் போரன தஞ்ச நமக்களித்த
கண்மலர்க் காவிக் கெதிர்வன வல்ல கரமளந்த
பண்மலர் யாழ்பயில் வாரன்பு சூழ்பதி நாகைமிக்க
தண்மை யகத்துப் பதுமத்த மாதர்த் தடங்கண்களே."



[இச்செய்யுள், இவ்வாறாரைச் சக்கரத்தில் நடுவே ரகரமும், ஒவ்வோரார்மேல் ஒன்பதெழுத்தும், சூட்டின்மேல் இருபத்துநான்கெழுத்துமாக வந்து, குறட்டின்மேல் 'போதிவானவன்' என நின்று முற்றுப்பெற்றமை காண்க.]

## எட்டாரைச் சக்கரம்.

உ-ம். "நரசீய மாநவை யிலகவசு ராதிப
னுரனி லுகிரதயி லெனநனி கதமே
மருவா விளாசி வெயிலிடிக ணிவந்து
சுரசன முங்குயி லாமைநீ நின்றையே
திருநண்ணி னுள்ள மகிழா
சுருதி பயின்மே லீந்து ளானுயே."



[இச்செய்யுள், இவ்வெட்டாரைச் சக்கரத்தில் நடுவில் யிகரமும், ஒவ்வோராரர்மேல் ஐந்தெழுத்தும், சூட்டின்மேல் இருபத்து நான்கெழுத்தும், குறட்டின்மேல் எட்டெழுத்துமாக நின்று முற்றுப்பெற்றமை காண்க. அன்றியும் இதன் மூன்றும் வட்டத்தில் 'சீநிவாசராகவன்' எனவும், ஆறும் வட்டத்தில் 'நரசிங்கனடிமை' எனவும் அமைந்திருத்தலுங் காண்க.]

## எட்டிதழ்ப்பதும பந்தம்.

உதாரணம்.

*வாணிதி சீரிய சாதநி கிழவா வாழகி நிதசா யிபவா ரிபவா*
*வாபரி வாபர மேகிச பநிவா வாநிப சநிசா பெரா துணிவா*
*வாணிது ராபவெ ஞதக மதிவா வாதிம கதமெ ஞேதாவ மிதுவா*
*வாதுமி வதானி யாமன துறவா வாறது னமவே பரிசீ நினிவா.*




[இதில், இரண்டாம் வட்டத்தில் 'சீநிவாசராகவன்' எனவும், மூன்ரும்வட்டத்தில் 'திகிரிபதுமமிது' எனவும் அமைந்தமைகாண்க.]

**682.** (17) **சுழிகுளமாவது** (Whirlpool.)—அடிகளில் முதல் எழுத்துக்களை மேலிருந்து கீழ்நோக்கியும், கடையெழுத்துக்களை கீழிருந்து மேனோக்கியும் வாசிக்க முதலடியும்; இரண்டாம், ஏழாம் எழுத்துக்களை இவ்வாறே வாசிக்க இரண்டாம் அடியும்; மூன்றும், ஆறும் எழுத்துக்களை இவ்வாறே வாசிக்க மூன்றும் அடியும்; நான்காம் ஐந்தாம் எழுத்துக்களை இவ்வாறே வாசிக்க நான்காம் அடியும் வரத்தக்கதாய் எவ்வெட்டெழுத்துக்கள்கொண்ட நான்கடியால் ஒரு செய்யுள் பாடுவது.

உ-ம். "கவிமுதியார் பாவே—விலையருமா நற்பா
முயல்வ துறுநர்—திருவழிந்து மாயா."

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| க | வி | மு | தி | யா | ர் | பா | வே |
| வி | லை | ய | ரு | மா | ந | ற் | பா |
| மு | ய | ல் | வ | து | று | ந | ர் |
| தி | ரு | வ | ழி | ந் | து | மா | யா |

[இதில் மேற்சொல்லியபடி வாசிக்க மேற்காட்டிய பாட்டேயாய் வருதல் காண்க.]

**683.** (18) [1]**சர்வதோபத்திரமாவது**—நிரை ஒன்றுக்கு எட்டறைவீதம் எட்டு நிரைக்கும் அறுபத்து நான்கறை கீறி, அடியொன்றுக்கு எவ்வெட்டெழுத்தாக நான்கடியானொரு செய்யுள் பாடி, அச்செய்யுளடி நான்கினையும் அந்நிரைகளில் மேனின்று கீழிழியவும், கீழ்நின்று மேலேறவும் முறையே யெழுதி, மேல்கீழாகவும், கீழ்மேலாகவும், முதலிறுதியாகவும், இறுதிமுதலாகவும், நான்கு பக்கத்திலும் மாலைமாற்றாக வாசிக்கினும் அச்செய்யுளேயாய் வருவது.

---

1 சர்வதோபத்ரமென்பது அரண்மனைகளிலுள்ள ஒரு காரியவறை. இவ்வறைக்கு நாற்பக்கத்திலும் வாசலும், இலகுவாய் மேலேறவும் கீழேவரவும் ஒரு பக்கமிருந்து மறுபக்கம் போகவும் வழிகளும் உண்டு. இப்பந்தம் இதைப்போன்றிருத்தலின் சர்வதோபத்ர மெனப்படும்.

உ–ம். "மாவா நீதா தாநீ வாமா—வாயா வாமே மேவா யாவா
நீவா ராமா மாரா வாநீ—தாமே மாரா ராமா மேதா."

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மா | வா | நீ | தா | தா | நீ | வா | மா |
| வா | யா | வா | மே | மே | வா | யா | வா |
| நீ | வா | ரா | மா | மா | ரா | வா | நீ |
| தா | மே | மா | ரா | ரா | மா | மே | தா |
| தா | மே | மா | ரா | ரா | மா | மே | தா |
| நீ | வா | ரா | மா | மா | ரா | வா | நீ |
| வா | யா | வா | மே | மே | வா | யா | வா |
| மா | வா | நீ | தா | தா | நீ | வா | மா |

[இதில் மேற்சொன்னபடி வாசிக்க அச்செய்யுளேயாய் வருதல் காண்க.]

**684.** (19) **அக்கரச் சுதகமாவது** — ஒரு பொருள்தரும் ஒரு சொற்கூறி, அதில் ஒவ்வோரெழுத்தை நீக்குந்தோறும் வெவ்வேறு பொருள்தரப் பாடுவது. இது **எழுத்தழிவணி** யெனவும் சொல்லப்படும்.

உ–ம். "பொற்றூணில் வந்தசுடர் பொய்கை பயந்த வண்ணல்
சிற்ருயன் முன்வனிதை யாகி யளித்த செம்மல்
மற்றியார்கொ லென்னின் மலர்தூவி வணங்கி நாளும்
கற்ருேர் பரவுங் **கநகாரி நகாரி காரி**."

[இதில் இரணியனைக் கொன்றவனாகிய நரசிங்கனென்னும் பொருள்தரும் 'கநகாரி' என்னும் சொலொன்றே, முதலெழுத்தாகிய 'ககரம்' நீங்க 'நகாரி' என்னும் வேறுசொல்லாகிக் கிரவுஞ்சகிரியைப் பிளந்தவனாகிய முருகக்கடவுளெனப் பொருள் தந்தும், இந்நகாரியும், முதலெழுத்தாகிய 'நகரம்' நீங்கக் 'காரி' என்று வேறுசொல்லாகி மாசாத்தனெனப் பொருள்தந்தும் நிற்றல் காண்க.]

"ஒருபொருள் பயப்ப தொருமொழி யிருந்ததி
லொவ்வோ ரக்கர மொழிக்க வெவ்வேறு
சொல்லும் பொருளுந் தோன்றுவ தெழுத்தழி
வாகு மென்மனு ரறிந்திசி னோரே." (முத். வீரி.)

685. இவைபோல அநேக சித்திரக்கவிகள் எழுதப்படும். ஸ்தல புராணங்களில் இச்சித்திரக்கவிகட் குதாரணம் அநேகம் அகப்படும். துவஜஸ்தம்பத்தை வர்ணிக்கையில் இதுபோன்ற சுரூபத்தில் அமையத்தக்கதாய்ப் பாடினால் துவஜஸ்தம்ப பந்தமெனப்படும். இப்படியே பிறவும் ஆகையால் இச்சித்திரக்கவிகட் களவில்லை.

686. தீவகம், பின்வருநிலை, சிலேடை, நிரனிறை என்பவை சொல்லைப்பற்றிய அலங்காரமாய் நிற்றலின், தண்டியாசிரியர்முதலிய முன்னூலோர் கொள்கைப்படி, அவற்றைப் பொருளணியிற் சேர்க்காது சொல்லணியிற் சேர்த்தலே நியாயமாகக் காணப்படுகிறது.

687. (1) **தீவகமாவது.**—தீபம் வீட்டின் ஓர் இடத்தில் வைக்கப்பட்டதாயினும், அது அவ்வீட்டின் பலவிடங்களிலும் பரவிப் பிரகாசிப்பதுபோல, ஓர் சொல் பாட்டின் அடிகளில் ஓரிடத்தில் வைக்கப்பட்டதாயினும் அது அப்பாட்டிலுள்ள ஒவ்வொரு வாக்கியத்தோடுங்கூடி பொருள் தருவதாயிருப்பது.

உ-ம். "உண்ணாமை உள்ள துயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு."

[இதில், ஊன் என்னுஞ் சொல், ஊன் உண்ணாமை உள்ளதுயிர் நிலை; ஊன் உண்ண அளறு (நரகம்) அண்ணாத்தல் செய்யாது (திறக்காது) என ஓரிடத்து நின்று வாக்கியந்தோறுஞ் சென்றியைந்து பொருடரல் காண்க.]

இத்தீவகம், குணம், தொழில், ஜாதி, பொருள் முதலியவற்றைப் பற்றிக் குணத்தீவகம், தொழிற்றீவகம், ஜாதித்தீவகம் பொருட்டீவகம் என நான்குவகைப்படும்.

மேலும், இது முதலிலாவது, இடையிலாவது, கடையிலாவது வருதல்பற்றி முதனிலைத்தீவகம், இடைநிலைத்தீவகம், கடைநிலைத்தீவகம் என வேறு மூன்றுவிதமாகவும் பிரிக்கப்படும். ஆகவே, தீவகமென்று சொல்லப்படுவனவெல்லாம், இம்மூன்றையும் முன்சொல்லிய குணமுதலிய நான்கனோடும் உறழப் பன்னிரண்டாயடங்கும். இவற்றுட் சிலவற்றிற்குமாத்திரம் உதாரணம் இங்கு காட்டப்படும்.

ஏனையவற்றிற்கு, இலக்கண விளக்கம், தண்டியலங்காரம் முதலிய வற்றில் தனித்தனி இப்பன்னிரண்டு வகைக்கும் உதாரணம் கூறி யிருத்தலின் அங்கு காண்க.

உ—ம். (a) "சேந்தன வேந்தன் றிருநெடுங்கண் டெவ்வேந்தர்
ஏந்து தடந்தோ ளிழிகுருதி—பாய்ந்த
திசையனைத்தும் வீரச் சிலைபொழிந்த வம்பும்
மிசையனைத்தும் புட்குலமும் வீழ்ந்து."

[இதில், முதல்நின்ற சேந்தன (சிவந்தன) என்னும் குணவடி யாகப்பிறந்த வினைமுற்று, புட்குலம், அம்பு, வேந்தர்தோள், திசை ஆகிய இவற்றோடு சென்றியைந்து, புட்குலம் சிவந்தன முதலிய வாகப் பொருள்முடியச் செய்தமையின், இது முதனிலைக்குணத்தீவ காலங்காரமாம்.]

(b) "மானமருங் கண்ணாண் மணிவயிற்றில் வந்துதித்தான்
தானவரை யென்றும் தலையழித்தான்—யானைமுகன்
ஓட்டினான் வெங்கலியை யுள்ளத் தினிதமர்ந்து
வீட்டினா னம்மேல் வினை."

[இதில், இடைநின்ற யானைமுகன் என்னும் பொருட்பெயரும் அவ்வாறு பொருள்முடியச் செய்தலின், இது இடைநிலைப் பொருட்டீவகாலங்காரமாம். ஏனையவு மிவ்வாறே.]

"குணந்தொழில் சாதி பொருள்குறித் தொருசொல்
லொருவயி னின்றும் பலவயிற் பொருடரிற்
றீவகச் செய்யுண் மூவிடத் தியலும்." (தண்டி.)

688. **மாலாதீவகமாவது**—மாலைபோலச் சொற்கள் அமைந்த வற்றின்கண் ஒன்றோடொன்று தொடர்ந்து தீவகமாய் வருவது.

உ—ம். "மனைக்கு விளக்க மடவார் மடவார்
தமக்குத் தகைசால் புதல்வர்—மனக்கினிய
காதற் புதல்வர்க்குக் கல்வியே கல்விக்கு
ஓதிற் புகழ்சா லுணர்வு."

[இதில், விளக்கமென்பது, மாலைபோலத்தொடர்ந்து குவ்வுருபேற்ற மடவார் முதலியவற்றோடு சென்றியைந்து பொருள் முடிவுசெய்த மை காண்க.]

**689. விருத்ததீவகமாவது.**—தீவகமாய் நின்ற சொல் ஒன்றற்கொன்று விரோதமான இரண்டு பொருள்களுக்கும் இசைந்து வருவது.

விருத்தம்=விரோதம் (opposition.)

உ-ம். "வரிவண்டு நாணு மதுமல ரம்பாப்
பொருவெஞ் சிலைக்குப் பொலிவும்—பிரிவின்
விளர்க்கு நிறமுடையார் தம்மேன் மெலிவும்
வளர்க்கு மலயா நிலம்."

மலயாநிலம்=தென்றற்காற்று.

காமன் கணைக்குப் பொலிவைத் தென்றல் தந்தது. அத்தென்றலே, புருஷனைவிட்டுப் பிரிந்து தனித்திருக்கும் ஸ்திரீகளுக்கும் மெலிவை விளைத்தது என்பது இதன் தாற்பரியம்.

[இதில், 'வளர்க்கும்' என்பது ஒன்றற்கொன்று விரோதமாகிய பொலிவும், மெலிவுமாகிய இரண்டனோடும் இசைந்தமை காண்க.]

N.B.—இத்தீவகம் மற்ற அலங்காரங்களாகிய பொருளணி சொல்லணிகளோடு சேர்ந்துவருவது மியல்பாகும்.

"அதுவே,மாலை விருத்த மொருபொருள் சிலேடையென
நால்வகை யானு நடைபெறு மென்ப." (தண்டி.)

**690.** (2) பின்வரு நிலையாவது (Autana classis.)—ஒரு செய்யுளில் முன்வந்த சொல்லாவது பொருளாவது பலவிடத்துப் பின்னும் வருவது.

உ-ம். (a) "மால்கரி காத்தளித்த மாலுடைய மாலைசூழ்
மால்வரைத்தோ ளாதரித்த மாலையார்—மாலிருள்சூழ்
மாலையின் மால்கட லார்ப்ப மதன்றொடுக்கும்
மாலையின் வாளி மலர்."

[இதில், 'மால்' என்ற சொல்லொன்றே திரும்பத் திரும்ப வந்தமையின் இது சொற்பின் வருநிலை யெனப்படும்.]

(b) "அவிழ்ந்தன தோன்றி யலர்ந்தன காயா
நெகிழ்ந்தன நேர்முகை முல்லை—மகிழ்ந்திதழ்
விண்டன கொன்றை விரிந்த கருவிளை
கொண்டன காந்தள் குலை."

[இதில், தடித்த எழுத்திலுள்ள சொற்களெல்லாம் விரிந்தன என்னும் ஒரே பொருளை யுடையனவாகலின், இது பொருட்பின் வரு

நிலை யெனப்படும். கடைசி அடியில் 'குலைகொண்டன' என மாற்றிக் கூட்டுக.

"முன்வரும் சொல்லும் பொருளும் பலவயிற்
பின்வரு மென்னிற் பின்வரு நிலையே." (தண்டி.)

**691.** (3) [1]**சிலேடையாவது** (Equivocation.)—ஒரு சொற்றொடரே வெவ்வேறான பல அர்த்தம் கொடுக்கத்தக்கதாய் நிற்பது. இது செம்மொழிச் சிலேடையும், பிரிமொழிச் சிலேடையுமென இருவகைப்படும்.

(*a*) அவற்றுள், **செம்மொழிச் சிலேடையாவது** (Plain Combination of equivocal word.)—சொல் நின்றநிலை குலையாமல் ஒரே பதத்துக்குப் பல அர்த்தங்கொள்ள வருவது.

உ-ம். "நஞ்சிருக்குந் தோலுரிக்கு நாதன்முடி மேலிருக்கும்
வெஞ்சினத்துப் பற்பட்டால் மீளாது—விஞ்சுமலர்த்
தேம்பாயுஞ் சோலைத் திருமலைரா யன்மலையிற்
பாம்பாகும் வாழைப் பழம்."

[இதில், பதங்கள் வேறுபடாமல் பாம்புக்கும் வாழைப்பழத்துக்கும் சிலேடையாயினமை காண்க.]

(*b*) **பிரிமொழிச் சிலேடையாவது** (Artistic combination of equivocal word.)—தொடர்ந்துநின்ற சொற்கள் வெவ்வேறாய்ப் பிரிக்கப்பட்டுப் பல அர்த்தங்கொள்ள வருவது.

உ-ம். "தள்ளா விடத்தேர் தடந்தா மரையடைய
எள்ளா வரிமா னிடர்பிருப்ப—உள்வாழ்தேம்
சிந்துந் தகைமைத்தே யெங்கோன் றிருவுள்ள
நந்துந் தொழில்புரிந்தார் நாடு."

[இதில், 'தள்ளாவிடத்தேர்' என்பது 'தள்ளா—இடத்து—ஏர்,' 'தள்ளா—விடத்தேர்' எனவும், 'தாமரை' என்பது 'தாம்—மரை' எனவும், 'அரிமானிடர்' என்பது 'அரி—மானிடர்,' 'அரிமான்—இடர்' எனவும் பிரிந்து, சோழனுடைய மனங் களிக்க நடந்தோர் நாட்டுக்கும், அவ

---

[1] இது ஒருவினைச் சிலேடையென்றும், பலவினைச் சிலேடையென்றும், முரண்வினைச் சிலேடையென்றும், நியமச் சிலேடையென்றும், நியமவிலக்குச் சிலேடையென்றும், விரோதச் சிலேடையென்றும், அவிரோதச் சிலேடையென்றும் எழுவகைப்படுவதுண்டு. இவைகள், விரிக்கிற் பெருகுமாதலானும் விரிப்பதும் ஆவசியகமன்றாகலானும் விடுக்கப்பட்டன.

"ஒருவினை பலவினை முரண்வினை நியம
நியம விலக்கு விரோத மவிரோத
மெனவெழு வகையினு மியலு மென்ப." (தண்டி.)

னது மனம் வெறுக்க நடந்தோர் நாட்டுக்கும் சிலேடையாயினமை காண்க.]

"ஒருவகைச் சொற்றொடர் பலபொருட் பெற்றி
தெரிவுதர வருவது சிலேடை யாகும்." (தண்டி.)

"அதுவே, செம்மொழி பிரிமொழி யெனவிரு திறப்படும்." (தண்டி.)

இது மற்ற அலங்காரங்களோடு சேர்ந்து வருவது மியல்பாகும்.

692. (4) நிரனிறையாவது—சொற்களை நிறுத்திய கிரமப்படி அவை கொண்டு முடியும் பொருள்களையும் நிறுத்துவது. இவைகளை நேர்நேராகவும் எதிரெதிராகவும் அடுக்கலாம்.

உ-ம். (a) "கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவள முத்த முகம்வாய் முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்."

[இது நேர் நிரனிறை.]

(b) "ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்
பாடகமு மூரகமும் பஞ்சரமா—நீடியமால்
நின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ
மன்றார் மதிற்கச்சி மாண்பு."

[இது எதிர் நிரனிறை.]

N.B.—இது பொருள்கோளில் விவரிக்கப்பட்டது.

"நிரனிறுத் தியற்றுத னிரனிறை யணியே." (தண்டி.)

## CHAPTER XXI.

### பொருளணி—FIGURES OF RHETORIC.

693. "நீ போ," "இராமன் வந்தான்" என்பனபோன்ற வாக்கியங்கள் வெள்ளையாய்ப் பொருள் தருகின்றன.

"நீ துரிதமாய்ப் போ" என்பதை "நீ வாயுவேகமாய்ப் போ" என்றும், "போகக்குறித்த இடத்திற்கு மனதை முற்றும் செலுத்தி, சூட்சும தேகத்தை அவ்விடத்தில் ஞானேந்திரியங்களால் நாட்டி, மின்வேக

மாய் உன் ஜடதேகத்தை அவ்விடத்தில் கொண்டுபோ" என்றும், பொருள் விளங்கவும் சொல்வதை வற்புறுத்தவும் சமத்காரமாக எழுதுவதும், வசனிப்பதும், பாடுவதும் அணியெனப்படும்.

"என் மனைவி நித்திய சண்டைக்காரி" என்பதற்குப் பதிலாய், "தேடிய சொத்தெல்லாம் கொடுத்துவாங்கிய பஞ்சகல்யாணிக் குதிரை காலால் உதைத்ததினாலே எஜமானன் கட்டில் கிடையாய்க் கிடந்து, இன்றோ நாளையோ உயிர்பிரிவதென் றோலோலமிட்டு அலறுவதுபோல், அன்புக்குடைய இன்பசுகிர்தமென ஆய்ந்துதேடி மணமுடித்த என் மனைக்கிழத்தி எனக்கு யமதேவதையாயினளே" என்று வசனிப்பது அலங்காரமாம்.

**694.** அலங்காரங்களை நிர்நிமித்தமாய்ப் பாகுபாடு செய்யாது மனோதத்துவ சாஸ்திரமுறையாய்ப் பிரிப்பது யுக்தம். இதுவே இக்காலத்தாருக்கு இவற்றைக் கிரகிக்கவும், உபயோகிக்கவும், நூல்களில் இவை வந்தவிடத்துப் பகுத்தறியவும் போந்த திறந்தருவதாம். இது முன்னோர் முறையன்றெனினும் "பழையன கழிதலும் புதியன புகுதலும்" கால வியல்பாதலால் இம்முறையை அனுசரிக்கலாயிற்று.

**695.** மனதில் ஒரு பொருளை நன்றாய்ப் புலப்படுத்த, பல உபாயங்களுண்டு.

I. (1.) By Similarity.—தெரியாத ஒன்றை அறிய, அதற் கொப்பானதும் தெரிந்ததுமான மற்றொன்றைக்கொண்டு ஒப்புமைகாட்டிப் புலப்படுத்தல்.

உ-ம். தெய்வ சன்னிதியிலுள்ள வெளிச்சத்தை, கோடி சூரியன் ஒருங்கு கூடிப் பிரகாசித்ததுபோ லிருக்குமெனல். இயேசு சுவாமியின் நீண்ட பொறுமையை, கொலைக்களத்தில் அடிக்கப்படக் கொண்டுபோம் ஆட்டின் பாவனையால் விளக்கல்.

**696.** (2.) By Contrast. — ஒன்றை நன்றாயறிய, அதற்கு நேரெதிரிடையானதை எடுத்து விளம்புதல்.

உ-ம். வெளிச்சம்—இருள். மேடு—பள்ளம்.
உயர்வு—தாழ்வு. மெய்—பொய்.

நேரெதிரிடையானது முரண் எனப்படும்.

**697.** (3.) By Contiguity *i. e.*, By association of ideas.—ஒன்றைப் புலப்படுத்தல், காலவியற்கையாலோ, இடவியற்கையாலோ, காரணகாரியவியற்கையாலோ, இன்னும் மற்றெவ்விதத்தினாலோ அதனோடு சம்பந்தப்பட்டதைக் குறிப்பிப்பதாலாகும். இதற்குச் **சங்கேதம்** எனப் பேர்.

உ-ம். 1. தொட்டிலைக் காணப் பிள்ளை ஞாபகம் வரும்.
[இது காரியசங்கேதம்.]

2. கம்பனை நினைக்க இராமாயணம் ஞாபகமாகும்.
[இது கருத்தாசங்கேதம்.]

3. கோர்ட்டைப் பார்க்க நியாயாதிபதி ஞாபகம் வரும்.
[இது இடசங்கேதம்.]

4. கார்த்திகை மாதம் மழை இருட்டு முதலியவற்றை ஞாபகத்தில் விளைவிக்கும்.
[இது காலசங்கேதம்.]

5. சாவு வியாதியை நினைப்பூட்டும்.
[இது காரணசங்கேதம்.]

இம்மூன்றும் ஒருவர்க்கு அறிவு உண்டாகச்செய்யும் உபாயங்கள்.

**698.** II. இனிச் சொல்லப்பட்டவை கேட்போர் மனதிலும், எழுதப்பட்டவை வாசிப்போர் அகத்திலும் நன்ருய் உறைக்கவும், உபயோகமான பயன் விளைவிக்கவும் சிற்சில உபாயங்களுண்டு.

(1.) காணுத வஸ்துவைக் கண்டதுபோல் கண்ணுக்குமுன் பாவனையால் நிறுத்தி வர்ணித்தல்.

உ-ம். கந்தையுடுத்திக் கண்குழிவிழுந்து எலும்பும் தோலுமாய் ஒரு உந்தில் உயிர் மாயத்தக்கவராய், அதோ, நடுக்காட்டில் யாருமற்ற பாவியாய், தன்னந்தனியாய், ஓர் அரசமரத்தடியில் எண்ணெய் தண்ணீர் அற்றுச் சடைகள் பின்னலாட வானத்தை நோக்கிய கண்களும் தீரா விசாரத்தைச் சிந்தையில் கொண்டாற்போல் முகமுமுள்ளவராயிருப்பவர் யார்? இவர்தாம் புத்தர்; ஆத்ம முக்திவழி தேடி, நிர்வாண நிஷ்டையிலிருக்கிருர்.

**699.** (2.) உண்மைக்கு மிஞ்சி வர்ணித்தல்.

உ-ம். "கோபத்தினுற் கண் சிவந்தது" என்பதற்கு "அக்கினி நேத்திரங்களினின்று ஜொலித்தெழும்பியது" எனல்.

**700.** (3.) உண்மையை விளங்கச்செய்ய அதற்கு நேர்விரோதமானவற்றை இல்லையெனச் சாதித்தல்.

உ-ம். "தம்பி வந்தான்" என்பதற்குப் பதிலாய்த் "தம்பி வராதிருப்பானென்று கனவிலும் நினைக்கவேண்டாம்" எனல்.

**701.** (4.) விகடமாய்ப் பேசுதல்.

உ-ம். "வரதநாய்க்கர் மகாலுத்தர்" என்பதற்கு "வரதநாய்க்கர் நன்கொடையால்தான் சர்வசிருஷ்டியும் ஜீவிக்கிறதென்பதை அறியீரா?" எனல்.

முட்டாளைப் பார்த்து "இவன் முகத்தில் சகலகலை வல்ல சரஸ்வதி களை துலங்குகிறதே" எனலும் அது.

**702.** (5.) கடுமையான சொற்களை நீக்கி நயவசனிப்பால் உள்ளக்கருத்தை வெளியிடல்.

உ-ம். "இவன் பரீட்சையில் தோற்றான்" என்பதற்குப் பதிலாய் "இன்னொரு வருஷமும் இதேவகுப்பில் படிப்பது யுக்தமாகத் தீர்மானித்தான்" எனல்.

"செத்தான்" என்பதற்குப் பதிலாக "வேலையைமுடித்து இளைப்பாறினான்," "பெரிய ஊருக்குப் போய்விட்டான்" என அமங்கலமானதை நீக்கி மங்கலமா யுரைப்பதும் இத்தன்மையதே.

**703.** (6.) கேள்வியால் உண்மையை வெளியிடல்.

உ-ம். "சவலை இராமசாமி முதலியார் இந்தச் சங்கடத்தில் சமய சகாயஞ் செய்தார்" என்பதற்குக் "கஷ்டப்படுகின்றவர்கள் தங்கள் கஷ்டத்தைச் சவலை இராமசாமி முதலியாரிடம் வாய்திறந்து சொல்வார்களாகில், அவர்கள்மிடி கணப்பொழுதேனும் நிற்குமோ?" எனல்.

**704.** (7.) அசமந்தமாய் அயர்ந்திருப்பவர்களை எழுப்பிவிடுவதற்கு அகஸ்மாத்தான ஒரு சம்பவம் எப்படி உதவுமோ, அதுபோல மனது பிரமைகொள்ளப் பேசிய அல்லது எழுதிய விஷயத்துக்கு அசம்பந்தமானவற்றைத் திட்டத் திடீரெனச் சொல்லிப் பொருளை விளக்குதல்.

உ-ம். "அரசன் தன் மனைவியோடு காரணமின்றிக் கோபித்துக் கொண்டான்" என்ற விஷயத்தை இம்மட்டுஞ் சொல்லி நிறுத்தாமல், "அரசன் தன் மனைவியோடு காரணமின்றிக் கோபித்துக்கொண்டதால் சூரியன் கார்மேகத்துக்குள் ஓடி ஒளித்துக்கொண்டான்" என்பது.

[இதில், மேகம் கறுத்ததும் சூரியன் மறைந்ததும் இயற்கை; இராஜ கோபத்திற்கும் இவற்றிற்கும் எள்ளளவும் நியாயமான சம்பந்தமில்லாதிருக்கவும், சூரியன் இந்த அநீதத்தைப் பார்க்கமாட்டாமல் மறைந்தான் என்று ஒரு காரணம் கற்பித்துக் கூறுதல் சமையோசித சமத்காரமாம்.]

705. (8.) சொன்னதையே திரும்பவாவது மூன்று நான்குதரமாவது சொல்வது.

உ-ம். எப்படியும் ஆண்பிள்ளை ஆண்பிள்ளைதான், பெண் பெண்ணே.

[இதற்கு, "ஆண் பெலவீனமானவனாயினும் தன் சமர்த்தைவிடாது கையாடுவான். இதற்குப் பெண் கல்விமுதலிய நயப்பை உடையவளாயினும் தன்னைப்போன்றார்க்குள்ள மூடத்துவமும், பலவீனமும் அவளோடு இன்றியமையாதிருக்கவேயிருக்கும்" என்பது பொருளாகும்.]

706. (9.) ஒரேவாக்கியம் இரண்டுமுதல் பல அர்த்தங் கொள்ளத்தக்கதாக உரைத்தல்.

உ-ம். "என்றூட்டியக்கந் தாரானே" என்பது (1) என் "கூத்தாகிய சதுர்ப்பிரசங்கத்திற் பிரகாசிக்கும் அழகிய மாலையானே" என்றும், (2) "எந்நாளுந் தியக்கந் தராதவனே" என்றும் பொருள் தந்தது.

"பூமிக்கானவாதவனே" என்பது (1) "உலகுக்கான சூரியனே" எனவும், (2) "அழகு மிகுத்தவனே! தவத்தோனே!" எனவும் பொருள் தந்தது. இது சிலேடை யெனினு மொக்கும்.

707. (10.) ஒரு வஸ்துவுக்காவது தொழிலுக்காவது சம்பந்தமானவைகளை ஒன்றின்பின் ஒன்றாய் அடுக்குதல்.

உ-ம். அடுத்தாரைக் கெடுத்தவரும், விதவைகளின் நியாயத்தைப் புரட்டினவரும், அயல்மனையாளை மோகித்தவரும், தந்தைதாய் வார்த்தை கேளாதவரும் எரிநரகிற்குப் பாத்திரர்.

இவ்விதமான பலவகை உபாயங்களால் பொருள் விளங்க அமைப்பது அணி யெனப்படும்.

708. பொருளணி—பொருளை விசேஷப்படுத்துவதால் வாக்கியத்தையாவது பாட்டையாவது அழகுபெறச் செய்யும் சமத்காரம்.

## SECTION I.

ஒருவஸ்து அல்லது கிரியை மற்றொன்றுக்குச் சமமென விளக்கிக்காட்டுதலால் அவ்வஸ்துவையோ, கிரியையோ சிறப்பிப்பதற்காக உபயோகிக்கப்பட்டவைகள். (Figures appealing to the understanding by the Laws of Similarity.)

**709. உவமையணி**(Simile.)-ஒரு வஸ்துவின் பண்பு, தொழில் பயன்முதலியவற்றில் ஒன்றையாவது பலவற்றையாவது சிறப்பித்துக் காட்ட, மற்றொரு வஸ்துவையாவது பல வஸ்துக்களையாவது எடுத்துக்கூறி, அவற்றின் சம்பந்தங்களைப் "போல" முதலிய உருபுகளைக் கொண்டு விளக்குவது.

1. பொருளை விளக்குவதற்குரியது உபமானம், உவமை, உவமம், புனைவிலி, அவர்ணியம், அல்பொருள் என்றும்,

2. விளக்கப்பட்ட பொருள் உபமேயம், பொருள், வர்ணியம், புனைவுளி என்றும்,

3. போல, புரைய, ஒப்ப முதலியவை உவமையுருபு, உபமாவாசகம் என்றும்,

4. உபமான உபமேயங்களின் பொதுத்தன்மை சாதாரணதர்மம் என்றும் சொல்லப்படும்.

இந்நான்கும் இவ்வுவமையணிக்கு அங்கங்களாகி, ஒன்றும் பலவும் விரிந்தாயினும், தொக்காயினும் வரும்.

உ-ம். "நற்றாமரைக் கயத்தில் நல்லன்னஞ் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்."

[இதில், 'போல்' என்னும் உவமையுருபு விரிந்து நின்றது.]

"அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு."

[இதில், அவ்வுவமையுருபு தொக்கு நின்றது.]

"பண்பும் தொழிலும் பயனுமென் றிவற்றி
னொன்றும் பலவும் பொருளொடு பொருள்புணர்ந்
தொப்புமை தோன்றச் செப்புவ துவமை." (தண்டி.)

தொல்காப்பியர், தண்டியாசிரியர்முதலிய தொல்லாசிரியர் கொள்கைப்படி இவ்வுவமையணி விரியுவமை முதலியனவாக முப்பத்திரண்டு வகைப்படும்.

**710.** (*a*) அவற்றுள், **விரியுவமை**—உபமானம் முதலிய நான்குறுப்புகளும் விரிந்துவருவது.

உ-ம். "பால்போலு மின்சொல் பவளம்போற் செந்துவர்வாய்
சேல்போற் பிறழும் திருநெடுங்கண்—மேலாம்
புயல்போற் கொடைக்கை புனலுடன் கொல்லி
யயல்போலும் வாழ்வ தவர்."

[இதில், உபமானமுதலிய நான்குறுப்புகளும் விரிந்து வந்தமை காண்க.]

N. B.—அடியில் கோடுகீறி யிருக்கின்றவைகள் பொதுத்தன்மையைக் காட்டிய வார்த்தைகள்; மற்றவைகள் உபமானங்களாகவும், உபமேயங்களாகவும், உருபுகளாகவும் விளங்கி நின்றன.

711. (b) தொகையுவமை—இந்நான் குறுப்புகளுள் ஒன்றும் பலவும் தொக்குவருவது.

உ-ம். "தாமரை வாண்முகத்துத் தண்டரளம் போல்முறுவல்
காமரு வேய்புரைதோள் காரிகையீர்—சேமருவு
பூங்குழல் வாசப் பொறைசுமந்து சோர்ந்ததோ
பாங்குழலுந் தென்றற் பரிசு."

[இதில், 'தாமரைபோல் வாண்முகம்' என வராமல் 'போல்' என்னும் உவமையுருபு தொக்குத் 'தாமரை வாண்முகம்' என வந்தமை காண்க. ஏனையவு மிவ்வாறேயாகும்.]

712. (c) இதரவிதரவுவமை—உவமையே பொருளாயும், பொருளே உவமையாயும் வருவது.

உ-ம். "களிக்குங் கயல்போலு நுங்கணுங் கண்போல்
களிக்குங் கயலுங் கனிவாய்த்—தளிர்க்கொடியீர்
தாமரை போல்மலரு நும்முக நும்முகம்போல்
தாமரையுஞ் செவ்வி தரும்."

கனி=கொவ்வைக்கனி; செவ்வி=அழகு.

713. (d) சமுச்சயவுவமை—ஒன்றையொன்று இதனாலொத்தலன்றி வேறொன்றினாலு மொக்குமென்பது.

உ-ம். [1] "அளவே வடிவொப்ப தன்றியே பச்சை
இளவேய் நிறத்தாலு மேய்க்கும்—துளவேய்
கலைக்குமரி போர்துளக்குங் காரவுணர் வீரம்
தொலைக்குமரி யேறுகைப்பா டோள்."

714. (e) உண்மையுவமை—முன்பு உபமானத்தைக் கூறிப் பின்பு அதுவன்றென மறுத்து உபமேயத்தையே கூறி முடிப்பது.

---

[1] துளசிமாலையணிந்த கலைமகளாகிய கன்னி போரில் பகைவரை நடுங்கச்செய்யும் கருநிறமுள்ள அசுரர்களின வீரத்தை நசிப்பிக்கும் ஆண்சிங்கத்தை வாகனமாகக்கொண்டவளுடைய தோள்களை, மூங்கிலானது அளவினுலும் வடிவினுலும் ஒத்தலன்றி பசுமைநிறத்தாலும் ஒக்கும்.

உ-ம். 1. "தாமரை யன்று முகமேயீ தீங்கிவையும்
காமருவண் டல்ல கருநெடுங்கண்—தேமருவு
வல்லியெனி னல்ல ளிவளென் மனங்கவரு
மல்லி மலர்க்கோதை யாள்."

2. இப்பள்ளிக்கூடம் என்வீடு,இதோ வருகிற தலைமை உபாத்தியாயர் என் தகப்பன், அருகில் நிற்கும் அம்மாள் என்தாய்,அதோ புடைசூழ்ந் தாடும் மாணாக்கர் என் அண்ணன் தம்பிமார், இங்கு நடந்துவரும் உதவி உபாத்தியாயர் என் சிற்றப்பர்; இவ்விடம் நான் உண்டுறங்கி வளரும் அன்புக்கினிய அருமையான சொந்தவீடல்லாது வேறில்லை.

**715.** *(f)* **மறுபொருளுவமை** அல்லது **எடுத்துக்காட்டுவமை** (A full and complete exposition.)-முன் ஒரு பொருளைச் சொல்லி, அதன் சிறப்பு நன்கு விளங்குதற்பொருட்டு அதனையொப்ப தொன்றனைப் பின்னரெடுத்துக் காட்டுவது.

உ-ம். 1. "அன்னைபோ லெவ்வுயிருந் தாங்கும் அனபாயா
நின்னையா ரொப்பார் நிலவேந்தர்—அன்னதே
வாரி புடைசூழ்ந்த வையகத்திற் கில்லையாற்
சூரியனே போலும் சுடர்."

வாரி=கடல்.

[இதில், அனபாயன் சிறப்பு நன்கு விளங்குதற்பொருட்டுச் சூரியனது தன்மை எடுத்துக் காட்டப்பட்டது.]

2. அத்திபூப்பது அருமைபோல் குழுவரிலொருவர் சின்ன கலெக்டராக மாணிக்கம்போல அருமையாய் விளங்கி உத்தியோகம் செய்கிறார்.

**716.** *(g)* **புகழுவமை**—உவமையைப் புகழ்வதாற் பொருளைச் சிறப்பிப்பது.

"இறையோன் சடைமுடிமே லெந்நாளுந் தங்கும்
பிறையோர் திருநுதலும் பெற்ற—தறைபுனல்சூழ்
பூவலயம் தாங்கும் அரவின் படம்புரையும்
பாவைநின் அல்குற் பரப்பு."

**717.** *(h)* **நிந்தையுவமை**-உவமையின் குறையை விளக்கலோடு அதனைப் பொருளோடு உவமிப்பது.

உ—ம். "மறுப்பயின்ற வாண்மதியு.மம்மதிக்குத் தோற்கு
நிறத்தலரு நேரொக்கு மேனும்—சிறப்புடைத்துத்
தில்லைப் பெருமா னருள்போற் றிருமேனி
முல்லைப்பூங் கோதை முகம்."

**718.** *(i)* **நியம உவமை**—*இதற்கிதுவே சரியான உபமானம் எனத் தேற்றேகாரந்தந்து கூறுவது.*

உ-ம். *"தாதொன்று தாமரையே நின்முக மொப்பதுமற்*
*றியாதொன்று மொவ்வா திளங்கொடியே—மீதுயர்ந்த*
*சேலே பணியப் புலியுயர்த்த செம்பியர்கோன்*
*வேலே விழிக்கு நிகர்."*

**719.** *(j)* **அநியம உவமை**—*முதல் நியமித்த உவமையேயன்றி, இதுபோன்ற மற்றொன்றும் உவமையாம் என எடுத்துக் கூறுவது.*

உ-ம். 1. *"கௌவை விரிதிரைநீர்க் காவிரிசூழ் நன்னாட்டு*
*மௌவல் கமழுங் குழன்மடவாய்—செவ்வி*
*மதுவார் கவிரேநின் வாய்போல்வ தன்றி*
*அதுபோல்வ துண்டெனினு மாம்."*

2. *சுவார்ச்சையருடைய சீலம், பரிசுத்த பவுல் அப்போஸ்தலனதுபோலமாத்திரமல்ல, பரிசுத்த பேதுரு அப்போஸ்தலனதுபோலவும் தென் இந்தியாவில் விளங்கியது.*

*[இதில் இதுவோ அதுவோ என சமுசயத்துக்கேதுவாகாமல் இரண்டும் ஒக்குறைய ஒரு பொருளுக்கு உபமானமாயின.]*

**720.** *(k)* **ஐய உவமை**—*உபமானமும் உபமேயமுமாகிய விரண்டனுள் ஒன்றைத் துணியாமல் ஒப்புமையால் இதுவோ அதுவோவெனச் சந்தேகிப்பது.*

உ-ம். *"தாதளவி வண்டு தடுமாறுந் தாமரைகொல்*
*மாதர்விழி யுலவு வாண்முகங்கொல்—யாதென்*
*றிருபாற் கவருற் றிடையூச லாடி*
*ஒருபாற் படாதென் னுளம்."*

**721.** *(l)* **தெரிதருதேற்ற உவமை**—*ஒப்புமையால் இதுவோ அதுவோவென ஐயுற்றதனைச் சில வித்தியாசத்தால் உணர்ந்து தெளிவது.*

உ-ம். 1. *"தாமரை நாண்மலருந் தண்மதியால் வீறழியும்*
*காமர் மதியுங் கறைவிரவும்—ஆமிதனாற்*
*பொன்னை மயக்கும் புனைசுணங்கி னார்முகமே*
*யென்னை மயக்கு மிது."*

2. எலியாவேல் பஞ்சம் வரும் ஜொலிவான
அக்கினியும் சூழ்ந்து கொல்லும்,
இஸ்நாகனேல் தோலுடுப்பான், தேன்தேடிக்
கிளிபுசிப்பான், பிரசங்கிப்பான்,
எல்லவரோ டிணக்கமுற்று இலங்குபுக ழருள்பொழிய
நல்லவையே செய்துவரும் நசரேயன் இயேசு இவர்.

3. இதோ தூரத்தில் ஓர் வெளிச்சம் தெரிகிறது. வீட்டுவிளக்கானால் ஊர் தெருக்களைக் காணோம். மயானத்தீயானால் காளிகோயில் முதலியன அருகில் இல்லை. மாணிக்கமானால் விட்டுவிட்டு ஜொலிக்குமே; அதுவுமல்ல, பூநீறும் வெள்ளெலும்பும் கூடியதால் உண்டாகும் ஒளியே இவ்வெளிச்சம்.

**722.** (m) **இன்சொல் உவமை**—பொருளினும் உவமைக்கு ஓர் மிகுதி தோன்றக் கூறியும், அவ்வுவமை பொருளினும் சிறந்ததாகாது, ஒத்ததேயாம் என்பது.

உ-ம். "மான்விழி தாங்கும் மடக்கொடியே நின்வதனம்
மான்முழுதும் தாங்கி வருமதியம்—ஆனாலும்
முற்றிழை நல்லாய் முகமொப்ப தன்றியே
மற்றுயர்ச்சி யுண்டோ மதிக்கு."

**723.** (n) **விபரீத உவமை**—உவமையைப் பொருளாக்கியும் பொருளை உவமையாக்கியு முரைப்பது.

உ-ம். "திருமுகம் போல்மலருஞ் செய்ய கமலம்
கருநெடுங்கண் போலுங் கயல்கள்—அரிவை
இயல்போலு மஞ்ஞை இடைபோலுங் கொம்பர்
மயல்போலும் யாம்போம் வழி."

**724.** (o) **வேட்கை உவமை**—இன்ன உபமானத்தைச் சொன்னால் உபமேயத்துக்கு ஒத்திருக்குமென் றென்னுள்ளம் விரும்புகிறதென்பது.

உதாரணம்.

"நன்றுதீ தென்றுணரா தென்னுடைய நன்னெஞ்சம்
பொன்றுதைந்த பொற்சுணங்கிற் பூங்கொடியே—மன்றல்
மடுத்ததைந்த தாமரைநின் வாண்முகத்திற் கொப்பென்
றெடுத்தியம்ப வேண்டுகின்ற தின்று."

(p) **மோக உவமை**—மோகத்தினால் ஒரு பொருளைப்பற்றி மயங்கிக் கூறுவது.

உ-ம். "கயல்போலு மென்றுநின் கண்பழிப்பல் கண்ணின்
செயல்போல் பிறழுந் திறத்தாற்—கயல்புகழ்வல்
ஆரத்தா னேர்மருங்கு லந்தரள வாண்முறுவல்
ஈரத்தா லுள்வெதும்பும் யான்."

**725.** (q) **பலபொருள் உவமை**—ஒரு பொருளுக்குப் பல உவமைகளை எடுத்துச் சாற்றுவது.

உ-ம். "வேலுங் கருவிளையு மென்மானுங் காவியும்
சேலும் வடுவகிருஞ் செஞ்சரமும்—போலுமால்
தேமருவி யுண்டு சிறைவண் டறைகூந்தற்
காமருவு பூங்கோதை கண்."

கருவிளை=காவிப்புஷ்பம்; வடு=இரண்டாய்ப் பிளக்கப்பட்ட மாம்பிஞ்சு.

[இதில் "கண்" பல பொருட்களால் உவமிக்கப்பட்டது.]

**726.** (r) **விகார உவமை**—ஓர் உவமையை நேராய் எடுத்துச் சொல்லாமல் சிறப்புண்டாகும்பொருட்டு விகாரப்படுத்திக் கூறுவது.

உ-ம். "சீத மதியி னொளிபுஞ் செழுங்கமலப்
போதின் புதுமலர்ச்சி யுங்கொண்டு—வேதாந்தன்
கைம்மலரா னன்றிக் கருத்தால் வகுத்தமைத்தான்
மொய்ம்மலர்ப்பூங் கோதை முகம்."

பிரமன், சந்திரனொளியையும், தாமரை மலரின் புதிய மலர்ச்சியையும் ஒன்றாய்ச் சேர்த்து, ஸ்திரீயின் முகத்தைத் தன் கையாலன்றிக் கருத்தாலமைத்தானென்பது இச்செய்யுளின் தாற்பரியம்.

**727.** (s) **அபூத உவமை**—உலகிலில்லாததை உவமையாக்கிப் பொருளைச் சிறப்பிப்பது.

உ-ம். 1. "எல்லாக் கமலத் தெழிலுந் திரண்டொன்றின்
வில்லேர் புருவத்து வேனெடுங்கண்—நல்லீர்
முகம்போலு மென்ன முறுவலித்தார் வாழும்
அகம்போலு மெங்க ளகம்."

2. மணலைக் கயிறாய்த் திரிப்பதுபோலவும், குதிரைக்குக் கொம்புள்ளதென்பதுபோலவும் இவ்வாலிபன் அங்கிலேயரை ஜெயித்து, ஏகசக்கராதிபதியாய் இந்தியாவில் வீற்றிருப்பேன் என்கிறான்.

**728.** *(t)* **பலவயிற்போலி உவமை** (Allegory, Simile.)—ஒரு வாக்கியத்தில் வந்த பல உபமானங்களோடு முவமையுருபு விரிந்துவரக் கூறுவது.

உ-ம். "மலர்வாவி போல்வரான் மாதர் கமல
மலர்போலு மாதர் வதனம்—மலர்சூ
ழளிக்குலங்கள் போலு மளக மதனுட்
களிக்குங் கயல்போலுங் கண்."

மாதர் பூநிறைந்த தடாகம் போல்வர்; அவர் முகம் தடாகத்திலுள்ள தாமரைமலர் போல்வது; அவர் கூந்தல் அளிக்கூட்டம்போல்வது; அவர் கண்கள் தடாகத்திலுள்ள கயல்மீன்கள்போல்வன என்பது இதன் கருத்து.

[இதில், ஒவ்வொரு உபமானத்திலும் தனித்தனி உவமையுருபு வைத்து விளக்கியிருக்கிறது காண்க.]

**729.** *(u)* **ஒருவயிற்போலி உவமை**—ஒரு வாக்கியத்தில் வந்த பல உபமானங்களோடும் உவமையுருபு விரியப்பெறாது ஒன்றனிடத்துமாத்திரம் விரிந்து வருவது.

உ-ம். "நிழற்கோப மல்க நிறைமலர்ப்பூங் காயா
சூழற்கலைய மெல்விரித்த கோலை—தழற்குலவு
தீப்புகை யூட்டும் செறிகுழலார் போலுங்கார்
யாம்பிரிந்தோர்க் கென்றுரு மினி."

1. இந்திரகோபப்பூச்சிகள்செறிதல், — 1. தீக்கும்,
2. நிறைந்த பூக்களுடைய காயாவின் சூழல், — 2. அந்நெருப்பில் தோன்றிய நல்லவாசனைதரும் புகைக்கும்,
3. மயில், — 3. மாசருக்கும்,
4. மயில் கலாபத்தை விரித்தாடுதல், — 4. மாதர் அளகபாரத்தை விரித்து அப்புகையை ஊட்டுதலுக்கும் உபமானமாயின.

[இதில், மாதரின் இன்னின்ன அம்சம் கிரியைகட்கு, மயிலின் இன்னின்ன அம்சம் கிரியைகள் ஒத்தனவெனத் தனித்தனி யுவமையுருபு விரிந்துவராமல் ஏரோவிடத்தில்மாத்திரம் விரிந்து வந்தமை காண்க.]

**730.** *(v)* **மாலை உவமை**—ஒரு பொருளுக்கு வரும் பல உவமைகள் ஒன்றினொன்று தொடர்ச்சியுடையனவாய்க் கடைசியில் பொருள் முடிந்திருப்பது.

உ-ம். [1]"மலையத்து மாதவனே போன்று மவன்பால்
அலைகடலே போன்று மதனுட்—குலவு
நிலவலய மேபோன்று நேரியன்பா னிற்கும்
சிலையெழுதோள் வேந்தர் திரு."

N.B.—பலவயிற்போலி, ஒருவயிற்போலி, மாலையுவமை மூன்றும் ஒன்றற்கொன்று கொஞ்சம் வித்தியாசப்படுமேனும், தம்முள் பெரும்பாலும் ஒப்புமையுடையன.

731. (iv) கூடா உவமை—ஒரு பொருளுக்குச் சம்பந்தப்படாததைச் சம்பந்தமுடையதாகக்கொண்டு உவமித்தல்.

N.B.—இது அபூத உவமையோடு ஒற்றுமையுள்ளது.

உ-ம். [2]"சந்தனத்திற் செந்தழலுந் தண்மதியில் வெவ்விடமும்
வந்தனவே போலு மறுமாற்றம்—பைந்தொடியீர்
வாவிக் கமல முகமலர்ந்து கண்டக்கறுவார்
ஆவிக் கிவையோ வரண்."

732. (v) பொருணீங்கு உவமை—ஒரு பொருளுக்கு ஓர் உவமைகூறி, ஒவ்வாமைநோக்கி அவ்வுவமையை நீக்கி, அப்பொருளுக்கு அப்பொருளே உவமையெனக் கூறுவது.

உ-ம். ஸ்நாநக யோவானுக்கு எலியா நிகராவனோ? யோவான் தான் குறிப்பித்த மேசியாவைக் கண்ணாரக் கண்டானே; ஆகையால் யோவானுக்கு யோவானே நிகர்.

இவைதவிர இவ்வுவமை மற்ற அணிகளோடு சம்பந்தப்பட்டும் வரும். அப்படி வருபவை, அற்புத அணி, சிலேடை அணி, அதிசய அணி, விரோத அணி, ஒப்புமைக்கூட்ட அணி, தற்குறிப்பேற்ற அணி, விலக்கு அணி, ஏது அணி என எட்டாம். இவை பின் உதாரணங்களோடு விவரிக்கப்படும்.

733. விரியுவமை முதலிய பலவகை யுவமைகளுக்கு முரிய சூத்திரங்கள்.

"உற்றபண் பாதியி னுவமஞ் செய்வழி
மற்றவை வெளிப்பட வருத்தவிரி யுவமமு

[1] பொதியமலையில் வாழும் அகத்தியன்போலும், அவன் குடித்த அலையொடுங்கிய கடல்போலும், அக்கடலினல் சூழப்பட்ட பூமிபோலும் சோழனிடத்தே நிலைபெற்றிருக்குமாம் வில்பயின்ற தோட்களையுடைய அரசர் செல்வம்.

[2] பசிய வளைகளையணிந்த பெண்களே! தடாகத்திலுள்ள தாமரையையும், சந்திரனையும் போன்ற உங்கள் முகத்தைக் கண்டு ஏக்கறுகின்றவருடைய ஆவிக்கு நீங்கள் சொல்லும் வார்த்தைகள் காவலாகுமோ? இவ்வார்த்தைகள் சந்தனத்தில் தீயும், சந்திரனில் விஷமும் பிறந்தாற்போல் இருக்கின்றனவே.

மன்னவை போலா தாங்கவை கரப்பத்
தொன்னெறிப் புலவர் தொகுத்ததொகை யுவமமும்
பொருளுவமை யாகியு முவமைபொரு ளாகியு
மொருதொட ரிடைவரூஉ மிதர விதரமு
மதனு னன்றி யதனையஃ தொப்ப
திதனு மொக்கு மெனுஞ்சமுச் சயமு
மேதகு வுவமையை விலக்கியப் பொருளையே
யோதி முடிக்கு முண்மை யுவமையு
மோதிய பொருடனக் கொப்பதோர் பொருள்பின்
னீதியி னிரீஇய மறுபொரு ளுவமையு
நினைந்துவ மிக்கு நிலையின் மற்றதனைப்
புனைந்துவ மிக்கும் புகழுவமை யானுஞ்
சிந்தித் தொருவன் செப்பதோ ருவமையை
நிந்தித் துரைக்கு நிந்தை யுவமையு
மறிவுறி னதனுக் கிதுவே யொப்பென
நெறியுறப் புணர்க்கு நியம வுவமையு
மிதுவே யன்றி யிதனுக் கிதுபோன்
றதுவு மாமெனு மநியம வுவமையு
மெய்திய வுவமையு மியைந்திடு பொருளு
மையுற விளம்பு மையநிலை யுவமையு
மிவ்விய லதனு னிதுவன் றிதுவெனச்
செய்விதிற் றெளிந்த தேற்ற வுவமையு
மாற்ற வுவமை யாற்றினும் பொருளி
னேற்ற மின்றென்னு மின்சொ லுவமையு
மூறி லுவமேய முவமையா யுலகியல்
வேறுபட மாட்டிய விபரீத வுவமையு
மரும்பொரு ளதனை யதுபோலு மென்ன
விரும்புமென் னுளமெனும் வேட்கை யுவமையு
மொருபொரு ளதனுக் கொப்பதொன் றன்றிப்
பலபொருள் காட்டும் பலபொரு ளுவமையுங்
கூறுபடு முவமையின் கொள்கை பிறிதாக
வேறுபடுத் திசைக்கும் விகார வுவமையு

மொருபொருண் மீதெழும் வேட்கையான் மயக்க
முறுகுதல் காட்டு மோக வுவமையு
மவனியி னில்லா வன்னதோர் பொருளை
யுவமைசெய் தலைக்கு மபூத வுவமையுஞ்
சொல்லிய வுவமந் தொறுந்தொறும் போலி
புல்லப் புணர்க்கும் பல்வயிற் போலியு
மொருதொட ரதன்க ணுவமைதொறு மின்றி
யொருவயிற் புணர்க்கு மொருவயிற் போலியுங்
கூடா ததனைக் கூடுவ தாக்கிக்
கோடா துவமைசெய் கூடா வுவமையு
மொருதலை யாக வுவமையை மறுத்துப்
பொருளையே யுவமைசெய் பொதுநீங் குவமையு
மொருபொருட் குவமை யொருங்குபல வரினவை
வருதொடர் பாயிற் மாலை யுவமையோ
டற்புதஞ் சிலேடை யதிசயம் விரோத
மொப்புமைக் கூட்டந் தற்குறிப் பேற்றம்
விலக்கே யேதுவென விளம்பிய வெட்டு
முளப்படத் தொகைஇ யுரைத்தவெண் ணான்கும்
விளக்கிய வுவமையின் விரியெனப் படுமே." (இ. வி.)

"அதுவே,விரியே தொகையே யிதர விதர
முறைபெறு சமுச்சய முண்மை மறுபொருள்
புகழ்த னிந்தை நியம மநியம
மையந் தெரிதரு தேற்ற மின்சொ
லெய்திய விபரீத மியம்புதல் வேட்கை
பலபொருள் விகார மோக மபூதம்
பலவயிற் போலி யொருவயிற் போலி
கூடா வுவமை பொதுநீங் குவமை
மாலை யென்னும் பால தாகும்." (தண்டி.)

"அற்புதஞ் சிலேடை யதிசயம் விரோத
மொப்புமைக் கூட்டந் தற்குறிப் பேற்றம்
விலக்கே யேதுவென வேண்டவும் படுமே." (தண்டி.)

உவமை யுருபுகள் பின் வருபவை.

"போல மானப் புரையப் பொருவ
நேரக் கடுப்ப நிகர நிகர்ப்ப
வேர வேய மலைய விழைய
ஒப்ப எள்ள உறழ ஏற்ப
அன்ன அனைய அமர ஆங்க
என்ன இகல இழைய எதிரத்
துணைதூக் காண்டாங்கு மிருதகை வீழ
வினைசிவண் கேழற் றச் செத்தொடு பிறவு
நவைநீர் பான்மை யுவமைச் சொல்லே." (தண்டி.)

N.B.—இப்படி உவமையை விஸ்தரித்திருந்தாலும் தேர்ந்த அறிவினர்க்கே இப்பாகுபாடு புலப்படுமாதலால், நவமாய்க் கற்கும் மாணாக்கர் உவமையின் பொதுத்தன்மையைமாத்திரம் உய்த்துணர்ந்து உட்பிரிவுகளை விட்டுவிடலாம்.

**734.** (2.) **உருவகவணி** (Metaphor)—உவமைப் பொருளையும், உவமிக்கப்படு பொருளையும் வேறுபாடில்லாமல் ஒன்றுதானென ஒற்றுமைப்படுத்துவதாம். ஒன்றுதானென ஒற்றுமைப்படுத்துவது **ஆரோபம்** எனப்படும்.

உ-ம். 1. இந்துக்களின் கிரீடமாகிய மாதவராயர்.
2. மானிடரைப் பிணிக்கும் கச்சையாகிய மெய்யன்பு.

"உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித்
தொன்றென மாட்டினஃ துருவக மாகும்." (தண்டி.)

உவமையை உருவகமாகவும் உருவகத்தை உவமையாகவும் மாற்றலாம்.

உ-ம். இந்துக்களின் கிரீடமாகிய மாதவராயர்—உருவகம்.
[இதில் "ஆகிய" என்பது உருவக உருபு.]
இந்துக்களுக்குக் கிரீடம்போலும் மாதவராயர்—உவமை.

**735.** உருவகமும் தொகையுருவகம் முதலாகப் பலவகையாய்ப் பிரிக்கப்படும்.

(a) **தொகையுருவகம்—ஆகிய** எனும் உருபு தொக்கு வருவது.

உ-ம். "அங்கை மலரு மடித்தளிருங் கண்வண்டும்
கொங்கை முகிழுங் குழற்காரும்—தங்கியதோர்
மாதர்க் கொடியுளதா னண்பா வதற்கெழுந்த
காதற் குளதோ கரை."

குழற்கார்=அளகபாரமாகிய மேகம்.

**736.** (b) **விரியுருவகம்**—அவ்வுருபு விரிந்து வருவது.

உ-ம். அண்டினோர்க் கடைக்கலமாய், எதிர்த்தோர்க்கு எரிமலையாய், அஞ்ஞானமாகிய பாறை கொண்டிடைப்பவருக்கு நெக்குவிடா ஞானக்கன்மலையாயிருக்கிற இயேசு புகழ்ச்சிக்குரியவர்.

**737.** (c) **தொகைவிரியுருவகம்**—அவ்வுருபு ஓர் இடத்தில் விரிந்தும், மற்றோரிடத்தில் தொக்கும் வருவது.

உ-ம். எமக்கு அரணும் விளக்கும் ஆகிய மத்தியஸ்தர் [1]பொறுமையில் செம்மறியாடு.

**738.** (d) **இயைபுருவகம்**—பலபொருளை உருவகப்படுத்தும் போது, அவைகள் ஒன்றிற்கொன்று இயைபுடையனவா யிருக்கச் செய்தல்.

உ-ம். கண்களாகிய இரண்டு ஜன்னலும், வாயாகிய முன்வாயிலும், ஆசனமாகிய சாக்கடைப் புறவாயிலும், வயிறாகிய போஜனக் கொட்டடியும், தலையாகிய ஆஸ்தான அறையுமுள்ள வீடாகிய தேகத்தில் வசிப்பது ஆத்மா.

[இதனுள் ஜன்னல் முதலாகிய வீட்டின் பாகங்கள் தம்முள் இயைபுடைத்தானமை காண்க.]

**739.** (e) **இயைபிலுருவகம்**—பலபொருளை உருவகப்படுத்துகையில் அவைகள் மேற்கூறியதுபோலாகாமல் தம்முள் இயைபின்றி யிருப்பது.

உ-ம். "தேனக் கலர்கொன்றை பொன்னாகச் செஞ்சடையே
கூனற் பவளக் கொடியாகத்—தானம்
மழையாகக் கோடு மதியாகத் தோன்றும்
புழையார் தடக்கைப் பொருப்பு."

[இதில், விநாயகர் மலையாகவும், அவர் அணியும் கொன்றைமலர் அம்மலையிலுள்ள பொன்னாகவும், செஞ்சடை பவளக்கொடியாகவும், தானம் (மதஜலம்) அருவிநீராகவும், கொம்பு சந்திரனாகவும் உருவ

[1] பொறுமைக்குணத்தில் செம்மறியாட்டைப் போன்றவர்.

கம் செய்தமையின், பொன் பவளக்கொடி முதலியவைகள் தம்முள் இயைபாகாமை காண்க.]

**740.** *(f)* **வியனிலையுருவகம்**—ஒரு பொருளின் பல அங்கங்களுள் சிலவற்றைமாத்திரம் உருவகமாகக் கூறுவது.

உ-ம். சிவந்த வாயிலுள்ள பற்களாகிய அரும்பும், சிவந்த கைகளாகிய தளிருமுள்ள ஓர் வனத்திலுள்ள கொடியாகின்றது இம்மாதரசியின் தோற்றம்.

[இதில், பற்களையும் கைகளையும் உருவகம் செய்து வாயை உருவகம் செய்யாது விட்டிருக்கின்றமை காண்க.]

**741.** *(g)* **சிறப்புருவகம்**—ஒரு பொருளை யெடுத்து, அதற்குச் சிறந்த அடைகளை (Adjectival adjuncts) உருவகஞ்செய்வதால் அப்பொருளையும் உருவகப்படுத்துவது.

உ-ம். "விரிகடல்சூழ் மேதினி நான்முகன் மீகாணுச்
சுரநதிபா யுச்சி தொடுத்த—அரிதிருத்தாள்
கூம்பாக எப்பொருளுங் கொண்டபெரு நாவாய்
ஆம்பொலிவிற் றுயினதா லின்று."

[இதில், பிரமனை மீகானும் (Pilot or Captain), தேவகங்கையைப் பாயும் (Seil), திருமால் or விஷ்ணுவினடியைக் கூம்பும் (Mast)ஆக உருவகம் செய்தமையால் உலகத்தைக் கப்பலாக உருவகம் செய்தமை காண்க.

**742.** *(h)* **விருபகவுருவகம்**—ஒரு பொருளுக்கு உபமானமாகத்தக்க ஒன்றையெடுத்து, அவ்வுபமானத்திற் கமைந்துவந்த விசேஷங்கள் பொருளுக்கமையாவண்ணம் கூறி உருவகஞ்செய்வது.

உ-ம். [1]"தண்மதிக்குத் தோலாது தாழ்தடத்து வைகாது
முண்மருவுந் தாள்மேல் முகிழாது—நண்ணி
இருபொழுதுஞ் செவ்வி யியல்பாய் மலரும்
அரிவை வதனம் புயம்."
அரிவை=பெண்.

**743.** *(i)* **சமாதானவுருவகம்** — ஒரு பொருளைச் சிறப்பாகவும், நன்மையாகவும் உருவகம் செய்து, அதையே தீங்கு விளைவிப்பதாகக் கூறி, அத்தீங்கும் அதனாலன்றி வேறோர் காரணத்தாலாவதெனக் கூறுவது.

---

[1] என்னால் விரும்பப்பட்டவளுடைய முகமாகிய தாமரைமலர் சந்திரனால் வாடாதது; ஆழமாகிய குளத்திலிராதது; முள்ளுள்ள தண்டின்மேல் பூவாதது; காலைமாலை இருபொழுதும் ஒருபடித்தாய் மலர்ந்திருக்கும்.

உ-ம். "கைகாந்தள் வாய்குமுதங் கண்ணெய்தல் காரிகையீர்
மெய்வார் தளிர்கொங்கை மென்கோங்கம்—இவ்வனைத்தும்
வன்மைசேர்ந் தாவி வருத்துவது மாதவமொன்
றின்மையே யன்றோ வெமக்கு."

**744.** (*j*) **உருவகவுருவகம்** (Trope on Trope)—ஒரு பொருளை உருவகஞ்செய்து, அதனை மீட்டும் வேறொன்றாக உருவகஞ் செய்வது.

உ-ம். மானிடர்க்கு அறிவெனும் அலங்கிருத ஆபரணமாகிய விளக்கு எவ்வளவு அவசியம்.

[இதில், அறிவை ஆபரணமாக உருவகஞ்செய்து, பின்னும் விளக்காக உருவகம் செய்தமை காண்க.]

**745.** (*k*) **ஏகாங்கவுருவகம்**—ஒரு பொருளின் பல உறுப்புகளில் ஒன்றைமாத்திரம் உருவகம் செய்வது.

இது வியனிலையுருவகம் போன்றது.

உ-ம். "நின்னெடுங் கண்ணென்றும் நினைந்துலவு கின்றனநின்
இன்மொழித்தேன் வேறு மிதென்."

**746.** (*l*) **அநேகாங்கவுருவகம்**—ஒரு பொருளின் எல்லா அங்கங்களையும் உருவகப்படுத்தி யுரைப்பது.

உ-ம். இவ்விராஜனின் மார்பாகிய மலை, தோளாகிய கற்குன்று, கையாகிய கனத்ததடி, கால்களாகிய அசையாத் தூண்கள், முதுகாகிய சுமைதாங்குங்கல் எவ்வளவு சிறந்தனவா யிருக்கின்றன பார்!

**747.** (*m*) **அவயவவுருவகம்**—அவயவியைவிட்டு அவயவத்தைமாத்திரம் உருவகம் செய்வது.

உ-ம். குவளைக்கண்ணும், தளிர்க்கையுமுடையாள் இப்பெண்.

(*n*) **அவயவியுருவகம்**—அவயவத்தை விட்டு அவயவியை மாத்திரம் உருவகம் செய்வது.

உ-ம். இப்பெண்மயில் கண்ணும் புருவமும் என்னை மயக்கின.

**748.** (*o*) **முற்றுருவகம்**—அவயவி, அவயவமாகிய இரண்டையும் உருவகப்படுத்திக் கூறல்.

உ-ம். தாமரைமுகமும், முத்துப்பற்களும், விற்புருவமும், கயற்கண்களுமுள்ள இப்பெண்மயில் வீடுநிறைந்த விளக்கு.

**749.** உருவகவிரிக்குச் சூத்திரம்.

"தொகையே விரியே தொகைவிரி யெனாஅ
இயைபே இயைபிலி வியனிலை யெனாஅச்
சிறப்பே விரூபகம் சமாதான மெனாஅ
உருவக மேகம் மனேகாங்க மெனாஅ
முற்றே யவயவ மவயவி யெனாஅச்
சொற்ற ஐம்மூன்றும் மற்றதன் விரியே." (தண்டி.)

இவ்வுருவகமும் உவமைமுதலாகிய மற்ற அணிகளோடும் கூடி வரும்.

உதாரணம் பின் காட்டப்படும்.

"உவமை ஏது வேற்றுமை விலக்கே
யவநுதி சிலேடையென் றவற்றொடும் வருமே." (தண்டி.)

N.B.—பிள்ளைகள் இவ்வுருவகப் பாகுபாடுகளை நீக்கி உருவகத்தின் பொதுத்தன்மையைமாத்திரம் திட்டமாய்ப் படிக்கவேண்டியது.

**750.** உவமை, உருவகம் ஆகிய இரண்டிலும், பால் திணை முதலியன வழுவி வரினும் குற்றமாகாது.

[பெயரியல், பால்வழுவமைதியைப் பார்க்க.]

**751.** (3.) வேற்றுமை (Comparison)—ஒரு பொருளுக்கு உபமானமாக மற்றொன்றெடுத்துச் சொல்லி, அவ்விரண்டிற்குமுள்ள தாரதம்மியங்களை விவரித்துக் கூறுதல்.

உ—ம். (a) வீட்டுக்கு விளக்கு மனையாள்; விளக்கு இரவில் மாத்திரம் ஏற்றப்படும், மனையாளோ இரவும் பகலும் ஒன்றுபோல் விளங்குபவள்.

(b) "தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு."

இது பலவகையாய்ப் பிரிக்கப்படும்.

**752.** (a) **ஒரு பொருள் வேற்றுமைச்சமம்**—உபமான உபமேயங்களுள் ஒன்றை வேற்றுமைப்படுத்துவது.

உ-ம். "அனைத்துலகும் சூழ்போ யரும்பொருள் கைக்கொண்
டினைத்தளவைத் தென்றற் கரிதாம்—பனிக்கடல்
மன்னவ நின்சேனைபோல் மற்றது நீர்வடிவிற்
றென்னுமி தொன்றேவே று."

[இதில், கடல் சேனைக்குச் சரி ஆயினும், கடல் தண்ணீர் வடிவா யிருக்கிறது என வேற்றுமைப்படுத்தினமை காண்க.]

**753.** (*b*) **இருபொருள் வேற்றுமைச்சமம்**—அவ்விரண்டை யும் ஒற்றுமைப்படுத்துவது.

உ—ம். "சென்று செவியளக்கும் செம்மையவாய்ச் சிந்தையுள்ளே
நின்றளவி லின்ப நிறைப்பவற்றுள்—ஒன்று
மலரிவருங் கூந்தலார் மாதர்நோக் கொன்று
மலரிவருங் கூத்தன்றன் வாக்கு."

மலரிவருங் கூந்தலார் மாதர் நோக்கு=பூக்கள் சூடிய கூந்தலையு டைய பெண்களின் அழகிய கண்.

மலரிவருங் கூத்தன்றன் வாக்கு=மலரியூரிலிருந்து வரும் கூத்தாடி யின் பாட்டு அல்லது வார்த்தை.

**754.** (*c*) **உயர்ச்சி**—அவ்விரண்டிலொன்றை உயர்த்திக் கூறுவது.

உதாரணம்.

"கடல்படும் அமுதும் மல்லல் கான்படு மமுதும் ஓங்கும்
தடவரை அமுதும் ஒன்றித் தலைமயக் குற்ற ஆற்றல்
உடைநிறை அமுதம் ஒன்றே உடையவின் றூறு சொல்லோ
நிடதநா டதற்கு நேரா நிகழ்த்தலாம் தகைமைத் தம்மா."

[இதில், நிடதநாடும், விண்ணுலகும் அமுதமுடைமையால் தம்மு ளொக்குமேனும், முன்னது மூன்றும், பின்னது ஒன்றுமுடைய வேற்று மை நோக்கி, இதனினும் அதனை உயர்த்திக் கூறினமை காண்க.]

**755.** (*d*) **குணவேற்றுமை**—குணத்தில் வித்தியாசப்படுத்துவது.

உ-ம். காமனும் சோழராஜனும் சரி; ஆயினும் காமன் கறுப்பு, சோழன் சிவப்பு.

**756.** (*e*) **பொருள்வேற்றுமை** — பொருளில் வித்தியாசப்ப டுத்துவது.

உ-ம். "ஓங்கலிடைவந் துயர்ந்தோர் தொழ விளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்."

[இதில், மலையிடத்துத் தோன்றி, எல்லாரும் தொழ விளங்கி, கடல் சூழ்ந்த வையகத்து மக்களுள்ளத்திருள் நீக்குவனவற்றுள் ஒன்று சூரியனும், மற்றொன்று தமிழுமாகிப் பொருளினால் ஒன்றினொன்று வேற்றுமைப்பட்டமை காண்க.]

**757.** *(f)* **சாதிவேற்றுமை**—இனத்தில் வித்தியாசப்படுத்துவது.

உ-ம். "வெங்கதிர்க்கும் செந்தீ விரிசுடர்க்கும் நீங்காது
பொங்கு மதியொளிக்கும் போகாது—தங்கும்
வளமையால் வந்த மதிமருட்சி மாந்தர்க்
கிளமையால் வந்த இருள்."

[இதில், மனிதர்க்குச் சிறுவயதில் செல்வச்செருக்கால் உண்டாகும் புத்திமயக்கமாகிய இருள் சூரியன், விளக்கு, சந்திரன் முதலிய வெளிச்சங்களால் நீங்காது எனச் சாதியில் வித்தியாசப்பட்டமை காண்க.]

**758.** *(g)* **தொழில்வேற்றுமை**—செய்கையில் வித்தியாசப் படுத்துவது.

உ-ம். "புனனாடர் கோமானும் பூந்துழாய் மாலும்
வினைவகையான் வேறு படுவர்—புனனாடன்
ஏற்றெறிந்து மாற்றலர்பா லெய்தியபார் மாயவன்
ஏற்றிரந்து கொண்டமையி னல்."

[இதில், சோழன் பகைவரை ஜெயித்து உலகம் கைக்கொண்டான் எனவும், திருமால் பிச்சையெடுத்து அதைப் பெற்றான் எனவும் தொழிலில் வித்தியாசப்பட்டமை காண்க.]

**759.** வேற்றுமையணிக்குச் சூத்திரம்.

"கூற்றினும் குறிப்பினும் ஒப்புடை யிருபொருள்
வேற்றுமைப் படவரின் வேற்றுமை யதுவே." (தண்டி.)

"அதுவே, குணம்பொருள் சாதி தொழிலொடும் புணரும்."
(தண்டி.)

இது மற்ற விலக்கு, சிலேடை முதலிய அலங்காரங்களோடும் வரும்.

"விலக்கியல் சிலேடையின் மேவவும் பெறுமே."

**760.** (4.) **வேற்றுப்பொருள் வைப்பணி**—ஒரு பொருளை நாட்டி, இன்னதைப்போலென்னும் உவமையும், இன்னதாகும் என்னும் உருவகமுமாகாதபடி, அதனை உறுதியாக்கத்தக்க மற்றொரு பொருளையும் கூடத் தொகுத்துச் சொல்லுதல். இப்படிச் சொல்லப்பட்ட இரண்டாம்பொருள் முந்தியதை நன்றாய் விளக்குவதாயிருக்கவேண்டும்.

உ-ம். "ஊரங் கணநீர் உரவுநீர் சேர்ந்தக்கால்
பேரும் பிறிதாகித் தீர்த்தமாம்—ஓரும்
குலமாட்சி இல்லாரும் குன்றுபோல் நிற்பர்
நலமாட்சி நல்லாரைச் சார்ந்து."

[இதில், முதல் இரண்டடியிலுள்ள பொருள் பின் இரண்டடியில் வந்த பொருளை விளக்கியது காண்க.]

"சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான்."

[இதில் பிந்தின வாக்கியம் முந்தின வாக்கியத்தின் பொருளை வற்புறுத்தினமை காண்க.]

"முன்னொன்று தொடங்கி மற்றது முடித்தற்குப்
பின்னொரு பொருளினுலகறி பெற்றி
யேற்றிவைத்துரைப்பது வேற்றுப்பொருள் வைப்பே."
(தண்டி.)

761. இதுவும் முழுவதுஞ் சேறல் முதலியனவாகப் பலவகைப்படும்.

(a) முழுவதுஞ்சேறல்—எடுத்தபொருள் முழுவதும் விளக்கமாக மறுபொருள் வைக்கப்படுதல்.

உ-ம். "புறந்தந் திருளிரியப் பொன்னேமி யுய்த்துச்
சிறந்த வொளிவளர்க்குந் தேரோன்—மறைந்தால்
புறவாழி சூழ்ந்த புவனத்தே தோன்றி
இறவாது வாழ்கின்றார் யார்."

762. (b) ஒருவழிச்சேறல்—எடுத்தபொருளின் ஓர் அங்கத்துக்குமாத்திரம், ஏற்றிவைக்கப்பட்ட மற்றப் பொருள் விளக்கம் செய்தல்.

உ-ம். "எண்ணும் பயன்றூக்கா தியார்க்கும் வரையாது
மண்ணுலகில் வாமன் அருள்வளர்க்கும்—மின்னுறுந்தேன்
பூத்தளிக்குந் தாராய் புகழாளர்க் கெவ்வுயிருங்
காத்தளிக்கை யன்றே கடன்."

763. (c) முரணித்தோன்றல்—ஏற்றிவைக்கப்பட்ட பொருள் தம்முள் மாறுபட்டு, தீமைபோலிருந்து நன்மை தருதல்போல் வர உரைப்பது.

உ-ம். "வெய்யகுரற் றோன்றி வெஞ்சினவே றுட்கொளினும்
பெய்யும் முகில்தன்னைப் பேணுவரால்—வையத்
திருள்பொழியுங் குற்றம் பலவரினும் யார்க்கும்
பொருள்பொழிவார் மேற்றே புகழ்."

மேகம் இடிஇடித்துக் குமுறினாலும், மழை பெய்வதால் மானிடரால் போற்றப்படுகிறது. அதுபோலக் கோபக்குறிகள் பல காட்டும் குற்றமுடையரேனும் பொருள் கொடுப்பவரை உலகம் புகழும் என்பது இச்செய்யுட் கருத்து.

**764.** (*d*) **கூடாவியற்கை**—*ஒன்றற்கொன் றிசையாதவற்றை இசைவதுபோல் காட்டல்.*

உ—ம். "ஆர வடமும் அதிசீத சந்தனமும்
ஈர நிலவு மெரிவிரியும்—பாரிற்
றுதிவகையான் மேம்பட்ட துப்புரவுந் தத்தம்
விதிவகையான் வேறு படும்."

**765.** (*e*) **கூடுமியற்கை**—*மேற்சொன்னதற் கெதிராய் இசையக்கூடியதையே இசைத்துப் புணர்த்தல்.*

உ-ம். "பொய்யுரையா நண்பா புனைதேர் நெறிநோக்கிக்
கைவளைசோர்ந் தாவி கரைந்துருவார்—மெய்வெதும்பப்
பூத்தகையுஞ் செங்காந்தள் பொங்கொலிநீர் ஞாலத்துத்
தீத்தகையார்க் கீதோ செயல்."

**766.** (*f*) **இருமையியற்கை**—*இசையாததும் இசைவதுமாகிய இரண்டும் கலந்து வருவது.*

உ—ம். "கோவலர்வாய் வேய்ங்குழலே யன்றிக் குரைகடலும்
கூவித் தமியோரைக் கொல்லுமாற்—பாவாய்
பெரியோரும் பேணாது செய்வரே போலுஞ்
சிறியோர் பிறர்க்கியற்றுந் தீங்கு."

**767.** (*g*) **விபரீதம்**—*தகுந்ததைத் தகாததாகவும், தகாததைத் தகுந்ததாகவும் காட்டல்.*

உ—ம். "தலையிழந்தா னெவ்வுயிருந் தந்தான் பிதாவைக்
கொலைபுரிந்தான் குற்றங் கடிந்தான்—உலகிற்
றனிமுதன்மை பூண்டுயர்ந்தோர் வேண்டுவரேற் றப்பாம்
வினையும் விபரீத மாம்."

**768.** (*h*) சிலேடையில் முடித்நல்—முன்னும் பின்னும் வைக்கப்பட்ட பொருள்கள் ஒரு சொற்றொடரால் சிலேடையுறக் கூறுவது.

உ—ம். "ஏற்றே கொடிமுல்லை தன்னை வளர்த்தெடுத்த
முற்றிழையாள் வாட முறுவலிக்கும்—முற்று
முடியாப் பரவை முழங்குலகத் தென்றும்
கொடியார்க்கு முண்டோ குணம்."

[இதில், "கொடியார்" என்பது கொடுமை யுடையவர்க்கும், கொடிக்கும் சிலேடையாயினமை காண்க.]

**769.** வேற்றுப்பொருள் வைப்பணியின் விரிக்குச் சூத்திரம்.

"முழுவதுஞ் சேற லொருவழிச் சேறல்
முரணித் தோன்றல் சிலேடையின் முடித்தல்
கூடா வியற்கை கூடு மியற்கை
யிருமை யியற்கை விபரீதப் படுத்தலென்
றின்னவை யெட்டு மதன தியல்பே." (தண்டி.)

**770.** (5.) ஒப்புமைக் கூட்டவணி—சம்பந்தா சம்பந்தங்களை நோக்கிப் பல பொருள்களை ஒன்றுபடக் கூறுவது.

உ—ம். "அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியுங் கல்லார்
அவையஞ்சா ராகுலச் சொல்லும்—அவையஞ்சி
ஈத்துண்ணார் செல்வமும் நல்கூர்ந்தா ரின்னலமும்
பூத்தலிற் பூவாமை நன்று."

N.B.—திரிகடுகம், இன்னா நாற்பது, இனியா நாற்பது முதலிய செய்யுட்களில் வரும் பாட்டுகளெல்லாம் இதற்கு உதாரணமாகும்.

"கருதிய குணத்தின் மிகுபொரு ளுடன்வைத்
தொருபொரு ளுரைப்ப தொப்புமைக் கூட்டம்." (தண்டி.)

"புகழினும் பழிப்பினும் புலப்படு மதுவே." (தண்டி.)

**771.** (6.) ஓட்டணி—ஒரு திருஷ்டாந்தம் எடுத்துக் கூறி, எடுத்துக்கொண்ட பொருளை விளக்குவது.

உ-ம். 1. "அடிமேலடியடித்தால் அம்மியும் நகரும்."

விடாமுயற்சிசெய்யவேண்டும் என்பது இதன் பொருள்.

2. "இதுநினக் கறியும் வண்ண மிப்படி யொருதிட் டாந்தம்
புதுமையாங் கதைகேள் பத்துப் புருஷரோ ராற்றை நீந்தி
உதகதீ ரத்திலேறி யொருவனென் பதுபே ரெண்ணி
அதனொடு தான்பத் தானென் றறியாமல் மயங்கி நின்றான்."

"கருதிய பொருடொகுத் ததுபுலப் படுத்தற்
கொத்ததொன் றுரைப்பினஃ தொட்டென மொழிப."

(தண்டி.)

இவ்வொட்டணி பின்வருகிற சூத்திரப்படி பலவகைப்படும்.

"அடையும் பொருளு மயல்பட மொழிதலும்
அடைபொது வாக்கி யாங்ஙன மொழிதலும்
விரவத் தொடுத்தலும் விபரீதப் படுத்தலும்
எனநால் வகையினு மியலு மென்ப." (தண்டி.)

**772.** (7.) **புணர்நிலையணி**—ஒரேகுணம் அல்லது ஒரேதொழில் இரண்டு பொருளுக்குப் பொருந்தக் கூறல்.

இவ்வணிக்கு மூன்றாம்வேற்றுமை உருபுகளில், ஒடு, ஓடு, உடன் என்பன வருதலியல்பு.

உ-ம். (1) நன்மைச் சிகாமணியாய் விளங்கிய என் குமாரன் உயிர் விட்டானென்று, என் கண்களொடு கார்மேகமும் தாரைதாரையாய் நீர் சொரிந்தது. (தொழில்.)

(2) இரக்கவள்ளலான இராஜன் உயிர் நீத்தானென்று, சூரியன் மறைந்திருண்டதோடு, ஊரும் ஒருங்கி யடங்கியது. (பண்பு.)

"வினைபண் பெனவிவை யிருபொருட் கொன்றே
புணர மொழிவது புணர்நிலை யாகும்." (தண்டி.)

## SECTION II.

**773.** இனி கறுப்பிற்கு வெளுப்பு எப்படியோ, அப்படியே எதிரிடையானவற்றைக்கொண்டு, எடுத்தபொருளை விளக்கும் அணிகள் சில உள.

இப்படி எதிரிடையாக வருவன பலவகைப்படும். அவற்றுள்:—

(1.) **விரோதவணி** (Antithesis)—ஒன்றுக்கொன்று எதிரிடையான பொருட்களைச் சேர்த்துக் கூறுவது.

உ-ம். "நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கந் தீயொழுக்கம்
என்று மிடும்பை தரும்."

N.B.—பொருளால் மாத்திரமல்ல, சொற்களாலுங்கூட எதிரிடையா யிருக்கத்தக்கதாய் ஒரு பொருளை வர்ணிப்பதும் விரோத அணியே. (Oxymoron.)

உ—ம். "காலையும் மாலையும் கைகூப்பிக் காலொழுகால்
மேலை வினையெல்லாம் கீழவாம்—சோலைக்
கருமான்றோல் வெண்ணீற்றுச் செம்மேனிப் பைந்தார்
பெருமானைச் சிற்றம் பலத்து."

[இதில், 1-ம் அடியில் காலை, மாலை; கை, கால் எனவும்,
2-ம் அடியில் மேல், கீழ் எனவும்,
3-ம் அடியில் கருமை, வெண்மை; செம்மை, பசுமை எனவும்,
4-ம் அடியில் பெரு, சிறு எனவும் முரணி வந்தமை காண்க.]

"மாறுபடு சொற்பொருள் மாறுபாட் டியற்கை
விளைதர உரைப்பது விரோத மாகும்." (தண்டி.)

**774.** (2.) **மாறுபடு புகழ்நிலையணி** (Irony.)—கருதிய பொருளை மறைத்து, அதனைப் பழிப்பதற்காக வேறொன்றைப் புகழ்தல்.

உ—ம் "நோவறியா யாவரையும் பின்செல்லா நல்ல
தருநிழலுந் தண்ணீரும் புல்லும்—ஒருவர்
படைத்தனவுங் கொள்ளாயிப் புள்ளிமான் பார்மேற்
றுடைத்தனவே யன்றோ துயர்."

[இது மான் தோல் போர்த்துக்கொண்டு ஒரு சன்னியாசி பிச்சைக்கு வர அவரைப் பழித்துப் பாடியது.]

"கருதிய பொருடொகுத் தாங்கது பழித்தற்கு
வேறொன்று புகழ்வது மாறுபடு புகழ்நிலை." (தண்டி.)

**775.** (3.) **புகழாப்புகழ்ச்சியணி**—ஒரு பொருளை நிந்திப்பதுபோல் பேசி, அதனால் அதன் புகழ்ச்சியை உணர்த்துவது.

உ—ம். "தேவர் அனையர் கயவர் அவருந்தான்
மேவன செய்தொழுக லால்."
மேவன=விரும்பியவைகள்.

☞ ஆத்துமப்பெண் நிந்தாஸ்துதி என்ற 25-ம் ஜெபமாலையில் வேறு உதாரணம் அகப்படும்.

N.B.—இவ்வணியும் மேற்கூறிய மாறுபடு புகழ்நிலையணியும் ஒரே தன்மையவான அணிகள்; புகழ்தல் கருதிப் பழித்தல், பழித்தல் கருதிப் புகழ்தல் ஆகிய இரண்டும் ஒன்றேயாகலின்.

"பழிப்பது போலப் பான்மையின் மேன்மை
புலப்பட மொழிவது புகழாப் புகழ்ச்சி." (தண்டி.)

**776.** (4.) **அவநுதியணி**—பொருள், குணம், சிறப்பாகிய மூன்றனுள் ஒன்றனது உண்மைத்தன்மையை மாற்றி வேறொன்றாகக் கூறுவது.

உ-ம். 1. நிறைந்த செல்வம் பாக்கியமன்று; சோம்பு, செருக்கு, பாவப்பயிற்சி கட்கிடமாதலால் அது மகா கொடிய தீமையாம்.

2. "நிலனும் விசும்பா நிமிர்காலும் நீரும் தீயாம்
அலர்கதிராம் வான்மதியா மன்றி—மலர்கொன்றை
ஒண்ணறுந் தாரா னொருவனிய மானனுமாய்
எண்ணிறந்த வெப்பொருளு மாம்."

ஒள்=பிரகாசமுள்ள; நறுந்தாரான்=நல்ல வாசனையுள்ள மாலையை யணிந்தவன்; ஒருவன்=ஒப்பற்றவன்.

கொன்றைப்பூ மாலையைச் சூடிய சிவன், நிலம், ஆகாயம், காற்று, நீர், தீ, சூரியன், சந்திரன் ஆனதுமன்றி, ஆன்மாவாய் எல்லாப் பொருளுமாவன் என்பது இப்பாட்டின் தாற்பரியம்.

"சிறப்பினும் பொருளினுங் குணத்தினு முண்மை
மறுத்துப் பிறிதுரைப்ப தவநுதி யாகும்." (தண்டி.)

**777.** (5.) [1]**விலக்கணி**—ஒரு பொருள் உளதாயினும், அதை இல்லை எனப் பல நியாயங்கொண்டு மறுத்தல்.

---

[1] "வன்சொல் வாழ்த்துத் தலைமை யிகழ்ச்சி
துணைசெயல் முயற்சி பரவச முபாயம்
கைதறலுடன்படல் வெகுளி யிரங்கல்
ஐய மெனாஅங் கறிந்தனர் கொளலே." (தண்டி.)

கைதறல்=ஒழுக்கமில்லாமை.

இப்பிரிவுகளும் பாட்டின் பொருள்நோக்கி விதிக்கப்பட்டவைகளே.
இவ்விலக்கும மற்ற அலங்காரங்களோடு புணர்ந்துவரும்.

"வேற்றுப்பொருள் சிலேடை யேதுவென் றின்னவை
மேற்கூ றியற்கையின் விளங்கித் தோன்றும்." (தண்டி.)

உ—ம். "பாலன் றனதுருவா யேழுலகுண் டாலிலையின்
மேலன்று கண்டுயின்றாய் மெய்யென்பர்—ஆலன்று
வேலைநீ ருள்ளதோ விண்ணதோ மண்ணதோ
சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்."

[மலையைக் குடையாய்ப் பிடித்த கிருஷ்ணரே! நீர் சிறுபிள்ளையாய் ஏழுலகும் சாப்பிட்டு ஆலிலையில் பள்ளிகொண்டது உலகத்தார் மெய்யென்பார்கள். அந்த ஆலிலை இருந்தது கடலிலோ, ஆகாயத்திலோ, பூமியிலோ? சொல்லக்கடவீர் என்பது இதன் தாற்பரியமாகலின்; இக்கதை உண்மையானதன்று என விலக்கப்பட்டது.]

இவ்விலக்கு, இறந்தவினை விலக்கு, நிகழ்வினை விலக்கு, எதிர்வினை விலக்கு, பொருள் விலக்கு, குணவிலக்கு, காரண விலக்கு, காரிய விலக்கு எனப் பலவகைப்படும். இவை குறிப்புங் கூற்றும் நோக்கிவந்தவை.

"முன்னத்தின் மறுப்பினது முன்ன விலக்கே
மூவகைக் காலமு மேவிய தாகும்." (தண்டி.)

"அதுவே, பொருள்குணங் காரணங் காரியம் புணரும்."
(தண்டி.)

இவ்விதமாய் எதிரிடையான வார்த்தை, பொருட்களால் எடுத்த பொருள் அலங்கரிக்கப்படும்.

## SECTION III.

778. காரணகாரிய சம்பந்தங்களால் விளைந்த பொருள்விளக்கம் சில உண்டு. அவை,

(1.) **ஏதுவலங்காரம்**—யாதாயினு மொருபொருள் இன்னகாரணத்தால் இவ்வாறாயதெனச் சிறப்பாய்க் கூறல்.

உ—ம். "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில."

இது காரகவேது, ஞாபகவேது, அபாவவேது என மூவகைப்படும்.

**காரகவேது**—கருத்தா, பொருள், கருமம், கருவி, ஏற்பது, நீக்கமாகிய இவற்றில் ஒன்று காரணமாக வருவது.

**ஞாபகவேது**—இவ்வாறு காரணமும் நீங்க வேறு காரணத்தால் வருவது.

**அபாவவேது**—ஏதாவது ஒன்றன தின்மை காரணமாக வருவது.

N.B.—பாட்டின் பொருளறிந்து இவ்வேது இத்தன்மையதென உய்த்துணரலாம்.

கருத்தாக்காரகவேதுவுக்கு,

உ—ம். "எல்லைநீர் வையகத் தெண்ணிறந்த வெவ்வுயிர்க்கும்
சொல்லரிய பேரின்பந் தோற்றியதால்—முல்லைசேர்
தாதலைத்து வண்கொன்றைத் தாரலைத்து வண்டார்க்கப்
பூதலத்து வீழ்ந்த புயல்."

பொருட்காரகவேதுவுக்கு,

உ—ம். "கனிகொள் பொழிலருவி கைகலந்து சந்நின்
பனிவிரவிப் பாற்கதிர்ந் டோய்ந்து—தனியிருந்தோர்
சிந்தை யுடனே யுயிருணக்கும் தென்மலயந்
தந்த தமிழ்மா ருதம்."

கருவிகாரகவேதுவுக்கு,

உ-ம். "கரடத்தால் மாரியுங் கண்ணால் வெயிலும்
நிரைவயிரக் கோட்டா னிலவும்—சொரியுமால்
கிளார் தொடையுதல னேரார் கலிங்கத்து
வாளாற் கவர்ந்த வளம்."

ஞாபகவேதுவுக்கு,

உ—ம். "என் தாயார் கையெழுத்தான கணக்குப் புஸ்தகம் கண்டவுடனே, என் சிறுவயதுமுதல் எனக்குக் காட்டிய அன்பை என் முன் படம்போல் நிறுத்தி, என்னால் அடக்கக்கூடாத துயரத்தோடு கண்ணீர் சொரிந்து வாய்விட்டழுதேன்.

அபாவவேதுவுக்கு,

உ-ம். 1. "யாண்டு மொழிதிறம்பார் சான்றவ ரெம்மருங்கும்
ஈண்டு மயில்க ளினமினமாய்—மூண்டெழுந்த
காலையே கார்முழங்கு மென்றயரேற் காதலர்சேர்
மாலையே நம்பால் வரும்."

2. "கரவொடு நின்றூர் கடிமனையிற் கையேற்
றிரவொடு நிற்பித்த தெய்வம்—அரவொடு
மோட்டாமை பூண்ட முதல்வனை முன்வணங்க
மாட்டாமை பூண்ட மனம்."

"யாதன் றிறத்தினு மிதனினிது விளைந்தென்
றேது விதந்துரைப்ப தேது வதுதான்
காரக ஞாபக மெனவிரு திறப்படும்." (தண்டி.)

"முதல்வனும் பொருளுங் கருமமுங் கருவியு
மேற்பது நீக்கமு மெனவிவை காரகம்." (தண்டி.)

"அவையல பிறவரி னறிவது ஞாபகம்." (தண்டி.)

"அபாவந் தானு மதன்பாற் படுமே." (தண்டி.)

**779.** (2.) இலேசவணி—கருதியதைக் காட்டும் குணம் குறிகளை வேறேதோ ஒரு காரணத்தால் விளைந்ததுபோல் மறைத்துக் கூறல்.

உ-ம். "கல்லுயர்தோட் கிள்ளி பரிதொழுது கண்பனிசோர்
மெல்லியலார் தோழியர்முன் வேறொன்று—சொல்லுவராற்
பொங்கும் படைபரப்பி யெழுந்த பூந்துகள்சேர்ந்
தெங்கண் கலுழ்ந்தனவா லென்று."

சோழராஜன் குதிரையைக் கண்டு, கண்ணீர் சிந்திய மகளிர்கள், கண்ணீர் சிந்திய தென்னவென்று கேட்ட தோழியர்க்கு, சேனைக் கூட்டத்தின் வரவால் உண்டாகிய தூசி கண்ணில் விழுந்ததால் அங்ஙனமாகியதென்று மறைத்துச் சொன்னார்களென்பது இதன் தாற்பரியம்.

"குறிப்பு வெளிப்படுக்குஞ் சத்துவம் பிறிதின்
மறைத்தனை யாட விலேச மாகும்." (தண்டி.)

**780.** (3.) நிதரிசனவணி-சாதாரண உலக இயற்கைப்படி, மானிடர்க்குள் நடக்கும் ஒரு காரியத்தின் பயனுக்கு மற்றொரு சராசரப் பொருளில் விளங்கும் இயற்கை நெறியைத் திருஷ்டாந்தமாகக் காட்டுதல்.

இது புகழாகவாவது இகழ்வாகவாவது இருக்கலாம்.

உ-ம். (a) "பிறர்செல்வங் கண்டால் பெரியோர் மகிழ்வும்
சிறியோர் பொறாத திறமும்—அறிவுறீஇச்
செங்கமல மெய்மலர்ந்த தேங்குமுத மெய்யசந்த
பொங்கொளியோன் வீறெய்தும் போது."

(b) "பெரியோ ருழையும் பிழைசிறி துண்டாயில்
இருநிலத்துள் யாரு மறிதல்—தெரிவிக்கும்
தேக்குங் கடலுலகில் யாவர்க்குந் தெள்ளமுதம்
வாக்கு மதிமேன் மறு."

"ஒருவகை நிகழ்வதற் கொத்தபயன் பிறிதிற்குப்
புகழ்மை தீமை யென்றிவை புலப்பட
நிகழ்வதாயி னிதரிசன மதுவே." (தண்டி.)

**781.** (4.) விபாவனையணி—ஒரு காரியத்தைப்பற்றிப் பேசும்போது, பலரும் அறிதற்குரிய காரணத்தை யொழித்து, வேறேயொரு காரணத்தை இயல்பாகவாவது, குறிப்பாகவாவது வெளிப்படக் கூறுவது.

உ—ம். 1. தீயின்றி வேந்தரியோர் சிந்தை செழுந்தேறல்
வாயின்றி மஞ்ஞை மகிழ்தூங்கும்—வாயிலார்
நின்றிச் சிலருட னீர்ந்தா ரமரின்றிக்
கன்றிச் சிலைவளைக்குங் கார்."

2. வீடின்றிச் சுகித்துவரும் சந்நியாசிகள், பொன்னும் பொருளுமின்றிப் பூரணசம்பன்னரா யிருப்பது எவர்க்கும் தெரிந்த காரியமே.

3. இப்பாலியருக்குச் சாப்பாட்டுக்குக் குறைவில்லை; திரவியசம்பத்துள்ள தந்தைதாயரும் சுற்றமு முண்டு; ஆயினும், உடம்பு மெலிந்து நாதியற்றவர்போல் இவர் அலைவதேன்? வயசுகாலத்தில் உபாதிக்கும் மன்மதன் கணையாலோ, அறிவாசையாலுங், கல்வி முயற்சியாலும் விளைந்த தீப்பொறிபோன்ற மனச்சூடாலோ?

"உலகறி காரண மொழித்தொன் றுரைப்புழி
வேறொரு காரண மியல்பு குறிப்பின்
வெளிப்பட வுரைப்பது விபாவனை யாகும்." (தண்டி.)

## SECTION IV.

**782.** சில அணிகள் ஆச்சரியத்தை உண்டுபண்ணி, ஒரு காரியம் மனதில் படும்படியாக அமைந்தவை. அவற்றுள் சில பின்வருவன.

(1.) அதிசயவணி (Hyperbole.) — ஒரு பொருளின் சிறப்பு அல்லது தாழ்வை விளக்க, யாருக்கும் ஆச்சரியம் உண்டாகத்தக்கவிதமாய், கற்பனைசக்தியால் உயர்த்தியும் தாழ்த்தியும் சித்திரித்துக் கூறுவது.

உ-ம். "ஆளுங் கரியும் பரியுஞ் சொரிகுருதி
தோளுந் தலையும் சுழித்தெறிந்து—நீள்குடையும்
வள்வார் முரசும் மறிதிரைமேற் கொண்டொழுக
வெள்வா ளுறைகழித்தான் வேந்து."

அரசன் வாளை உறையினின்று உருவ இரத்தவெள்ளமாகி, ஆள், கரி, பரி, யாவும் மிதந்துபோயின என்பது இதன் கருத்து.

பாட்டுக்களின் பொருள்நோக்கி இவ்வணி பொருளதிசயம், குணவதிசயம், ஐயவதிசயம், துணிவதிசயம், திரிபதிசயம் எனப் பலவகைப்படும்.

உ—ம். 1. உபாத்தியாயருக்கு வந்த கோபத்தினால் மேசை இரண்டுதுண்டாயிற்று.

2. பரமசிவன் திரிபுரத்தை எரித்த தீ இன்னும் அவியாது விளைந்தோடுவதால் அண்டத்துச்சுவரில் மின்னும் இடியும் இக்காலத்திலுமிருக்கின்றன.

3. ஒரு பழம் தின்றதால் உலகெல்லாம் பாவத்தால் பீடிக்கப்பட்டது. இப்பாவம்போக்கத் தேவனும் மனுவுருவெடுத்துச் சிலுவைமரத்தில் அணி கடாவப்பட்டு மாண்டார். இந்த இரட்சணிய செயல் பெரிதோ, பாவம் பெரிதோ? இவற்றிற்கெல்லாம் காரணமான பழம் விசேஷித்ததோ?

இதில் உயர்வு வர்ணிக்கப்பட்டால் பெருமையணி, அல்லது உயர்வு நவிற்சியணி யெனவும், தாழ்வை வர்ணிக்கப்பட்டால் சிறுமையணி, அல்லது இழிவு நவிற்சியணி யெனவும் சொல்லப்படும்.

"மனப்படு பொருள்பொருள் வனப்புவந் தரைப்புழி
யுலகுவரம் பிறவா நிலைமைத் தாகி
யான்றோர் வியப்பத் தோன்றுவ ததிசயம்." (தண்டி.)

"அதுதான், பொருள் குணந் தொழிலையந் துணிவே திரிபெனத்
தெருளுறத் தோன்று நிலைமைய தென்ப." (தண்டி.)

**783. (2.) பாவிகாலங்காரம் அல்லது பாவனையணி (Vision.)**—முன் நடந்ததை அல்லது இனி நடப்பதை கண் முன் இப்போது நடப்பதுபோலக் கூறுவது.

உ—ம். இராமர் இலங்கையினின்று வந்த சீதாபிராட்டியைப் பார்த்து, ஆ! என் அன்புக்குரிய நாயகயே, என் செய்வேன்! நீ பத்தினியாயினும், உலகம் பழிகூறும்; ஆகையால், நீ அக்கினிப் பிரவேசமாகி, உன் கற்பின் மாட்சியை வெளிப்படுத்தவேண்டுமே என்கிறார். படைசூழ்ந்த போர்வீரர் இது தகாது என்று முறுமுறுப்போடு பற்கடித்துக் கண்ணீர் சொரிகிறார்.

**784.** (3.) தற்குறிப்பேற்றவணி (Authors or poets' own creation.)— சொல்லப்புகுந்த வஸ்து அல்லது தொழிலின் இயல்பான தன்மையை மறைத்துச் சொல்பவர் தம்மனதிற் கருதிய வேறொரு தன்மையை அதற்குச் சார்த்தி வர்ணிப்பது.

உ—ம். "மண்படுதோட் கிள்ளி மதயானை மாற்றரசர்
வெண்குடையைத் தேய்த்த வெகுளியால்—விண்படர்ந்து
பாயுங்கொ லென்று பனிமதியம் போல்வதூஉம்
தேயும் தெளிவிசும்பி னின்று."

சோழராஜனுடைய மதயானை அரசருடைய வெண் கொற்றக் குடையைச் சீறிச் சிதைத்த கோபாவேசத்தாலே தன்மேலும் பாயுமோ வென்று சந்திரன் வரவரத் தேய்கிறான் என்பது இதன் தாற்பரியம்.

[சந்திரன் தெய்த வியல்பாகலால், இராஜ புகழ்ச்சியான இது கவியின் சுயமான கற்பனையேயல்லாது நியாயமான காரணமுமன்று, சமத்காரமான காரணமுமன்று.]

"பெயர்பொரு ளல்பொரு ளெனவிரு பொருளினும்
இயல்பின் விளைதிற னன்றியய லொன்று
தான்குறித் தேற்றுத றற்குறிப் பேற்றம்." (தண்டி.)

**785.** (4.) பரியாயவணி (Innuendo or Insinuation.)—கருதிய பொருளை நேரே சொல்லாமல், அது புலப்படும்படியாக அதை யறியத் தக்க வேறொன்றை எடுத்துக் கூறல்.

உ—ம். "தலை வலிக்கிறது" என்று ஒருவர் சொல்ல, "ஆம் வீடு வெறுமையா யிருப்பதால்தான்" என்றார் அவர் சிநேகிதர்.

[இதில், நீர் பெண்சாதி பிள்ளைகளில்லாமல் ஒண்டியாயிருப்பதால் இத்தலைவலிநேர்ந்ததெனை நேரே சொல்லாமல், வீடு வெறுமையாயிருக்கிறதால் இத்தலைவலி நேர்ந்ததெனக் குறிப்பாலாகிய கருத்து உணர்த்தப்பட்டது.]

"கருதியது கிளவா தப்பொரு டோன்றப்
பிறிதொன்று கிளப்பது பரியா யம்மே." (தண்டி.)

**786.** (5.) விசேஷவணி—ஒருபொருளின் குறைவைச்சொல்லி, அதன்மூலமாய் அதன் மகத்துவத்தை சிறப்பித்து வர்ணிப்பது.

உ—ம். 1. காமனுக்கு உருவமில்லை, இரதகஜ துரகபதாதியாகிய சதுரங்கசேனை யொன்றுமில்லை; ஆயினும் அவனால் ஜெயிக்கப்படாத மானிடஜென்மம் இப்பூவுலகில் உண்டோ?

2. நரிகளுக்குக் குழிகளும் பறவைகளுக்குக் கூடுகளு முண்டு; இயேசுநசரேயனுக்கோ தலைசாய்க்க இட மில்லை; ஆயினும், அவர் எல்லாருடையர், எல்ல வர்க்கும் பாக்கியாதிகள் சலியாது கொடுக்கும் நன் கொடையாளர்.

N.B.—இதில் குறைவாகச் சொல்லப்பட்ட பொருளின் தன்மைப் படி, குணக்குறை விசேஷம், தொழிற்குறை விசேஷம், பொருட்கு றைவிசேஷம், சாதிக்குறைவிசேஷம், உறுப்புக்குறை விசேஷம் என இவ்வணியைப் பலவாறாகப் பாகுபாடுசெய்து விரிப்பதுமுண்டு.

"குணந்தொழின் முதலிய குறைபடு தன்மையின்
மேம்பட வொருபொருள் விளம்புதல் விசேடம்." (தண்டி.)

**787.** (6.) **நுட்பவணி**—மனதில் கருதிய பொருளை, பரியாய வணியைப்போல் வேறொன்றைச் சொல்லிப் புலப்படுத்தாமலும், இலேச அணியைப்போல் விளங்கத்தக்க காரணத்தை மறைத்து வேறே காரணங்கூறாமலும், வார்த்தையால் ஒன்றும் உணர்த்தாமல், கிரியை யால் (அதாவது நோக்கம், கைக்குறிமுதலியனவற்றால்) அதைக் குறிப் பித்தலாம்.

உ-ம். (a) புருஷன் வியாதியாய்ப் படுக்கையிற் கிடந்து வருத்தப்ப டும்போது, பெண்சாதி மாங்கல்யத்தைக் கையால் பிடித் துக் கண்ணால் நோக்கிச் சூரியநமஸ்காரம் செய்தாள்.

[இதில், சுவாமி! என் புருஷனைச் சுகப்படுத்தும் என்று வேண்டிக் கொள்ளுதல் குறிப்பிக்கப்பட்டது.]

(b) இயேசுவானவர் எருசலேமுக்குச் சமீபித்துவந்த போது பட்டணத்தைப் பார்த்துக் கண்ணீர் விட்டார்.

"தெரிபுவேறு கிளவாது குறிப்பினுந் தொழிலினு
மரிதுணர் வினைத்திற நுட்ப மாகும்." (தண்டி.)

## SECTION V.

**788.** முன் சொன்ன அணிகளெல்லாம் மனோதத்துவ நிகழ்ச்சி பற்றி வந்தவை. இவையல்லாது, நூலாசிரியர்கள் சில சமத்கார வர்ணனைகளுக்குப் பேரிட்டு, இவ்விதமான அணியிவையென வகுத் துக் கூறியிருக்கிறார்கள். அவற்றுள் சில வருமாறு:—

(1.) **சமாயிதவணி.**—ஒரு காரியத்துக்காக மிகவும் முயன்று கொண்டு இருக்கையில், கருதிய பொருள் அம்முயற்சியாலன்றி வேறோர் வகையால் வந்து தனக்கு லபித்ததெனச் சொல்லுதல்.

இது சாதாரண தர்மத்தில் தெய்வசங்கற்ப மெனப்படும். இந்துக்கள் அதிர்ஷ்டவசமென்றும், கிரகபலம் ராசி நட்சத்திரங்களின் பலமென்றும், ஊழ்வினைப் பலமென்றும் பலவகையாய் இந்நடவடிக்கைகட்கு நியாயம் சொல்வதால், கவி எடுத்துக்கொண்ட பெருமான், பெருமாட்டியார் (Hero, Heroine) பெருமை இவ்வித சம்பவங்களால் அலங்கரிக்கப்பட்டு விசித்திரமாவதை பற்றி, இதை ஒரு அணியென வகுத்தல் தமிழாசிரியர்கள் பெற்றியாம்.

உ—ம். பஞ்சமோ கொடிது; ஒருவேளை போஜனத்துக்குத்தான் மாவும் எண்ணெயும் உண்டு; இதையாகிலும் அடைசுட்டுத் தின்று சாவோமென்று விறகு பொறுக்கிக்கொண்டிருந்த சரெப்தாஊர்க் கைம்பெண்ணுக்குத் தேவமனுஷனை எலியா தென்பட்டுக் கலிதீர்த்தான்.

"முந்துதான் முயல்வுறாஉந் தொழிற்பயன் பிறிதொன்று
தந்ததா முடிப்பது சமாயித மாகும்." (தண்டி.)

789. (2.) **பரிவர்த்தனையணி.** — ஒரு பொருளைக் கொடுத்துச் சிறப்புள்ள மற்றொன்றைப் பெற்றதாக வுரைப்பது.

உ—ம். என் சித்தத்தைச் சுவாமிக்குக் கொடுக்க, அவர் எனக்கு இவ்வுலகமாகிய பெருஞ் சமுத்திரத்தைக் கடந்து பொன்னுடு சேரத்தகுந்த கப்பலும் தந்தார், அதை நடத்தும் மாலுமியுமானார்.

"பொருள்பரி மாறுதல் பரிவருத் தனையே." (தண்டி.)

790. (3.) **உதாத்தவணி**—பெருமையை விசேஷித்துக் கூறுவது. இது அதிசயவணிபோலாயினும், செல்வமிகுதி, உள்ள மிகுதி ஆகிய இரண்டினைமாத்திரம் விசேஷித்துரைப்பது. பெருமைசிறுமைகளை வியந்துரைப்பது அதிசயவணி யெனப்படும்.

N.B.—இவ்வுதாத்தவணியைத் தனியாகச் சொல்வது நியதியன்றெனக் கருதி, இங்கு அதிசயவணியினின்றும் வித்தியாசபடுத்திக் காட்டவேண்டியதாயிற்று.

உ-ம். "கன்றும் வயவ ரினங்கள் பலகவர்ந்தும்
என்றும் வறிஞர் இனங்கவர்ந்தும்—ஒன்றும்
அறிவரிதா நிற்கு மளவினதா லம்ம
செறிகதிர்வேற் சென்னி திரு."

"வியத்தகு செல்வமு மேம்படு முள்ளமு
முயர்ச்சி புனைந்துரைப்ப துதாத்த மாகும்." (தண்டி.)

**791.** (4.) **வாழ்த்தணி** (Congratulation.)—சுபமங்கள சம்பவம் உண்டாக என்று கவி ஆசீர்வாதங் கூறல்.

உ-ம். "மூவாத் தமிழ்பயந்த முன்னோன் முனிவாழி
ஆவாழி வாழி யருமறையோர்—காவிரிநாட்
டண்ண லநபாயன் வாழி யவன்குடைக்கீழ்
மண்ணுலகில் வாழி மழை."

"இன்னார்க் கின்ன திவைக வென்றுதாம்
முன்னிய துரைத்தல் வாழ்த்தென மொழிப." (தண்டி.)

**792.** (5.) **ஆர்வமொழியணி**—சந்தோஷம் முதலியன மேலிடுவதால் தனக்குள் நிகழும் ஆசையின் மிகுதி தோன்ற வர்ணிப்பது.

N.B.—இதை ஒரு திறமாய் அதிசயவணி என்றும், மற்றொரு திறமாய் சுவையணி என்றும், நட்பவணி என்றும் சொல்லலாம். இப்படிச் சொல்லுதல் அவசியமன்றெனினும் முந்துநூலோர் மரபு விளக்க இது இவ்விடத்தில் குறிப்பிக்கப்பட்டது.

உ-ம். "சொல்ல மொழிதளர்ந்து சோரும் துணைமலர்த்தோள்
புல்ல விருதோள் புடைபெயரா—மெல்ல
நினைவே மெனினெஞ்ச மிடம்போதா தெம்பால்
வனைதாராய் வந்ததற்கு மாறு."

வனைதாராய்=அலங்கரிக்கப்பட்ட மாலையையுடையவனே.

"ஆர்வமொழி மிகுப்ப தார்வ மொழியே." (தண்டி.)

**793.** (6.) **சுவையணி** (Graphic Description.)—மனதில் நிகழும் தன்மைகளாகிய வீரம், பயம், ஆச்சரியம், இழிவு, காமம், வியாகுலம், கோபம், மகிழ்ச்சி முதலியவற்றை யற்றவருக்குப் புலப்படுத்தத்தக்கதாய்த் தகுந்த சொற்களையடுக்கி வர்ணிப்பது.

உதாரணம்.

(a) "எங்களுக் கென்றே கால மிசைத்ததோ விதிவ சத்தால்
இங்கொரு மரமுண் டென்று ரெதிரொரு புற்றுண் டென்றார்
அங்கவர் சொல்லிப் போன வடையாள மொன்றுங் காணேன்
சங்கடந் தீர்க்கொ ணாதோ தயாபரா விஸ்வ நாதா."

[இதில், வியாகுலம் காட்டப்பட்டது.]

(b) "கைபிசையா வாய்மடியா கண்சிவவா வெய்துயிரா
மெய்குலையா வேரா வெகுண்டெழுந்தான்—வெய்யபோர்த்
தார்வேய்ந்த தோளான் மகளைத் தருகென்று
போர்வேந்தன் தூதிசைத்த போது."
[இதில், கோபம் காட்டப்பட்டது.]

மற்ற மனோபாவங்கள் வந்த இடத்துக் காண்க.

"உண்ணிகழ் தன்மை புறம்பொழிந் தோங்க
வெண்மெய்ப் பாட்டி னியல்வது சுவையே." (தண்டி.)

"அவைதாம்,வீர மச்ச மிழிப்பொடு வியப்பே
காம மவல முருத்திர நகையே." (தண்டி.)

794. (7.) தன்மேம்பாட்டுரையணி (Egotism.)–ஒருவன் தன்னைத்தான் புகழ்வது.

N.B.—இது அங்கிலேய முறைப்படி வழுவெனப்படும். ஆயினும், தமிழ்நூலுள் சில சமயங்களில் தகுதியுடைத்தாக வருதலின் இது ஓர் அலங்காரமாகக் கொள்ளப்பட்டது.

உ–ம். "எஞ்சினா ரில்லை யெனக்கெதிரா வின்னுயிர்கொண்
டஞ்சினா ரஞ்சாது போயகல்க—வெஞ்சமத்துப்
பேரா தவராகத் தன்றிப் பிறர்முதுகிற்
சாராவென் கையிற் சரம்."

"தான்றற் புகழ்வது தன்மேம் பாட்டுரை." (தண்டி.)

795. (8.) தன்மையணி—அலங்கார விசித்திரங்களின்றி எவ்வகைப் பட்ட பொருளையும் உள்ளபடி கூறி யமைப்பது.

இது பொருள், குணம், சாதி, தொழில் முதலியவற்றைப்பற்றி நான்குவகையாய்ப் பிரிக்கப்படும்.

உ–ம். (a) "நீல மணிமிடற்ற னீண்ட சடைமுடியன்
நூலணிந்த மார்ப னுதல்விழியன்—தோலுடையன்
கைம்மான் மறியன் கனன்மழுவன் கச்சாலை
எம்மா னிமையோர்க் கிறை."
[இது பொருட்டன்மைபற்றி வந்தது.]

(b) "உள்ளங் குளிர வுரோமஞ் சிலிர்த்துரையும்
தள்ளவிழி நீரரும்பத் தன்மறந்தாள்—புள்ளலைக்கும்
தேந்தா மரைவயல்சூழ் தில்லைத் திருநடஞ்செய்
பூந்தா மரைதொழுத பொன்."
[இது குணத்தன்மைபற்றி வந்தது.]

ஏனையவற்றைப்பற்றி வந்ததற் குதாரணம் வந்துழிக் காண்க.

N.B.—இது சிறந்து இயைந்த வார்த்தைகளாலாய தென்கில், சுவையணி, ஆர்வமொழியணி முதலியவற்றில் ஒன்றும். அணியொன்றும் இல்லாது வெறுமையாய் நிற்பதைத் தன்மையணியென்று ஓர் அணியாகக் கூறுவது யுக்தமன்றெனை அதை அணியின்பாற் படுக்கவில்லை. ஆயினும், தண்டிமுதலிய தொல்லாசிரியர் இதை யணியென வகுத்ததால் இதனிலக்கணம் சொல்லி விவரிக்கலாயிற்று.

"எவ்வகைப் பொருளும் மெய்வகை விளக்கும்
சொன்முறை தொடுப்பது தன்மை யாகும்." (தண்டி.)

"அதுவே, பொருள்குணம் சாதி தொழிலொடு புலனும்."
(தண்டி.)

796. (9.) சங்கீரணவணி—பல அணிகள் ஒரேபாட்டில் கலந்து வருவது.

உ—ம். "தண்டுறைநீர் நின்ற தவத்தா லளிமருவு
புண்டரிக நின்வதனம் போன்றதால்—உண்டோ
பயின்று ளம்பருகும் பான்மொழியாய் பார்மேல்
முயன்றுன் முடியாப் பொருள்."

குளிர்ந்த துறைநீரில் தவம்புரிந்ததினாலே வண்டுசேர்ந்த தாமரை உன்னுடைய முகத்தை யொத்திருப்பதால், நேசித்தவர்கள் உள்ளத்தைக் கவர்ந்துகொள்ளும் பால்போலும் வார்த்தைகளையுடைய மாதே! உலகத்தில் முயற்சியால் முடியாதபொருள் யாதுமில்லை யென்பது இச்செய்யுளின் பொருள்.

[இதில்

| | | |
|---|---|---|
| "தண்டுறை நீர்நின்ற தவம்" ...... | என | தற்குறிப்பேற்றமும், |
| "தவத்தால்" ........................ | ,, | காருமாரகவேதுவும், |
| "அளிமருவும்" .................... | ,, | சிலேடையும், |
| "புண்டரிக நின்வதனம் போலும்" | ,, | உவமையும், |
| "முயன்றால் முடியாப் பொருள்" | ,, | வேற்றுப்பொருள் [வைப்பும், |
| "உளம்பருகும் பான்மொழியாய்" | ,, | சுவையும் ஆகப்பலஅணி |

கள் கலந்து வந்தமை காண்க.]

N.B.—இரண்டிற்கு மேற்பட்ட அலங்காரங்கள் ஒரு பாட்டிலாவது வாசகத்திலாவது வருவது சங்கீரண மெனப்படும் என்பது முன்னோர்கள் கொள்கை.

"மொழியப் பட்ட வணிபல தம்முட்
டழுவ வுரைப்பது சங்கீ ரணமே." (தண்டி.)

**797.** (10.) [1]பாவிகவணி (Unity of idea.)—ஒரு காப்பியம் முழுமையும், கவி சொல்லிவரும் காரியம் சிறப்பாய் முன்பின் பிறழாது வருவது. இது பாரதம், இராமாயணம் முதலிய பெருநூல்களை முழுதும் வாசிக்கப் புலப்படும்.

"பாவிக மென்பது காப்பியப் பண்பே." (தண்டி.)

## SECTION VI.

**798.** **புறநூலார் கொள்கைபற்றி வந்த அணிகள்**—சம்ஸ்கிருதத்தில் அநேக அலங்காரங்களுண்டு. பிராமணர் தமிழைப் படிக்கத்தொடங்கித் தமது பூர்வபாஷையின் வியாகரண விதிப்படி அவற்றில் அநேக அணிகளைத் தமிழில் பிரயோகித்திருக்கின்றனர். அங்கிலேயபாஷை ரீதியாயும் ஒருவாறு தமிழில் திரிபேற்றுவித்திருக்கிறது. ஆகையால் இவற்றை விவரிப்பது தகுதி. இவ்வித அணிகளில் சில, வினாவணி, முரணணி, வினியணி, மறைபொருள் நவிற்சியணி என்பவை.

**799.** (1.) **வினாவணி** (Interrogation.)—எடுத்த காரியத்தின் உண்மை இன்மைகளை வற்புறுத்தவும், மனதில் நிகழும் துயரம், சந்தோஷம் முதலிய எண்ணங்களை விளக்கி விசித்திரமாக்கவும் வினாவாக வாக்கியத்தை அமைப்பது.

உ-ம். 1. காக்கைக் குஞ்சுகளுக் கிரையூட்டி, லீலிபுஷ்பத்தை அலங்கரிக்கும் திருவள்ளல், தம்முருவில் சிருஷ்டித்த மானிடஜென்மமாகிய என்னை மறப்பாரோ?

[இதில், கடவுள் பராமரிப்பின் உண்மை வற்புறுத்தப்பட்டது.]

2. "பெரியோ ரிலையோ பெண்களையும்
பெற்றோ ரிலையோ மானமுள்ள
உரியோ ரிலையோ எந்தனுக்கிங்
கொருதிக் கிலையோ நீதிசொல்லும்
அரியோ ரிலையோ ஒருவருக்கும்
அருளே இலையோ யாதொன்றும்
தெரியா ஏழை என்பங்கில்
தெய்வ மில்லை யோவிதியே."

[இதில், துயரம் வர்ணிக்கப்பட்டது.]

[1] பாவிகவணியைப் பாவனாலங்காரம் (Vision.) எனத் தப்பாய்க் கருதக்கூடாது. பாவனாலங்காரம் சம்ஸ்கிருதத்திலிருந்து எடுத்துக்கொண்டதாயினும், செந்தமிழ் அலங்காரங்களுள்ளும் ஒன்றாகும். அதைத் தமிழில "பாவிகம்" என எழுதுவாருமுளர். ஆகையால் அதை நுட்பமாய் உய்த்துணர்க.

**800.** (2.) **மறாணணி அல்லது எதிர்மறையணி** (Negation.)—உள்ள பொருளை மறுத்தலாற் கருதிய பொருளுக்குச் சிறப்புண்டாக வர்ணித்துரைப்பது.

சம்ஸ்கிருதத்தில் இதை **ஆக்ஷேபாலங்காரம்** என்பர்.

உ-ம். (a) அண்ணனைவிடத் தம்பி சிரேஷ்டம் என வில்லை; தம்பியை நான் நன்றாய் அறிவேன்; அண்ணனையோ அறியேன்.

[இதில், தம்பியைச் சிரேஷ்டமாக மதித்து வற்புறுத்தப்பட்டது.]

(b) "அன்னைய ரம்மெ லோதித் தோழியை அருளின் நோக்கி
உன்னினு மிவள்மேற் காதல் உளம்என உரைக்கி லேமால்."

**801.** (3.) **விளியணி** (Exclamation.)—மனதின்கண் உண்டாகிய வெறுப்பு, விருப்பு, கோபம், ஆச்சரியம், துயரம், சந்தோஷம் முதலியவற்றைப் பிறருக்கு விளங்கசத்தக்கதாக வர்ணித்துரைப்பது.

சம்ஸ்கிருதத்தில் இது **உத்தண்டாலங்காரம்** எனப்படும்.

உ-ம். "அல்லடா வேடா என்னை யமரர்க ளுலக மட்டுங்
கல்லடா எறிந்தாற் போலே கடுகிநீ எறிந்தாய் போபோ
நில்லடா பயப்ப டாதே நின்னைஇப் போது வாரி
எல்லடா கடாக முட்ட எறிகிறேன் நொடியிற் பாராய்."

[இது, கோபம், வீரம் இரண்டையும் உணர்த்திற்று.]

N.B.—இம்மூன்றணியின் சுபாவம் சுவையணிபோலும் எனச் சொல்ல இடமுண்டு. ஆயினும், சுவையணியில் வினா, எதிர்மறை, விளி முதலியவற்றால் மாத்திரமல்ல, எவ்விதமான உபாயதந்திரங்களாலும் மனதில் பட உரைப்பது விசேஷமெனக் கூறப்பட்டது. அங்ஙனம் வர்ணிக்கும் சாதனங்களில் இம்மூன்றும் உள்ளடங்கும். ஆகையால், புறநூலார் கொள்கைப்படி வந்த இம்மூன்றும், சுவையணியின் உட்பிரிவுகளாக அமைக்கினும் அமைக்கலாம்.

**802.** (4.) **ஜீவாரோபவணி** (Personification.)—உயிர் அற்ற வஸ்துக்களை உயிர் உள்ளனபோலவும், பேசக்கூடாதவற்றைப் பேசுவனபோலவும், இப்படி இயற்கையாய் அமைந்திராத இலட்சணங்களை அமைத்து வர்ணிப்பது.

உ-ம். "வெங்கதிரோன் தானும் விதர்ப்பன் திருமடந்தை
மங்கலநாள் காண வருவான்போல்—செங்குமுதம்
வாயடங்க மன்னற்கும் வஞ்சிக்கும் நன்னெஞ்சில்
தீயடங்க வறினன் தேர்."

N.B.—இது, திணைவழு, பால்வழுவாக வருதலின், அலங்காரங்களில் வழுவமைதியாகக் கொள்ளப்படும் எனக் கூறுவது சிலர் கட்சி. அவர் இதை ஓர் அலங்காரத்துக்கு மாத்திரமல்ல, சகல அணிகளுக்கும் பொதுவான வழுவமைதியாகச் சாற்றுவர். ஆயினும் இது சிறப்புப்பற்றி ஜீவனற்ற வஸ்துவை ஜீவியாய் ஆரோபிப்பதால் அலங்காரமென விவரிக்கலாயிற்று.

**803**. (5.) **மேன்மேலுயர்ச்சியணி**—சில பொருள்களை அல்லது தொழில், குணம் முதலியவற்றைத் தம்முள் ஒற்றுமையுள்ளனவாகப் பொறுக்கியெடுத்து, ஒன்றற்கொன்று உயர்வாகவாவது, தாழ்வாகவாவது அடுக்கி உரைப்பது.

இது சம்ஸ்கிருதத்தில் **சாராலங்காரம்** (Climax.) எனப் பேர் பெறும்.

உ—ம். (a) தேன் மதுரம்; அதனினும் மதுரம் அமுதம்; அதனினும் மதுரம் இரட்சண்ணிய சரிதை.

(b) பட்டணத்தைவிட நாடு கேடு; நாட்டைவிடக் காடு கேடு; காட்டிலும் பாலைவனம் கேடு; அதிலும் கள்ளி வளரும் கற்காடாம் இப்பாலைவனம் மிகக் கேடு.

**804**. (6.) **மறைபொருள் நவிற்சியணி** (Apostrophe.)—கண்ணுக் கெதிராகாப் பொருளைக் கண்டதுபோலவும், அதனோடு வார்த்தையாடல்போலவும் அமைத்து வர்ணிப்பது.

இது சம்ஸ்கிருதத்தில் **பிரலாபாலங்காரம்** எனப்படும்.

உ—ம். 1. மரணமே! உன் கூர் எங்கே? பாதாளமே! உன் ஜெயமெங்கே? நான் உன்னை ஜெயிக்க யூதா சிங்கத்தின் வெற்றிக்கொடியான சிலுவைத் துவஜத்தோடு நிற்கிறேன்.

2. "மன்னவனே இப்பிறப்பிற் கண்டு மணந்திலனேல்
இன்னம் ஒருபிறப்பி லானாலும் ஏழையேன்
தன்னம் தனியே தவமிருந் தாற்றியுமுன்
பொன்னகலம் உள்ளுருகப் புல்லா தொழிவேனோ."

N.B.—இதைப் பாவனாவணி யெனவுங் கூறுவர்; பாவனாவணி முன் நடந்ததை இப்போது நடக்கிறதாகக் கூறுவதாதலின், இங்ஙனம் கூறுவது சரியன்று.

**805**. மேற்கூறிய அணிகளை ஒருங்குசேர்த்துப் பின்வருமாறு மனதினைப்புக்காகப் படலசொரூபம் வரைந்து தெளிவித்திருக்கிறது.


1
சொல்லணி.
1 மடக்கு.
2 சித்திரகவி.
3 தீவகம்.
4 பின்வருநிலை.
5 சிலேடை.
1 பொதுவாய், சொற்றொடர் மடக்கு.
2 இயமாவிய மகம்.
3 பாடக மடக்கு.
4 அந்தாதி மடக்கு.
5 சந்தட்டய மடக்கு.
6 ஓரெழுத்து ஈரெழுத்து, மூ வருவது.
7 கிரோட்டகம்.
1 கோமூத்திரி.
2 கூடசதுக்கம்.
3 மாலைமாற்று.
4 மாத்திரைச் சுருக்கம்.
5 மாத்திரை வருத்தனம்.
6 எழுத்து வருத்தனம்.
7 ஒற்றுப் பெயர்த்தல்.
8 வினாவுத்தரம்.
9 நாக பந்தம்.
10 முரச பந்தம்.
11 திரிபாகி.


1
அறிவுறுத்தற்காய்.
1 சமாயிதம்.
2 பரிவர்த்தனை.
3 உதாத்தஅணி.
1 ஒற்றுமைநயத்தால்.
2 வேற்றுமைநயத்தால்.
1 விரோதவணி.
2 மாறுபடு புகழ்நிலை.
3 புகழாப்புகழ்ச்சி.
4 அவநுதி.
1 உவமை.
2 உருவகம்.
3 வேற்றுமை.
4 வேற்றுப்பொருள் வை
1 அதிசயம்.
2 பாவனாலங்காரம்.

**806.** அணிகளின் தொகைக்குச் சூத்திரம்.

"தன்மை யுவமை யுருவகம் தீவகம்
பின்வரு நிலையே முன்ன விலக்கே
வேற்றுப்பொருள் வைப்பே வேற்றுமை விபாவனை
ஒட்டே யதிசயம் தற்குறிப் பேற்றம்
ஏது நுட்ப மிலேச நிரனிறை
யார்வ மொழிசுவை தன்மேம் பாட்டுரை
பரியா யம்மே சமாயித முதாத்தம்
அரிதுண ரவநுதி சிலேடை விசேடம்
ஒப்புமைக் கூட்டம் மெய்படு விரோதம்
மாறுபடு புகழ்நிலை புகழாப் புகழ்ச்சி
நிதரிசனம் புணர்நிலை பரிவருத் தனையே
வாழ்த்தொடு சங்கீ ரணம்பா விகமிவை
யேற்ற செய்யுட் கணியே ழைந்தே." (தண்டி.)

N.B.—இவற்றுள், தீவகம், பின்வருநிலை, சிலேடையாகிய இம் மூன்றையும் சொல்லணியாக இந்நூலில் வகுத்துக் காட்டியிருக்கிறது.

## CHAPTER XXII.

### பொருளியல்—ON THE SUBJECT MATTER OF VERSE.

**807.** முன் தமிழ் இலக்கணம் எழுதியவர்கள், ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொருபொருளைக் குறிப்பதால், அப்பொருள் எது, அதன் தன்மை எங்ஙனம்? எனப் பகுத்தறிவதன்பொருட்டுப் **பொருளியல்** என்று ஒன்று அமைத்திருக்கிறார்கள்.

**பொருள்கள்**—கண்ணுக்குவிஷயமானவையும்,மனத்தோற்றங்களாய் நிற்பவையுமாக இருவகைப்படும். இவைகளை விவரிப்பது அகராதியைப் பேர்த்தெழுதுவதுபோலாம்.

**808.** தமிழ் இலக்கணிகள், தர்மசாஸ்திர விதிப்படி மனுஷனுக்கு வேண்டிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கனுள், இல்லறம் பூணப் பொருளும் இன்பமும் உண்டாம், இதை நீக்கித் துறவறம் பூண வீடாமென்ற விதியை யநுசரித்து,துறவறஞ் சொல்வது கூடாத காரியமாதலின் அதை நீக்கி, இல்லற தர்மங்களை விவரிப்பது பொருளியலின் மொத்த தாற்பரியமாக விதித்திருக்கிறார்கள்.

**809.** இல்லறத்தில் புருஷன், மனைவியாகிய இருவருங் கூடி வாழ்வது அவசியமாதலால், ஒருவன் ஓர் பெண்ணை எவ்விதமாய்க் கைப்பற்றுவதென்பதைப்பற்றி விவரித்திருக்கிறார்கள். அப்படிப் பட்டவிதத்தில், களவியல் என்று காந்தர்வ விவாகம்போல நடக்கும் சங்கதிகளையும், கற்பியல் என்று தானே தெய்வவசமாய் நேரே மண முடிப்பதையும், தன் தோழர் தூதாலும், பெண்ணின் பாங்கியரான தோழிகளாலும் ஒரு பெண்ணைக் கைப்பற்றுகிற செய்கைகளையும் விஸ்தரித்திருக்கிறார்கள். இவ்வாறு வெகு விஸ்தாரமாய்க்காட்டிய பிரபந்தம் பாலியர்களுக்கு கெடுதி விளைக்கத்தக்க அநேக காரியங்க ளடங்கியது. எனெனில், ஒரு பெண் தன் காமாசையை தன் காதல னுக்கு எவ்வாறு காட்டுவதென்றும், ஓர் பாலியன் தன் ஆசையை எவ் வாறு பெண்ணுக்குக் குறிப்பிப்பதென்றும், பகற்காலத்தில் எப்படி இருவரும் வார்த்தையாடிச் சுகிப்பதென்றும், இரவில் எப்படி இதை இயற்றுவதென்றும், ஆணும் பெண்ணும் தம்மாசையைத் தம் தோழர் களுக்கு எவ்வாறு புலப்படுத்துவதென்றும், ஒரு பெண்ணை மண முடித்துக்கொண்டு கல்வி கற்கவோ, பொருள் தேடவோ அவளை விட்டு நீங்குவதுமாத்திரம் சரியன்று, வேசிப்பெண்களோடு மையல் செய்ய அவளை விட்டு நீங்குவது சரியாமென்றும் விளக்கியிருத்தலின். இவ்விதமான நூலைப் பாலியர்கள் படிப்பது சரியன்று.

கோவை என்னப்பட்ட ஓர்வகை நூலில் ஓர் தலைவன் நடத் தும் கிரியைகளை விஸ்தரிக்கும்போது இவையெல்லாம் வரும். அந் நூல் நியதிப்படி இயற்றியததானென்றறிய இப்பொருளிலக்கணம் அவசியமென்று சிலர் தர்க்கிப்பர். அக்கோவையையும் பாலியர் கையா டப்படாது; அதற்கான இலக்கணமும் அவர்க்கு வேண்டியதில்லை. அறிவு நூல்களை வகுத்தாராயும் முதிஞர் இப்பொருளிலக்கணத்தைக் கோவைத் துறைகளோடு வாசிப்பது குற்றமன்று.

கலாசாலையில் வாசிக்கும் பாலியருக்குத் தமிழ்ப் பாஷையின் விவ ரம் தெளிவுற எழுதப்படும் இலக்கணத்தில், இப்பொருளியலைப்பற்றி நுட்பமாய் விஸ்தரிக்கவேண்டிய தவசியமன்றே.

**810.** ஆயினும் காமக்கிளர்ச்சி தராது நிற்கும் சில அம்சங்கள், காப் பியங்களின் தன்மை பெருமைகளை யறிய ஏதுவானவைகளாதலால், அவற்றைமாத்திரம் இவ்விடத்தில் வசனரூபமாய்க் கொஞ்சம் விளக் கிக்காட்டல் அவசியமென்று துணியலாயிற்று.

**811.** நிலங்கள் ஐந்து (5) வகைப்படும்.—ஒவ்வோர் நிலமும் ஒவ் வோர் சுவாதீன தன்மையுடையது. பெரியோர்கள் ஒவ்வோர் நிலத்திலும் இன்னின்ன மரம், செடி, பூ, புல் இருக்கும் என்றும், இன்னின்ன பறவை மிருகங்கள் உண்டென்றும், இன்னின்ன மனு

ஷர் குடியிருப்பரென்றும், இன்னின்ன தொழில் அவர் இயற்றுவ ரென்றும் வருத்துக் கூறியிருக்கிறார்கள்.

ஒரு கவிஞன் ஓர் இராஜன் சரித்திரத்தைப் பாடும்போது, அவன் இருந்த நிலம் எதுவோ அதற்கிசைவாய் நாட்டுவளம், நகர்வளம், ஊர்வளம், காடு வயல் முதலியவற்றின் வளம் பாடவேண்டும் என்று இவ்விதி யமைக்கப்பட்டது.

இக்காலத்தில் இது சரியொத்து வராவிடினும், பழமையான நூல் களைத் தெளிவாய் அறியவும், அவற்றின் சிறப்பையும் குற்றங்குறை களையும் உய்த்துணரவும் இது உதவியாகும்.

812. (1.) திணை அல்லது நிலம் ஐந்துவகை. அவை: முல்லை, செடி கொடியுள்ள காடும் காடுசார்ந்த இடமும் (Heath); குறிஞ்சி, மலை யும் மலைசார்ந்த இடமும் (Mountain); மருதம், வயலும் அதைச் சார்ந்த தண்ணீர் வளமுள்ள நாடும் (Arcadia); நெய்தல், கடலும் கடல்சார்ந்த இடமும் (Sea Coast); பாலை, வெஞ்சுரமும் (Sandy desert) ஆம்.

"முல்லை குறிஞ்சி பாலை மருதம்
நெய்தல் ஐந்திணைக் கெய்திய பெயரே." (முக். வீரி.)

813. (2.) காலம், பெரும்பொழுது, சிறுபொழுது என இரு வகையாம். அவற்றுள்,

(a.) பெரும்பொழுது — ஆறு; ஒரு வருஷம் ஆறாகப் பிரிக்கப் பட்டது.

| | | | |
|---|---|---|---|
| கார் | ஆவணி | புரட்டாசி | மாதங்கள். |
| கூதிர் | ஐப்பசி | கார்த்திகை | ,, |
| முன்பனி | மார்கழி | தை | ,, |
| பின்பனி | மாசி | பங்குனி | ,, |
| இளவேனில் | சித்திரை | வைகாசி | ,, |
| முதுவேனில் | ஆனி | ஆடி | ,, |

814. (b.) சிறுபொழுது—ஆறு; ஒருநாள் ஆறாகப் பிரிக்கப்பட் டது.

| | | | | |
|---|---|---|---|---|
| மாலை | From 6. P.M. to 10. P.M. | இரவு | 1-10 | நாழிகை. |
| யாமம் | ,, 10. P.M. to 2. A.M. | ,, | 11-20 | ,, |
| வைகறை or வைகறை | ,, 2 A.M. to 6. A.M. | ,, | 21-30 | ,, |
| காலை | ,, 6. A.M. to 10. A.M. | பகல் | 1-10 | ,, |
| நண்பகல் | ,, 10. A.M. to 2. P.M. | ,, | 11-20 | ,, |
| எற்பாடு | ,, 2. P.M. to 6. P.M. | ,, | 21-30 | ,, |

**815.** (3.) குறிஞ்சிக்குக் கூதிர்க்காலமும், முன்பனிக்காலமும், யாமமும்; பாலைக்கு வேனிற்காலமும், பின்பனிக்காலமும், நண்பகலும்; முல்லைக்குக் கார்காலமும், மாலையும்; மருதத்துக்கு ஆறு பெரும் பொழுதும், வைகறை காலையாகிய இரண்டு சிறு பொழுதும்; நெய்தலுக்கு ஆறு பெரும்பொழுதும், எற்பாடும் பொருத்தமானவைகளாம்.

**816. கார்காலத் தோற்றம்**—வாடையடித்தல்; மயில், கேகயப்புள், அன்னம், களிமகிழ்தல்; இந்திரகோபப்பூச்சி தோன்றல்; காந்தள், காயா, கொன்றை மலர்தல்; தாமரை தலைகவிழ்தல்.

**கூதிர்க்காலத் தோற்றம்**—குளிர்காற்றடித்தல்; கொக்கு, அன்னம், சங்கு மகிழ்தல்; நீர் தெளிதல்; மீன் சனித்தல்; மேகம் சூற்கொளல்; சிறு சண்பகம், பாரிசாதம் மலர்தல்; மனுஷர் வருந்துதல்.

**முன்பனிக்காலத் தோற்றம்**—கோடைக்காற்று வீசுதல்; கோட்டான், ஆந்தை மகிழ்தல்; செவ்வந்தி, மா மலர்தல்; இலந்தை பழுத்தல்; கரும்பு, நெல் முதிர்தல்.

**பின்பனிக்காலத் தோற்றம்**—உலவைக்காற்றடித்தல்; காட்டுக் கோழி, புறு மகிழ்தல்; இலவு, கோங்கு, மலர்தல்; பேரீந்து, பனை பழுத்தல்.

**இளவேனிற்காலத் தோற்றம்**—தென்றலடித்தல்; வண்டு, குயில், அன்றில் மகிழ்தல்; மயிலாடுதல்; மாங்கனி யுதிர்தல்; புன்னை, தாழை மலர்தல்.

**முதுவேனிற்காலத் தோற்றம்** — கோடைக்காற்று வலிந்தடித்தல்; வலியான், காடை, கவுதாரி, வானம்பாடி மகிழ்தல்; பேய்த்தேரோடல் (Mirage); மல்லிகை, பாதிரி மலர்தல்.

**மாலைத் தோற்றம்**—சூரிய அஸ்தமனம்; குவளை மலர்தல்; பறவைகள் சப்தித்தல்; கன்றை நினைத்துக் கறவைப்பசு கனைந்து கொண்டு போதல்; தாமரை குவியுதல்.

**யாமத் தோற்றம்**—கோட்டான், சகோரம் முதலியன மகிழ்தல்; கடலேற்றம்.

**வைகறைத் தோற்றம்**—நட்சத்திரங்களொளிகுறைதல், மங்கள வெள்ளி முளைத்தல்; கோழி கூவல்.

**காலைத் தோற்றம்**—பறவை, மிருகங்கள் மகிழ்தல்; தாமரை மலர்தல்; மானிடர் நித்திரை தெளிதல்.

**நண்பகற் றோற்றம்**—எருமை நீரிற் கிடத்தல்; சக்கரவாக மகிழ்தல்; கானல் தோன்றல் (Mirage).

**எற்பாட்டுத் தோற்றம்** —மலைமுதலியவற்றினிழனீளல்; செவ்வானமிடுதல், &c.

## 817. திணை வகைபாடு.

| நிலம். | தெய்வம் | உயர்ந்தோர் தலைவன | உயர்ந்தோர் தலைவி. | தாழ்ந்தோர் அல்லது குடி. | புள். | விலங்கு | ஊர். | நீர். | பூ. | மரம். | பறை. | யாழ் | பண். | தொழில். |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| குறிஞ்சி. | முருகன். | வெற்பன், சிலம்பன. | குறத்தி, கொடிச்சி. | குறவர். கானவர், குறத்தியர், வேட்டுவர், பிழியர், தோடர், துளுவர். | கிளி, மயில். | யானை, சிங்கம், புலி. | சிறு குடி. | அருவி, சுனை. | வேங்கை, காந்தள், குறிஞ்சி. | அகில், சந்தனம், தேக்கு, அசோகம், நாகம். | தொண்டகப்பறை. | குறிஞ்சி யாழ். | குறிஞ்சி யிசை. | தினைகாத்தல், கிழங்கு தோண்டியெடுத்தல்; ஐவனம் விதைத்தல், &c. |
| பாலை. | காளி. | காளை, விடலை. மீளி. | எயிற்றி. | எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர். | கழுகு, பருந்து | செந்நாய் சிறுபூனை. | குறும்பு. | கிணறு. | குரா, உழிஞை. மரா. | ஓமை. கள்ளி. புளி. | துடி,நிரைகோட் பறை. | பாலையாழ். | பஞ்சுர விசை. | திருட்டு, அடிபிடி, பகற்சூறையாடல்,&c. |
| மருதம். | இந்திரன் | ஊரன், கிழவன். | மனைவி, கிழத்தி. | உழவர், உழத்தியர். | கொக்கு, நாரை. | எருமை, நீர்நாய். | பேரூர், மூதூர். | ஆறு, கிணறு. | மகிழம்பூ, தாமரை. | மகிழ், நெல்லி. | மணைப் பறை. | மருதயாழ். | மருத விசை. | நெற்பயிரிடல், வயல் கட்டல், குளம் வெட்டல், நீராடல், திருவிழா, &c. |
| நெய்தல். | வருணன். | சேர்ப்பன, புலம்பன. | பரத்தி, நுளைச்சி. | பரதர், பரத்தியர், நுளையர், நுளைச்சியர், அளவர், அளத்தியர். | காக்கை. | சுறாமீன் | பாக்கம், பட்டினம். | உவர்நீர்க் கேணி. | நெய்தல், தாழை. | முள் அடம்பு, புன்னை. | கோட் பறை, பம்பை. | விளரியாழ். | செவ்வழி யிசை. | மீனுணக்கல், மீன் உப்பிடல், உப்பு விளைத்தல், ஓடம் ஓட்டல் முதலிய நாவாய்த்தொழில். கடல் நீராடல், முத்தச்சலாபம், &c. |
| முல்லை. | திருமால். | குறும்பொறை நாடன், தோன்றல். | மனைவி, கிழத்தி. | இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர். | காட்டுக் கோழி, புறா, கோழி, செம்போத்து. | மான், முயல், ஆடு, மாடு. | பாடி, சேரி. | ஆறு, சுனை. | முல்லை, பிச்சி, கொன்றை, காயா. | கொன்றை, பாதிரி, காயா, அத்தி, ஆல், குருந்து. | ஏற்றுப் பறை. | முல்லையாழ். | சாதாரியிசை. | சாமை, வரகு விதைத்தல்; பயிரிடல்; அறுத்தல்; ஆடுமாடு மேய்த்தல்; காட்டாற்றில் விளையாடி மீன பிடித்தல்; புல்லாங்குழல் ஊதுதல்; மோர், தயிர், நெய், பால் விற்றல், &c. |

☞ இங்கு விடப்பட்ட உணவு அவ்வத்திணையின் விளைவுக்குத் தக்கபடியாகும்.

**818.** இனி அரசர் சூடும் சில மாலைகளும் சில விசேஷங்களைக் குறிப்பிக்கும் என்பது முன்னூலோர் துணிவு. அவற்றின் விவரம் பின்வருமாறு:

**வெட்சிமாலை**—பகைவர் நாட்டிற்போய், அவருடைய ஆடுமாடுகளை ஓட்டிக்கொண்டு வரும்போது அணிவது.

**கரந்தைமாலை**—பகைவர் தமது ஆடுமாடுகளை ஓட்டிக்கொண்டு போயிருந்தால், அவற்றைப் போய் விடுவித்துக்கொண்டு வரும்போது அணிவது

**வஞ்சிமாலை**—பகைவர்மேல் படையெடுத்துச் செல்லும்போது அணிவது.

**காஞ்சிமாலை**—பகைவரோடு ஆரவாரித் தெதிர்க்கும்போது அணிவது.

**நொச்சிமாலை**—தன் கோட்டைக்குள் பகைவர் வராதபடி காக்கும்போது அணிவது.

**உழிஞைமாலை**—பகைவர் கோட்டையைப் பிடித்துக்கொண்டபோதணிவது.

**தும்பைமாலை**—பகைவரோடு அவர் நடுங்க யுத்தஞ்செய்கையில் அணிவது.

**வாகைமாலை**—பகைவரோடு யுத்தஞ்செய்து, அவர்களை மிகவும் வருத்தி வெற்றிபெற்றபோது அணிவது.

## CHAPTER XXIII.

**பாயிரம்.**—GENERAL RULES TO BE OBSERVED BY AUTHORS.

**819.** **நூல்கள்**—முதனூல், வழிநூல், சார்புநூலென மூன்று வகையாம்.

முதல்வழி சார்பென நூன் மூன்றாகும்." (நன்.)

**820.** (*a*) **முதனூல்**—தெய்வந்தானே அருளியதும், பெரியோர் தெய்வ அருளாலும், வரத்தாலும் மனுஷர்க்குப் பிரயோசனமாக எழுதியதுமாகும்.

உ—ம். பிபிலியநூல், கோரான், வியாசர் வகுத்த வேதம், அகஸ்தியர் அருளிச்செய்த பேர்அகத்தியம் முதலியன.

"அவற்றுள், வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்." (நன்).

821. (b) வழிநூல்—முதனூலை யனுசரித்து, காலவியல்புக்குத் தக்கதாய்ப் புதிதாய்ச் சேர்க்கத்தக்கவையைச் சேர்த்தலும், தள்ளத்தக்கவையைத் தள்ளலுமாகிய வேறுபாடுகள் விளங்கக் கூறி எழுதுவது.

உ-ம். பேர்அகத்தியத்தை யநுசரித்து எழுதிய தொல்காப்பியம், இலக்கண விளக்கம்; பிபிலியநூலை அனுசரித்தெழுதிய பக்தர் சரிதை, பழைய ஏற்பாட்டுச் சுருக்கம், வேதவினாவிடை முதலியன.

"முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
அழியா மரபினது வழிநூ லாகும்." (நன்.)

822. (c) சார்புநூல்-முதனூல் வழிநூல்களிலுள்ள ஒரு விஷயத்தை விஸ்தரிக்கப் புகுந்து, அதை விளக்கத்தக்க பிறவிஷயங்களை எடுத்துக் கூறுவது.

உ—ம். வேதவியாக்கியானம், நன்னூல், காரிகை முதலியன

"இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும்." (நன்.)

N.B.—இந்துக்கள் முன்னோர் மொழிந்த பொருளையல்லாமல் அவற்றிலுள்ள வார்த்தைகளையுங்கூடப் பொன்போலப் போற்ற வேண்டுமென்னும் உடன்பாடுடையவர்.

823. ஒருநூல் பிரயோசனமின்றி எழுதப்படாது. அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கும் மானிடர்க்குக் கைகூடிவர எழுதவேண்டியது.

"அறம்பொருள் இன்பம் வீடடைத னூற்பயனே." (நன்.)

824. ஒரு நூலெழுதுவோர் ஒன்றைச் சாதித்து நிர்ணயிப்பது **மதம்** எனப்படும். இது எழுவகையாம்.

(a) உடன்படல்—மற்றவர் செப்பியதற்குச் சம்மதித்தல்.

(b) மறுத்தல்—மற்றவர் சொன்னதிலுள்ள குற்றங்களை நியாயம் கூறி மறுத்தல்.

(c) பிறர்தம்மதமேற்கொண்டு களைவு—மற்றவர் அபிப்பிராயங்களை அங்கீகரித்துப் பின்பு அவற்றில் சில சரியல்லவென நீக்குவது.

(d) தானாட்டித் தனது நிறுத்தல்—தான் ஒன்றைப் பிடித்துக் கொண்டு, சமையம் வாய்க்குந்தோறும் பலவகையாலும் அதை உறுதிப்படுத்துவது.

(e) இருவர் மாறுகோள் ஒருதலை துணிவு—இருவரோ அதற்கு மேற்பட்டவரோ ஆளுக்கு ஒருமாதிரியாக ஒருவிஷயத்தைக் குறித்துச் சொல்லும்போது, அதில் ஒன்றை நியாயதோரணை செப்பித் தழுவிக்கொண்டு சாதிப்பது.

(f) பிறர்நூற் குற்றங்காட்டல்—பிறநூல்களில் கொண்ட கொள்கைகளின் குற்றங்களைத் துலங்கக் காட்டுவது.

(g) பிறிதொடுபடான் தன்மதங்கொளல்—வேறு நூல், வேறு கொள்கைகளைக் கிஞ்சித்தும் கவனிக்காமல், தன்னிஷ்டப்படி தன்னெண்ணங்களை ஸ்தாபித்தல்.

"எழுவகை மதமே யுடன்படன் மறுத்தல்
பிறர்தம் மதமேற் கொண்டு களைவே
தாஅ னாட்டித் தனாது நிறுப்பே
இருவர் மாறுகோ ளொருதலை துணிவே
பிறர்நூற் குற்றங் காட்ட லேனைப்
பிறிதொடு படாஅன் தன்மதங் கொளலே." (நன்.)

**825.** நூலியற்றுவதில் பின்வரும் குற்றங்கள் பத்து மிருக்கப்படா.

"குன்றக் கூறன் மிகைபடக் கூறல்
கூறியது கூறன் மாறுகொளக் கூறல்
வழூஉச்சொற் புணர்த்தன் மயங்க வைத்தல்
வெற்றெனத் தொடுத்தன் மற்றொன்று விரித்தல்
சென்றுதேய்ந் திறுத லின்றுபய னின்மை
என்றிவை யீரைங் குற்றம் நூற்கே." (நன்.)

குன்றக் கூறல்—Being too short and brief.

மிகைபடக் கூறல்-Being too discursive and explanatory.

கூறியது கூறல்—Repetition.

மாறுகொளக் கூறல் -Contradictory statement.

வழூஉச்சொற் புணர்த்தல்–Impropriety in the use of terms and words.

மயங்க வைத்தல்–Terse confusion and equivocation.

வெற்றெனத் தொடுத்தல்–Being too plain and blunt.

மற்றொன்று விரித்தல்–Digression.

சென்று தேய்ந்திறுதல்-Beginning well but gradually growing dull and insipid.

நின்று பயனின்மை–Meaningless accumulation of mere words.

N.B.—இவை பொருட்டெளிவுள்ளனவாதலால், இவற்றை விரித்து விளக்க வேண்டியதில்லை.

**826.** ஒரு நூலுக்கு அழகு செய்வன பத்தாம். அவை பின் வருபவை:

"சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல்
ஓசை யுடைமை யாழமுடைத் தாதல்
முறையின் வைப்பே உலக மலையாமை
விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த
தாகுத னூலிற் கழகெனும் பத்தே." (நன்.)

சுருங்கச் சொல்லல்=வீண்வார்த்தைகளை உபயோகியாதிருத்தல். (Avoiding verbosity).

விளங்க வைத்தல்=Clearness and conspicuity.

நவின்றோர்க் கினிமை=வாசிப்பவருக்கு இன்பம் தருவது.

நன்மொழி புணர்த்தல்=நல்ல சொற்களை உபயோகித்தல்.

ஓசையுடைமை=சந்தவின்பந் தருவது (Readable rhythm.)

ஆழ முடைத்தாதல்=ஆழ்ந்த கருத்துக்களை யடக்கியிருத்தல்(Deep in imports).

முறையின் வைப்பு=அதிகாரம் முதலிய உட்பிரிவுகளைக் கிரமப்படவைப்பது (Beauty of arrangement).

உலகமலையாமை=பெரியோருடைய முறைமைக்குத் தாறுமாறாகாதிருக்கச்செய்தல்.

விழுமியது பயத்தல்=சிறந்த பொருளைத் தருவது.

விளங்குதாரணத்த தாகுதல்=விளங்கத்தக்க உதாரணங்களுள்ள தாதல் (Examples, easy to comprehend).

**827.** உத்தி=தந்திரம். அதாவது, விஷயத்தை எடுத்துப் புலப் படுத்துவதிலுள்ள சாமர்த்தியம்.

இதற்குத் தற்கால வியல்புப்படி அளவில்லை; ஆயினும் முன் னோர் இவ்வித உபாயங்கள் முப்பத்திரண்டென வகுத்திருக்கிறார்கள். அவை பின் வருமாறு:

**828.** "[1]நுதலிப் புகுதல், [2]ஓத்துமுறை வைப்பே,
[3]தொகுத்துச் சுட்டல், [4]வகுத்துக் காட்டல்,
[5]முடித்துக் காட்டல், [6]முடிவிடங் கூறல்,
[7]தானெடுத்து மொழிதல், [8]பிறன்கோட் கூறல்,
[9]சொற்பொருள் விரித்தல், [10]தொடர்சொற்புணர்த்தல்,
[11]இரட்டுற மொழிதல், [12]ஏதுவின் முடித்தல்,
[13]ஒப்பின் முடித்தல், [14]மாட்டெறிந் தொழுகல்,
[15]இறந்தது விலக்கல், [16]எதிரது போற்றல்,
[17]முன்மொழிந்து கோடல், [18]பின்னது நிறுத்தல்,
[19]விகற்பத்தின் முடித்தல், [20]முடிந்தது முடித்தல்,
[21]உரைத்து மென்றல், [22]உரைத்தா மென்றல்,
[23]ஒருதலை துணிதல், [24]எடுத்துக் காட்டல்,
[25]எடுத்த மொழியி னெய்த வைத்தல்,
[26]இன்ன தல்ல திதுவென மொழிதல்,
[27]எஞ்சிய சொல்லி னெய்தக் கூறல்,
[28]பிறநூன் முடிந்தது தானுடன் படுதல்,
[29]தன்குறி வழக்க மிகவெடுத் துரைத்தல்,
[30]சொல்லின் முடிவி னப்பொருண் முடித்தல்,
[31]ஒன்றின முடித்த றன்னின முடித்தல்,
[32]உய்த்துணரவைப்பெனஉத்தியெண்ணான்கே." (நன்.)

1. இதனைச் சொல்லுவேன் என்று சொல்லி ஆரம்பிப்பது.
2. அதிகாரம் முதலிய பிரிவுகளைக் கிரமமாய் வைப்பது.
3. பல காரியங்களை ஒன்றாய்க் கூட்டி யுரைப்பது.
4. பல காரியங்களைத் தனித்தனியே பிரித்துக் காண்பிப்பது.
5. ஒரு விஷயத்தை முடியத் தெளிவிப்பது.
6. தான் சொல்லுகிற விஷயம், எப்புஸ்தகத்தில் எவ்விடத்தில், முடியத் தெளிவாய்ச் சொல்லியிருக்கிறதெனக் கூறல்.
7. 6—ல் கண்டபடி சொன்னதைத் தானே விளக்கமாய் எடுத்துரைப்பது. (Quotation of references.)
8. பிறநூலோர் அபிப்பிராயங்களை எடுத்துச்சொல்லல்.
9. பதப்பொருளை விரித்து விளக்குவது.
10. சம்பந்தமான சொற்களையும் விஷயங்களையும் கூறுதல்.
11. இருபொருள் ஒரேவாக்கியத்தில் அமையத்தக்கதாய்ச் சொல்வது.
12. காரணங்காட்டி விளக்குவது.
13. ஒன்றிற்கு எடுத்துக் கூறினவையாகிய ஒப்புமையான விஷயங்களை மற்றதற்கும் ஆம் என முடித்தல்.
14. ஒன்றுக்குச் சொல்லிய விஷயம் மற்றொன்றிற்கும் ஆமென்று கூறி விளக்குதல்.
15. பழமைப்பட்டவற்றை நீக்கிவிடுதல்.
16. பிற்கால வமைதிபற்றி அதற்கிசைய விஷயங்களை அமைத்து விவரிப்பது.
17. முன்னே ஒன்றைச் சொல்லிப் பின் அது வேண்டுமிடந்தோறும் எடுத்துக்கொள்ளுதல்.
18. முன்சொல்லத் தகாதவற்றைப் பின்சொல்லி வைத்தல்.
19. நன்றாய் விளங்க ஒரு விஷயத்தைப் பலவகையாய் வேறுபடுத்திக் காண்பிப்பது.
20. தனித்தனி முடித்துச் சொன்னவற்றையெல்லாம் கடைசியில் பொதுவாய் முடித்தல் (Recapitulation).
21. பின் சொல்வேன் இவ்விஷயம் என்பது.
22. இவ்விஷயம் முன்சொல்லியாயிற்று எனல்.
23. இரண்டு மூன்று அபிப்பிராயமுள்ளவிடத்து ஒன்றைத் துணிந்து நிலைநிறுத்துவது.

24. தான் சொன்ன விஷயத்துக்கிணங்கத் தானே மேற்கோள், உதாரணம் முதலியன எடுத்துக் காட்டுதல்.

25. தான் சொல்லிய விஷயம் அல்லது வார்த்தை அவ்வுதாரணத்திலிருக்கிறதெனக் காட்டுதல்.

26. சந்தேகம் நேர்ந்தவிடத்து இது சரியன்று; இதுதான் சரி எனத் தெளிவுற நியாயங்காட்டி நிலைநிறுத்துவது.

27. சொல்லாத விஷயங்கட்கும், வார்த்தைகட்கும் பொருந்தும்படி விதிகளை யமைப்பது.

28. மற்ற நூல்களின் முடிவைத் தான் அங்கீகரித்தல்.

29. தான் நூதனமாகக் குறித்திருக்கும் விஷயங்களை அடிக்கடி வற்புறுத்தி விளம்புதல்.

30. சொற்களின் திறம் எடுத்துரைத்தவுடனே, அவற்றின் பொருளையும் கூட முடித்துக் காண்பித்தல்.

31. ஒரு விஷயம் எடுத்துக் கூறியபோது, அதற்கினமான யாவையும் விஸ்தரிப்பது.

32. வாசிப்போர் கருத்துடன் நன்ருய் ஆராய்ச்சி செய்யத்தக்கதாய் அமைப்பது.

**829.** கிரேக்கர், ரோமர்களுக்குள் நூலெழுதுவதற்குப் பல ஏற்பாடுகளுண்டு. அதுபோலத் தமிழிலும் இவ்வித ஏற்பாடு வழுத்தப்பட்டது.

**830.** **ஓத்து** அல்லது **இயல்**—ஒருவகையாயுள்ள விஷயங்களையெல்லாம் ஒன்ருய்ச் சேர்த்துக் கூறுவது.

"நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை யொருவழி வைப்ப
தோத்தென மொழிப உயர்மொழிப் புலவர்." (நன்.)

**831.** **படலம்**—பல விஷயங்களைக் கலந்து விவரிப்பது.

"ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரி னதுபடல மாகும்." (நன்.)

**832.** **சூத்திரம்** — கொஞ்ச எழுத்தாலாகிய சொற்களில் பல வகையான பொருட்களைத் திட்ப நுட்பமாய் அமைப்பது.

"சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச்
செவ்வ னாடியிற் செறித்தினிது விளக்கித்
திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம். (நன்.)

செவ்வன்=செவ்வையாக; ஆடியின்=கண்ணாடிபோல.

833. **பிண்ட சூத்திரம்** — பலவகை விஷயங்கட்குப் பொது வானது.

**தொகைச் சூத்திரம்** — பலவற்றைக் கூட்டித் தொகைப்படுத்திச் சொல்வது.

**வகைச் சூத்திரம்**—தனித்தனி விஷயங்களைப் பகுத்து விவரிப்பது.

**குறிச் சூத்திரம்**—இது இன்னதெனக் குறித்துக்காட்டுவது.

**செய்கைச் சூத்திரம்**—இது இப்படிப் புணரும், இப்படி முடியு மென்று காட்டுவது.

**புறனடைச் சூத்திரம்**—புறத்தில் அடுத்துவருவது.

"பிண்டந் தொகைவகை குறியே செய்கை
கொண்டியல் புறனடைக் கூற்றன சூத்திரம்." (நன்.)

834. சூத்திரங்கள் ஒரு நூலில் பல இயல்புடையனவாய் நிற்கும்.

(a) ஆற்றுஜலம் இடைவிடாது செல்வதுபோல, ஒன்றோ டொன்று தொடர்ந்து வரும். இது **ஆற்றொழுக்கு** எனப்படும்.

(b) பின்சொல்லும் விஷயத்தை மாத்திரமல்ல, முன்சொன்ன வற்றையும் நோக்கி இசைவுகாட்ட வரும். இது **அரிமா** (சிங்க) **நோக்கு** எனப்படும்.

(c) ஒன்றுவிட்டொன்றாய்த் தாண்டித் தாண்டி விஷயங்களோடு இயைபுபெற நிற்கும். இது **தவளைப்பாய்த்து** எனப்படும்.

(d) ஓரிடத்து ஒரு சூத்திரம் நின்று, பல இடத்திலுமுள்ள பல சூத்திரங்களையும் நோக்கி இயைவதுமுண்டு. இது **பருந்தின் வீழ்வு** எனப்படும்.

"ஆற்றொழுக் கரிமா நோக்கந் தவளைப்
பாய்த்துப் பருந்தின்வீழ் வன்ன சூத்திரநிலை." (நன்.)

835. ஒரு நூலுக்கு **உரையெனப்படுவது** (Commentary)-நூலை யெழுதிக்காட்டுவதாகிய பாடம், அதன் பொருளைச் சுருக்கி விளக்குவதாகிய கருத்து, அந்நூலின் சொற்களைப் பிரித்துக் காட்டுவ

தாகிய சொல்வகை, அச்சொற்களின் பொருள்களை விஸ்தரிப்பதாகிய சொற்பொருள், மொத்தப் பொழிப்புரைப்பதாகிய தொகுத்துரை, உதாரணம் காட்டுவதாகிய உதாரணம், வினாவிடைகளால் விளக்குவதாகிய வினாவிடை, அந்நூலின் (அச்சூத்திரத்தின்) முக்கியத்தை எடுத்துக்காட்டுவதாகிய விசேஷம், அதைப் பெருக்கி விளக்குவதாகிய விரிவு, அதிகாரப் பிரிவுக் கிசைவுளதோ இவ்விஷயம் எனக் காட்டுவதாகிய அதிகாரம், இதற்கு இதுதான் பொருள் என நிர்ணயிப்பதாகிய துணிவு, இதனால் போதிக்கப்பட்டது இதுவெனக் காட்டுவதாகிய பயன், உரை யெழுதுபவன் தன் அபிப்பிராயத்துக் கிணங்க மேற்கோள் காட்டுவதாகிய ஆசிரிய வசனம் என்ற பல பாகுபாடுகளையுடையது.

"பாடங் கருத்தே சொல்வகை சொற்பொருள்
தொகுத்துரை யுதாரணம் வினாவிடை விசேடம்
விரிவதி காரந் துணிவு பயனோ
டாசிரிய வசனமென் றீரே ழுரையே." (நன்.)

836. இவ்வுரை காண்டிகையுரை, விருத்தியுரை என இருவகைப்படும். அவற்றுள்,

**காண்டிகையுரையாவது**—கருத்து, பதப்பொருள், உதாரணம், வினாவிடை முதலிய அம்சங்களைமாத்திரமுடையது.

"கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்
அவற்றொடு வினாவிடை யாக்க லானும்
சூத்திரத் துட்பொரு டோற்றுவ காண்டிகை." (நன்.)

காட்டு=உதாரணம்.

837. **விருத்தியுரையாவது** — உரைக்குச் சொல்லப்பட்ட எல்லாவற்றாலும் விரிவாயும் தெளிவாயும் உண்மைப்பொருளை விளக்குவது.

"சூத்திரத் துட்பொரு ளன்றியு மாண்டைக்
கின்றி யமையா தியாவையும் விளங்கத்
தன்னுரை யானும் பிறநூ லானும்
ஐய மகலவைங் காண்டிகை யுறுப்பொடு
மெய்யினை யெஞ்சா திசைப்பது விருத்தி." (நன்.)

838 இனி ஆசிரியன், மாணக்கர் ஆகிய இவருடைய இலட்சணங்கள் இவையென்றும், இவற்றிலும் நல்லவை இவை, தீயவை

இவையென்றும், இவ்வகையாய்ப் போதிக்கவேண்டுமென்றும் விஸ்தரிப்பது முன்னூலோர் கொள்கை.

இம்மட்டாய் விளக்கியது **பொதுப்பாயிரம்** எனப்படும்.

**839.** **சிறப்புப்பாயிரமாவது**—நூலின் பெயர் இன்னதென்றும்; அதைச் செய்தவர் இன்னாரென்றும், அதில் கூறும்பொருளின்னதென்றும்; அது இக்காலம், இன்னார் முன், இச்சபையில் அரங்கேற்றப்பட்டதென்றும்; அதில் இன்னகாரணத்தால் எழுதப்பட்டதென்றும்; அது இன்ன முதனூலை யநுசரித்தியற்றியதென்றும்; அதை இயற்றுவதில் இவரிவர் இவ்விவ்வுதவி புரிந்தாரென்றும்; அதைப் பார்வையிட்டவர்கள், கேட்டவர்கள் சொன்ன சாத்துக்கவிகளிவையென்றும் விவரமாய்க் கூறி விளக்குவது.

பொதுப்பாயிரம்=General rules of composition for the guidance of authors.

சிறப்புப்பாயிரம்=Indispensable preface to every work by an author.

**840.** முற்காலத்தில் இயற்றப்பட்ட நூல்களை இராஜ சமுகத்தில் அறிவாளிகள் கூடிய சபையில் வாசித்து அறங்கேற்றுவதுவழக்கம். ஆகையால், நூலியற்றினவன் அப்படிச் செய்யும்போது "அவையடக்கம்" என்கிற தன் தாழ்மையும் சபை வணக்கமும் கூறிக் கிரமமாய் நூலை வாசித்து விஸ்தரித்து, வந்திருக்கும் பெரியோர் கேட்கும் கேள்விகட்கெல்லாம் தகுந்த உத்தரவுசொல்லி, அவர்களுடைய சம்மதம் பெறவேண்டும். இப்படி யானபின்தான் அது உலகில் பிரசித்தமாகிச் சித்திபெறுவதாகும்.

ஆகையால், ஒருவரும் குரங்குப்பிடியாய் வாதித்து அரங்கேற்றலுக்குத் தடைசெய்யாதிருக்கவும், நூலியற்றுபவர்கள் தாம் செய்த நூலின் போங்குக்கு இன்னது மேற்கோளென எடுத்துக்காட்டவும், மேற்கூறியபடி கண்டிப்பான விதிகள் அமைக்கப்பட்டிருந்தன. இக்காலத்தவரும் புதிய நூல்களை இயற்றும்போது, அவ்விதிகளைக் கவனித்துக் கருத்தில் வைப்பாராயின் நலமாகும்; இப்போது அரங்கேற்றத்தக்க பிரசித்திபெற்ற சபைகள் இல்லாமல் மங்கிவருகிறது.

பத்திரிகைகளில் புதிய நூலின் போங்கு இத்தன்மையதென விவரிப்பது (Review) இக்காலவழக்கு.

**841.** மதுரைத் திருஞான சம்பந்தமூர்த்தி மடத்தாரும், திருவாவடுதுறை மடத்தாரும், இராமநாதபுரம், சிவகங்கை, தொண்டமான் புதுக்கோட்டை, எட்டியாபுரம், ஊத்துமலை, சிவகிரி, சாப்பட்டூர்

முதலிய இடங்களிலுள்ள ஜமீன்தார்களும், மற்ற இராஜாக்களும், சர். சவலே, இராமசாமிமுதலியார்போன்ற நன்பெருங் கொடையாளரும் தமிழ்ச் சங்கங்களை வைத்தாதரிக்கலாம்.

**842.** ஒரு கிரந்தகர்த்தா தன்னைத்தான் புகழ்ந்துகொள்ளுதல் தகுதியன்றேனும், ஒரு அரசனுக்குச் சீட்டுக்கவி யெழுதும்போதும், தான் இன்னானெனப் பிறர் தெரிந்துகொள்ளாதவிடத்தும், ஒரு சங்கத்தில் வாதாடித் தன் கட்சியைச் சாதித்து நிலைநிறுத்தும்போதும், மற்றொருவன் தன்னை இகழும்போதும் அத்தற்புகழ்ச்சியும் குற்றமாகாது.

"தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினும்
தான்றற் புகழ்தல் றகுதி யன்றே." (நன்.)
"மன்னுடை மன்றத் தோலைத் தூக்கினும்
தன்னுடை யாற்ற லுணரா ரிடையினும்
மன்னிய வவையிடை வெல்லுறு பொழுதினும்
தன்னை மறுதலை பழித்த காலையும்
தன்னைப் புகழ்தலுந் தகும்புல வோர்க்கே." (நன்.)

**843.** நூல்களை அரங்கேற்றும் முறை பின் வருமாறு பெரியோரால் விதிக்கப்பட்டது.

"செயிர்தீர் புலவன் செய்த செய்யுளை
உயர்தரு மன்றி னொளிமணி விளக்கொடு
மங்கலம் பொலிய மறையோர் வாழ்த்தத்
தொங்கல் கமழத் தூரிய மியம்ப
வஞ்சொன் மாதர் செஞ்சொல்வாழ்த் தெடுக்க
வெண்டுகில் புனைந்து வேறு தவிசிட்
டெண்டிசை பரவத் தண்டமிழ் கொண்டு
தண்ணடை மதாணி தமனியங் களிறு
பண்ணமை யிரதம் பாய்பரி யுதவி
யேழடி பின்போய் மீள்வது மூவர்
வாழ்தமிழ் நாடர்க்கு வகுத்தனர் புலவர்." (இ. விள.)

தொங்கல்=மாலை; தூரியம்=வாத்தியம்.

சரஸ்வதி (Goddess of learning) வெண்டாமரையில் வீற்றிருப்பவளாதலால், வெள்ளை ஆசனமிடுதல் மரபு.

யானை, இரதம், குதிரை முதலியனகூட அரசர் கவிஞர்க்குப் பரிசளிப்பது முன்னைய வழக்கம்.

# CHAPTER XXIV.

## HISTORY OF THE TAMIL LANGUAGE.

## தமிழ்ப்பாஷையின் சரித்திரச்சுருக்கம்.

**844.** மக்ஸ்முல்லர் (Max Müller) என்ற மகாவித்வான் இலக்கண இலக்கியப்போங்கு நோக்கி, உலகத்திலுள்ள பாஷைகளனைத்தையும் சேமியக்கிளை, ஆரியக்கிளை, துரேனியக்கிளையென மூன்று பிரிவாக வகுத்துக் கூறியிருக்கிறார். இதில் சேமியக்கிளையில் சேர்ந்தவற்றில் முக்கியமானவை, எபிரேயு (Hebrew), அரபி (Arabic) என்ற பாஷைகள். ஆரியக்கிளையில் உட்பட்டவை, சம்ஸ்கிருதம் (Sanscrit); லத்தீன் (Latin), கிரேக்கு (Greek) முதலியவை. துரேனியக்கிளை (Turanian) யில் அடங்கினவை, திராவிடபாஷை, மலையா, சீயம் முதலியன.

**845.** இத்திராவிட வகுப்பில், தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளுவம் முதலியன அடங்கும். இவற்றுள் பிரதானமானது தமிழ்.

**846.** பாஷைகள் விர்த்தியாகிவரும் நேர்மை நோக்கி, மக்ஸ்முல்லர் என்ற மகாவித்வான், அவற்றிற்குப் பூர்வபருவம், மத்திமபருவம், உத்தமபருவம் என மூன்று நிலைகளுண்டென்பர்.

ஓர் அசைப்பதங்களாலாய பாஷை பூர்வபருவத்தி லிருக்கிறதென்பது அவரது கோட்பாடு. சீனபாஷை அப்படிப்பட்டது.

உ—ம். நாய், தீ, கை, &c.

இரண்டு பதங்கள் கூடி ஒன்று மூலதாதுவாய் மாறாமலும், மற்றது விகுதி, உபசர்க்கம்போல் விகாரப்பட்டு மாறியும் இயங்கி நடக்குந்திறம் ஓர் பாஷையின்கண் உளதாகில், அது மத்திமபருவத்தி லிருக்கிறதென்பது அவரது சம்மதம். வம்பன் என்பதில் வம்பு—பதம், அன்-விகுதி; அவன் என்பது மருவி இங்ஙனம் வந்ததுபோலும். தமிழ், தெலுங்கு, இங்கிலிஷ் முதலியன இத்திறமானவை.

பதங்கள் ஒன்றோடொன்று உறழ்ந்தும் பிறழ்ந்தும் நூதன பதங்களாய் இயங்கி நடப்பது உத்தம பருவக்குறி.

உ-ம். கருமை+ அரிசி=காரரிசி.

தமிழ், சம்ஸ்கிருதம், லத்தீன் முதலிய பாஷைகள் இப்பரு வத்தன.

ஆகவே, தமிழ் மூன்று பருவங்களும் அடைந்து, விளங்கிய சிரேஷ்டமான பாஷையாகும்.

**847.** இந்துதேசத்தில் அநேக பாஷைகள் வழங்கி வருகின்றன. இவற்றுள் இந்துஸ்தானி தவிர மற்றவைகளெல்லாம் வடபாஷை, தென்பாஷையென இரண்டாக வகுக்கப்படும். வடபாஷைகளின் தாய் சம்ஸ்கிருதம்; தென்பாஷைகள் சுயம்புவானவை. இவற்றுள் விசேஷித்தது தமிழ்.

**848.** தென்னாட்டில் ஆதியில் குடியேறினவர்கள் ஆரியரல்லர். அவ்விடத்திலுள்ள பூர்வகுடிகள், பிரமன், விஷ்ணு, சிவன் என்ற திரிமூர்த்திகளையாவது, இந்திரன், வாயு, அக்கினி என்ற தேவர்களை யாவது ஆரியரைப்போல் வணங்கி வழிபடாமல், பேய், பூதம், பிசாசுகளையும், மரித்துப்போனவர்களையும் சேவித்து வந்தவர்கள். ஆரியர் தென்னாட்டை ஜெயிக்குமுன்னே, இலை கனி காய்களைமாத்திரம் புசிப்பது உத்தம சீலமென்று சைவ நெறியுடையவராய் அவர்களில் அநேகர் அவற்றால் ஜீவித்துவந்தார்கள். ஆரியர் அரசியற்றியகாலத்தில், புத்தர் எழும்பிப் போதித்துவந்த கொல்லாவிரதநெறி தேசமெங்கும் வியாபித்துவந்தபோது, தென்னாட்டில் சைவநெறி திடமாய் வளர்ந்து சிறந்தது. மற்றத் திக்குகளில் ஆரியர்தமக்குள்ளும் மாமிசபட்சணம் சாதாரணமாய் நடந்தேறிவர, சூத்திரர் என்றவர்களில், அதுமுதல் இக்காலபரியந்தம் சைவநெறி வழுவாது இல்லறம் நடத்திவருபவர் மிகுதியும் தென்னாட்டிலுண்டு.

**849.** ஆரியருக்கு உஜ்ஜயினிபுரத்தில் (Oogein) சூரிய, சந்திர கணிதமண்டபம் ஒன்று பூர்வத்தில் உண்டு. ஆரியர் என்ற பெயரையே அறியாதிருந்த பூர்வகாலத்திலும், அவர்களால் செய்யப்படாத சோதிஷம், ஆரூடம் முதலிய ககோள கணிதங்களும், அவற்றையுய்த்துணரத்தகுந்த புடைநூல்களாகிய நுண்மையான எண்சுவடி முதலியனவும் தமிழ்நாட்டில் உண்டாயிருந்தன. ஜோதிஷம் வள்ளுவருக்கும் நன்றாய்த் தெரியுமே.

**850.** இதுவுமன்றி அட்சரப்பயிற்சியில், தமிழ், மலையாள அரிவரிகள் கல்தேய அட்சரங்களை ஒருசார் ஒத்தனவாக விளங்கும்.

**851.** தெய்வ வழிபாடு, சைவநெறி, ககோளக்யானம், அட்சர ஒற்றுமை முதலியவற்றில் தமிழ்த்தேசத்துப் பூர்வகுடிகள் கல்தேயரடி

பற்றி வந்தவர்களாகத் தோற்றுகிறது. இக்கல்தேயர், ஆதியில் ஐப்பிராத்து (Euphrates), தீகிரிஸ்(Tigris) நதிகளுக்கு மத்தியமான தேசத்தில் வசித்தவர்கள். ஆகவே, தமிழ் இங்கிலிஷ், சமஸ்கிருதம்போலும் சிறந்த ஒரு பாஷையாகும். இது துரேனிய பாஷைகளுளெல்லாம் மிகுந்த நாகரீகமுள்ளதும், சிறந்த இலக்கியங்களையும் இலக்கணங்களையுமுடையதுமாம்.

**852.** Places where Tamil is spoken.—சென்னைமுதல் கன்னியாகுமரிவரையும், வங்காளகுடாமுதல் மேல்காத்து என்ற (Western Ghauts) மேற்குமலைவரையுமுள்ள இந்தியாவின் பாகத்தில் தமிழ் பேசப்பட்டுவருகிறது. இலங்கைத்தீவின் வடபாகத்திலும், திருவனந்தபுரத்தின் தெற்கேயுள்ள நாகர்கோவில்முதலிய பிரதேசங்களிலும் இது விஸ்தாரமாய் வழங்கிவருகிறது. இந்நாடெல்லாம் தமிழ்நாடென்னலாம். இதுவுமன்றி, கல்குத்தா, காசி, ஐதிராபாக்கம் என்ற நைஜாம் இராச்சியம், பல்லாரி, கஞ்சம், கடப்பை, கோதாவரி, விசாகபட்டணம், மலையாளம் முதலிய இந்தியாவின் பலபாகங்களிலுங்கூடத் தமிழ் பேசுபவர் கூட்டமுண்டு. ஆப்பிரிக்காவின் தென்பாகமான கேப்கலனி (Cape Colony) நாட்டிலும், மோரிஸ்தீவு (Mauritius), பர்மா (Burma), சிங்கப்பூர்(Singapore), மலையன் தீபகற்பம் (Malayan peninsula), கொச்சின்சீனு (French Cochin China) முதலிய தேசங்களிலுங்கூடத் தமிழ் பேசுவோர் வெகுபேர். தென்அமெரிக்காவில் றையோஜெனீரோ (Rio Janero) என்ற தேசத்தில்கூடத் தமிழ் பேசுவோர் சிலருண்டு. இப்படி இத்தமிழ்ப்பாஷை வெகுதூரங்களில் வியாபித்திருக்கிறது.

**853.** Origin of Tamil.—எப்போது, எவரால் இத்தமிழ்ப்பாஷை உற்பத்தியாயதென்று உத்தேசிக்கத்தகுந்த ஆதாரங்களொன்றுமில்லை. கல்தேயர் படையெடுத்து இந்தியாவின் தென்பாகத்தை ஜெயித்த காலத்தில் இது ஆரம்பித்திருக்கலாமெனத் தோற்றுகிறது. இதன் சரித்திரம், கிறிஸ்து பிறந்த 10-ம், 13-ம் நூற்றுண்டுகளிலிருந்து சுமாராகத் தெளிவுள்ளது. அதற்கு முற்பட்டதெல்லாம் கதைகளேயன்றி வேறல்ல.

**854.** சில ஐரோப்பிய சாஸ்திரிகள் தமிழ் சம்ஸ்கிருதத்தினின்று பிறந்த பாஷையென யூகிக்கிறுர்கள்; இது சரியன்று. சக்ஸன்னிய (Saxon) பாஷையில் லத்தீன் (Latin) முதலிய பாஷை கலந்ததுபோல, ஆரியர் தென்னுட்டை ஜெயித்து, அரசியற்றி, தமது மதம், தெய்வ வழிபாடுகள், புராணம் முதலியவற்றையும் இந்நாட்டில் நிலைநிறுத்திவந்ததால், வடமொழியாகிய சம்ஸ்கிருத வார்த்தைகளும் எழுத்

துக்களும் தமிழில் வந்து சேரத் தலைப்பட்டனவேயல்லாது வேறன்று. சம்ஸ்கிருத மொழிகளின்றி முழுவதும் தமிழ்மொழிகளாகவே சாதாரணமாய் வாசகம் எழுதலாம். கிஞ்சித்தேனும் வடமொழியில்லாத கிரந்தங்களும் தமிழிலுண்டு. ஆரியருடைய அதிகாரம் பலப்பட்டதால், தமிழுக்கே சிறந்த பல வார்த்தைகள் மறைய, அவற்றிற்குப் பதில் ஆரியமொழிகள் வழக்கத்தில் வரத் தலைப்பட்டன.

* உதாரணம்.

| (English.) இங்கிலிஷ். | (Tamil.) தமிழ். | (Sanscritized Tamil.) சம்ஸ்கிருதத்தினின்று வந்த தமிழ். |
|---|---|---|
| Heaven | வீடு | மோட்சம், முத்தி. |
| Letter | எழுத்து | அட்சரம். |
| Got | கிடைத்தது | லபித்தது, பிராப்தியாயிற்று. |
| Book | சுவடி | புஸ்தகம். |
| Flag | கொடி | துவஜம். |
| Sound | ஒலி | சப்தம், தொனி. |
| To floor | தளம்போடுகிறது | மணியாசம் செய்கிறது. |
| Gift | கொடை, ஈகை | தட்சணை, பிரசாதம். |
| Father | தந்தை, தகப்பன், அப்பன், அய்யா, ஆஞா | பிதா. |
| Mother | தள்ளை, தாய், அன்னை, அம்மா | மாதா. |
| Brother, | அண்ணன் (elder) தம்பி (younger) | சகோதரன் { ஜேஷ்டன், அநுஜன். |
| Sister, | அக்கை அக்காள், (elder) தங்கை (younger) | சகோதரி { ஜேஷ்டை, அநுஜை. |
| Child | பிள்ளை, குழந்தை | சிசு. |

**855.** எந்த ஜாதியாருடைய பூர்வீகத்தைக் கேட்கினும், அவர்கள் தாங்கள் தெய்வத்தினின்று நேரே பிறந்தவர்கள் என்பார்கள் தமக்குள் வழங்கிவரும் பாஷைகளும் தெய்வத்தால் தமக்கு அருளப்பட்டனவாகவே சாதிப்பார்கள். கிருஷித்தொழில், கைத்தொழில் முதலிய யாவும் இவ்விதமாகவே தெய்வ உற்பத்தி யுடையவையெனப் போற்று

* இப்படிப் பலவார்த்தைகளையும் விளக்கிக் காட்டுவது உபாத்தியாயர் கடமை.

வது மனுஷ இயற்கை. இதுபோலத் தமிழும் சிவனருள்கொண்டு, சுப்பிரமணியர் அகஸ்தியமாமுனிக்கு அருளிச்செய்து விளக்கிய தென்று ஒரு கதை உண்டு.

**856**. பூர்வத்தில் தெய்வத்தன்மைபொருந்திய அகஸ்தியமாமுனி காசிநகரத்திலுள்ள சம்ஸ்கிருத சங்கத்திற் சென்று, அங்குள்ள வித்வ சிரோமணிகளோடு பாஷாதர்க்கம்செய்தனர். அதுபற்றிக் கொடிய கலகம் விளைந்ததனால் சங்கத்தார் அகஸ்தியனைத் துரத்திவிட, அவர் அவர்கள் கல்விச்செருக்கை யடக்க நூதன பாஷையொன்றை நிர்மாணித்து, அவரைப்பரிகசிக்க எண்ணங்கொண்டு, கைலாயகிரியிலுள்ள சிவபிரானின் குமாரரான சுப்பிரமணியனை நோக்கித் தவஞ்செய்தனர். அத்தவத்துக் கிரங்கிச் சுப்பிரமணியர் பிரசன்னமானவுடனே, தனக்குக் காசிநகரத்து வடமொழிச் சங்கத்தார் செய்த கொடுமையையும், தம் உள்ளக் கோரிக்கைகளையும் வெளியிட, அவர் மனமுவந்து, அகஸ்தியரோடு வார்த்தையாடிக்கொண்டிருக்கையில், அவர்களிருவருமிருந்த மண்டபம் முழுவதும் சுகந்தவாசனை கமகமவென்று பரிமளித்தது. இது யாதென்று அகஸ்தியர் சுப்பிரமணியனை வினவ, அவர் அகஸ்தியனை யிட்டுக்கொண்டு, தமதாலயத்தின் ஓர் மூலைக்குட்போய், அவ்விடத்தில் குவியலாய்க்கிடந்த ஓர் ஏட்டுத்திரளைக் காண்பித்தார். இதை அகஸ்தியர் கண்டமாத்திரத்திலேயே "ஆ! தமிழ் தமிழ்" என்றாராம். [தமிழ் என்றால் "மதுரம்" என்று அர்த்தம்.] உடனே சுப்பிரமணியர், "ஓ மகாரிஷியாகிய அகஸ்தியரே, நீர் காசிநகரத்துச் சங்கத்தாரின் கல்விச்செருக்கைத் தாழ்த்தி, இறுமாப்பையடக்கப் புதிதாய் இயற்றவேண்டியது தமிழ்ப்பாஷையே. இதற்கு ஆதாரங்களான யாவும் இவ்வேட்டுக் குவியலில் உண்டு" என அருளிச்செய்ததுமன்றி, அவ்வேடுகளையும் ஒவ்வொன்றாய் அவிழ்த்து, அவ்விதி விபரங்களை அகஸ்தியருக்குத் தெளிவாய்ப் போதித்தாராம். அகஸ்தியர் பேரானந்தத்துடனே சுப்பிரமணியருக்கு அத்தியந்த நமஸ்காரஞ் செய்து, அவ்வேடுகளையு மெடுத்துக்கொண்டு, தட்சணத்திலுள்ள பொதியமாமலையில் போய், சிறிதுநாள் தனிவாசஞ்செய்து, தமிழ்ப்பாஷையை உண்டுபண்ணி, அப்பாஷையின் விதிக்கிரமங்களை விளக்கப் **பேரகத்தியம்**, **சிற்றகத்தியம்** என்னும் இரண்டு இலக்கணநூல்களையும் உண்டுபண்ணினாராம்.

**857**. அப்புறம், அவர் தொல்காப்பியன், அதங்கோட்டாசான் துராலிங்கன், செம்பூட்சேய், வையாபிகன், வாய்ப்பியன், பனம்பாரன், கழாரம்பன், அவினயன், காக்கைபாடினி, நற்றத்தன், வாமனன் என்னும் பன்னிரு சீஷர்களைத் தெரிந்துகொண்டு அவர்களுக்குத் தமிழைக் கசடறப் போதித்தாராம்.

**858**. அப்புறம், குலசேகரபாண்டியன் மதுராபுரியில் அரசியற்றும்போது, அகஸ்தியர் மதுரைக்கு வந்து, பாண்டிநாடு முழுவதும் செந்தமிழ் பேசப்படவும், எழுதப்படவுந்தக்க பிரயத்தனங்களை அரசனது உதவியால் செய்துவந்தார். அவர் எப்படி, எங்கே ஜீவன் விட்டாரென்று எவருக்கும் தெரியாது. சிலர் இன்னும் அவர் ஜீவனோடு எவர் கண்களுக்கும் புலப்படாமல் பொதியமாமலையின் கொடுமுடிகளொன்றில் வாசஞ்செய்கிறாரென்கிறார்கள். மற்றும் சிலர் அவர் அகத்தீஸ்வர நட்சத்திரமாக (Criopus) மாறினார் என்கிறார்கள்.

**859**. அகஸ்தியருக்கும், அவர் பிரதம சீஷனான தொல்காப்பியருக்குமுண்டான விரோதத்தைப்பற்றிப் பின்வருமாறு ஓர் கதை உண்டு.

கைலாசகிரியில் சிவனுக்கும் பார்வதிக்கும் திருமணம் முடிந்த காலத்தில், சுவர்க்க, மத்திய, பாதலமென்ற மூவுலகரசரும் கைலைக்கு வந்ததால், பாரம் பொறுக்காமல் கைலை தாழ, தட்சணம் உயர்ந்தது. சிவபிரான் இதனால் வியசனமுற்று "என்ன செய்யலாம்?" என நாரதனை வினவ, அவர் "அகஸ்தியமாமுனிக்கு விஸ்வமந்திரத்தை ஓதி, பொதியமாமலைக்குப் போய் அவ்விடத்தில் இருக்கச்சொன்னால், பூமி சமனாகும், கைலை தன்னிலைக்கு வரும்" என்றாராம். அப்படியே அகஸ்தியனை யழைத்து, விஸ்வமந்திரத்தை ஓதி, சிவபிரான் அவனைத் தெற்கே யனுப்ப, அகஸ்தியர் பொதியமாமலையிற் சென்றவுடனே, கைலை தன் பூர்வநிலைமைக்கு வந்ததாம். அகஸ்தியர் கைலையைவிட்டுத் தெற்கே புறப்படுகையில், தன் மனைவியைத் தன் சீஷன் தொல்காப்பியன் வசம் ஒப்புவித்து, சிவபிரான் திருமணம் முடிந்தபின், அம்மாதரசியைக் கூட்டிக்கொண்டு தன்னிடம் பொதியமாமலைக்கு வர ஆக்கியாபித்தாராம். இதுவுமன்றி அகஸ்தியர், தம் சீஷன் தொல்காப்பியனை நோக்கி, "நீ எக்காலத்தும் என் மனைவிக்கு மூன்றடிதூரத்தில் நடக்கவேண்டும், அவளைத் தொடவேகூடாது" என்று திட்டமாய் விதித்தாராம். இப்படி தொல்காப்பியரும், அகஸ்தியர் மனைவியும் கைலையைவிட்டுத் தெற்கே வரும்பொழுது, காவிரியாறு வெள்ளம் புரண்டு இருகரையும் கடந்து சென்றதால், தொல்காப்பியன் ஆணைமீறி, அகஸ்தியர் பத்தினியைக் கைத்தாங்கலாய்க் காவிரியாறு கடத்திப் பொதியமலை வந்து, ஆசானை யடிபணிந்து, மனைவியை அகஸ்தியருக் கொப்புவித்தாராம். தொல்காப்பியன் தன் மனைவியைத் தீண்டினாரெனக் கேள்வியுற்று, அகஸ்தியர் "அடா தொல்காப்பியா, நீ என்சொல் தவறியதால் சுவர்க்கஞ்சேராய்" எனச் சபித்தாராம். தொல்காப்பியன் கோபாவேசமாகி, அகஸ்தியனை நோக்கி, "ஓய் அகஸ்தியமுனியே, நீரும் சுவர்க்கம் சேரீர், நீர் எழுதிய நூல்க

ளெல்லாம் உலகில் வழங்காது அழிந்துபோவதாக" எனச் சபித்தா ராம். அப்புறம் தொல்காப்பியர், சமஸ்கிருதத்திலுள்ள "ஐந்திரம்" என்னும் இலக்கண ரீதிப்படி "தொல்காப்பியம்" என ஓர் இலக் கணநூல் தமிழ்ப்பாஷைக் கெழுதிப் பிரசுரஞ்செய்து ஸ்தாபித்தாராம். இதனால்தான் அகஸ்தியருடைய முதனூல்கள் முன்னுக்கு வராமல் மங்கி மறைந்துபோயின வென்பார்கள்.

**860. தமிழின் அபிவிர்த்தி** (The Progress of Tamil).—வம் சசேகரபாண்டியன் தமிழ் விர்த்தியைக் கருதி, மதுரையில் மீனாட்சி யம்மன் சந்நிதியின் தென்புறத்தில், ஒரு தமிழ்ப் புஸ்தகசாலையை யும், அதைப் போற்றிவர ஒரு சங்கத்தையும் நிர்மாணித்தான். இச்சங் கம் மகா சிறப்பாய் இந்துதேசமெங்கும் விளங்கியது. சங்கத்தவர் நக்கீரர்முதலிய (49) நாற்பத்தொன்பது வித்வசிரோமணிகள். தமி ழுக்கு மூலமாயிருந்த சுப்பிரமணியசுவாமிகளையுஞ் சேர்த்து, சங்கம் ஐம்பதுபேரா லாயதெனவும் படும். இவர்கள் பிள்ளையாரையும், சுப் பிரமணியரையும் அதிகாலையில் பூசை செய்து, தமிழ் அபிவிர்த்திக் காக அகராதிகளையும், இலக்கண இலக்கிய கணித நூல்களையும் செய் துகொண்டும், பழைய நூல்களைப் பரிசோதித்து அவற்றிற் குறையெ ழுதியும் வருவதுடன், புதிய நூல்களை இயற்றிவரும் வித்வான்களை யாதரித்து, அவர் நூல்களை வாசிக்கக் கேட்டு அரங்கேற்றிவருவதும் கடனாகக்கொண்டொழுகும்படி அவ்வம்சசேகர பாண்டியரால் விதிக் கப்பட்டிருந்தது. இச்சங்கத்தவர்க்குச் சர்வமானியங்களும் கொடுக் கப்பட்டிருந்தன. இவர்களுடைய அபிப்பிராயத்தின்மேலும், சிபார் சின்மேலும் சிறுகிராமங்களில் பாடசாலை மானியங்களும் பூர்வகா லத்தில் பாண்டியரால் கொடுக்கப்பட்டிருந்தன. இவைகளி லநே கம் இங்கிலிஷ் அரசில் கணக்கு மானியமாகவும், அயன்கிராமங்கள் நிலங்களாகவும் மாறிப்போயின.

**861.** இவர்களிருப்பதற்கு வெண்ணிறமானதும் வெண்துகில் போர்த்ததுமான சங்கப்பலகையொன்று வமிசசேகர பாண்டியர் குமா ரர் வம்சசூடாமணி பாண்டியரால் செய்யப்பட்டது. இது மதுரை மீனாட்சியம்மன்கோவில் பொற்றாமரைக் குளத்தின்மீதில் தொங்க விட்டிருந்தது. வெண்டாமரையில் வீற்றிருக்கும் சரஸ்வதி கல்வி தேவதையாதலால், குளத்தின்மேல் இச்சங்கப்பலகை தொங்கும்படி யாக நிர்மாணிக்கப்பட்டது. இப்பலகையைச் சிவபிரான் கொடுத்தா ரென ஓர் கதையுமுண்டு. அது பின்வருமாறு:—

**862.** ஒருமுறை சங்கத்தவர்களுக்கும் சில சிவபக்தர்களுக்கும் பாஷை விவகரண விஷயத்தில் அடிபிடி கலகம் நேரிட்டபோது,

சிவன்தானே பிரசன்னமாகிச் சங்கத்தாரை உறுக்கி அதட்டி தம் நெற்றிக்கண்ணால் அவர்களை அதம் செய்ய எத்தனித்தபொழுது, சங்கத்தாரில் ஒருவராகிய நக்கீரர் பொற்றாமரைக்குளத்தில் முழுகி, "பெருந்தேவ பாணி" முதலிய நூல்களைச் சிவஸ்தோத்திரமாகப் பாடியவுடன் சிவன் கோபந்தணிந்து, மனங்குளிர்ந்து, அவர்களிருக்க ஒரு சங்கப்பலகை, வைரக்கற்கள் பதிக்கப்பட்டதாய்க் கொடுத்து, "நீங்கள் எல்லாரும் இதில் உட்காரலாம், உங்களுக்குச் சமமான வித்வான் எவனென்கிலும் வந்தால் அவனுக்கும் இது விரிந்து இடங்கொடுக்கும்" என்று திருவுளம்பற்றி மறைந்தாராம்.

**863**. இச்சங்கத்தார் வரவரச் செருக்கடைந்து, மற்ற வித்வான்களை அலட்சியம் செய்யத் தலைப்பட்டார்கள். மேலும் இவர்கள் தமிழை விர்த்திசெய்யாமல் சம்ஸ்கிருதத்தை அபிவிர்த்திசெய்ய ஆரம்பித்தார்கள். இதனால் சிவன் கோபங்கொண்டு, மயிலாப்பூரிலுள்ள வள்ளுவரை எழுப்பி, அவருக்கு வரமளித்து, அவரால் "குறள்" என்னும் நூலியற்றச்செய்து, அவரை இச்சங்கத்துக்கு முன் நிறுத்தினாராம். அவருக்கு இச்சங்கத்தார் இடங்கொடுக்காதபோது, பலகை விரிந்து அவர் ஏட்டுக் கிடங்கொடுத்ததாம். அப்புறம் பலகை சுருங்கிச் சுருங்கிச் சங்கத்தவரையெல்லாம் குளத்தில் விழும்படி செய்ததாம். இதனால் சங்கத்தார் வெட்கமுற்று, கலங்கித் தியங்கி, தண்ணீரினின்று கரையேறி, திருக்குறளைப் புகழ்ந்து, நாற்பத்தொன்பது சாத்துக்கவிகளைப் பாடினார்களாம். இதனோடே மதுரைச்சங்கம் ஒழிந்தது. இது ஏறக்குறைய கிறிஸ்து பிறந்த பதின்மூன்றாம் நூற்றாண்டு என உத்தேசிக்கப்படுகிறது.

## THE PERIODS OF TAMIL LITERATURE.

## தமிழ் இலக்கியங்கள் உண்டான காலவரையறை.

**864**. அகஸ்தியமுனி தமிழுக்கு முதல்முதல் இலக்கணம் எழுதப் புகுந்ததால், "இலக்கிய மின்றேல் இலக்கணமின்றே" என்ற பிரகாரம், அநேக தமிழ்நூல்கள் அவர் காலத்துக்குமுன் னிருந்திருக்கவேண்டியது. மேலும் சுப்பிரமணியசுவாமிகள், கூட்டமான தமிழ்ச்சுவடிகளை அவருக்குக் காண்பித்தாரென்ற கதையாலும், அகஸ்தியர்காலத்துக்குமுன் அநேக தமிழிலக்கியங்க ளிருந்திருக்கவேண்டுமென்று விளங்குகிறது. அவை யெவையெனத் திட்டமாய் விளங்கவில்லை.

ஆயினும், அகஸ்தியராலும் அவர்காலத்துப் பல கிரந்தங்கள் உண்டாயின. இவற்றிற் சில பேரகத்தியம், சிற்றகத்தியம், அகஸ்தி

யர் நானூறு, அகஸ்தியர் ஆயிரம்; தேரையர் வைத்தியம், தொல்காப்பியம் முதலியன. இப்பேர் வழங்கும் நூல்களிற் சில, அகஸ்தியராலியற்றப்பட்டவையல்ல, போலி நூல்களாம் என்று கட்சிகட்டுவார் சில ருண்டு.

**865**. சங்கம் விளங்கிய காலத்துப் பிறந்த தமிழ் நூல்கள்:—மணிமேகலை, குண்டலகேசி, சிந்தாமணி, சிலப்பதிகாரம், வளையாபதி, பெருந்தேவபாணி, யசோதரகாவியம், நற்குமாரகாவியம், நீலகேசி, உதயணன்காதை, சூளாமணி முதலியன.

**866**. சங்கத்தின் அந்திய காலத்தில் பிறந்தவை:—திருக்குறள், ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி, ஞானவெட்டி முதலியன.

**867**. சமணர்களா லியற்றப்பட்டவை:—

(*a*) சங்கங் குலையுமுன், நாலடியார், ஐந்தொகை, நான்மணிக்கடிகை, நானூற்பது, முப்பால், திரிகடுகம், ஆசாரக் கோவை, பழமொழி, சிறுபஞ்சமூலம், ஏலாதி, முதுமொழிக்காஞ்சி, கலித்தொகை, குறுந்தொகை, நற்றிணை முதலியன.

(*b*) சங்கங் குலைந்தபின், நிகண்டு, நன்னூல், புலிப்பாணி, நம்பி நானூறு, கல்லாடம், பெரிய புராணம், பரிபாடல், அக நானூறு, புற நானூறு, திருமுருகாற்றுப்படை முதலியன.

**868**. கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி முதலியவர்கள் காலமாகிய கிறிஸ்தாப்தம் 12–ம்,13–ம் நூற்றாண்டுகளில் பிறந்த தமிழ் நூல்கள், இராமாயணம், ஈட்டி யெழுபது, அல்லியரசாணி மாலை முதலியன.

**869**. அதிவீரராமபாண்டியர் காலம் பிறந்தவை, நைடதம், வெற்றிவேற்கை, பாரதம், இரகுவம்சம், கூர்மபுராணம், காசிகாண்டம் முதலியன.

**870**. இதற்குப் பின்னிட்ட காலத்திற் பிறந்தவை, நளவெண்பா, அரிச்சந்திரபுராணம், ஸ்காந்தபுராணம், திருவிளையாடற்புராணம், இராமநாடகம் முதலிய பலவித நாடகங்கள், விலாசங்கள், தாயுமானூர் பாடல், பட்டணத்தார் பாடல், மீனாட்சி சுந்தரம்பிள்ளையாலும், மற்றவர்களாலுமியற்றப்பட்ட கோவை, ஸ்தலபுராணங்கள், பிள்ளைத்தமிழ்கள், இராமலிங்கசுவாமிகள் திருவருட்பா, பலவித கதைகள், பஞ்சதந்திரம், விநோதரசமஞ்சரி முதலியன.

871. அங்கிலேய அரசு தமிழ்நாட்டில் உண்டாகி பிரபல்லியமா கும்போது, அங்கிலேயரால் நன்குமதிக்கப்பட்டுவந்த தமிழ்ப் பண்டி தர்கள், இராமாநுஜ கவிராயர், விசாகப்பெருமாளையர், தாண்டவராய முதலியார், அ. சபாபதி முதலியார், அ. வீராசாமி செட்டியார், வேலாயுத முதலியார், சரவணப்பெருமாளையர்.

872. அங்கிலேயரையடுத் துறவாடாதிருந்த தமிழ்ச் சிங்கங்கள், நல்லூர் ஆறுமுக நாவலர், மாயவரம் மீனாட்சிசுந்தரம்பிள்ளை, வட லூர் இராமலிங்கப் பரதேசியார், திரிசிரபுரம் முத்துவீரக் கவிராயர். இவர்கள் கொஞ்சக்காலத்துக்கு முன்தான் தேகவியோகமாயி னர். இச்சிங்கங்களிடம் கற்றுச்சொல்லிகளாயிருந்தவர்கள் இப் போது கலாசாலைகளில் தமிழ் முனிஷிகளாக விருக்கிறார்கள்.

873. மதுரைத் திருஞான சம்பந்தமூர்த்தி மடாதிபதிகளும், திரு வாவடுதுறை மடாதிபதிகளும், அவர்களோடு கூடிவாழும் சைவ சிகாமணிகளும் தமிழிற் சிறந்த பண்டிதர்களே.

874. தமிழிலுள்ள ஒவ்வொரு நூலின் மொத்த சாராம்சங்க ளையும், கிரந்தகர்த்தாக்கள், இலக்கணிகளின் சரித்திரத்தையும் எழு தப்புகின், இந்நூல் விரியும். இவ்விஷயங்களைத் தனியாய் வேறோர் கிரந்தமாக இயற்றுவது உத்தமமென்று கருதி இவ்விடத்தில் பாஷா சரித்திரத்தை மிகச் சுருக்கமாக வரைந்திருக்கிறது.

875. தமிழ் இலக்கணத்தில் ஆதியான நூல், பேரகத்தியம்; அதன் சுருக்கம் சிற்றகத்தியம். இதன்பின் விசேஷமானது, தொல்காப் பியம். இத்தொல்காப்பியத்தையும் அதன் உரைகளையும் அனுசரித்து மற்ற இலக்கணங்கள் பின் எழுதப்பட்டன.

876. பிந்திய நூல்களிற் சிறந்தது, திருவாரூர் வைத்தியநாத தேசிகர் இயற்றிய இலக்கண விளக்கம். இது பஞ்ச இலக்கணங்களை யும் சவிஸ்தாரமாய், முன்னோர் முறையை யநுசரித்துத் தெளிவாய் விளக்கியிருக்கிறது. இது சோழதேசத்தில் பிரபலமாயிருந்தது. வித்வ சிரோமணியாகிய வைத்தியநாத தேசிகர் இதை முழுவதும் எழுதுமுன் தேகவியோகமானதால் இவர் மூத்த புத்திரராகிய, சதா சிவ தேசிகர் அணியியல், பாயிரம் முதலியவற்றையும், உரையையும் எழுதினார். இரண்டாம் புத்திரர் தியாகராஜ தேசிகர் பாட்டியல் முத லியவற்றை மற்ற நூல்களினின்றும் பொறுக்கி இதனுடன் சேர்த்தார்.

877. இதன்பின் "குட்டி யிலக்கணம்" என்றொன்று புறப்பட் டது. இந்நூலெழுதிய சமயத்திலேயே சீயகங்கன் என்ற மதுரைப் பாண்டியராஜன் வேண்டுகோளின்படி பவணந்திமுனி என்பவர் "நன்னூல்" என ஒரு இலக்கணம் எழுதினார்.

**878.** இவ்விரு நூலுக்கும் கட்சிவாதம் பலத்தது. இலக்கண விளக்கத்தைப் பழித்துக் குறைகூறி இலக்கண விளக்கச் சூறாவளி என்றொரு நூல், திருவாவடுதுறை மடத்தினின்று புறப்பட்டது. இதன்பின் இதற்கெதிராக இலக்கணத்தீபிகை என்றொரு இலக்கணம் சோழதேசத்தில் உதயமாயிற்று.

**879.** நன்னூலில் பஞ்சவிலக்கணங்களு மில்லாமை பெருங் குறைவாயினும், நன்னூலை மெச்சிப்பேச விரும்பினவர்கள் அதை யுயர்வாக்கும்பொருட்டு அதன் காண்டிகை, விருத்தி உரைகளில் இலக்கண விளக்கத்தில் கண்ட அருமையான விதி அநேகங்களைச் சேர்த்து எழுதியிருப்பதாகத் தோற்றுகிறது.

**880.** ஸ்காந்தபுராணம் காஞ்சீபுரத்தில் அரங்கேற்றப்படி யாகுங்காலத்து வெளிப்பட்டது "வீரசோழியம்" என்ற இலக்கணம். "திகட சக்கர" என்ற ஸ்காந்தத்தின் முதற்பாட்டின் முதற்சீரில், "**திகழ்+தசக்கர**" என்பது "**திகடசக்கர**" என ழவ்வும், தவ்வும் டவ்வாவதற்கு விதிகேட்கச் சபைக்கு உத்தரஞ்சொல்லக் கூடாமல், கிரந்தகர்த்தா திகைத்து, அரங்கேற்றல் தாமதமாகும்போது, சிவபிரானே சோழிய வேளாளரூபமாய் வந்து, அவ்வீரசோழியத்திற் காட்டி அதற்கு விதி கூறினார் எனச் சொல்லப்படும்.

இதில் யாப்பிலக்கணம் விசேஷம் சம்ஸ்கிருத பாஷையின் போங்காயிருக்கும். ஆரியர் தமிழ்நாட்டை ஜெயித்து, வடமொழி தமிழில் கலந்தபின் எழுதப்பட்ட இலக்கணங்களுள், வீரசோழியமும் நன்னூல்போல ஒன்றாகும். நன்னூலும் இலக்கண விளக்கமும் அக்காலத்திலேயே எழுதப்பட்டன.

**881.** மயேச்சுரர் யாப்பு, காரிகை, யாப்பருங்கலம் எனும் நூல்கள் யாப்பிலக்கணம் என்ற ஓர் பகுதியைமாத்திரம் விளக்க எழுதப்பட்டவைகள்.

**882.** கல்லாட ரிஷியால் செய்யப்பட்ட கல்லாடம் என்பதும், யாப்பையும், இராகப்போங்குகளையும், வண்ணமுறைகளையும் வழுத்தியநூல்.

**883.** நேமிநாதம், இலக்கணக்கொத்து என்ற நூல்கள் இவற்றிற்குப்பின் மற்ற இலக்கணங்களில் விடப்பட்டவற்றை எடுத்துச் சொல்லியவை.

**884.** தமிழர் போற்றும் பக்த சிரோமணிகளான அப்பர், சுந்தரர், மாணிக்க வாசகர் என்பவருள் மாணிக்கவாசகர் குவலயானந்தம் என்னும் ஒரு தமிழ் இலக்கணம் இயற்றியிருக்கிறார்.

**885.** மேற்சொல்லியவையெல்லாம் பாட்டுகளாகவும் சூத்திரங்களாகவும் எழுதிய இலக்கணங்கள். இதுபோலவே "**அலங்காரத்தை**" விளக்கத் தண்டியலங்காரம் இயற்றப்பட்டது.

**886.** இதன்பின் வாசகமாய் இலக்கணம் எழுத ஆரம்பித்தனர். விசாகப்பெருமாளையர் செய்த பஞ்சவிலக்கண வினுவிடை, மகாலிங்கையர் இலக்கணம், போப்பையர் (Dr. G. U. Pope) இலக்கணம் முதலியன இத்திறமானவை.

**887.** பிரயோக விவேகம் என்ற நூல் ஆறுமுக நாவலரவர்களால் உரையுடன் கொஞ்சக்காலத்துக்குமுன் அச்சியற்றப்பட்டது.

**888.** வீரமாமுனிவர் (Rev. Father Beschi) பஞ்சவிலக்கணங்களையும் 1697–ம் வருஷம் சூத்திரப்போங்காய்ச் செய்து தொன்னூல் விளக்கம் எனப்பேரிட்டார்.

**889.** இவ்வளவு அபரிமிதமான இலக்கண நூல்கள் தமிழிலிருப்பினும், நன்னூல் ஒன்றுதான் அநேகருக்குத் தெரிந்தது. மற்றவைகள் அங்கிலேய அரசில் பெருமையும் சித்தியும் பெறவில்லை. தொல்காப்பியம் இலக்கண விளக்கம் என்றவை, வெகு பிரயாசத்தின்பேரில் முன்னுக்குக் கொண்டுவரப்பட்டன.

**890.** அங்கிலேயர் வியாபார மாளிகைகளைச் சென்னை, கூடலூர் முதலிய இடங்களில் கட்டி, வியாபாரத்தைப் பெருக்கி, அரசும் கைப்பற்றுகிற சமயத்தில், அங்கிலேய உத்தியோகஸ்தர்கள் தமிழைக் கற்பது யுக்தமென அதிகாரிகள் தீர்மானித்து, சென்னையில் "காலேஜ்" என்ற ஓர் வித்தியாசாலை ஸ்தாபித்தார்கள். இதுதான் "Old College" என்னப்பட்ட இடம். இதில் இப்போது வித்தியாசாலைத் தலைவராகிய Director, தமது கச்சேரியை வைத்து நடத்திவருகிறார். இதில் முதல் அங்கிலேயருக்குத் தமிழ் உபாத்தியாயராக நியமிக்கப்பட்டவர் செங்கற்பட்டுத் தாண்டவராயமுதலியார். இவர் அக்காலத்தில் பட்டணத்தில் விஜயஞ்செய்து, நன்னூலுக்குக் காண்டிகையுரையியற்றின இராமாநுஜகவிராயரின்சிஷனும், கற்றுச்சொல்லியுமாயிருந்து, மேற்படி கவிராயரிடம் நன்னூற்பாடமும் கேட்டவர். இவர் மூலமாய்த்தான் அங்கிலேயர் நன்னூல் சிறந்த தமிழ் இலக்கணம் எனத் தெரிந்துகொண்டதுமன்றி, சர்வகலாசாலைப் பரீட்சைகட்கும் (University Examination.) இந்நன்னூலே நல்ல இலக்கணம் என விதிக்கவும் தலைப்பட்டது.

இத்தாண்டவராயமுதலியாரே, வாசக புஸ்தகம் (Prose) அங்கிலேய மாணுக்கருக்கு வேண்டியதாயிருந்தபொழுது, ஹிதோபதேசத்

தைச் சம்ஸ்கிருதத்தினின்று மொழிபெயர்த்து பஞ்சதந்திரம் என்ற புஸ்தகம் உண்டுபண்ணிக்கொடுத்தவர். நன்னூலிலுள்ள புணர்ச்சி விதிகள் புலப்படத்தக்கதாய், அப்புஸ்தகத்தைக் கொடும் புணர்ப்பா யெழுதிவிட்டார். இவர் செங்கற்பட்டில் சதுரமீனுக உத்தியோகஞ்செய்து, அங்கிலேயரால் நன்கொடை பலவும் பெற்று, தேகவியோகமானுர். இவருடைய குமாரன் கிறிஸ்தவராகப் பட்டணத்திலிருக்கிருர்.

**891**. ஐரோப்பிய குருமாரும் இந்நன்னூலையே விசேஷம் எனப் போற்றியதால் இதற்கு இங்கிலீஷ் உரை சங். பிரதர்ட்டன் ஐயரவர்களாலும் (Rev. T. Brotherton, M.A., Cambridge), உவால்ற்றர் ஜாயிஸ் துரையாலும் (Mr. Walter Joyes), கனம்: பவர் ஐயராலும் (Rev. H. Bower, D.D.), டவடன் காலேஜ் (Doveton College) முனிஷியாகிய சாமுவேல் பிள்ளையாலும் எழுதப்பட்டது. இந்நன்னூலின் சாஸ்திர யுக்தத்தைப் புகழ்ந்து கனம்: பவர் ஐயரவர்கள் ஒரு புஸ்தகம் எழுதியிருக்கிருர்கள். இவைகளை மேற்கோளாகக் கொண்டுதான் கனம்: ஜான் லாசரு ஐயரவர்கள் (Rev. John Lazarus, B A.) நன்னூல், இலக்கணம் முதலியன எழுதி யச்சியற்றியது.

**892**. ஆகவே, நன்னூல் விசேஷமென்று, அதைவிரித்து விளக்கியும், சுருக்கித் தீட்டியும் பலரும் சார்புநூல்கள் பலவும் செய்ய ஆரம்பித்தனர்.

**893**. கனம்: போப்பையரவர்கள் (Dr. G. U. Pope) மாத்திரம் நன்னூலிலும்விசேஷநூல் தமிழிலக்கணத்துக்குண்டெனத் தெரிந்து, பல இலக்கணங்களையும் ஆராய்ந்து, தமது போங்காய் மூன்றும் இலக்கணம் (Pope's Third Grammar) ஒன்றியற்றி, அதில் யாப்பருங்கலம், குவலயானந்தம், இலக்கணக்கொத்து முதலிய பல நூல்களினின்றும் சிறிது சிறிதெடுத்துக் கூறியிருக்கிருர்.

**894**. பட்டணத்தில் தட்டார்குலதிலகராய்ப் பிறந்து, அநேக வருஷங்களாய்த் திரிசிராப்பள்ளியில் தமிழ் கற்பித்துவந்த முத்துவீரக் கவிராயர், முதல் யாப்பிலக்கணம் சூத்திரப்பாவில் இயற்றி அச்சிட்டார். பின் பஞ்சவிலக்கணங்களையும் சவிஸ்தாரமாய்ச் சூத்திரப்பாவில், சுயமாய் எழுதி அச்சியற்றும் சமையத்துத் தேகவியோகமானுர். இவர் தொல்காப்பியம், அகத்தியம், இலக்கண விளக்கம் என்ற நூல்களின் சூத்திரங்களைக் கோத்து, உரையில் காண்பவற்றைச் சுயமான சூத்திரங்களைக்கொண்டு காண்பித்து, அரும்பிரயாசையாய்

முன்னோர் மொழிகளைப் பொன்போற் போற்றி நல்ல நூலொன்று முடித்தார்.

**895**. தமிழ் வழுவறக்கற்று, அநேக இலக்கியங்கள் பார்வையிட்டு, சம்ஸ்கிருதமும் தெரிந்துகொண்டு, "இலக்கணத் திரட்டு" எனச் சிறந்தவாசக இலக்கணம் இயற்றினவர் கனம்: மார்ட்டின் உவின்பிரெட் (Mr. Martyn Winfred) என்றவர். இவர்வெகுநாள் உபாத்தியாயராகச் சர்க்கார் பள்ளிக்கூடங்களில் நல்ல வேலை செய்து, பள்ளிக்கூட விசாரணைசெய்யும் (Deputy Inspector) வேலையிலிருக்கிறபொழுது தேகவியோகமானார்.

**896**. தற்காலத்தில் தமிழ் அபிவிர்த்திக்காக அதிகமாய் உழைத்து வருபவர்கள் (Mr. W. Thamotharam Pillay, B. A., B. L., Mr. P. Ranganada Mudaliar, M.A., Mr. J. M. Velu Pillay.) யாழ்ப்பாணிகளான கனம்: தாமோதரம்பிள்ளை, கனம்: ஜே. வேலு பிள்ளை, பெரியபட்டம் பெற்ற கனம்: இரங்கநாதமுதலியார் முதலியவர்களே. இவருள் கனம்: தாமோதரம் பிள்ளை ஏட்டுப்பிரதிகளாய் மங்கி மறைந்துகிடந்த தமிழ் இலக்கண இலக்கியங்களில் அநேகத்தைக் கண்ணும் திருஷ்டிகுறையத்தக்கதாக வெகு கஷ்டத்துடன் வாசித்துத் திருத்திப் பேர்த்தெழுதி, மிகுந்த பொருட்செலவும் செய்து, அச்சியற்றித் தமிழ்ப்பாஷையின் சிறப்புப் பிறருக்கு விளங்க மிகக் கருத்தோடு உழைத்துவருகிறார்.



## ADDENDA.

## உபவிசேஷம்.

**1. இடக்கரடக்கல், மங்கலம் என்பவற்றிற்குள்ள பேதம்:–** *மரியாதை தப்பியதும், சான்றோர் சங்கத்து எடுத்துரைக்கத் தகாததுமான அசங்கியமான மொழிகளை யொழித்து, மரியாதையான நல்ல வார்த்தைகளைக்கொண்டு குறிப்பாய்ப் பொருள்கொள்ள வழுத்துதல்* **இடக்கரடக்கலாம். மங்கலமானது** *இப்படியல்லாமல் சகுணப் பிழையான வார்த்தைகளை யொழித்துச் சுபமான மொழிகளால் கருத்தை விளக்குவதாம்.*

*உ–ம்.* **'பீ'** *என்பது அசங்கியமான வார்த்தை; இதற்குப்பதிலாய்* **'பவ்வீ'** *என்று வழுத்துவது இடக்கரடக்கல். ஸ்திரீ புருஷர்களின் அந்தரங்க பாகங்களைப் பேரிட்டுச் சொல்வது தக்கதன்று. அவற்றைக்குறித்துச் சொல்லவேண்டும்போது* **"காலுந்தலம்"** *என்பது போன்றவற்றால் விளக்குவதும் அதுவாகும்.*

**"செத்தான்"** *என்பது அசங்கியமான பதம் அன்றாயினும், அசுபமானதும் சகுணப்பிழையானதுமாகையால் அதற்குப்பதிலாய்* **"தேகவியோகமானான்," "பரமபதம் அடைந்தான்,"** &c. *என உரைப்பது மங்கலம்.*

**2. ஆகுபெயர், அன்மொழித் தொகை என்பவற்றிற்குள்ள பேதம்:—**

*(a) ஒரு வார்த்தைக்கு ஆதியர்த்தம் ஒன்றே. வரவர அதற்கு வேறர்த்தங்களும் வருவதியற்கை. பின்வந்த அர்த்தங்கள் இயைபுபற்றி ஆதியர்த்தத்தினின்றும் தோன்றியவைகள்.*

*உ–ம். "கார்" என்பதற்கு கருமை யென்றது ஆதியர்த்தம். மழை ஜலத்தால் கருமையாய்த் தோன்றுவதால் சூல்கொண்ட மேகத்தைக் "கார்" என்றது இரண்டாம் அர்த்தம். இப்படி மேகம் கறுத்து மழை பெய்வது வருஷத்தில் சில விசேஷ மாதங்களில் மாத்திரமாதலால், அக்காலத்தைக் "கார்" என்றது மூன்றாம் அர்த்தம். நெல் பலகாலத்தும் விளையத்தக்கதாதலால், அக்கார்காலத்து விளையும் நெல்லைக் "கார்" என்றது நான்காம் அர்த்தம். இப்படி ஆதியர்த்தத்தினின்று பிறந்த மற்ற அர்த்தங்களை ஒரு வார்த்தை குறிக்*

கும்போது அவை முன்னோர் வழக்கத்துக் கிசைந்தவையாயும், உலகம் ஒப்பியவையாயுமிருந்தால் அது **ஆகுபெயர்** எனப்படும். **அன்மொழித்தொகையோ** அப்படியன்று; பொற்றொடி என்றபோது உள்ள அர்த்தம் பொன்னால் செய்யப்பட்ட வளையல் என்பது. இதற்கு அப்படிப்பட்ட வளையல்களை யணிந்தவள் என்று அர்த்தம் சொல்லும்போது, "அணிந்தவள்" என்ற அல்லாத மொழியைப் புதிதாய் வருவித்து அர்த்தம் முடிக்கவேண்டியதாகின்றது. ஆகவே வார்த்தையின் இயைபுபற்றி வேறர்த்தத்தை யுணர்த்துவது ஆகுபெயரும், வார்த்தையில் நேராய்ச் சுட்டப்படாத பிறமொழியை வருவிக்கப் பொருள் முடியத்தக்கது அன்மொழித் தொகையுமாம்.

(b) ஆகுபெயர் அடைமொழிகளின்றித் தனிமொழியாய் நின்றியங்கக்கூடியது.

உ-ம். வற்றல் உண்டான்.

அன்மொழித்தொகை தொடர்மொழிகளாயன்றி வரவேவராது.

அது தொடி எனத் தனித்துவராமல் பொற்றொடி, தாழ்குழல், &c. எனத் தொடர்மொழிகளாய் வருதல் காண்க.

(c) ஆகுபெயர் வாசகத்தில் சாதாரணமாய் வரும். அன்மொழித்தொகை செய்யுளுக்கே சிறந்தது; வாசகத்தில் வருவது அருமை.

3. "**காண்**" என்ற வினைப்பகுதி, இறந்தகாலத்தில்மாத்திரம் "**கண்**" என்றாகி, இடைநிலை, விகுதிகளைப் பெறும்.

4. "**வா**" என்ற பகுதியின் ஏவற்பன்மை சாதாரணமாய் "**வருமின்**" "**வாரும்,**" "**வாருங்கள்**" என்றாம். "**வம்மின்**" என்றாவதும் உண்டு. இது மிக அருமை. நைடதம், வீமன் தேடவிட்ட படலத்தில் இப்படி வந்தமை காண்க.

5. ஒணு. — செய்யொணாது, நடக்கொணாது என வரும் வினைமுற்றுகளில் வந்த "ஒணு" என்பது என்ன? எப்பதத்தினின்று வந்தது? என்பதைப்பற்றி வெவ்வேறு அபிப்பிராயங்களுண்டு.

(a) சிலர் "ஒன்று=(பொருந்து)" என்ற பகுதி திரிந்து "ஒண்ணு" என்றாகி, எதிர்மறை விகுதியாகிய "ஆ" சேர, "ஒண்ணா" என்றாய் "ண்" கெட "ஒணா" வென்றானது என் றிலக்கணங் கூறிச் "செய்யொணாது" என்பதற்குச் "செய்யப் பொருந்தாது" எனப் பொருள் கூறுவர்.

இது ம. ா. ா. ஸ்ரீ. வேலாயுத முதலியார், ம. ா. ா. ஸ்ரீ. வாசுதேவ முதலியார் முதலாய சிலர் கோட்பாடு.

(b) செய்யப்படாது, ஓடப்படாது முதலிய வினைகளில் "படு" என்ற துணைவினை செயப்பாட்டு வினையை உணர்த்தாமல், செய்யக்

கூடாது, ஓடக்கூடாது எனக் "கூடாமை"யை உணர்த்தும். படும்=கூடும். படாது=கூடாது. இப்படியே, செயப்பாட்டுவினையின் துணைவினையான "உண்" என்பதும், "கூடும்" என்ற பொருளில் வரும். ஆதியில் செய்யுணாது, நடக்குணாது என இருந்த பதங்கள் காலவியற்கையில் "உ" "ஓ" வாகமாறிச் செய்யொணாது, நடக்கொணாது என வழங்கின.

இப்படி விவரிப்பவர்கள், ம. ா. ா. ஸ்ரீ. இராஜகோபாலபிள்ளை, ம. ா. ா. ஸ்ரீ. வீராசாமி செட்டியார் முதலியவர்கள்.

(c) "நடக்கவேண்டும்," "ஓடவேண்டும்," &c. என்றவைகள் கிராமியமாய் "நடக்கணும்," "ஓடணும்" என்று வழங்கும். இவைகளின் எதிர்மறை "நடக்கணாது," "ஓடணாது" என வழங்கி, காலவியற்கையில் "அ" "ஓ" வாகி, நடக்கொணாது," "ஓடொணாது" எனவாயின.

இங்ஙனம் முடித்தவர்கள், ம. ா. ா. ஸ்ரீ. விசாகப்பெருமாள் ஐயர், கனம்: டாக்டர் பவர் ஐயர் (Rev. Dr. Bower) முதலியோர்கள்.

(d) கன்னடத்திலும், மலையாளத்திலும் "ஒணு" என்பது துணைவினையாக வழங்கிவருகிறது.

ஆகையால், இது தமிழன்று, திசைச்சொல் என்பர் சிலர். கனம்: கால்ட்வெல் (Dr. Caldwell) அத்தியட்சர் முதலியோர் கொள்கை இது. இங்ஙனம் தம்மதமே சரியெனப் பிறர் கொள்கைகளை நிராகரிக்கப் பல நியாயங்களும் வழுத்தப்படும். ஆயினும், கடைசியாய்ச் சொல்லப்பட்டபடி திசைச்சொல்லாகக் கொள்வது நன்று.

6. சும்மா.–(a) இது சாதாரண வழக்கத்தில் வெகுவாய் வழங்கும்.

(b) இது சுயமான தமிழ்ப்பதமன்று.

(c) இது வினையோடுகூட வரும் வினையுரிச்சொல்.

(d) இது கன்னடபாஷையினின்று பிறந்தது.

ஆகவே, இதைத் திசைச்சொல்லாகக் கொண்டு, கன்னடபாஷையினின்று பிறந்த வினையுரிச்சொல்லாக விவரிப்பது நன்று. •

7. பைய.—இது "பை" என்னும் உரிச்சொல்லினடியாய்ப் பிறந்தது.

பைய=மெல்ல (Slow.)

பெயர்ச்சொல்லாகிய "பை" என்னும் பதத்திற்குப் பல அர்த்தங்களுண்டு. (அகராதி பார்க்க.)

8. (a) இலக்கணப்படி சொற்கள், பெயர், வினை, இடை, உரி என வகுக்கப்படும்.

(*b*) பிறப்புநோக்கி இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என வகுக்கப்படுதலுமுண்டு.

(*c*) ஒருமொழி, தொடர்மொழி, பொதுமொழி எனவும் சொற்களைப் பிரிப்பார்கள்.

இவை யாவும் முன் விவரிக்கப்பட்டாயின.

(*d*) சிலர் சொற்களைத் தனிமொழி, இணைமொழி, துணைமொழி, பொதுமொழி, கணமொழி, தணமொழி, கலப்புறுமொழியென ஏழாக வகுப்பர்.

வரலாறு:—நிலம், நீர்; இவை பிரிக்கப்படாத தனிமொழி. நாடன், தோழன் முதலியன பிரிக்கப்படக்கூடிய இணைமொழி. மனுஷன் வந்தான், மாடு ஓடிற்று; இவை தொடர்ந்துவந்த துணைமொழி. வேங்கை, எட்டு முதலியன இருபொருள் தந்து, தொடர்மொழிபோலும் ஒரு மொழிபோலுமிருப்பதால் பொதுமொழி. முனிவர்கள், பூதங்கள்; இவை கூட்டத்தைக் காட்டியதால் கணமொழி. இந்திரன், சந்திரன்; இவை ஒருமை காட்டுந் தணமொழி. ஆண், பெண்; இவை இருதிணையிலுங் கலந்து நடப்பதால் கலப்புறுமொழி.

இங்ஙனம் நுண்மையாய்ப் பாகுபாடு செய்தல் சிறப்பன்று.

(*e*) மொழிகளை யுபயோகிப்பவரை நோக்கி, சொற்கள் சங்கதம், பாகதம், சாநுக்கிரகம், அவப்பிரஞ்சனம் என நான்கு வகைப்படுமென்பர் சிலர்.

**சங்கதம், சாநுக்கிரகம்** இரண்டும்—தேவர்மொழி.

**அவப்பிரஞ்சனம்**—இழிசனங்கள்மொழி.

**பாகதம்**—நாடுகளெங்கும் வழங்குவது.

**பாகதம்** என்பது தற்சமம், தற்பவம், தேசிகம் என மூன்று வகையாம்.

**தற்சமம்**—தமிழ், சம்ஸ்கிருதம் இரண்டிற்குமுரிய பொதுவெழுத்தாலாகி விகாரப்படாதது.

உ—ம். அமலம், காரணம்.

**தற்பவம்** — வடமொழிக்கே சிறந்த எழுத்துக்களாலாயினும், தமிழ், வடமொழி இரண்டிற்குமுரிய பொதுவெழுத்துக்களாலாயினுமாகி விகாரப்பட்டு வருவது.

உ—ம். போகி—சிறப்பெழுத்தாலாகியது; அரன்—பொதுவெழுத்தாலாகியது.

**தேசிகம்**—திசைச்சொல்.

இது சம்ஸ்கிருத இலக்கணிகளின் போங்கு.



# INDEX OF RULES.

# விதிகளின் அகராதி.



## இ.



## உ.

## ERRATA.

Insert ORTHOGRAPHY.—எழுத்தியல் As the Heading of Chapter II.

Page. 159. lines 1 and 2

For "*Will take all the but five the first, as idioms*"

Read "*Will take all the five but the first as idioms.*"

Page. 174. after 7 in Rule 274. Insert மரபுவழு.

Page 412. line 1. *Authors* should be *Authors'*.

S. P. C. K. Press, Vepery, Madras—1893.